# ஸ்ரீமத் வாதிராஜ குருஸார்வபௌமர் இயற்றிய

# வைகுண்ட வர்ணனெ
# (தத்வ ஸார)
# தமிழில் அர்த்த விளக்கங்களுடன்

திரு. தாவணகெரெ பீமராவ்
அவர்களின் கன்னட உரையை
அனுசரித்து

தமிழில்

‘ஜகன்னாத கேசவ’ சத்ய நாராயணன்
89044 58276. haridasa.vijayam@gmail.com
jagannathakesava.blogspot.com

# வைகுண்ட வர்ணனெ (தத்வ ஸார)

## தமிழில் அர்த்த விளக்கங்களுடன்

ஸ்ரீஹரிவாயு குருகளின் அருளால்
ஸ்ரீமத்வ ஜயந்தி நாளான - 15-10-2021
அன்று வெளியிடப்பட்டது.

**தொடர்புக்கு:**
'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்
8904458276 haridasa.vijayam@gmail.com
jagannathakesava.blogspot.com

**ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து**

## பொருளடக்கம்

# மொழிபெயர்ப்பாளரின் உரை

ஸ்ரீவாதிராஜரின் வைகுண்ட வர்ணனெ ஒரு அற்புத கிரந்தம். ஸ்ரீஹரி சர்வோத்தமத்தை மிகவும் எளிமையான மொழியில், தக்க ஆதாரங்களுடன் விளக்கும் கிரந்தம். வாசுதேவாதி நான்கு ரூபங்களில் – வாசுதேவ, சங்கர்ஷண, பிரத்யும்ன, அனிருத்த – ஸ்ரீமன் நாராயணன் செய்யும் நான்கு செயல்களை – முறையே, மோட்ச, லய, ஸ்ருஷ்டி, ஸ்திதி – அதன் ரகசியங்களுடன் விளக்கும் கிரந்தம் இது. ஸ்ரீஹரி சர்வோத்தமன் என்னும் நிச்சய ஞானத்தை ஹரிபக்தர்களுக்கு புரியும் வகையில் இங்கு சொல்லப்பட்டுள்ளது. ஆகையால், இந்த கிரந்தத்தை 'தத்வஸார' என்றே அழைக்கிறார் ராஜர். மேலும் இந்த கிரந்தம் பற்றிய அறிமுக விளக்கத்தினை திரு. பீமராவ் அவர்கள் எழுதியுள்ள முன்னுரையிலேயே படித்து அறியலாம்.

வைகுண்ட வர்ணனையை எனக்கு பாடம் எடுத்த என் அங்கித உபதேச குருவான திரு. ஹரதி பிரகலாதாசார்யருக்கு (ஜாம்பவதிப்ரிய விட்டலதாசர்) நன்றியுடன் கூடிய நமஸ்காரங்கள். உடன், இந்த உரையை எழுதி நமக்கு அளித்துள்ள திரு. தாவணகெரெ பீமராவ் அவர்களுக்கும் நம் அனைவரின் நன்றிகள்.

இந்த மொழிபெயர்ப்பினை முழுவதும் படித்து, வெளியிட ஒப்புதல் அளித்த திரு.முரளிதர தாசருக்கும், முன்னுரை எழுதிக் கொடுத்த திரு.லட்சுமிபதிராஜாவிற்கும் மிக்க நன்றிகள்.

இதனை வெளியிட பொருளுதவி புரிந்துள்ள அனைத்து ஹரிபக்தர்களுக்கும் மிக்க நன்றிகள். அவர்கள் உதவியின்றி இப்புத்தகம் தமிழில் வந்திருக்க முடியாது. பாராயணத்திற்காக மூலம் மட்டும் எனவும், அர்த்தங்களுடன் கூடியது எனவும் இரு புத்தகங்களாக இதனை வெளியிடுகிறோம்.

திரு.பீமராவ் அவர்களின் புத்தகத்தில் உள்ள ஸ்லோகங்களை நாம் அப்படியே இந்தப் புத்தகத்தில் பயன்படுத்தியுள்ளோம்.

Proof reading பல முறை செய்திருந்தாலும், இந்தப் புத்தகத்தில் எங்கேயாவது எழுத்துப் பிழை தென்பட்டால், தயவு செய்து எனக்குத் தெரிவிக்கவும். சொல்ல வந்த விஷயத்தில் (மொழிபெயர்ப்பில்) புரியாத இடம் இருந்தாலோ / தவறாகவோ சொல்லியிருந்தாலோ, அதையும் தயவு செய்து எனக்குத் தெரியப்படுத்தவும்.

அஸ்மத் குருவந்தர்கத பாரதிரமண முக்யபிராணாந்தர்கத ஜகன்னாத கேசவனுக்கு இதனை சமர்ப்பிக்கிறேன். ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

'ந அஹம் கர்தா ஹரி: கர்தா'

**'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்**
**பெங்களூரு**
**06-Oct-2021 மகாலய அமாவாசை**

# ஸ்ரீ வாதிராஜ தீர்த்தர் அருளிய வைகுண்ட வர்ணனை (தத்வ ஸார)

ஸ்ரீ மத்வ மதப் பரம்பரையில் உடுப்பி அஷ்ட மடங்களில் ஸோதே மடத்தின் பீடாதீஸராக அலங்கரித்தவர் ஸ்ரீ வாதிராஜ தீர்த்தர். மத்வ சித்தாந்தத்தில் வ்யாஸ ஸாஹித்யம் மற்றும் தாஸ ஸாஹித்யம் என இரண்டுக்குமே தனது பங்களிப்பை அளித்த மஹனீயர். பலதரப்பட்ட காவிய, ஸ்தோத்திர, டிப்பணி மற்றும் வ்யாக்யான கிரந்தங்களை இயற்றியதுடன், கன்னடத்திலும், துளு பாஷையிலும் 'ஹயவதன' முத்திரையிலே பலதரப்பட்ட க்ருதிகளையும் ரசனை செய்துள்ளார்.

மத்வ ஸித்தாந்த தத்வ ரகசியங்களையும், ஸ்ரீ ஹரியின் ரூப, குண கார்யங்களை தம்முடைய பலதரப்பட்ட கன்னட பதங்களிலே வர்ணித்திருக்கும் ஸ்ரீ வாதிராஜ தீர்த்தர் வேதங்களில், உபநிஷத்துக்களில், ஸாத்வீக புராணங்களில், இதிஹாஸங்களில் தெளிவாக விளக்கப்பட்டுள்ள, உத்தம ஜீவர்கள் ஸம்ஸாரத்திலிருந்து விடுபட்டு முக்தியை அடைந்த பிறகு நித்ய ஸுகத்தை அனுபவித்துக் கொண்டு வாஸம் செய்யும் வைகுண்ட லோகத்தைப் பற்றியும், ஸ்ரீ ஹரியின் லீலா வினோதங்களான லயம், ஸ்ருஷ்டி மற்றும் ஸ்திதி காரியங்களைப் பற்றியும் விளக்கும் வகையில் முறையே 'மோக்ஷ ஸந்தி', ' லய ஸந்தி', 'ஸ்ருஷ்டி ஸந்தி' மற்றும் 'ஸ்திதி ஸந்தி' என நான்கு ஸந்திகளாகப் பிரித்து கன்னடத்தில் அருளிய கிரந்தமே 'வைகுண்ட வர்ணனை' (தத்வ ஸார) என்பதாகும். ஸமஸ்க்ருதம் அறியாத பாமரரும் எளிதில் புரிந்து கொள்ளும் வகையில் கன்னடத்தில், ஸாஸ்திரக் கடலில் முத்தெடுத்து, சுவையாக, ஸஜ்ஜனர்களின் மேல் கருணை கொண்டு இதனைப் படைத்துள்ளார் ஸ்ரீ வாதிராஜர்.

ஸ்ரீ வாதிராஜர் முதலில் மோக்ஷ ஸந்தியில், ஸ்ரீ ஹரி லக்ஷ்மி ஸஹிதமாக வாஸம் செய்யும் ஸ்வேத த்வீபம், அனந்தாஸனம், வைகுண்டம் என மூன்று லோகங்களையும், அங்குள்ள முக்தர்களின் லக்ஷணங்களையும், அவர்கள் பகவானுக்கு செய்யும் ஆராதனை மற்றும் ஸ்ரீ ஹரியின் அனுக்ரஹத்தால் அனுபவிக்கும் போக ஸுகங்களைப் பற்றியும் வர்ணித்துள்ளார்.

இரண்டாவதாக லய ஸந்தியில், ஸ்ரீ ஹரி பிரளய காலத்தில் பிரம்மாண்டத்தையும் உண்டு, அனைத்து ஜீவராசிகளையும் உதரத்தில் தாங்கி, ஸ்ரீ மஹாலக்ஷ்மி புரியும் சேவையை ஏற்று, யோக நித்திரையில் இருந்து எழுந்து ஸ்ருஷ்டி காரியத்திற்குத் தயாராகும் விதத்தை மிக அழகாக காவிய ரஸத்துடன் வர்ணித்துள்ளார் ஸ்ரீ வாதிராஜர்.

மூன்றாவதாக ஸ்ருஷ்டி ஸந்தியில் 24 தத்வங்கள், தத்வாபிமானி தேவதைகள், பிரம்மாண்டம் முதலானவற்றை ஸ்ரீ ஹரி ஸ்ருஷ்டி செய்யும் விதத்தையும், முக்யப்ராணர் மூலமாக நடைபெறும் ஸ்வாஸ காரியங்களைப் பற்றியும் விவரித்துள்ளார் ஸ்ரீ வாதிராஜர்.

கடைசியாக ஸ்திதி ஸந்தியில், ஸ்ரீ ஹரியின் ரூப குணங்களையும், சக்ராதி தப்த முத்ரா / நாம முத்ரா தாரணத்தின் முக்கியத்துவத்தையும், க்ருத யுகத்தில் தர்மத்தின் உன்னத நிலையினையும், தஸாவதாரங்களில் தைத்யர்களை அழித்து, தர்மத்தை நிலைநாட்டி பக்தர்களை ரக்ஷித்த விதத்தைப் பற்றியும் விளக்கியுள்ளார் ஸ்ரீ வாதிராஜர்.

இத்தகைய உயரிய க்ரந்தத்தை தினமும் பாராயணம் செய்து, விஸேஷமான அர்த்தங்களைத் தெரிந்து கொண்டு ஸ்ரீ வாதிராஜரின் அந்தர்யாமியான ஸ்ரீ ஹயக்ரீவரின் அனுக்ரஹத்திற்குப் பாத்திரராவோமாக !

---

இத்தகைய சிறப்பு வாய்ந்த ஸ்ரீ வாதிராஜர் அருளிய 'வைகுண்ட வர்ணனை' என்ற உயரிய கிரந்தத்தின் மூலத்தையும், அதன் விஸேஷ அர்த்தங்களை பாமரரும் அறியும் வண்ணம் கன்னடத்தில் வழங்கிய திரு. தாவணகெரெ பீமராவ் அவர்களின் படைப்பை 'ஜகன்னாத கேஸவ' திரு.சத்ய நாராயணன் அவர்கள் தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டுள்ளார். அவர் சமீபகாலத்தில் வெளியிட்டுள்ள ஸ்ரீ வாதிராஜ தீர்த்தர் அருளிய கன்னட கிரந்தங்களான 'ஸ்வப்ன பதம்', 'ஹரி ஸர்வோத்தம ஸார', 'ஸ்ரீ கிருஷ்ண பால லீலே' போன்ற நூல்களின் வரிசையில், இதுவும் பெருமை சேர்க்கும் என்பதில் ஐயமில்லை. அவருக்கு ஸ்ரீ வாதிராஜ தீர்த்தரின் அந்தர்யாமியான ஸ்ரீ ஹயக்ரீவ ரூபி பரமாத்மா ஆயுள், ஆரோக்கியம், ஐஸ்வர்யம் மற்றும் மனச்சாந்தி இவைகளை அருளி, இதுபோல் இன்னும் பல மொழிபெயர்ப்பு நூல்களை தமிழில் வெளியிட வேண்டும் என ப்ரார்த்தனை செய்கிறேன்.

**ஸ்ரீ கிருஷ்ணார்பணமஸ்து !!**

**'பிரஸங்க பூஷணம்', 'பிரவசன பூஷணம்', 'மத்வ ரத்னா'**
**Sலக்ஷ்மிபதிராஜா**
**மேடவாக்கம், சென்னை**
**04-10-2021**

# வைகுண்ட வர்ணனெ

## * தத்வஸார *

## கிரந்த விளக்கம்

**கிருஷ்ணாய வாசுதேவாய ஹரயே பரமாத்மனே |**
**ப்ரணதக்லேஷ நாஷாய கோவிந்தாய நமோ நம: |**
**ஸ்ரீராமம் ஹனுமத்ஸேவ்யம் ஸ்ரீகிருஷ்ணம் பீமஸேவிதம் |**
**ஸ்ரீவ்யாஸம் மத்வ ஸம்சேவ்யம் ஸமஸ்தாபீஷ்டதம் பஜே |**
**தபோவித்யாவிரக்த்யாதி ஸத்குணௌ காகரானஹம் |**
**வாதிராஜகுரூன்வந்தே ஹயக்ரீவ பதாஸ்ரயான் ||**

ஸ்ரீவாதிராஜ ஸ்வாமிகள், உடுப்பியின் அஷ்ட மடங்களில் ஒன்றான ஸ்ரீஸோதே மடத்தின் பரம்பரையில் வந்த மஹானுபாவர். விரக்த்யாதி சத்குணங்களின் பிரபாவத்தினை வெளிப்படுத்தியவாறு, நூறு ஆண்டுகளுக்கும் மீறிய தீர்க்ககால ஆயுளைக் கொண்டு வாழ்ந்து, ஸ்ரீமதானந்த தீர்த்தரால் பிரதிஷ்டை செய்த ஸ்ரீமத் உடுப்பியின் ஸ்ரீபாலகிருஷ்ண மூர்த்தியின் உற்சவத்தை மிகவும் சிறப்புடன் செய்து, அர்ச்சித்த மகான். மிகவும் புகழ்பெற்ற யதிஸ்ரேஷ்டர். சத்வைஷ்ணவ சித்தாந்த பிரதிஷ்டாபனாசார்யர் என்ற விருதினைப் பெற்ற ஞானி, உத்தம வேதாந்தி. அடுத்த கல்பத்தில் வாயுபதவியை அலங்கரிக்கும் ருஜுகணத்தின் தேவஸ்ரேஷ்டர் என்னும் நம்பிக்கையை சஜ்ஜனர்களிடம் தோற்றுவித்த மஹா அவதாரபுருஷர். ஸோதேயில் வ்ருந்தாவனஸ்தராகி, அனைத்து பக்தர்களுக்கும் அருளியவாறு இருக்கிறார். இந்த மகாத்மரின் மகிமைகளை வர்ணிப்பது அல்பமதியான என் தகுதியல்ல. பண்டிதர்கள், காவிய ரூபத்தில் அவரது சரித்திரத்தை வர்ணித்திருக்கின்றனர். அபரோக்ஷ ஞானிகளான ஹரிதாசர்கள் அவரின் மகிமைகளை பத பத்யங்களில் கொண்டாடியிருக்கின்றனர்.

ஸ்ரீவாதிராஜ ஸ்வாமிகள் சம்ஸ்கிருதத்தில் சாஸ்திர கிரந்தங்களையும் காவியங்களையும் இயற்றியிருக்கிறார். எதுகை

---

மோனையுடனான அவரின் நுடிகள் அற்புதமான நடையில் இருக்கின்றன. அவரின் வியாக்யான கிரந்தங்கள் அவரின் ஆழமான சாஸ்திர பாண்டித்யத்தை விளக்குகிறது. அவரின் 'ருக்மிணீஷவிஜய' முதலான காவியங்கள் மஹாகாவிய லட்சணங்களைக் கொண்டவாறு, அவர் கவிகுலதில என்னும் காரணப் பெயரைக் கொண்டதை நிரூபிக்கிறது. கன்னட சாகித்யமும் அவரிடமிருந்து வந்திருக்கிறது. சம்ஸ்கிருதத்தை அறியாத சஜ்ஜனர்கள்கூட சத்வைஷ்ணவ சித்தாந்த தத்வங்களை அறிந்துகொள்வதற்கு ஏதுவான உத்தம கிருதிகளை இயற்றியிருக்கிறார் ஸ்ரீவாதிராஜர். அவற்றில் 'வைகுண்ட வர்ணனெ' யும் ஒன்று.

பிரமேயங்களைக் கொண்ட இந்த கிரந்தம், மத்வ சித்தாந்த தத்வ ரகசியங்களை நான்கு சந்திகளில் தொகுத்து விளக்கியிருக்கிறார். சாஸ்திரங்களுக்கு தக்க ஆதாரங்களையே கொடுத்து, சாமான்யமான லௌகிக அறிவுள்ளவர்கள் கூட சுலபமாக இவற்றை புரிந்து கொள்வதற்கு ஏதுவாக விஷயங்களை விளக்குவது, ஸ்ரீவாதிராஜரின் அனைத்து கிரந்தங்களின் சிறப்பு ஆகும். இந்த சிறப்பு 'வைகுண்ட வர்ணனெ' யிலும் தெளிவாக தெரிகிறது.

நித்ய நிர்துக்கானந்த அனுபவ ஸ்திதி ரூபமான 'மோட்சம்' – அனைவரும் விரும்புவது. அது விஷ்ணுவின் விருப்பத்தால் மட்டுமே கிடைக்கக்கூடியது. பிற சாதனங்கள் அனைத்தும் ஸ்ரீவிஷ்ணுவின் பிரசாதத்திற்கு காரணம் ஆகத்தக்கது. மோட்சத்திற்கு சாட்சாத் சாதனங்கள் அல்ல. 'ஏனம் மோசயாமி – இந்த வாழ்க்கையை சம்சாரத்திலிருந்து (ப்ரக்ருதி பந்தனத்திலிருந்து) விடுவிக்கிறேன்' என்னும் பரம பிரசாதம், ஸ்ரீமஹாவிஷ்ணுவிடம் செய்யும் சிறந்த சுத்த பக்தியினால் மட்டுமே சாத்தியம். இப்படியான உத்தம பக்தி, தாரதம்யத்துடனான ஸ்ரீவிஷ்ணு சர்வோத்தமத்வ ஞானத்தின் மூலம் மட்டுமே கிடைக்கிறது. ஸ்ரீவிஷ்ணுவே சர்வோத்தமன் என்னும் அறிவு, அவனே சேதனாசேதனாத்மகவான இந்த விஷ்வத்தின் ஸ்ருஷ்டி, ஸ்திதி, லய, நியமன, ஞான, அஞ்ஞான,

பந்த, மோட்ச என்னும் அஷ்டவித கர்த்ருத்வத்தை நிர்வகிக்கும் ஸ்வதந்த்ர பிரபு, அவனே சர்வக்ஞன், சர்வசக்தி படைத்தவன், சர்வ குணபூர்ணன், சகல தோஷதூரன் என்னும் அவனின் மகாமகிமைகளின் ஞானத்தினாலேயே கிடைக்குமே தவிர, வேறு வழியில் இல்லை.

சகல ஜகத்சம்பந்தமான இந்த அஷ்ட கர்த்ருத்வங்களை அனந்தரூபியான ஸ்ரீஹரி தன் விருப்பத்தினால் மட்டுமே ஏதாவது ஒரு ரூபத்தினால் செய்யத்தக்கவன். இப்படி இருந்தாலும், அசிந்த்யாத்மக மகிமைகளைக் கொண்டு, நாராயண நாமகமான தன் மூலரூபத்தினால், ஸ்ருஷ்ட்யாதி அஷ்ட கர்த்ருத்வங்களை நிர்வகிப்பதற்காக, தன் விருப்பத்தினால் வாசுதேவாதி ரூபங்களை வெளிப்படுத்துகிறான். வாசுதேவ, சங்கர்ஷண, பிரத்யும்ன மற்றும் அனிருத்த என்னும் இந்த நான்கு ரூபங்கள், வாசுதேவ – மோட்ச பிரதன். சங்கர்ஷணன் – லயகர்தன். பிரத்யும்னன் – ஸ்ருஷ்டி கர்த்தன், அனிருத்தன் – ஸ்திதிகர்தன். ஸ்ரீஹரியின் இந்த நான்கு ரூபங்களின் செயல்களை அதன் ரகசியங்களுடன் அறிவது, ஸ்ரீஹரியே சர்வோத்தமன் என்னும் ஞான நிஸ்சயத்தைக் கொடுக்கிறது. இதனை சஜ்ஜனர்களுக்கு சுலபமாக விளக்குவதே இந்த கிரந்தத்தின் நோக்கம். ஆகையாலேயே 'தத்வஸார' என்பது இதன் காரணப் பெயராகவே இருக்கிறது.

'வைகுண்டவர்ணனெ' என்னும் சொல், இந்த அர்த்தத்தையே குறிக்கிறது. வைகுண்ட என்பது நிர்தோஷனான ஸ்ரீஹரியின் பெயர். உத்தம ஜீவர்கள், சம்சாரத்திலிருந்து முக்தர் ஆனபிறகு, நித்ய ஸுகானுபவத்தை செய்தவாறு வசிக்கும் நித்யலோகம், வைகுண்ட என்னும் பெயரை பெற்றிருக்கிறது. அந்த உலகத்தின் நடுவில் இருக்கும், லட்சுமி சமேதனாகி ஸ்ரீஹரி வசிக்கும், லட்சும்யாத்மகமான திவ்ய நகரின் பெயரும் அதுவே. இந்த கிரந்தத்தின் வியாக்யான பாகத்தில் இதன் விளக்கத்தை பார்க்கலாம். அதனால், வைகுண்ட வர்ணனெ என்றால், ஸ்ரீஹரிமகிமைகளின் நிரூபணம் – அதுவே தத்வஸார. ஸ்வதந்த்ரனான ஸ்ரீஹரியே தத்வ என்னும் சொல்லினால் அழைக்கப்படுகிறான். மூலரூபத்தினால் வாசுதேவாதி ரூபங்கள் வரிசையாக வெளிப்பட்டிருக்கின்றன. அந்த வரிசையிலேயே இந்த

கிரந்தமும் சந்திகளாக வந்திருக்கிறது. மோட்ச சந்தி, லய சந்தி, ஸ்ருஷ்டி சந்தி மற்றும் ஸ்திதி ஸந்தி என்பதே இந்த நான்கு சந்திகள். இவற்றில், ஸ்ருஷ்ட்யாதி அஷ்ட கர்த்ருத்வ மகிமைகளுக்கு சம்பந்தப்பட்ட, மற்றும் பிரம்ம மீமாம்ஸ சாஸ்திரங்களில் சொல்லப்பட்ட, அனைத்து ரகசிய பிரமேயங்களும் அடங்கியிருக்கின்றன. வேதாதி அனைத்து நற்சாஸ்திர சாரங்களும் இங்கு சஜ்ஜனர்களுக்கு கிடைக்கின்றன. ஸ்ரீமத்வ சித்தாந்த சாரத்தை சந்தேகமில்லாமல் பெற்று, யோக்ய ராக தாளங்களில் பாடி, மனனம் செய்வதற்கு, இந்த கிரந்தம் உத்தம சாதனையாக இருக்கிறது. சத்பக்தர்களுக்கு இதைவிட அதிகமான, பரம உதவி வேறு எதுவும் இல்லை. ஸ்ரீவாதிராஜருக்கு சஜ்ஜன உலகம் நிரந்தரமாக கடன்பட்டிருக்கிறது.

இந்த கிரந்தத்தில் இருக்கும் பத்யங்கள் மற்றும் ஸ்லோகங்கள் ஆகியவை, ஸ்ருதி, ஸூத்ராதிகளிலிருந்து எடுக்கப்பட்டு அவை மிகவும் ஆழமான அர்த்தங்களைக் கொண்டவையாக இருக்கின்றன. கன்னட சொற்கள் மிகவும் சரளமாக இருந்தாலும், இதில் பழைய கன்னட சொற்களும் ஏராளமாக வந்திருக்கின்றன. இந்த காரணங்களால், ஸ்லோக அர்த்தங்களையும், பத்யங்களின் விளக்கங்களையும், தேவையான அளவு விவரமாக புரியும் மொழியில் கொடுத்திருக்கிறேன். சிறப்புக்குறிப்பு என்னும் பாகத்தில், சொல்லப்பட்டுள்ள பிரமேயங்களை சுருக்கமாக சொல்லியிருக்கிறேன். இவை படிப்பதற்கு சுலபமாகவும், புரியும்படியும் இருக்கும் என்று நம்புகிறேன். அப்படி அனைவருக்கும் புரிந்தால், நான் தன்யன் ஆகிறேன். என் சேவை சார்த்தகம் ஆகிறது.

வியாக்யானத்தை இயற்றுதலில் ஸ்ரீஸ்ரீபண்டாரகேரி மடாதீசரான ஸ்ரீவித்யாமான்ய தீர்த்த ஸ்ரீபாதங்களவரிடமிருந்து கிடைத்த உதவியை நினைத்து, அவரின் பாதங்களில் நன்றியுடனான சாஷ்டாங்க பிரணாமங்களை அர்ப்பிக்கிறேன்.

இதனை ப்ரூஃப் பார்த்து திருத்தி உதவியவர் ஹரிதாசரத்னம் கோபாலதாசர் அவர்கள்.இத்தகைய திவ்யமான சிறந்த

கிரந்தத்திற்கு வியாக்யானத்தை இயற்றிய இந்த மகாசேவையை என் மூலமாக செய்வித்து, புண்யசாலியாக ஆக்கிய ஸ்ரீஹரிதாசரத்னம் அவருக்கு என் அனந்தசாஷ்டாங்க நமஸ்காரங்கள்.

சஜ்ஜனர்கள் என் இந்த கிருதியை ஏற்று, என்னை ஆசிர்வதிக்குமாறு வேண்டுகிறேன். 'ஆசார்ய: ஸ்ரீமதாசார்ய: ஸந்துமே ஜன்ம ஜன்மனி' என்னும் என் பிரார்த்தனையை ஸ்ரீஹரிவாயுகுருகள் சார்த்தகம் ஆக்கவேண்டும் என்பதே என் விரும்பும் ஆசிர்வாதம்.

|| ஓம் தத்ஸத் ||
|| ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து ||

பரிதாவி, ஆஷாட சுத்த தசமி 1972
தாவணகெரெ

ஹரிபக்த சேவக
பி.பீமராவ்

****

**|| ஸ்ரீ: ||**

**|| ஸ்ரீலட்சுமிஹயக்ரீவாய நம: ||**

**ஸ்ரீமத்வாதிராஜ தீர்த்த ஸ்ரீபாதங்கவளர் இயற்றிய**

**வைகுண்ட வர்ணனெ**

*** தத்வஸார ***

# 1. மோட்ச ஸந்தி

**காமதே4னுர்யதா2 பூர்வம் ஸர்வாபீ4ஷ்ட ப2லபிரதா3 |**
**ததா2 கலௌ வாதி3ராஜ ஸ்ரீபாதோ3ऽபீ4ஷ்டத3: ஸதாம் ||**

பூர்வம் – ஆதி காலத்திலிருந்து. காமதேனு: – காமதேனு. யதா – எப்படி. ஸர்வாபீஷ்டபலப்ரதா – (தன்னை வணங்கும்) அனைவரின் விருப்பங்களையும் நிறைவேற்றும் ஸ்வபாவம் கொண்டுள்ளதோ, ததா – அப்படி, கலௌ – கலியுகத்தில், வாதிராஜ ஸ்ரீபாத: – ஸ்ரீவாதிராஜ தீர்த்தர் என்னும் ஸ்வாமிகள், ஸதாம் – சஜ்ஜனர்களுக்கு. அபீஷ்டத: – விருப்பங்களைக் கொடுக்கும் மஹானுபவராக இருக்கிறார்.

வைகுண்ட என்பது ஸ்ரீவிஷ்ணுவின் பெயர். அது முக்த லோகத்தின் மற்றும் அந்த லோகத்தின் தலைநகரின் பெயரும் ஆகும். அங்கு ஸ்ரீமகாலட்சுமிதேவியின் அற்புத சேவையை ஏற்றுக்கொண்டவாறு, பிரம்மாதி முக்தர்களால் வணங்கப்பட்டவாறு, ஸ்ரீவிஷ்ணு அங்கு வீற்றிருக்கிறான். ’வைகுண்டவர்ணனெ’ என்றால், ஸ்ரீவிஷ்ணுவின் வர்ணனை. அவன் தன் மகிமைகளால் அபின்னன். அந்த மகிமைகளின் நிரூபணமே ’தத்வஸார’. விஷ்ணுமகிமைகளின் ஞானமே தத்வஞானம். இந்த முதலாம் சந்தியில் வைகுண்டனும், வைகுண்ட லோகமும், வைகுண்ட நகரும் விவரிக்கப்பட்டுள்ளது.

கிரந்த ஸ்வரூப மற்றும் நோக்கம்:

**தத்வஸாரத3 ஸொபக3 த4ரெயொளு**
**விஸ்தரிஸபே3கெந்து3 முனிகுல**
**ரத்ன ஸ்ரீகு3ருவாதி3ராஜனு ஸ்ருதி புராணக3ள**
**வொத்தவனு நெரெ மதிஸி மேலண**
**முக்தி ஸ்ருஷ்டிஸ்தி2தி லயங்க3ள**
**நர்த்தியலி பண்ணிஸித3 கதெ2யனு கேளி ஸஜ்ஜனரு ।**

தத்வஸாரத – பகவன் மகிமைகளின் (ஸத்யஸ்வரூபத்தின்) ஸொபக – அழகினை (மகிழ்ச்சியைக் கொடுக்கும் சௌந்தர்யத்தை), தரெயொளு – உலகில்; விஸ்தரிஸபேகெந்து – பரப்ப வேண்டும் என்று, முனிகுலரத்ன – யதிகுல திலகரான. ஸ்ரீகுரு வாதிராஜரு – ஸ்ரீவாதிராஜ குருகள், ஸ்ருதிபுராணகள – வேத மற்றும் புராணங்களின். மொத்தவனு – அனைத்தையும். நெரெ மதிஸி – நன்றாக கலந்து (தயிர் கடைவதைப் போல கடைந்து). மேலண – மேலே வரும் (வெண்ணையைப் போல சாரமான). முக்திஸ்ருஷ்டிஸ்திதிலயங்களனு – மோக்ஷ, ஸ்ருஷ்டி, ஸ்திதி, லயங்களின் சம்பந்தப்பட்ட நிர்ணயங்களை, அர்த்தியலி – பக்தி மரியாதைகளுடன். பண்ணிஸித – வர்ணித்த. கதெயனு – உரையை. ஸஜ்ஜனரு – சஜ்ஜனர்கள் (முக்தி யோக்யர்கள்). கேளி – கேளுங்கள் (மற்றும் அவரில் பக்தியைப் பெறுங்கள்).

ஓம் ஜன்மாத்யஸ்ய யத: ஓம் (பிரம்மஸூத்ர). என்று ஸ்ரீமஹாவிஷ்ணுவே சேதனாசேதனாத்மக அனைத்து உலகின் உத்பத்தி, ஸ்திதி, லய, நியமன, ஞான, அஞ்ஞான, பந்த, மோட்ச என்னும் அனைத்திற்கும் ஸ்வதந்த்ர காரணன் என்று நிர்ணயம் செய்யப்பட்டிருக்கிறது. விஷ்ணு மகிமைகளின் யதார்த்த ஞானம் சர்வ மங்களபிரதமும், ஆனந்தபிரதமும் ஆனது. இதுவே தத்வஸாரத்தின் அழகு.

'இதிஹாஸபுராணாப்யாம் வேதம் ஸமுமபப்ரம்மயேத்' -- என்னும் ஸ்ருதி, இதிகாச (பாரத ராமாயணங்கள்) மற்றும் புராணங்கள் மூலம், வேதார்த்தங்களை முழுமையாக புரிந்து

கொள்ள வேண்டும் என்று சொல்கிறது. 'ஸ்ருதி புராணகள மொத்தவனு' என்பது, மேலே கூறப்பட்டுள்ள ஸ்ருதிபுராணங்களின் அர்த்தங்களை மட்டும் சொல்வது அல்ல.

'அர்த்தியலி' என்னும் சொல்லை 'பண்ணிஸித' என்பதற்கும் 'கேளிரி' என்பதற்கும் சேர்த்து படிக்க வேண்டும். குரு மகிழ்ந்து செய்த உபதேசமே பலன்களைக் கொடுக்கிறது. அதைப் போலவே, மரியாதையுடன் செய்த ஸ்ரவணமே பலன்களைக் கொடுக்கிறது.

'கேளி ஸஜ்ஜனரு' என்பது பல அர்த்தங்களைக் கொண்டுள்ளது. கேட்டதாலேயே பலன்கள் கிடைக்கிறது. அதில் நிஷ்டையைக் கொள்ள வேண்டும். நிஷ்டை என்றால் ஸ்ரத்தை.

ஸத்வானுரூபா ஸர்வஸ்ய ஸ்ரத்தா பவதி பாரத |
ஸ்ரத்தாமயோ஽யம் புருஷ: யோ யச்ஸ்ரத்த: ஸ ஏவ ஸ: || (கீதை)

என்றால், ஸாத்விக, ராஜஸ, தாமஸ என்னும் (அங்கு வர்ணிக்கப்பட்டுள்ள) மூன்றுவித ஸ்ரத்தைகளில் யார் எவ்விதமான ஸ்ரத்தை கொண்டிருக்கிறாரோ, அவன் அந்த ஸ்வரூபத்தையே - ஜீவஸ்வரூபமே ஸ்ரத்தாத்மகம். இப்படியிருந்தாலும், தற்காலிக சத்கர்ம, துஷ்கர்மங்களின் அனுஷ்டானத்தால் ஜீவஸ்வரூப யோக்யதையை விளக்க முடிவதில்லை. பூர்வபலன்கள், சகவாசம் ஆகிய காரணங்களால் ஸ்வரூப ஸ்ரத்தையிலிருந்து வேறுபாடுள்ள ஸ்ரத்தை உண்டாகிறது. இந்த புற-சிரத்தை சத்வாதி ப்ராக்ருத குண நிமித்தமானது. இந்த புற சிரத்தை, எப்போதும் ஸ்வரூப சிரத்தைக்கு தக்கவாறே இருக்கிறது என்னும் நியமம் இல்லை. ஆனால், அதற்கேற்பவே இருக்கிறது என்பது நியமம். நைஷ்டிக ஜீவனத்தால் மட்டும், சிரத்தையை கண்டுபிடிக்க முடியாது. கார்ய - அகாரியங்களை சாஸ்திர ஆதாரத்தினால் புரிந்து கொள்வது எப்படி என்பதை முக்கியமாக கவனிக்க வேண்டும். 'ஓம் ஸர்வதா஽பி து த ஏவ உபய லிங்காத் ஓம்' (பிரம்மசூத்ர) என்பதில், முயற்சி - குரு உபதேசம் - தேச காலங்களால் சமமாக இருந்தாலும், முக்தியோக்யருக்கு (சாத்விக சிரத்தை

உள்ளவர்களுக்கு) பரமார்த்த ஞானம் கிடைக்கிறது என்று நிர்ணயம் செய்யப்பட்டிருக்கிறது. சுஜீவிகள் மட்டும் இந்த கிரந்தத்திற்கு அதிகாரிகள் என்று சொல்வதற்கு, 'கேளி ஸஜ்ஜனரு' என்றிருக்கிறார்.

தத்வஞான லாபமே நோக்கமாக இருக்கும் பேச்சு மற்றும் விஷய நிரூபணம் 'கதா' என்று அழைக்கப்படுகிறது. ஜல்ப, விதண்ட முதலான 'கதா' பல விதங்களை 'கதாலட்சண' என்னும் ஸ்ரீமதாசார்யரின் கிரந்தத்திலிருந்து அறிகிறோம்.

லய, ஸ்ருஷ்டி, ஸ்திதி ஆகியவை முறையே 2,3,4ம் ஸந்திகளாக இருக்கின்றன.

**இது[3] புண்யகதெ[2] லோகக்கிது[3] முகுதிய பத[2]**
**இத[3] கேளுவவனெ க்ருதார்த்த[2] || பல்லவி**

இது - இந்த கிரந்தத்தின் விஷயம். புண்யகதெ - நித்யசுக சாதனத்தின் நிரூபணம். இது - இந்த சிந்தனை. லொகக்கெ - சம்சாரிகளுக்கு (அஞ்ஞான நிலையில் இருக்கும் சஜ்ஜனர்களுக்கு). முகுதிய பத - மோட்ச மார்க்கம். இவ - இதனை. கேளுவவனெ - கேட்டு நிஷ்டையை பெறுபவனே. க்ருதார்த்த - (புருஷார்த்த சாதனைக்காக) செய்ய வேண்டியதை செய்து. பலன்களைப் பெற்றவன் (வாழ்க்கையை அர்த்தமாக்கிக் கொண்டவன்).

**மேலெனிப நாடி மொத[3]லாத[3] ராக[3]ங்க[3]ள**
**தாளமேளதி[3] நால்கு ஸந்தி[4]**
**ஸ்ரீலோல சரிதெய தத்வ ரஹஸ்யத[3]**
**மேலெ கேள்வரிக[3]லங்கார ||1**

மேலெனிப - உத்தமமான. நாடி மொதலாத ராகங்கள - நாடி முதலான (ஒவ்வொரு பதத்திற்கும் குறிப்பிடப்பட்டுள்ள ராகங்களில் அல்லது தக்க வேறு ராகங்களில்) சரியான மற்ற ராகத்தில், தாள பேளதி - தாள வாத்தியம் முதலான வாத்தியங்களுடன். பேள்வரிகெ - பாடுபவர்களுக்கு. நால்கு சந்தி - (இந்த கிரந்தத்தின்) நான்கு சந்திகளில் சொல்லப்பட்டிருக்கும்.

## 1. மோட்ச ஸந்தி

---

ஸ்ரீலோல சரிதெய - லட்சுமிலோலனின் மகிமாரூபமான. தத்வரஹஸ்யத மாலெ - தத்வ ரகசியத்தின் மாலை. அலங்கார - பூஷணமாக இருக்கிறது.

**கன்னடி$^3$யொளு தோர்ப்பந்தெ பூர்ணப்ரக்ஞர மத**
**து$^3$ன்னத தத்வ ஸாரவனு**
**கன்னடி$^3$ஸி ப$^3$ண்ணிஸித$^3$ வாதி$^3$ராஜமுனிய**
**பி$^3$ன்னபவென்னல மன்னிபுது$^3$ ||2**

பூர்ணப்ரக்ஞர மதத - சர்வக்ஞரின் (ஸ்ரீமத்வாசார்யரின்) சித்தாந்தத்தின், உன்னத தத்வஸாரவனு - சிறந்த தத்வங்களின் சாரத்தை. கன்னடியொளு தோர்ப்பந்தெ - (எளிமையான) கன்னடத்தில் தெளிவான புரியுமாறு. கன்னடிஸி - (சம்ஸ்கிருதத்திலிருந்து) கன்னட மொழியில் மொழிபெயர்த்து. பண்ணிஸித - வர்ணிக்கப்பட்ட. வாதிராஜமுனிய - வாதிராஜ யதிகளின். ஆ பின்னபவனெல்ல - (நான் சொல்வது அனைத்தையும்) முக்கிய தத்வங்களின் நிரூபணையை. மன்னிபுது - விடாமல் பின்பற்றவும் (பக்தியுடன் சரணடையுங்கள்).

ஸ்ருதி புராணங்களின் சாரமே மத்வ சித்தாந்த தத்வங்கள். இவற்றின் திடமான ஞானத்தினாலேயே (தத்வ நிஸ்சயத்தினால்) மோட்சம்.

இந்த கிரந்தத்தின் பத்யங்களை தாள மேளங்களுடன், ராகத்துடன் பாடினால், பாடுபவனுக்கு அது பூஷணம். கேட்பவருக்கு மகிழ்ச்சி. பகவந்தனின் மற்றும் பகவத் பக்தரின் குணகானங்களுடன் பாடுவது புண்ணியத்தைக் கொடுக்கிறது. பாடுவதும், கேட்பதும் பக்திபூர்வகமாக இருந்தால், காதிற்கு இனிமை. மனதிற்கு மகிழ்ச்சி மட்டுமல்ல, ஆத்ம உத்தாரகமே ஆகிறது.

சம்ஸ்கிருதத்தை அறியாத சுஜனர்களுக்காக தத்வஸாரத்தை கன்னடத்தில் நிரூபித்திருக்கும் இந்த கிரந்தம், அனைத்து ஆதாரங்களையும் கொண்டுள்ளது. கண்ணாடியில் தெரியும் பிரதிபிம்பத்தைப் போல, (சம்ஸ்கிருதத்தில் சொல்லப்பட்ட

தத்வங்களின்) அப்படியேயான பிரதிபலிப்பாக இருப்பதால், பேசுமொழியில் இருக்கிறது என்னும் காரணத்தால் இதனை புறக்கணிக்காதீர்கள் என்கிறார்.

மங்களாசரணம் 1 : ஸ்லோகம் 1

**ஷுக்லாம்ப$^3$ரத$^4$ரம் விஷ்ணும் ஷஷிவர்ணம் சதுர்பு$^4$ஜம் |**
**பிரஸன்னவத$^3$னம் தி$^3$யாயேத் ஸர்வவிக்$^4$னோப ஷாந்தயே ||**

சதுர்புஜம் - (ஆபரண ஆயுதங்களுடன்) நான்கு தோள்களைக் கொண்ட. சுக்லாம்பரதரம் - வெண்மையான வஸ்திரத்தை தரித்த. ஷஷிவர்ணம் - பூர்ண சந்திரனைப்போல ஒளியைக் கொண்ட. ப்ரஸன்னவதனம் - புன்னகை பூத்த (பூர்ண ஆனந்தத்தைக் கொண்ட) முகத்தைக் கொண்ட. விஷ்ணும் - ஸ்ரீமகாவிஷ்ணுவை. ஸர்வவிக்னோப ஷாந்தயே - (மோட்சத்திற்கான தடையாக இருக்கும்) அனைத்து விக்னங்களின் பரிகாரத்திற்காக. த்யாயேத் - தியானிக்க வேண்டும்.

பத 1

**நிஷ்களங்க சந்தி$^3$ரவத$^3$ன ஷுக்லவஸன லக்ஷ ஷஷிவர்ண ப்ரஸன்ன |**
**நால்கு தோளின விஷ்ணு நம்ம விக்$^4$னங்க$^3$ள பக்கனெ ஒரஸி ரக்ஷிஸலி ||**

நிஷ்களங்க சந்த்ரவதன - களங்கம் இல்லாத சந்திரனைப் போல முகத்தைக் கொண்ட. லக்ஷஷஷிவர்ண பிரசன்ன - லட்ச (எண்ணிக்கையற்ற) பூர்ண சந்திரர்களைப் போல ஒளி உள்ள. ஷுக்லவஸன - வெண்மையான வஸ்திரத்தைக் கொண்ட. நால்கு தோளின விஷ்ணு - நான்கு தோள்களைக் கொண்ட விஷ்ணு. நம்ம விக்னங்கள - நம் (இஷ்டார்த்த சித்திக்காக தடையாக இருக்கும்) விக்னங்களை. கக்கனெ - உடனடியாக. ஒரஸி - விலக்கி. ரக்ஷிஸலி - அருளட்டும்.

விக்னங்களை விலக்குவதில் கணபதி, ஸ்வதந்த்ரன் அல்ல. கணபத்யந்தர்கத விஷ்வம்பர நாமக விஷ்ணுவே முக்ய விக்னேஷன்.

## 1. மோட்ச ஸந்தி

--------------------------------------------------------------------------------------------

'சந்திரகோடிஸுஷீதலம்' என்றும் 'ஷஷிகோடிலாவண்ய' என்றும் ஸ்ரீவிஷ்ணுவின் முகம் வர்ணிக்கப்பட்டிருக்கிறது. அனந்த பூர்ண நிஷ்களங்க சந்திரனைவிட அதிகமான குளிர்ச்சியைத் தரும் லாவண்ய மூர்த்தி - விஷ்ணு. தஷ - சஹஸ்ர - லட்ச முதலான எண்ணிக்கைகள், அனந்த எண்ணிக்கையையே குறிக்கின்றன.

கிரந்த மகிமையை முதலில் சொல்லி, பிறகு கிரந்தத்தை துவக்குவதால், அதிக பலன்கள் உண்டு. (கீதா பாராயணத்திற்கு முன்னர், கீதா மஹாத்ம்யத்தை சொல்ல வேண்டியதைப் போல). ஆகையால், முதலில் கிரந்த மகாத்ம்யத்தை, அதாவது இதில் சொல்லப்பட்ட விஷயத்தையும், பலன்களையும் சொல்லியிருக்கிறார்.

மங்களாசரணம் 2 ஸ்லோகம் 2

**நாராயணம் நமஸ்க்ருத்ய நரம் சைவ நரோத்தமம் |**
**தே³வீம் ஸரஸ்வதீம் வ்யாஸம் ததோ கி³ரந்தமுதீ³ரயேத் ||**

கிரந்தத்தின் துவக்கத்தில் சம்பிரதாய பழக்கத்திற்கேற்ப மங்களத்தை சொல்கிறார். நாராயணம் - நாராயணனை. தேவீம் - லட்சுமிதேவியை. நரோத்தமம் - ஜீவோத்தமனான வாயுதேவனை (பிரம்மனை). சரஸ்வதீம் - பாரதிதேவியை (சரஸ்வதியை). நரம் - சேஷதேவனை. வ்யாஸம் சைவ - வேதவியாசரை. நமஸ்க்ருத்ய - வணங்கி. க்ரந்தம் - கிரந்தத்தை. உதீரயேத் - சொல்கிறேன்.

வேதவியாசர் - அனைத்து சாஸ்திரங்களையும் இயற்றியவர். நாராயணனின் அவதாரர். நாராயணனிடமிருந்து வேறுபாடு இல்லாதவர். சாஸ்திர கிரந்தத்தை துவக்கும் முன்னர், ஸ்ரீவேதவியாசரை கண்டிப்பாக வணங்க வேண்டும் என்பது விதி. (அவர் சாஸ்திரத்தை இயற்றியவர் மட்டுமல்ல. சாஸ்திரத்தில் புகழப்பட்டவரும் அவரே).
தாரதம்ய ஞானத்துடனேயே நாராயணனை வணங்கவேண்டும். அவனின் குடும்பத்தவரான பிரம்மாதி தேவதைகளையும், மற்ற தத்வாபிமானி தேவதைகளையும் சிந்திக்க வேண்டும் என்று அறிய வேண்டும்.

வியாசரை 'கஷ்சன ரிஷி:' என்றால், அனேக பிற ரிஷிகளின் நடுவில், யாரோ ஒரு ரிஷி என்று அறியும் அஞ்ஞானிகளின் மித்யா ஞானத்தை விலக்குவதற்காக, 'வியாஸம்' என்று கடைசியில் (தேவதைகளுக்குப் பிறகு) வணங்கியிருக்கிறார் என்று பிரம்மகாண்ட கருட புராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. 'விஷ்ணோர்வாயோரனந்தஸ்ய த்ரிபிரம்ஷைர் நரஸ்ம்ருத:' (தாத்பர்ய 11) என்னும் நர சொல், நரனுக்குப் பிறகு நரோத்தமம் என்று கூறினார் என்று அறியவேண்டும். விஷ்ணு, வாயு மற்றும் சேஷதேவ என மூன்று அம்சங்களால் கூடிய 'நர' நாமக அவதாரம். 'நர' என்பது சேஷதேவனின் நாமமும் ஆகும்.

பத 2 ராகம் : ஷுத்தகௌள. தாளம் – ரூபக

**நரனெந்து3 சேஷன பெஸரு நாராயணன**
**மெரெவ மூல ரூபவெனிப**
**கு3ருவியாஸ நரோத்தம வாயு தே3வி லகுமி**
**சரஸ்வதிகொ3ந்தி3ஸி கி3ரந்த2 ஒரெவுது க3ட3 || 1**

நரனெந்து சேஷன பெஸரு – 'நர' என்பது சேஷதேவனின் பெயர். மெரெவ – உலகத்தில் நிலைத்திருக்கும். மூலரூபவெனிப – மூலரூபத்திலிருந்து (நாராயணனிடமிருந்து) வேறுபடாதவனான. குருவியாஸ – ஜகத்குருவான வேதவியாசருக்கு. நரோத்தம வாயு – ஜீவோத்தமனான வாயுதேவருக்கு. தேவி லகுமி – தேவி என்று அழைக்கப்படும் லட்சுமிதேவிக்கு. சரஸ்வதிகெ – பாரதிதேவிக்கும்கூட. வந்திஸி – வணங்கி. கிரந்த ஒரெவுது கட – கிரந்தத்தை சொல்கிறேன். (கட – புகழ்பெற்ற விதியாக இருக்கிறது).

**கிரந்த2வ மாடி3த3 வேத3வியாச மு**
**னீந்த்3ரரு வ்ருந்தா3ரகர கு3ருவெந்து3**
**இந்தி3ரேஷனெம்ப3 மூலரூபவாத3**
**சந்த3த3 பெஸருள்ளவனெந்து3 வர்ணிஸிது1 ||2**

கிரந்தவ மாடித – கிரந்தகர்த்தரான வேதவியாஸ என்னும். முனீந்திரரு – வேதவியாச முனிவர். வ்ருந்தாரகர – தேவதைகளின். குருவெந்து – குருகள் என்று. மூலரூபவாத –

# 1. மோட்ச ஸந்தி

---

மூலரூபமே (நாராயணனே) ஆன. இந்திரேஷனெம்ப – லட்சுமிபதி என்னும். சந்தத பெஸருள்ளவனெந்து – ஷுப நாம உள்ளவன் என்று. வர்ணிஸிது – (மங்கள ஸ்லோகம்) தெளிவுபடுத்துகிறது.

**வாணிய ப$^3$லகொ$^3$ம்பெ$^3$ ப்ராணநாத$^2$ன பாத$^3$**
**கானெரகு$^3$வெ ரமெயடி$^3$கெ$^3$**
**ஆநமிஸுவெ ஹயவத$^3$ன தே$^3$வோத்தமன**
**மானஸதொ$^3$ளகி$^3$ட்டு நெனெவெ ||3**

வாணிய – சரஸ்வதியின் (பாரதிதேவியின்). பலகொம்பெ – அருளை வேண்டுகிறேன். ப்ராணநாதன பாதகெ – முக்யபிரணனின் (வாயுதேவரின்) பாதங்களில். அனு எரகுவெ – நான் வணங்குகிறேன். ரமெயடிகெ – லட்சுமிதேவியின் பாதங்களில். அனமிஸுவெ – பக்தியுடன் வணங்குகிறென். ஹயவதன தேவோத்தமன – ஹயக்ரீவரூபி (என் உபாஸ்ய) சர்வதேவோத்தமனை. மானஸதொளகிட்டு – மனதில் நிறுத்தி. நெனெவெ – தியானிக்கிறேன் (நிரந்தரமாக சிந்திக்கிறேன்).

* நரன் சேஷதேவனே ஆகியிருந்தாலும், நாராயணனின் மற்றும் வாயுதேவனின் அம்சங்களைக் கொண்டிருக்கிறான்.
* அர்ஜுனன் இந்திர அம்சத்தைக் கொண்டிருந்தாலும், நர ஆவேசம் உள்ளவன். அதாவது, நாராயண, வாயு, சேஷ அம்சங்களைக் கொண்டிருக்கிறான்.
* பலரம – லட்சுமணர்கள் சேஷ அம்சத்தைக் கொண்டிருந்தாலும், நாராயண மற்றும் வாயு அம்சங்களையும் கொண்டிருக்கின்றனர்.

விஷ்ணோர்வாயோரனந்தஸ்ய த்ரிபிரம்ஷைர் நர: ஸ்ம்ருத: |
ஸேந்த்ரைஸ்சதுர்பி: பார்த்தஸ்து த்வாப்யாம் து பலலக்ஷ்மணௌ
* இந்த 11ம் ஸ்கந்தத்தின் தாத்பர்ய வாக்கியம் சரியான ஆதாரமாக உள்ளது.
* நாராயணன், வ்ருந்தாரகரின் (பிரம்மாதி தேவதைகளின்) குரு என்று சொல்லி, ஞானப்ரதன் ஆகையால், பரமபூஜ்ய என்றும், அந்த இந்திரேஷனின் ஸ்துதி, நமஸ்காரங்களே மங்களம் என்றும் சொல்கிறார். மங்கள என்பது வேறு ஒன்று இருக்கிறதா?

மங்களாசரணம் 3 ஸ்லோகம் 3,4

**லட்சுமி நாராயணம் வந்தே தத்$^3$ப$^4$க்தப்ரவரோ ஹி ய: |**
**ஸ்ரீமதா$^3$னந்த$^3$ தீர்த்தா$^2$க்$^2$யோ கு$^3$ருஸ்தம் ச நமாம்யஹம் ||**

அஹம் - நான். லட்சுமி நாராயணம் - ரமா சமேத நாராயணனை. வந்தே - வணங்குகிறேன். ய: எந்த. ஸ்ரீமதானந்ததீர்த்தாக்ய: - ஸ்ரீமதானந்த தீர்த்தர் என்னும் பெயர் உள்ள. குரு: - குருகளான. ஹி - எந்த காரணத்தால். தத்பக்தப்ரவர: - லட்சுமி நாராயணரின் பக்த வர்க்கங்களில் சிறந்தவரோ (அதனால்). தம் ச - அவர்களையும்கூட. நமாமி - வணங்குகிறேன்.

**ஏவாவதாலம் நனு ஸூசிதேன**
**கு$^3$ணைரஸாம்யேs நதிஷாயனேsஸ்ய |**
**ஹித்வேதரான் பிரார்த்தயதோ விபூ$^4$தி:**
**யஸ்யாங்க்$^4$ரிரேணும் ஜுஷதேsனபீ$^4$ப்ஸோ: ||**

விபூதி: - மகாலட்சுமி. ப்ரார்த்தயத: - (தன்னை) வணங்கும். இதரான் - பிறர் அனைவரையும். ஹித்வா - விட்டு. அனபீப்ஸோ: - (தன்னை) விரும்பும். யஸ்ய - எந்த ஸ்ரீஹரி. அங்க்ரிரேணும் - பாததூளியை. ருஷதே - விரும்பி வணங்குகிறாள் என்று. ஏதாவதா ஸூசிதேன - இவ்வளவு சொல்வதால். அஸ்ய - இந்த ஸ்ரீஹரிக்கு. குணை: - (ஞான, ஆனந்த, ஸ்வாதந்த்ர்யாதி) குணங்களால். அஸாம்யே - சமம் இல்லதவன் என்னும் விஷயத்தில். அனதிஷாயனே - அதிகம் இல்லாதவனும்கூட. அலம் - போதும் (பிற சாதக பிரமாணங்களின் தேவையில்லை).

பத 3

**மிக்க தே$^3$வர்க$^1$க$^3$ள லெக்கிஸதெ$^3$ லகுமி மன**
**உக்கியவகெ$^3$ மாலெ இக்கித$^3$ளு |**
**அக்கரதி$^3$ லகுமி நாராயணனர்கெரகி$^3$ த**
**த்பு$^4$க்த மத்$^4$வமுனிகெ$^3$ ஷரணெம்பெ$^3$ ||1**

மிக்க - (அஜித நாமக ஸ்ரீஹரியைத் தவிர) மற்ற. தேவர்கள - தேவதைகளை. லெக்கிஸதெ - புறக்கணித்து. லகுமி - (பாற்கடலில் தோன்றிய) லட்சுமிதேவி. மன உக்கியே - மிகவும்

---

உற்சாகத்துடன். அவகெ - அந்த ஸ்ரீஹரிக்கு. மாலெயிக்கிதளு - பத்மமாலையை அர்ப்பித்தாள். லகுமி நாராயணர்கெ - இந்த லட்சுமி நாராயணனுக்கும். தத்பக்த மத்வமுனிகெ - அவர்கள் இருவரின் சிறந்த பக்தர்களான ஆனந்த தீர்த்த முனிகளுக்கு. அக்கரதி - பக்தியுடன். ஷரணெம்பெ - சரணடைந்து வணங்குகிறேன்.

தேவதைத்யர்கள் சேர்ந்து அமிர்தத்திற்காக பாற்கடலை கடைகின்றனர். அங்கிருந்து பற்பல பொருட்கள் தோன்றுகின்றன. அவரவர் ஸ்வபாவத்திற்கேற்ப பிடித்த பொருட்களை எடுத்துக் கொண்டனர். பிறகு அங்கிருந்து லட்சுமிதேவி தோன்றினாள். அவள், தன்னை விரும்பிய அனைவரையும் விட்டு, தேவதைகளின் வரிசையில் இருந்த ஸ்ரீஹரியையே அடைந்தாள். ஸ்ரீஹரி, லட்சுமிதேவியின் அனாதி நித்ய பதி. அமிர்த மதன காலத்தில், இவள் கணவனை புதியதாக அடையவில்லை. அவள், கணவனை எப்போதும் விட்டுப் பிரியாத 'நித்யாவியோகினி'. புதிய மணப்பெண்ணைப் போல காட்டிக்கொண்டு, ஸ்ரீஹரியின் சர்வோத்தமத்வத்தை தெரியப்படுத்துவதற்கு, பிற தேவதைகளின் தோஷங்களை எடுத்துக் காட்டுகிறாள். இந்த விஷயம் ஸ்ரீமத்பாகவதத்தில் சிறப்பாக வர்ணிக்கப்பட்டுள்ளது.

தபோநிதிகளித்தாரெ - கோபத்தை வென்ற (அம்பரீஷனிடம் துர்வாசர் காட்டிய கோபம்). ஞானிகளித்தாரெ - சுக ப்ருஹஸ்பதிகளைப் போல ஞானிகள். இன்னொப்ப மஹாத்மனித்தானெ - காமத்தை வென்ற (ஸ்ருஷ்டிகர்தன் என்று அழைக்கப்படும் சதுர்முக பிரம்மன், தன்னிடமிருந்தே படைக்கப்பட்ட சரஸ்வதியையே திருமணம் செய்தான்). ஈஷ்வரனித்தானெ - பிறரை எதிர்பார்க்காமல் இருப்பதே கஷ்டமாக இருக்கிறது. (பஸ்மாசுரனிடமிருந்து விஷ்ணுவே தன்னை காப்பாற்றிக் கொள்ளவேண்டியதாயிற்று). இத்தகையவனை ஈஷ்வர என்று எப்படி அழைக்க முடியும்?

ஒருவன் தர்மமூர்த்தி. ஆனால் கருணையில்லாதவன். (யமதர்மராஜன்). ஒருவன் மகாத்யாகி (பலிசக்ரவர்த்தி) - ஆனால்,

அவனுக்கு முக்தியைக் கொடுக்கும் சாமர்த்தியம் இருக்கிறதா?. தேஜோவீர்யங்கள் உள்ளவர்களும் இருக்கிறார்கள். ஆனால், காலமாற்றத்தினால், அவை குறையலாம். (சூர்ய சந்திரர்கள்). தீர்க்காயுள் கொண்டவன் இருக்கிறான் ஆனால் அவன் சாது ஸ்வபாவன் இல்லை (சேஷதேவர்). சாது ஸ்வபாவம் இருந்தாலும், அல்ப ஆயுள் கொண்டவர்கள் இருக்கலாம் (ரைவத முதலான அரசர்களைப் போல). ஸாதுத்வ, ஆயுள் இரண்டும் இருந்தாலும், அத்தகைய அழகு இல்லை (மார்க்கண்டேய ரிஷிகளைப் போல). செல்வம், அழகு ஆகியவை உள்ளவர்கள், பலவற்றை விரும்புகிறார்கள் (இந்திரனைப் போல); பரமமங்கள ஸ்வரூபனாகி (ப்ராக்ருதகுணசங்க இல்லாதவனாக), நித்யானந்த, ஞான, ஷௌர்ய, ஸௌந்தர்யாதி அனந்தகுண பூர்ணனாக இருந்து என்னையும், என் செல்வங்கள் எதையும் விரும்பாதவனாக இருப்பவன், ஸ்ரீஹரி ஒருவனே. அவனே என் பூர்ணானந்தத்திற்கு காரணன் என்றும், சிந்தித்து, நிச்சயித்து, ஸ்ரீலட்சுமிதேவி, சத்குணபூர்ணனும், நிரபேக்ஷனும், முக்தியைக் கொடுப்பவனும், முக்தி நியாமகனுமான ஸ்ரீஹரியின் கழுத்தில் மாலையை சமர்ப்பித்து, அவன் பக்கத்தில் நின்றாள். 'கஸ்சின்மஹான்ஸ்தஸ்ய ந காமனிர்ஜய:' என்று 'மஹான்' என்னும் சொல் மஹத்தத்வத்திற்கு அபிமானியான பிரம்மனையும், நிர்தோஷியானாலும், 'காம' என்னும் சொல்லினால், ப்ராக்ருத தேகம் நூலாடையைப் போல இருந்தாலும், லிங்கதேகம் உள்ளவனாக இருந்தாலும், தோஷ ஸ்பர்ஷ உள்ளவன் என்னும் அர்த்தத்தை குறிக்கிறது. தன் நியதபத்னியான சரஸ்வதியையே விரும்பியது உண்மையே. ஸ்ரீஹரி இவ்வாறுகூட லட்சுமிதேவியை விரும்பியதில்லை என்னும் விஷயத்தை அறியவேண்டும்.

ஸ்ருதி 1

**த்ருதீயமஸ்ய வ்ருஷப4ஸ்ய தோ3ஹஸே**
**த3ஷப்ரமதிம் ஜனயந்த யோஷண: |**
**யதீ3மனுப்ரதி3வோ மத்4வ ஆத4வே**
**கு3ஹாஸந்தம் மாதரிஷ்வா மதா2யதி ||**

இந்த ஸ்ருதி பளித்தா ஸூக்தத்தின் ஒரு பாகம். இந்த சூக்தத்தின் மற்ற பாகங்களின் அர்த்தம், அடுத்தடுத்த பதங்களில்

சொல்லியிருப்பதால், இந்த முழு சூக்தத்தை இங்கே சொல்லி, அதன் அர்த்தத்தை, படிப்பவர்களின் அனுகூலத்திற்காக கொடுத்திருக்கிறோம்.

பளித்தா சூக்தத்தின் ரிக்குகள்

பளித்தா தத்வபுஷேsதாயி தர்ஷதம்
தேவஸ்ய பர்க: ஸஹஸோ யதோsஜனி |
யதீமுபஹ்வரதே ஸாததே மதி
ர்ருதஸ்ய தேனா அனயந்த ஸஸ்ருத: ||1

ப்ருக்ஷோ வபு: பிதுமான் நித்ய ஆஷயே
த்விதீயமா சப்த ஷிவாஸு மாத்ருஷு |
த்ருதீயமஸ்ய வ்ருஷபஸ்ய தோஹஸே
தஷப்ரமதிம் ஜனயந்த யோஷண: ||2

நிர்யதீம் புத்னான் மஹிஷஸ்ய வர்ப்பஸ
ஈஷானாஸ: ஷவஸாக்ரந்த ஸூரய: |
யதிமனுப்ரதிவோ மத்வ ஆதவே
குஹாஸந்தம் மாதரிஷ்வா மதாயதி ||3

ப்ரயத்பிது: பரமான்னீயதே பர்யா
ப்ருக்ஷுதோ வீருதோ தம்ஸு ரோஹதி |
உபா யதஸ்ய ஜனுஷம் யதின்வத
ஆதித்யவிஷ்ணோ அபவத்வ்ருணா ஷுசி: ||4

ஆதின்மாத்ரூராவி ஷத்யா ஸ்வாஷுசிர
ஹிம்ஸ்யமான ஊர்வியா விவாவ்ருதே |
அனுயத்பூர்வா அருஹத்ஸனாஜுவோ
நினவ்யஸீஷ்வராஸு தாவதே ||5

ஸஹஸ: - எதிரிகளை வெல்லக்கூடியவனான. தேவஸ்ய - வாயுதேவரின். தத் - அந்த மூலரூபம். பட் - பலாத்மகம் ஆனது. தர்ஷதம் - ஞானரூபமானது. யத: - எந்த மூலரூபத்தினால்.

வபுஷே - அவதார ரூபத்திற்காக. இத்தமேவ - இப்படியாகவே (ஞான பலாத்மகமாகியே). அதாமி - இருக்கிறதோ (மூலரூபத்தைப் போலவே இருக்கும் அவதார ரூபம் யாரினால் தரிக்கப்பட்டதோ). தஸ்ய - அந்த வாயுதேவரின். பர்க்க: - அனைத்தையும் நிர்வகிக்கும். யத் இம் - எந்தவொரு. மதி: - ஹனுமந்தன் என்னும் பிரதம ரூபம். ருதஸ்ய - யதார்த்த ஞானரூபமான. (இவ்வாறு எப்போதும் ஒரேமாதிரியாக அறியப்படும்) ஸ்ரீராமனின். உப - அருகில். ஹ்வரதே - எப்போதும் இருக்கிறது. சஸ்ருத: - அமிர்தத்தை பொழியும். தேனா: - அந்த ராமனின் வாக்கியங்கள். ஸாததே - நிறைவேற்றுகின்றன. (ருதஸ்ய ஸஸ்ருத: தேனா: - ருத ரூபனான, சத்யரூபனான ஸ்ரீராமனை போற்றும் அமிர்தத்திற்கு ஈடான மூலராமாயணத்தின் வாக்கியங்களை). அனயந்த - (ராமபக்தர்களுக்கு) கொண்டு சேர்த்தது (உபதேசம் செய்தது). அல்லது, ஸ்ரீராமனின் செய்தி என்னும் அமிர்தத்தைப் போல இருக்கும் வாக்கியங்களை சீதையிடம் கொண்டு சேர்த்தது. ||1||

அஸ்ய - இந்த. வ்ருஷபஸ்ய - பக்தாபீஷ்டத்தை பொழியும், அல்லது பக்தர்களிடம் அன்பு கொண்ட அல்லது பஹுசக்திசாலியான. வாயுதேவரின் த்விதீயம் வபு: - இரண்டாம் ரூபம். ஸப்த - ஏழு. ஆஷிவாஸு - பரம மங்களப்ரதனான. மாத்ருஷு - ருகாதி பிரமாணங்களில். நித்ய: - எப்போதும். ஷயே - சயனம் செய்கிறது. இவ்வாறு சாஸ்திர மனனங்களில் இருந்தாலும் (சாஸ்திரங்களில் சொல்லப்பட்ட ஸ்ரீஹரிகுண தியானங்களில் ஈடுபட்டிருந்தாலும்), வ்ருக்ஷ: - பஹு சைன்யங்களை நாசம் செய்யத்தக்கது. பிதுமான் - அன்ன போகம் கொண்டது. அஸ்ய வ்ருஷபஸ்ய - இந்த தேவஸ்ரேஷ்டனின். தஷப்ரமதிம் - பூர்ணப்ரக்ஞ என்னும் நாமம் கொண்ட. த்ருதீயம் வபு: - மூன்றாம் ரூபத்தை. தோஹஸே - ஞானமோகனத்திற்காக (பசு, பால் கறப்பதைப் போல, ஞான என்னும் அமிர்தத்தை கறப்பதற்காக, பக்தர்கள் கறந்து கொள்வதற்காக). யோஷண: - பெண்கள் (குருவின் தாய் ஆனதால், பன்மை வந்திருக்கிறது). ஜனயந்த - பெற்றெடுத்தார். (ஜகத் ஜனனியான ஸ்ரீ, பூ, துர்கா ரூபங்களைக் கொண்ட ஸ்ரீலட்சுமிதேவியே பெற்றெடுத்தாள். ருகாதி வேதாபிமானி ஸ்ரீபூதுர்காதேவியர் வேதங்களின் தவறான வியாக்யானங்களை விலக்கி, சஜ்ஜனர்களுக்கு சரியான அர்த்த

---

விளக்கங்களை தெரிவிக்கும் வியாக்யானத்தை இயற்றுவதற்காக மத்யகேஹ என்னும் பிராமணரின் மனைவியின் உதரத்தில் தோன்றினார். (குழந்தை வடிவில் வாயுதேவரை நுழைத்தார் என்னும் அர்த்தமும் இங்கு குறிப்பிடப்பட்டுள்ளது).

புத்னாத் - ஸர்வக்ஞரான (பக்தர்களில் சிறந்தவரான) இந்த பூர்ணபிரக்ஞாசார்யர் மூலமாகவே, மஹிஷஸ்ய - பரமபூஜ்யனான ஸ்ரீஹரியின். வர்பஸ: - நற்குணங்களை. ஈஷானஸ: - ருத்ராதி தேவதைகள். ஸூரய: - மற்ற அனைத்து ஞானிகளும். ஷவஸா - சுகத்தினால் (சுலபமாக). நி: - ஆழமாக. க்ரந்த: - அறிந்தனர். யத் ஈம் - இத்தகைய. ப்ரதிவ: - ஒளிரூபமான மத்வ: - ஆனந்ததீர்த்தர் என்னும். மாதரிஷ்வா - வாயுதேவரே (மாதரி+ஷ்வயதி - ருகாதி பிரமாணங்களில் எப்போதும் நிரதராக இருப்பர்). குஹாஸந்தம் - (கலியுகத்தில் துர்வாதிகளால்) தவறாக புரிந்துகொள்ளப்பட்ட ஸ்ரீஹரியை. அனு - சாஸ்திரங்களின்படி. ஆதவே - சர்வாதிபதி என்று (ஆ-ஸமந்தாத் - சந்தேகம் இல்லாமல். தவே - பதித்வ விஷயத்தில்). மதாயதி - தெளிவாக சொல்கிறார். (சாஸ்திரத்தைப் படித்து நிர்ணயித்திருக்கிறார்). ||3

யத் - எந்த ரூபத்ரயம். பரமாத் - சர்வோத்தமனான. பிது: - தந்தையான ஸ்ரீநாராயணனால். நீயதே - நன்றாக நியமிக்கப்படுகிறதோ. ப்ருக்ஷுத: - கேள்விகளை. வீருத: - சிறு துரும்புகள். தம்ஸு - பற்களில். பர்யாரோஹதி - எப்படி பொடியாகிறதோ (துண்டாக்குகிறது, கண்டிக்கிறது). அஸ்ய - இந்த வாயுதேவரின். யத் ஜனுஷம் - எந்த பிறவியை. உபா - இருவரும் (ரமா, நாராயணர்). யத் - எந்த காரணத்தால். இன்வத: - நியமித்தார்களோ, அத் இத் - இந்த காரணத்தால் (இவர்கள் இருவரின்) க்ருணா - கருணையால். ஷுசி: - பவித்ரரான வாயுதேவர். யவிஷ்ட: - சிறந்தவர். அபவத் - ஆனார்.

ஆத் இத் - இந்த ரமா நாராயணரின் பிரசாதத்தினாலேயே. மாத்ரூ: - (அஞ்சனா, குந்தி, வேதவதி நாமகரான தம் அவதார த்ரயரின்) தாய்களை. ஆவிஷத் - நுழைந்தார். யாஸு - எந்த தாய்களில். ஆ - நன்றாக. ஷுசி: - சுத்தமாகவே. அஹிம்ஸ்யமான: -

பிரச்னைகள் இல்லாமல் (கர்ப்பவாச துக்கங்கள் இல்லாமல்). உர்வியா - சிறந்த முறையில். விவாவ்ருதே - வளர்ந்தார். அல்லது, யாஸு - எந்த வித்யைகளில். ஆஷுசி: - சுத்தமான (சந்தேகம் இல்லாத) ஞானம் உள்ளவராக. அஹிம்ஸ்யமான: - பூர்வபக்ஷங்கள் இருக்கும்படியான தவறான பிரமாணங்களின் கஷ்டங்களுக்கு ஆளாகாமல் (தன் லீலையினால் கண்டித்து). விவாவ்ருதே - வெற்றியாளன் ஆனார். ஸனாஜுவ: - சனாதனிகளான (அனாதி நித்யங்களான). அல்லது, ஸனாதனமான பகவந்தனை புகழும் ருகாதி அபௌருஷேய வாக்கியங்களை. அனு - தக்க தாத்பர்யங்களை சொல்லி. ஆருஹத் - தம் வ்யாக்யானங்களால் (பத வாக்கியங்களின் அர்த்த விஷயங்களை) விளக்கினார். நி - தெளிவான. நிவ்யஸீஷு - புதியதான. அவராஸு - பௌருஷேயங்களான பாரத பாகவதாதிகளில். விதாவதே - பாய்கிறார் (தாத்பர்ய அர்த்தங்களை நிரூபித்து வியாக்யானம் செய்கிறார்).

குறிப்பு: ஸ்ரீவாதிராஜரால் இயற்றப்பட்ட பாவபிரகாசிகெ என்னும் தாத்பர்ய நிர்ணய வியாக்யானத்திற்கேற்ப, இங்கு எழுதப்பட்டிருக்கிறது. இந்த சூக்தத்திற்கு, அனைத்து வேதங்களுக்கும் இருப்பதைப் போல, பகவத்பரமான அர்த்தமும் இருக்கிறது என்பதை மறக்கக்கூடாது.

பத 4

**ஸிரிபூ$^{4}$மி து$^{3}$ர்கெ$^{3}$யரு ஞானாம்ருதவ கரெவரெ**
**கு$^{3}$ரு பூர்ணப்ரக்ஞர புட்டிஸித$^{3}$ரு க$^{3}$ட$^{3}$**
**நரலோகத$^{3}$ நாரிகெ$^{3}$ இவர ஹெருவ பா$^{4}$க்$^{3}$ய**
**தொ$^{3}$ரகவெந்து$^{3}$ ஸ்ருதி யோஷண வந்தி$^{3}$து ||1**

ஸிரிபூமிதுர்கெயரு - ஸ்ரீ, பூ, துர்காரூபம் உள்ள லக்ஷ்மி தேவி (புகழ்பெற்ற மூன்று ரூபங்கள் ஆகையால், பன்மை வந்திருக்கிறது). ஞானாம்ருதவ - ஞான ரூபத்தின் அமிர்தத்தை. கரெவரெ - அழைப்பதற்காக. குருபூர்ணப்ரக்ஞர - குருகளான பூர்ணபிரக்ஞரை. புட்டிஸிதரு கட - அவதாரம் செய்யவைத்தார் என்பது ஸ்ருதியில் சொல்லப்பட்டுள்ளது. நரலோகத நாரிகெ - ஸாமான்ய மனித பெண்ணுக்கு (மத்யகேஹ பட்டரின்

மனைவியான வேதவதிக்கு). இவன - ஸ்ரீமத்வாசார்யரை. ஹெருவ பாக்ய - பிரசவிக்கும் மகாபுண்ணியம். தொரகதெந்து - கிடைக்கட்டும் என்று (முழுமையான புண்ணியத்திற்கு அதிகாரிணி அல்ல என்பதை குறிப்பிடுகிறார்). ஸ்ருதி - வேதம் (பளித்தா ஸூக்தம்). யோஷணவெந்திது - லட்சுமிரூப த்ரயர்கள் என்று கூறியது.

**த$^3$ஷமதியெம்ப$^3$ பெஸரெம்ம கு$^3$ருவரகு$^3$ண்டு**
**தே$^3$ஷதே$^3$ஷங்க$^3$ளலி ப்ரஸித்$^3$த$^4$ காணிரோ ।**
**எஸெவ ஈ நாம அனிமிஷரிகொ$^3$ப்பகி$^3$ல்ல**
**ரிஷிகி$^3$ல்ல மானஸரொளில்ல நாமப$^2$லதி$^3$ந்தெ$^3$ம்ம கு$^3$ருவிகி$^3$து$^3$ த$^4$ர்ம ||2**

தஷமதி எம்ப பெஸரு - 'தஷமதி' (பூர்ணபிரக்ஞ) என்னும் பெயர். எம்ம குருவரகெ - நம் குருவிற்கு. உண்டு - இருக்கிறது. தேஷதேஷங்களலி - எல்லா இடங்களிலும். பிரஸித்த காணிரோ - புகழ்பெற்றிருக்கிறது என்று அனைவருக்கும் தெரிந்திருக்கிறது. எஸெவ - சுபமான (வீற்றிருக்கும்). ஈ நாம - இந்தப் பெயர். அனிமிஷரொளு - தேவதைகளில். ஒப்பகில்ல - யாருக்கும் இல்லை. ரிஷிகில்ல - எந்த ரிஷிக்கும் இல்லை. மானஸரொளில்ல - மனிதர்களுக்கு இல்லை. நாமபலபலதிந்த - நாமத்தின் அர்த்த பலத்தினால். எம்ம குருவிகெ - நம் குருகளுக்கு (ஸ்ரீபூர்ணபிரக்ஞருக்கு). இது தர்ம - இந்த சர்வக்ஞத்வம் ஸ்வபால லட்சணமாக இருக்கிறது. ('தஷமதி' என்பது காரணப்பெயராக இருக்கிறது).

**பூர்ணப்ரக்ஞரெம்ப$^3$ நாம நம்ம கு$^3$ருவரகு$^3$ண்டு**
**உன்னதோபனிஷத்து த$^3$ஷவெம்ப$^3$ ஷப்$^3$த$^3$க்கெ ।**
**பூர்ணவெம்ப$^3$ர்த்தவெ பேளிதா$^1$கி$^3$ த$^3$ஷமதியெம்ப$^3$**
**த$^4$ன்யநாம பேள்வுதெ$^3$ மத்$^4$வமுனிக$^3$ல்லதெ$^3$**
**உத்தரோத்தரனொல்லதெ$^3$ பூர்வோக்திய பேள்வதே$^3$ ||3**

பூர்ணபிரக்ஞரெம்ப - பூர்ணபிரக்ஞர் என்னும். நாம - பெயர். நம்ம குருவரகெ - நம் குருகளுக்கு. உண்டு - இருக்கிறது. உன்னதோபநிஷத்து - சிறந்த ஐதரேய உபநிஷத். ஸர்வ என்னும்

சொல்லுக்கு. பூர்ணவெம்பர்த்தவ - 'பூர்ண' என்னும் அர்த்தத்தை. பேளிதாகி - சொல்வதால். தஷமதியெம்ப - தஷ என்றால் ஸர்வ. ஸர்வ என்றால் பூர்ண. மதி என்றால் பிரக்ஞ. தஷமதி என்னும். தன்யநாம - மங்களகர நாமத்தை (தன்யராக ஆக்கும் நாமத்தை). மத்வமுனிகல்லதெ - (பூர்ணபிரக்ஞர் என்று புகழ் பெற்ற) மத்வமுனிவருக்கு இல்லாமல். பேள்வதெ - மற்றவர்களுக்கு சொல்வதா? (இல்லை). உத்தரோத்தரன ஒல்லதெ - மேல் வகுப்பினை சேர்ந்தவர்களைத் தவிர. பூர்வோக்திய - தஷபிரமதி என்னும் பெயரை. பேள்வதெ - (மற்றவர்களுக்கு) சொல்வதா? (ஆகையால், தஷபிரமதிகளே ஜீவோத்தமர்).

**இது³ தே³வரொளு வ்ருஷப⁴னாத³ வாயுதே³வர**
**ஸது³கு³ண உள்ள த்ருதீய ரூபு க³ட³**
**பு³த³ரிகெ³ போ³த⁴வித்து துதி³யல்லி முகுதிஸம்**
**பத³வீவ ஈ கு³ருவிகி³து³ராரு ||4**

'தஷமதி' என்னும் இந்தப் பெயர். தேவரொளு - தேவதைகளில். வ்ருஷபனாத - சிறந்தவரான (சர்வாபீஷ்டங்களை அருள்பவனான) வாயுதேவரின். ஸதுகுணவுள்ள - நற்குணங்களால் (ஞானபக்த்யாதி) பூர்ணமான. த்ருதீயரூப கட - மூன்றாம் ரூபம் அல்லவா? புதரிகெ - சஜ்ஜனர்களுக்கு (தேவாதி முக்தியோக்ய ஜீவர்களுக்கு). போதவித்து - ஸ்வயோக்ய ஞான பூர்த்தியை அருளி. துதியல்லி - கடைசியில். முகுதிஸம்பதவ - மோட்சம் என்னும் மஹாசெல்வத்தை. ஈவ - கொடுக்கும். ஈ குருவிகெ - இந்த நம் குருகளுக்கு. இதிராரு - சரிசமம் யார்? (சமமானவர் இல்லை அல்லது அவரின் எதிரில் வாதத்திற்கு நிற்பவர் யாரும் இல்லை).

**மொத³லது³ மதி எம்ப³ ஹனுமந்தரூபு க³ட³**
**இதி³ராத³ ப்ருதனிகெ³ க்ஷயவித்தா**
**கத³னகர்கஷபீ⁴ம த்³விதீயாவதார க³ட³**
**துதி³ய ரூபவிதெ³ந்து³ ஸ்ருதி பேளிது து³ர்மதவ**
**துளியிது குமதவனளியிது ||5**

## 1. மோட்ச ஸந்தி

---

மொதலது - வாயுதேவரின் முதலாம் அவதாரம். மதியெம்ப ஹனுமந்த ரூபு கட - ஞானி என்னும் அர்த்தம் கொண்ட ஹனுமந்த என்னும் ரூபம் ஆகும். இதிராத - போருக்கு வந்த. ப்ருதனிகெ - சைன்யத்திற்கு. க்ஷயவித்த - அழிவைக் கொடுத்த. ஆ கதனகர்கஷபீம - புகழ்பெற்ற பாரதப் போரில் உக்ரபராக்ரமியான (பயங்கரமான) பீமசேன தேவர். த்விதீயாவதார கட - இரண்டாம் அவதாரம் என்பது தெரிந்ததே. துதிய ரூபவிது - கடைசியான (மூன்றாம்) இந்த மத்வரூபம். துர்மதவ - துர்-சித்தாந்தத்தை. துளியிது - கண்டித்தது. (துர்வாதிகளை வென்றது). குமதவ - (அவற்றில் மிகக் குறைந்ததான) மாயாவாத மதத்தை. அளியிது - வென்றது. எந்து ஸ்ருதி பேளிது - என்று (வாயுதேவரின் மூன்று அவதாரங்களின் மகிமைகளை) ஸ்ருதியே சொல்கிறது.

**மத்$^{4}$வனெம்ப$^{3}$ வாயு ஹ்ருத$^{3}$யதொ$^{3}$ளித்$^{3}$த$^{3}$ ஹரி எல்ல**
**ராள்த$^{3}$ ஸ்வாமியெந்து$^{3}$ மதிஸுவரு க$^{3}$ட$^{3}$**
**ஹொத்$^{3}$தி$^{3}$ இவன பாத$^{3}$வ ஈஷ மொத$^{3}$லாத$^{3}$ தே$^{3}$வரு**
**பு$^{3}$த்$^{3}$தி$^{4}$வந்தராத$^{3}$ரெந்து$^{3}$ ஸ்ருதி கீர்த்திஸிது**
**ஸுமதவன்ஹப்$^{3}$பி$^{3}$ஸிது ஞானதீ$^{3}$பவ ஹச்சிஸிது ||6**

மத்வனெம்ப - ஸ்ரீமத்வாசார்யர் என்னும். ஆ வாயுஹ்ருதயதொளித்த - அந்த வாயுதேவரின் இதயத்தில் எப்போதும் இருக்கும். ஹரி - ஸ்ரீஹரியே. எல்லர - உலகத்தையே. ஆள்த - ஆளும். ஸ்வாமியெந்து - பிரபு என்று. மதிஸுவுது கட - சாஸ்திரத்தில் சொல்லப்பட்டுள்ளது என்று அறிய வேண்டும். (ஏனெனில்). இவன பாதவ - இந்த ஸ்ரீமத்வரின் பாதத்தை. ஹொத்தி - சரணடைந்து. ஈஷ மொதலாத தேவரு - ருத்ராதி தேவதைகள். புத்திவந்தராதரெந்து - ஞானபூர்த்தியை அடைந்தனர் என்று. ஸ்ருதி கீர்த்திஸிது - ஸ்ருதி (பளித்தா ஸூக்தம்) வர்ணிக்கிறது. ஸுமதவன்னு - ஸன்மனதினை. ஹப்பிஸிது - வளர்த்தது. ஞானதீபவ - ஞானஒளியை. ஹெச்சிஸிது - வளர்த்தது. (என்று இந்த மூன்றாம் ரூபத்தின் மகிமையையும் அந்த ஸ்ருதியே சொல்கிறது).

**ஸந்தர்மெச்சி வித்3வான் மத்4வ உஜ்ஜபா4ரவெம்ப3 வேத3**
**ஸந்தோஷ2தி3 நம்ம கு3ருவ கொண்டாடி3து ।**
**இந்து ஸுப்ரஸித்3த3 ஸ்ருதி துதிஸித3 மத்4வமுனி**
**எந்த கு3ருவரனு நீவே நோடி3ரோ முக்திய பே3டி3ரோ ஈ**
**மதவ பாடி3ரோ இவனுக்திய ஒட3ம்ப3டி3ரோ ।।7**

ஸந்தரு – ஸஜ்ஜனர்கள். மெச்சி – இவ்வாறாக மெச்சி மகிழ்ந்தனர். வித்வான் மத்வ உஜ்ஜபாரவெம்ப – 'வித்வான் மத்வ உஜ்ஜபார' என்னும், வேத – ஸ்ருதி (வேதாபிமானினியான லட்சுமிதேவி). ஸந்தோஷதி – மகிழ்ச்சியுடன். நம்ம குருவ – நம் குருகளான ஸ்ரீமத்வரை. கொண்டாடிது – புகழ்ந்திருக்கிறார். இந்து – இவ்வாறு. ஸுப்ரசித்த ஸ்ருதி – புகழ்பெற்ற வேதம். துதிஸித – புகழ்ந்த. மத்வமுனி – ஸ்ரீமத்வாசார்யர். எந்த குருவரனு – எத்தகைய மகிமைகொண்ட சிறந்த குருகள் என்பதை. நீவே நோடிரோ – இந்த விஷயத்தை சிந்தித்து, பாருங்கள். முக்திய – மோட்சத்தை. பேடிரோ – (அவரிடம்) வேண்டிக் கொள்ளுங்கள். ஈ மதவ – இவரின் அபிப்பிராயத்தை. பாடிரோ – கொண்டாடுங்கள். இவனுக்திய – இவரின் சித்தாந்தங்களை. ஒடம்படிரோ – அங்கீகரித்து மேம்படுங்கள்.

**ஸ்ருதி ஸ்ம்ருதிக3ளர்த்த2வ மதி2ஸி மாடி3த3 நம்ம**
**க்ருதியனெ நம்பி3ரோ நாவெந்து3தே3 தத்வ ।**
**மதத3 அஹம்மானவ மாட3தெ3 மேலண ஸ**
**த்க3தி பே3கெம்பு3வரெல்ல இத3 கேளிரோ,**
**எந்தெ3ந்து3 பேளிரோ குமதவ கேளிரோ**
**அமங்க3லக4ங்க3ள ஸீளிரோ ।।8**

ஸ்ருதி ஸ்ம்ருதிகளர்த்தவ – ஸ்ருதிஸ்ம்ருதிகளின் அர்த்தத்தை (அங்கு சொல்லப்பட்ட விஷயங்களை). மதிஸி – நன்றாக புரிந்துகொண்டு. மாடித – இயற்றிய. நம்ம க்ருதியனெ – நம் (ஸ்ரீவாதிராஜரின்) இந்த கிரந்தத்தின் சொல்லப்படும் நிர்ணயங்களை. நம்பிரோ – நம்புங்கள். நாவெந்துதெ – நாம் சொல்வதே. தத்வ – உண்மை. மதத – (நம் முன்னோர்கள் மூலமாக வந்த மதமே உண்மை) என்னும் ஸ்வமதத்தின். அஹம்மானவ மாடதெ – துரபிமானத்தை விட்டு. மேலண சத்கதி

--------------------------------------------------------------------------------------------

– சிறந்த மோட்சத்தை. பேகெம்புவரெல்ல – ஆட்சேபணை செய்பவர்கள் அனைவரும். இத கேளிரோ – மத்வ சாஸ்திரத்தையே கேளுங்கள். எந்தெந்து பேளிரோ – எப்போதும் அதையே படியுங்கள் (பிறருக்கும் அதையே சொல்லுங்கள்). குமதவ – துர்மதத்தை. கேளிரோ – (உங்கள் மனதிலிருந்து) வெளியேற்றுங்கள். அமங்கலகங்களை – (இவ்வாறு செய்வதால்) துக்கத்தைக் கொடுக்கும் பாவங்களை. ஸீளிரோ – பிய்த்துப் போடுங்கள்.

'ஜனயந்த யோஷண:' என்றதில் யோஷண: என்பது பன்மை. பெண்கள் என்று அர்த்தம். மத்யகேஹபட்டரின் மனைவியை மரியாதையுடன் பன்மையில் சொல்லியிருக்கிறார் என்று நினைப்பது ஒரு விதம். 'ஸ்ரீபூதுர்காப்யா: ககாதிவேதாபிமானின்ய: தேவ்ய: ஸ்வாபிமன்ய மானவேதானுமன்யைரன்யதா வ்யாக்யாதத்வாத் யதாவத்வாக்யானாய மத்ய்கேஹாக்யவிப்ரபத்ன்யா: உதரே ஸ்தித்வா அஜனயந்த இதி பாவ:' என்று தம்முடைய பாவபிரகாஷிகா வியாக்யானத்தை ஸ்ரீவாதிராஜர் இங்கு குறிப்பிட்டிருக்கிறார். வேதங்களின் அபவியாக்யானங்களை நிராகரித்து, அவற்றின் உண்மையான அர்த்தங்களை நிர்ணயிப்பதற்காக அவதரிக்கும் வாயுதேவரை பெறும் மஹாபுண்யத்திற்கு, மத்யகேஹரின் மனைவியான சாதாரணப் பெண் தகுதி பெறுவதில்லை என்பதை 'நரலோகத நாரிகெ ஹெருவ பாக்ய தொரெயது' என்று சொல்கிறார். லட்சுமிதேவியின் சன்னிதானம் இல்லாத எந்தவொரு பெண்ணின் வயிற்றிலும் வாயுதேவர் என்றும் அவதரிப்பதில்லை. வேதவதி, தேவாம்சத்தையே கொண்டிருக்கிறாள் என்பதில் சந்தேகம் இல்லை.

ஸ்ரீஹரிவாயுகளின் மகிமைகளை சிறப்பாக விளக்கும் 'ஐதரேய உபநிஷத்', ஸ்ரீமத்வாசார்யருக்கு மிகவும் பிடித்தமானதாகும். அதையே 'உன்னதோபநிஷத்' என்கிறார். அங்கு 'தஷேதி வை ஸர்வம் ஏதாவதீ ஹி ஸங்க்யா தஷதஷதஸ்தச்சதம் தஷஷதானி தத்ஸஹஸ்ரம் தத்ஸர்வம்' என்றும் (2-3-4) இதன் பாஷ்ய

பாகத்தில் 'தஷேதி ஸர்வமுத்திஷ்டம் ஸர்வம் பூர்ணமிஹோச்சதே'.

ப்ரக்ஞா ப்ரமதிருத்திஷ்டா பூர்ணப்ரக்ஞஸ்தத: ஸ்ம்ருத:
ஆ ஸமந்தாத் பதித்வே து கூடம் கலியுகே ஹரிம் |
அஸத்யமப்ரதிஷ்டம் ச ஜகதேதனீஷ்வரம்
வதத்பிர்கூஹிதம் ஸந்தம் த்ருதீயோऽஸூர்மதாயதி ||

என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இதன் அர்த்தம் பின்வருமாறு. 'தஷ' என்றால் ஸர்வ என்று அர்த்தம். அனைத்து எண்களும் இதில் அடங்கியிருக்கின்றன. ஸர்வ என்றால் பூர்ணம் என்றே அர்த்தம். 'பிரக்ஞா' என்றால் ப்ரமதி. ஆகையால், தஷப்ரமதி என்றால் பூர்ணப்ரக்ஞர் என்றே ஞானிகள் அறிகின்றனர். கலியுகத்தில், ஸ்ரீஹரி மறைந்திருக்கிறான். இந்த உலகம் மித்யை. அப்ரதிஷ்டமானது. ஈஷ்வரரஹிதமானது. இவ்வாறு சொல்வதால் மறைந்திருக்கிறான் (மூடப்பட்ட ஸ்வரூபம் உள்ளவனாகிறான்) என்று அர்த்தம் வருகிறது. அப்போது முக்யபிராணனின் மூன்றாம் அவதாரம், தனது சாஸ்திர மதனத்தினால், மறைக்கப்பட்ட ஸ்ரீஹரியை மற்றும் சத்யமான இந்த உலகத்தின் பரம ஸ்வாமி என்று நிறுவுகிறது.

'விஷ்ணுர்ஹி தாதா மோக்ஷஸ்ய மாயுஸ்ச ததனுக்ஞயா'. அதாவது, விஷ்ணுவே ஸ்வதந்த்ரனாக மோட்சத்தைக் கொடுப்பவன். அவனின் ஆணையினால் வாயுதேவனும் மோட்சத்தைக் கொடுக்கிறான் என்னும் பிரமாணத்திற்கேற்ப, 'முக்தியன்னு பேடிரோ' என்கிறார். ருத்ரேந்திராதி தேவதைகளோ, பிறரோ மோட்சத்தைக் கொடுக்க அதிகாரம் கொண்டிருப்பதில்லை.

'ஸ்ருஷ்டம் மத்வாபிதானாங்காஸ் ஸப்தர்சோத்ர விசாரிதா:' (யுக்திமல்லிகா - பல ஸௌரபா) என்று ஸ்ரீவாதிராஜர், தெளிவாக 'மத்வ' என்னும் பெயரால் சொல்லப்பட்ட ஏழு வேத-ரிக்குகளைக் குறிப்பிட்டு, ஸ்ரீமத்வாசார்யருக்கு வேதபிரதிபாத்யத்வத்தை நிறுவியிருக்கிறார். முக்கியமான எட்டு ரிக்குகளையும், இணையான ஆறு ரிக்குகளையும் இவற்றுடன், ஸ்ரீமத்வரின் சரித்திரத்தை வர்ணிப்பவை என்று சொல்கிறார். 'ஸ மத்வ

ஆயுவதே’, ‘உன்மத்வ ஊர்மி:’, ‘வித்வான் மத்வ:’, ‘மத்வோ அம்ஷு:’, ‘ஸிம்ஹன்னஸந்தம் மத்வோ ஆமாஸம்’, ‘ப்ரதாரா மத்வ:’, ‘அஸ்ம ப்யமிந்தவிந்த்ரயுர்மத்வ:’ என்பதே அந்த ஏழு ரிக்குகள்.

இவற்றில் மூன்றாவதான ‘வித்வான் மத்வ:’ என்னும் ரிக் இவ்வாறு இருக்கிறது. ‘ஸப்தஸ்வஸ்ரூ: ரிஷிர்மாவஷானோ வித்வான் மத்வ உஜ்ஜபாராத்ருஷேகம்’. இந்த ஸ்ருதியில் ‘வித்வான் மத்வ:’ என்றால், ஞானிகளான மத்வாசார்யர், சதுர்வேதங்கள், மூல ராமாயண, புராண இதிகாசங்கள், பஞ்சராத்ர ஆகமங்கள் என்னும் ஏழுவித சாஸ்திரங்களையும், மேம்படுத்துகிறார். அதாவது, அவற்றின் உண்மையான அர்த்தங்களை நிர்ணயித்து நிரூபிக்கிறார் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

பத 5 ராக : வஸந்தபைரவி. தாள – அட
**எல்லவில்லெம்புவன நாலிகெ$^{3}$ய இல்லவாயி**
**தல்ல இன்னெந்து நம்ம கூடெ$^{3}$ நுடி$^{3}$வ**
**ப$^{3}$ல்லவரிகி$^{3}$ந்து போ$^{3}$தி$^{4}$ஸி ஜக$^{3}$த்து ஸத்யவெந்து$^{3}$**
**நில்லிஸித$^{3}$ மத்$^{4}$வ முனிகெ$^{3}$ணெகாணெ இந்தல்லதெ$^{3}$ மாணெ ஸ்ரீ ஹரியாணே ||1**

எல்லவில்லெம்புவன – அனைத்தும் பொய் என்பவனின். நாலிகெயெ – நாக்கும்கூட. இல்லவாயிதல்ல – இல்லை என்றே அர்த்தம். இன்னெந்து – மேலும். (இவ்வாறு சொன்னபிறகு). நம்ம கொடெ – நம்முடன். நுடிவ – வாதிப்பாரா? (பேசுவதற்கு வாய்ப்பே இல்லை). பல்லவரிகெ – ஞான யோக்யருக்கு. இந்து – இவ்வாறு (அடுத்து சொல்வதைப் போல). போதிஸி – உபதேசித்து. ஜகத்து – உலகம். ஸத்யவெந்து – உண்மையானது. நில்லிஸித – நிறுவிய. மத்வமுனிகெ – ஸ்ரீமத்வாசார்யருக்கு. எணெகாணெ – சமமானவரை காணவில்லை. இந்தல்லதெ மாணெ – என்று நிரூபிக்காமல் சும்மா இருக்கமாட்டேன். ஸ்ரீஹரியாணெ – என்று ஸ்ரீஹரியின் பெயரால் ஆணையிடுகிறேன்.

**ஈக$^{3}$லுண்டு மேலி ஜக$^{3}$வில்லவெம்ப$^{3}$ மாது நின**
**கா$^{3}$க$^{3}$த$^{3}$ல்ல த்ரிகால நிஷேத$^{3}$வெம்பு$^{3}$வகெ$^{3}$**
**காகெ$^{3}$யந்தெ ஒந்து$^{3}$ பா$^{4}$க$^{3}$த$^{3}$ர்த்த$^{2}$வ கண்டு$^{3}$ மத்தொந்து$^{3}$**
**பா$^{4}$க$^{3}$த$^{3}$ர்த்த$^{2}$வ காணதி$^{3}$ரெ நின்ன காணனென்னரெ நின்னந்தவன**
**தோரெ நோடு$^{3}$ நோடு$^{3}$ கண்ணாரெ ||2**

ஈ ஜகவு – இந்த உலகம். ஈகலுண்டு – தற்போது இருக்கிறது. மேலெ இல்லவெம்ப மாது – அடுத்து இல்லை என்னும் பேச்சு. த்ரிகால நிஷேதவெம்புவகெ – இறந்த, நிகழ், எதிர் காலங்களில் இல்லை என்பவனான. நினகாகதல்ல – உனக்கு சரியல்ல (பொருந்துவதில்லை). காகெயந்தெ – காக்கையைப் போல. ஒந்து பாகதர்த்தவ – ஒரு பக்கத்து பொருளை மட்டும். கண்டு – கண்டவாறு, மத்தொந்து பாகதர்த்தவ – இன்னொரு பக்கத்தின் பொருளை. காணதிரெ – (உனக்கு) தெரியவில்லையெனில். நின்னந்தவன – உன்னைப் போல வாதிப்பவனை. தோரெ – (யாரொருவருக்கும்) காட்டினால். நின்ன – உன்னை. காணனென்னரே – (அறிந்தவர்). ஒக்கண்ணனெந்து கரெயதிருவரே? – ஒரு கண் கொண்டவர் என்று சொல்லாமல் இருப்பாரா?. நோடு நோடு கண்ணாரெ – கண் திறந்து நன்றாகப் பார் (சிந்தித்துப் பார்).

1. பளித்தா ஸூக்தத்தின் 4ம் ரிக்கினில் சுருக்கமாக நிரூபிக்கப்பட்ட வாயுதேவரின் 'ப்ருக்ஷுத: வீருத: தம்ஸுரோஹதி' என்னும் பர-மத-கண்டன வியாபாரத்தை விளக்கியவாறு மூன்றாம் அவதாரியான மாயாவத கண்டனத்தின் மகிமையை வர்ணிக்கிறார். 'நாஸ்தி நாஸீன்ன பவிஷ்யதி இத்யாகாரகஞான விஷய த்வம் மித்யாத்வம்' என்றால், இதுவரை இல்லை, இப்போது இல்லை. இனியும் இருக்கப் போவதில்லை என்னும் ஞானத்திற்கு தெரிவது மித்யை. இது மாயாவாதிகளின் மித்யாத்வத்தின் அடுத்த நிலை. இப்படியான மித்யா வஸ்துவை, வ்யவஹாரிக சத்ய என்று அழைப்பது அவர்களின் 'குறியீடு'. இது மக்களை ஏமாற்றும் வழியில்லையா? அ-ஸத்யத்தையே ஸத்ய என்று அழைத்தால் அது ஸத்ய-ஆகிவிடுமா? 'இப்போது இருக்கிறது. அடுத்து இருப்பதில்லை' என்றால், அது மித்யா ஆவதில்லை.

---

மித்யாத்வத்தில் ஒரு அம்சத்திற்கு (இப்போதும் இல்லை என்பதற்கு), 'ஈகலுண்டு' என்றதால், அது பொருந்தவில்லை. இப்போது இருக்கிறது என்று ஒப்புக்கொண்டும், ஜகத் மித்யை என்று வாதித்தால், ஞானிகள் உன்னை காக்கை என்றே சொல்லி, ஒரு கண்ணைக் கொண்டவன் என்று சொல்வார்களே? சிந்தித்துப் பார்த்து புரிந்து கொள்.

**இல்லி இல்லவெனெ இன்னொந்து3 தே3ஷதொ3ளக்கு ஈக3**
**அல்லில்லவெனெ இன்னொந்து3 காலதொ3ளிப்புது3**
**எல்ல காலவெல்ல தே3ஷ எல்ல ஜக3வில்லெனெ**
**மொல்லன கொம்பி3னந்தெ ஜக3வில்லதெ3 பொக்கு**
**ஸல்லவல்ல ஈ வாகு இன்னு கலஹ ஸாகு ||3**

இல்லி – இந்த இடத்தில். இல்லவெனெ – (ஒரு பொருள்) இல்லை என்றால். இன்னொந்து – வேறு ஒன்று. தேஷதொளக்கு – வேறு இடத்தில் இருக்கலாம். ஈக – இந்த சமயத்தில். அல்லில்லவெனெ – அங்கு இல்லை என்றால். இன்னொந்து காலதொளிப்புது – வேறு காலத்தில் இருக்கலாம். எல்ல காலவெல்ல தேஷ எல்ல ஜகவில்லவெனெ – எல்லா கால, தேஷ, ஜகத்களே இல்லையென்றால் (அல்லது அனைத்து கால தேஷங்களில் உலகின் எந்த பாகமும் இல்லை என்றால்). மொல்லன கொம்பினந்தெ – முயல் கொம்பினைப் போல, ஜகவு – உலகம். இல்லதெ பொக்கு – இல்லாமல் போகிறது (மிகவும் அஸத்யமாகிறது). ஸத்யவல்ல – பொருந்துவதில்லை. ஈ வாகு – இந்த பேச்சு (ஸதஸத் விலக்ஷண என்னும் உன் சித்தாந்தத்திற்கு அஸத் என்பது பொருந்துவதில்லை). இன்னு கலஹ ஸாகு – இந்த வாதத்தை (ஜகத் மித்யை என்னும் வாதம்) நிறுத்து.

**ப3ல்லவரெ ஸத்யவாகி3 ஈ ஜக3வில்லெம்ப3ர்த்த2வ**
**நொல்லரொல்லரு ஸ்ருதிய ஸத்யவெம்ப3 பத3வ**
**இல்லவாகி3 இன்னொந்து3 கடெ3யிந்த3 தந்த3ரெ பா3யொளு**
**கல்லு பீ3ளுவுதல்ல 'மித்2யா'வெம்ப3 பத3வ**
**தத்வாலியொளிக3வ உன்மத்தனாகி3 நீனோது3வ ||4**

பல்லவரெ – அறிவாளிகள் (ஞானிகள்). ஸத்யவாகி – நிச்சயமாக. ஈ ஜகவில்லெம்பர்த்தவனு – இந்த (ப்ரத்யக்ஷாதி ப்ரமாண ஸித்தமான) ஜகத் பொய் என்னும் வாதத்தை. ஒல்லரொல்லரு – எப்போதும் பொருந்துவதில்லை (வேண்டாம். காதில்கூட கேட்கமாட்டோம் என்கிறார்கள்). ஸ்ருதிய – வேதத்தில் இருக்கும். ஸத்யவெம்ப – (உலகம்) ஸத்ய என்று சொல்லும். பதவ – சொல்லினை. இல்லவாகி – இல்லாததாக செய்து. 'மித்யா' என்னும் பதத்தின் 'மித்யை' என்னும் சொல்லினை, தந்தரெ – (தவறான அர்த்தத்தைக் கூறி) வாதிட்டால். பாயொளு – (அப்படி சொல்பவனின்) வாயில். கல்லு பீளுவுதல்ல – கல் விழும் அல்லவா? (வாய் மூடிக்கொள்ள வேண்டும் அல்லவா). தத்வாலியூளிகவ – தத்வ சமூகங்களின் பரிவாரங்களை (தத்வத்தை விளக்கும் வாக்கியங்களையும், அதன் அர்த்தத்தை சொல்லும் மற்ற வாக்கியங்களின் சமூகங்களையும்). உன்மத்தனாகி – பைத்தியத்தைப் போல. நீனோதுவவ – படிப்பவன் நீ (அங்கு தவறான அர்த்தத்தையே காண்கிறாய்).

**த்³வாஸுபர்ண' எம்ப³ வேத³ பே⁴த³வன்னெ பேளலு ஸ**
**ர்வேஷ நானெம்ப³ மததா³ஷெயெ ஸல்ல**
**ஈஷதன போத³மேலெ அர்தி²யெம்ப³ மாது விசா**
**ரிஸலு கூட³து³ நினகோ³ஸுக²மய்யா ஈஷத்வவனு சென்னகேஷவ**
**பி³ட³னு நின்ன ||5**

த்வாஸுபர்ணா எம்ப – த்வாஸுபர்ணா என்னும் வேதஸ்ருதியு. பேதவன்னெ பேளலு – (ஜீவேஷ்வரரின்) பேதத்தையே சொல்ல. சர்வேஷ நானெம்ப – நானே ஈஸ்வரன் என்னும். மததாஷெ – மதத்தின் ஆசை (விருப்பம்). ஸல்ல – வீண் (சரியல்ல). ஈஷதன – (ஈசனின்) ஈசத்வம். போத மேலெ – சென்றபிறகு (இல்லையெனில்). அர்த்தியெம்ப மாது – (ஈசன் பரமபுருஷார்த்தரூபன் என்னும் சொல்) அல்லது, (ஜீவன் புருஷார்த்தி என்னும் சொல்), அல்லது ஜீவனுக்கு ஈசத்வம் என்பது இல்லையெனில், ஈசத்வத்தைப் பெறுவதென்பது விருப்பம். விசாரிஸலு கூடது – சிந்திக்கத் தகுதிபெற்றது இல்லை. நினகோஸுகவெ – உனக்காகவே (உன் வாதத்தை உண்மையாக்குவதற்காகவே). அம்மா – ஐயோ மூர்க்கனே.

## 1. மோட்ச ஸந்தி

---

சன்னகேஷவனு - ஸ்ரீஹரி. ஈஷத்வன்னு - ஸ்வபாவஸித்தமான தன் குணத்தை (ஈஷத்வத்தை). பிடனு - விட்டுக்கொடுப்பதில்லை. நின்ன - உன்னை. பிடனு - தண்டிக்காமல் விடுவதில்லை.

த்வாஸுபர்ணா ஸயுஜா ஸகாயா ஸமானம் வ்ருக்ஷம் பரிஷஸ்வஜாதே |
தயோரன்ய: பிப்பலம் ஸ்வத்வத்தி அனஷ்னன்யன்யோ அபிசாகஸீதி || (ஸ்ருதி)

எப்போதும் ஒன்றாகவே இருக்கும், பரஸ்பரம் நண்பர்களாக இருக்கும், ஜீவ ஈஷ என்னும் இரு பறவைகள், தேகம் என்னும் மரத்தை ஆலிங்கனம் செய்திருக்கிறது. இதில் ஜீவன், மரத்தின் (தேகத்தின்) கர்மபலனையும், கசப்பானவற்றை சுவையானது என்றும் அறிந்து தின்கிறான். கர்மபலனை (பாப பலனான துக்கத்தை) தொடாமல், ஈசன் எப்போதும் அங்கு நிலைத்திருக்கிறான். ஜீவேஷ்வர பேதத்தை தத்ரூபமாக நிரூபித்த இந்த ஸ்ருதியின் அர்த்தத்தை விளக்கி, நிர்ணயத்தை மஹோபநிஷத் இவ்வாறு சொல்கிறது.

ஸர்வோத்தமம் ஸர்வதோஷவ்யபேதம் குணைரசேஷை: பூர்ணமன்யம் ஸமஸ்தாத் |
வைலக்ஷண்யாத் ஞாபயந்தி ப்ரவ்யத்தா: ஸர்வே வேதா முக்யதோ நைவ ஜான்யத் ||

சர்வோத்தமனான விஷ்ணுவை சர்வதோஷதூரன் என்றும், சமஸ்த ஷுபகுணபூர்ணன் என்றும், சேதனாசேதன சமஸ்த வஸ்து சமூகத்திலிருந்து அத்யந்த பின்னன் என்றும், வேறுபட்டவன் என்றும், தெரிவிப்பதற்காகவே, சர்வவேதங்களும் முக்கியமாக வந்திருக்கின்றன. வேறு எதையும் (அபோகங்களையோ, பேதாபேதங்களையோ) சொல்வதற்காக அவை வரவில்லை. ஜீவனுக்கு ஈஷத்வ இலை என்று ஸ்ருதிசித்தமான பிறகு, ஈஷத்வத்தை சிந்திப்பதுகூட சரியல்ல என்றும், ஸ்வரூபத்திலேயே இல்லாத ஈஷத்வம் புருஷார்த்தம் ஆகாது என்றும் சரியாக நிரூபிக்கப்பட்டிருக்கிறது. தன் ஈஷத்வத்தை வெளிப்படுத்த

முயலும் ஜீவனை ஈசன், தக்க தண்டனையைக் கொடுக்கிறான். 'அயோக்யமிச்சன் புருஷ: பதத்யேவ ந ஸம்ஷய:' - தகுதி இல்லாதவற்றை விரும்புபவன், அந்தம்தமஸ்ஸையே அடைகிறான்.

**ஈ ஸ்ருதிப$^{3}$லதி$^{3}$ந்த$^{3}$ ஈஷதெ$^{1}$யு பொக$^{3}$ளிஸுவ**
**ஆஷெ பே$^{3}$ட$^{3}$ ஈஷத்வ போத$^{3}$மேலே ஈ ஸ்ருதி ஈஷனைக்ய பேள்வதைஸெயவாகி$^{3}$ ஈஷத்வவ**
**புஸிமாடத$^{3}$த$^{3}$ரிந்த$^{3}$லே ஹேஸி இந்த$^{1}$க்கு அன்யோன்யாஸ்ரய ஸிக்கு ஸாகு ஸாகு நின்ன ஸொக்கு ||6**

இந்த ஸ்ருதியின் ஆதாரத்தில் 'த்வாசுபர்ணா' என்னும் ஸ்ருதியின் பலம் இருப்பதால், ஈஷதெய - ஈஷத்வத்தை, போகளிஸுவ - பொய்யாக்கும் (ஸ்ரீஹரிக்கு ஈஷத்வத்தை இல்லாதவாறு செய்யும்). ஆஷெ பேட - ஆசையை விடு. ஈஷத்வ போதமேலெ - (ஜீவனுக்கு) ஈஷத்வ இல்லாதபிறகு. ஈ ஸ்ருதி - இந்த ஸ்ருதியானது. ஈஷனைக்ய - ஜீவனுக்கு ஈசனின் ஐக்யம். பேள்வதே - சொல்வதுண்டா?. ஐஸெய வாக் - (இப்படியிருக்கையில்) இவ்வாறாக சொல்லும் உன் பேச்சு. ஈஷத்வவ - ஸ்ரீஹரியின் ஈசத்வத்தை. புஸிமாடிததரிந்தலெ - பொய் ஆக்குவதாலேயே. ஹேஸி - பொய்யனே. இந்தக்கு - (ஜீவேஷ்வர ஐக்யவதம்) இவ்வளவு பொய்யானது. தோஷத்தைக் கொண்டது. அன்யோன்யாஸ்ரய ஸிக்கு - (ஒன்றே தேகத்தில் இருக்கும் ஜீவ-ஈசன்) பரஸ்பரம் ஒருவரையொருவர் ஆதரிப்பவர் என்னும் தோஷத்திற்கும் (உன் வாதம்) மறுப்பு வருகிறது (ஜீவன் கர்மலேபம் உள்ளவன். அஸ்வதந்த்ரன். மற்றும் துக்கம் பெறுபவன் என்றும், ஈசன், நிர்லிப்தன். நித்ய சுகி மற்றும் ஸ்வதந்த்ரன் என்றும் இந்த ஸ்ருதி சொல்வதால், ஈசன் ஜீவனை நம்பியிருப்பது எப்படி?). நின்னய ஸொக்கு - உன் ஸொக்கு (உன் மதத்தில் இருக்கும் துரபிமானம் அல்லது மூர்கத்தினால் உண்டான உன்மத்தம்). ஸாகு ஸாகு - போதும் (அர்த்தமேயில்லாததால் போதும்).

**அந்து$^{3}$ ப்$^{4}$ருகு$^{3}$முனி ப$^{3}$ந்து$^{3}$ ஸந்தத வக்ஷவ காலி**
**னிந்த$^{3}$லொதெ$^{3}$யலவன குந்து$^{3}$ நோடதெ$^{3}$**

---

**இந்தி$^3$ரேஷ தன்ன ஸர்வேஷ்வரத்வ ரக்ஷிஸித$^3$**
**னெந்து$^3$ கொண்டா$^3$டி$^3$ஸித$^3$ ஸ்ருதியிந்த$^3$ ஹரிய தன்னந்துபகாரிய குந்தெ$^3$ணிஸதெ$^3$ந்த$^3$ரிய ||7**

அந்து - முன்னர் ஒரு நாள். ப்ருகுமுனி - ப்ருகு ரிஷிகள். பந்து - (வைகுண்டத்திற்கு) வந்து. சந்தத வக்ஷவ - மங்களஸ்வரூபனின் மார்பில் (அப்ராக்ருத தேகத்தின் இதயத்தில்). காலினிந்தலி - தன் கால்களால். ஒதெயலு - மிதித்தான். அவன குந்து நோடதெ - அந்த ப்ருகுரிஷிகளின் தோஷத்தை எண்ணாமல். இந்திரேஷ - லட்சுமிபதி. தன் ஸர்வேஷ்வரத்வ - சர்வோத்தமத்வத்தையும். ரக்ஷிஸிதனு - காப்பாற்றிக் கொண்டான். எந்து கொண்டாடிஸித - என்று (ப்ருகுரிஷிகளால் ரிஷி மண்டலத்தில்) புகழப்பட்டான். ஆ ஸ்ருதியிந்த - (சர்வோத்தமன் என்று சொல்லும் புகழ்பெற்ற மஹோபனிஷத்தின்) தெளிவான வேதவாக்கியத்தால். ஹரிய - ஸ்ரீஹரியை. தன்னந்துபகாரிய - அவனைப் போன்ற உபகாரியை. குந்தெணிஸதெந்து - நிர்தோஷி என்று. அரிய - தெரியவில்லையா? (எவ்வளவு முட்டாளோ நீ?).

மஹோபநிஷத்தின் வாக்கியத்தை அர்த்தத்துடன் இதே பதத்தின் 5ம் நுடியில் சிறப்பாக சொல்லப்பட்டிருக்கிறது.

அதீஷ்வரர் என்று உலகத்தில் புகழ்பெற்ற பிரம்ம, விஷ்ணு, மஹேஷ்வர இந்த மூவரில் யார் சிறந்தவர் என்று நிர்ணயிப்பதற்காக, ரிஷி சமூகம், ப்ருகு ரிஷிகளை, அந்த மூவரிடமும் சென்று வந்து தம் அனுபவத்தை சொல்ல வேண்டும் என்று அனுப்பியது. அந்த வேலையை எடுத்துக்கொண்டு, புறப்பட்ட ப்ருகுரிஷிகள் கடைசியில் வைகுண்டத்திற்கு வந்தார். லட்சுமிதேவியின் துடையில் தலையை வைத்து படுத்திருந்த விஷ்ணுவைக் கண்டு, ப்ருகு ரிஷிகள் காலினால் அவனின் இதயத்தில் உதைத்தார்.

விஷ்ணு, தன் படுக்கையிலிருந்து இறங்கி, லட்சுமி சமேதனாக, ப்ருகு ரிஷிகளை வணங்கி உபசரித்தான். ப்ருகுரிஷி அங்கிருந்து யக்ஞ சாலைக்கு வந்து, ரிஷிகளின் சபையில் தம் அனுபவங்களை

விவரித்தார். பிரம்மன், ப்ருகு ரிஷி வந்தபோது, உதாசீனனாக இருந்தான் என்றும், கைலாயபதி கோபம்கொண்டு தன்னை அடிக்க வந்தான் என்ற செய்தியைக் கேட்ட அந்த சபை, வைகுண்டத்தில் ப்ருகு ரிஷிகளுக்கு ஸ்ரீவிஷ்ணுவினால் கிடைத்த மரியாதையைக் கேட்டு வியப்படைந்து, தம் சந்தேகத்தை போக்கிக் கொண்டது. விஷ்ணுவே சர்வோத்தமன் என்றும், சம்சாரத்திலிருந்து விடுதலை மற்றும் மோட்சம் கிடைப்பது அவன் மூலமாகவே என்னும் தீர்மானத்தை அடைந்தனர். இப்படியான கதையை நிரூபித்திருக்கும் ஸ்ரீமத் பாகவதத்தின் வாக்கியங்கள் பின்வருமாறு.

அதோ ஜகாம வைகுண்டம் யத்ர தேவோ ஜனார்த்தன: |
ஷயானம் ஸ்ரிய உத்ஸங்கே பதா வக்ஷஸ்ய தாடயத் ||
தத உத்தாய பகவான் ஸஹ லக்ஷ்ம்யா ஸதாம் கதி: |
ஸ்வதல்பாதவருஹ்யாத நனாம ஷிரஸா முனிம் ||
புனஸ்ச ஸத்ரமாவ்ரஜ்ய முனீனாம் பிரம்மவாதினாம் |
ஸ்வானுபூதமசேஷேண ராஜன் ப்ருகுரவர்ண்யத் ||
தன்னிஷம்யாத முனயோ விஸ்மிதா முக்த ஸம்ஷயா: |
பூயாம்ஸம் ஸ்ரத்ததுர்விஷ்ணும் யத: ஷாந்திர்யதோபயம் ||
பத 7 ராகம்: மெசசாளி. தாளம்: அட

**காலில்ல கரவில்ல கர்ணங்க$^3$ளில்ல**
**நாலிகெ$^3$யில்லவெனலு ஓர்வ மானவ**
**ஈ லோகதி$^3$ செலுவ காமன கெ$^3$லுவாகாரவ**
**ஸ்ரீலோலன நிராகாரனெந்து$^3$ பேள்வரே**
**ஸந்தரித$^3$ கேள்வரே இந்தெ$^1$னலு பா$^3$ள்வரே ||1**

ஓர்வ மானவ – யாரொரு மனிதன் (அஞ்ஞானி). காலில்ல கரவில்ல – (ஸ்ரீஹரியின் ரூபங்களுக்கு) கால்கள், கைகள் இல்லை. கர்ணங்களில்ல – காதுகள் இல்லை. நாலிகெயில்லவு – நாக்கு இல்லை. எனலு – என்று கூறினால். ஈ லோகதி – இந்த உலகில். செலுவ – அழகானவனான. காமன கெலுவாகாரவ – மன்மதனை வெல்லும் ரூபம் கொண்ட. ஸ்ரீலோலன – ஸ்ரீலோலனை (சௌந்தர்ய நிதியான லட்சுமிதேவியையும் ஈர்த்து சுகம் கொடுக்கும் ஸ்ரீஹரியை). ஸந்தரு – சஜ்ஜனர்கள் (ஞானிகள்). நிராகாரனெந்து – (ஸ்ரீஹரி) உருவம் இல்லாதவன் என்று.

ஹேளுவரே - சொல்வார்கள். இத கேள்வரே - (நிராகாரன் என்று) சொல்வார்களா?. இத கேள்வரே - (நிராகாரன் என்று) கேட்பார்களா? (காது மூடாமல் இருப்பார்களா?). இந்தெனலு - நிராகாரன் என்றே அறிந்து கூறினால். பாள்வரே - (அப்படி சொல்பவர்கள்) வாழ்வார்களா? (வாழ்க்கையை அர்த்தமுள்ளதாக ஆக்கிக் கொள்வார்களா?).

**கு$^3$ணியல்லவெம்ப$^3$ மாது நினகெ$^3$ ஹீனவாத$^3$ரெ**
**ஆனந்த$^1$னநீமாத நீனெனப$^3$ஹுதே$^3$**
**ஜன்மமாயாவிதெ$^3$ந்து$^3$ நின்னனெ முனிவ மானவ**
**ஸனகாதி$^3$ முனிமான்யன மாயாவி எம்ப$^3$ரெ, பு$^3$த$^4$ரித$^3$**
**கைகொ$^3$ம்ப$^3$ரெ, பா$^3$யோளு மண்ணதும்ப$^3$ரெ ||2**

குணியல்லவெம்ப மாது - குணம் இல்லாதவன் என்னும் பேச்சு. நினகெ - உன் விஷயத்தில் (உன்னை பிறர் இவ்வாறு கூறினால்). ஹீனவாதரெ - அவமானம் ஆகிவிட்டால். அனந்தனனு - அனந்த சத்குணியான ஸ்ரீஹரியை. ஈ மாத - குணஷூன்யன் என்று. நீனெனபஹுதெ - நீ சொல்வது சரியா?. மானவ - ஹே மூர்க்க மானவனே. ஜன்மமாயாவியெந்து - ஸ்வரூபத்தினாலேயே (பிறப்பிலிருந்தே / ஸ்வபாவத்திலேயே). மித்யாஞானியெந்து. நின்னனெ - உன் விஷயத்தில். முனிவ - கோபம் கொள்கிறான் (ஸ்ரீஹரியின் கோபத்திற்கு ஆளாகி நாசம் அடைகிறாய்). ஸனகாதி முனிமான்யன - ஸனகாதி முனிவந்த்யனான ஸ்ரீஹரியை. மாயாவியெம்பரே - கபட நாடகன் என்பார்களா? (மோசடி பேர்வழியை, மித்யா ஜகத்தினை காட்டுகிறேன் என்பார்களா?) அல்லது (மாயாவி - ப்ராக்ருத தேகம் கொண்ட ஜீவன் என்பார்களா?) புதரு - ஞானிகள் (விவேகிகள்). இத - இந்த உன்னுடைய பேச்சினை. கைகொம்பரே - ஒப்புக் கொள்வார்களா?. பாயொளு - (இவ்வாறு சொல்லும்) உன் வாயில். மண்ண தும்பரே - மண் நிரப்ப வேண்டாமா? (இந்த தவறான பேச்சினைப் பேசிய வாயில் மண் நிரப்புகின்றனர்).

**இந்து$^1$ பரமதவெம்ப$^3$ கந்தெ$^2$ய பரிது$^3$ ப$^3$லு**
**ப்$^4$ராந்து கொ$^3$ளிஸித$^3$ கு$^3$ரு சிந்தாமணிய |**

**ஸந்தத நெனெவுது$^{3}$ அந்த்யவில்லத$^{3}$ பத$^{3}$வ**
**ஸந்தோஷதீர்த்த$^{2}$ர க்ருபெயிந்தெ$^{3}$ய்து$^{3}$வேனு**
**அல்லி ஸ்ரீமாத$^{4}$வனு ஈவ மோத$^{3}$வனு ||3**

இந்து பரமதவெம்ப - இவ்வாறு, மாயாவாத மதம் என்னும், கந்தெய - அழுக்குத் துணியை. பரிது - கிழித்து (அந்த மாயாவாதத்தைக் கண்டித்து). பலு - மிகவும். ப்ராந்துகொளிஸித - திக்பிரமையாக்கிய. குருசிந்தாமணிய - குருஸ்ரேஷ்டரான ஸ்ரீமதாசார்யரை, ஸந்தத - அனைத்து காலங்களில். நெனெவுது - நினைக்க வேண்டும். அந்த்யவில்லத - நித்யமான. பதவ ஸ்தானவன்னு - மோட்சத்தை. ஸந்தோஷதீர்த்தர - ஸ்ரீஆனந்த தீர்த்தரின். க்ருபெயிந்த - கருணையால். ஐதுவெனு - அடைவேன். அல்லி - அந்த மோட்சஸ்தானத்தில். ஸ்ரீமாதவனு - ஸ்ரீநாராயணன். மோதவனு - நித்யானந்தத்தை. ஈவ - அருள்கிறான் (இவ்வாறு அறியவேண்டும் என்பது என் நம்பிக்கை வாக்கு).

மங்களாசரண 4

**ஹத்து மத்தெ நால்கு லோகத$^{3}$ ஜீவர மொத்தவ தன்ன**
**யுக்தியிந்த$^{3}$ மாடி$^{3}$ தத்தத் ஸ்தா$^{2}$னதொ$^{3}$ளிட்ட**
**ஸத்யலோகதொ$^{3}$டெ$^{3}$யனடி$^{3}$கெ$^{3}$ பொட$^{3}$வடு$^{3}$வெனு ஹரி**
**தத்வத$^{3}$ பி$^{3}$த்தரதர்த்தி$^{2}$ய தோருதிரலி**
**அத்தித்த போக$^{3}$த$^{3}$ந்தெ சித்தவ்ருத்தியலிரலி மு**
**க்திபத$^{2}$த$^{3}$த்தலே, மனவ நுடிஸுதிரலி, தன்ன**
**அர்த்தி$^{2}$யிந்த$^{3}$ ப்$^{4}$ருத்யன பா$^{4}$ரவ நித்யதி$^{3}$ பொத்திரலி ||4**

ஹத்து மத்தெ நால்கு - 14. லோகத - லோகங்களின். ஜீவர மொத்தவ மாடி - அனைத்து ஜீவர்களையும் சேர்த்து. தன்ன யுக்தியிந்த - தன் யோகபலத்தினால் (ஹரி ஸ்மரணையுடன்). தத்தத் ஸ்தானதொளிட்ட - அவரவர்களின் யோக ஸ்தானங்களில் வைத்த. ஸத்யலோகதொடெயனடிகெ - ஸத்யலோகாதிபதியின் (பிரம்மதேவரின்) பாதங்களை. பொடவடுவெனு - வணங்குகிறேன். ஹரிதத்வத - ஸ்ரீஹரி மகிமைகளின் (விஷ்ணு ஸ்வரூபத்தின்). பித்தரதர்த்திய - அதிக உற்சாகத்தை (தகுதிக்கேற்ப முழுமையாக அறியவேண்டும் என்னும் ஆசையை). தோருதிரலி - அருளட்டும் (மனதிற்கு கொடுக்கட்டும்). அத்தித்த போகதந்தெ - (பகவானை

விட்டு) பிற விஷயங்களில் ஈடுபடாதவாறு. சித்தவ்ருத்தியிரலி - மனதின் கதி (கவனத்துடன்) இருக்கட்டும். முகுதிபதத்தலெ - மோட்ச மார்க்கத்தின் பக்கம். மனவ - மனதினை. நடெஸுதிரலி - செலுத்தட்டும். தன்ன அர்த்தியிந்த - (பொதுவாக பக்தர்களிடம் இருக்கும்) தன் வாத்ஸல்யத்தால். ப்ருத்யன பாரவ - பக்தர்களுக்கு அருளும் வேலையை. நித்யதி பொத்திரலி - எப்போதும் வகிக்கட்டும்.

**ரக்கஸரக்கஸருக்க தக்$^3$கி$^3$ஸித$^3$வகெ$^3$ த$^3$க்ஷன சிக்ஷிஸித$^3$வனிகெ$^3$**
**யக்ஷபதிய ஸக$^2$னெனிப கைலாஸத$^3$**
**முக்கண்ணகா$^3$னு கைய முகி$^3$வெனு**
**முக்$^2$யமானஸ தத்வக்கபி$^4$மானியாகு$^3$வனு**
**து$^3$ஷ்கர்மமதிய நின்ன க்ருபெயிந்த$^3$ நீகு$^3$வெனு**
**ஷுஷ்க வாதி$^3$க$^3$ள கண்ட$^3$கண்ட$^3$லி நகு$^3$வெனு**
**ப$^4$க்திபத$^2$வனெ ஹிதவெந்து$^3$ பா$^3$கு$^3$வெனு,**
**நீனெத்த ஞானதி$^3$ முகுதிகெ$^3$ போகு$^3$வெனு ||5**

கக்கஸ - உக்ரமான. ரக்கஸர - அசுரர்களின். உக்க - பரம்பரையை. தக்கிஸிதவகெ - அழித்தவனும். தக்ஷன - தக்ஷ ப்ரஜாபதியை. சிக்ஷிஸிதவகெ - தண்டனை கொடுத்தவனும். யக்ஷபதிய - குபேரனின். ஸுகனெனிப - நண்பனும் ஆன. கைலாஸத முக்கண்ணனிகெ - கைலாய அதிபதியான மூன்று கண்களைக் கொண்ட மகாதேவனுக்கு ஆனு - நான். கைய முகிவெனு - கைகுவித்து வணங்குகிறேன். முக்யமானஸ தத்வகபிமானியாகுவனு - (நீ) மனதின் முக்கிய அபிமானி ஆகிறாய். துஷ்கர்மமதிய - கெட்ட செயல்களில் (ஈடுபடும்) புத்தியை. நின்ன க்ருபெயிந்த - உன் கருணையால். நீகுவெனு - விலக்குவேன். ஷுஷ்கவாதிகள - வீணானவர்களை (கடமையிலிருந்து சித்தாந்த தத்வங்களை புறக்கணிப்பவனை). கண்டகண்டல்லி - எங்கு பார்த்தாலும். நகுவெனு - (அவரின் அஞ்ஞானத்தைக் கண்டு) சிரிக்கிறேன். பக்திபதவனெ - பக்தி மார்க்கத்தையே. ஹிதவெந்து - நன்மை பயக்கும் செயலாக (எண்ணி). பாகுவெனு - தலைவணங்குவேன் (மனதினை பக்தி மார்க்கத்தில் செலுத்துவேன்). நீனித்த ஞானதி - நீ அருளும்

ஞானத்தினால். முகுதிகெ – மோட்சத்திற்கு. போகுவெனு – செல்கிறேன்.

**ஸகல ஸுரரங்க்$^4$ரிகெ$^3$ரகு$^3$வெனு**
**விகஸித பாத$^3$பது$^3$மவனெ நெனெது$^3$**
**நிகி$^2$லஜக$^3$ காவ நரெயணன கதெ$^2$ய ப$^4$குதியிந்த$^3$த$^3$னு ப$^3$ண்ணிஸுவேனு ।**
**முகுதி கோவித$^3$ரனு குணிஸுவேனு**
**அகி$^2$ல குஜனரனு த$^3$ணிஸுவெனு ஈ க$^2$ளர மதவனு மாணிஸுவெனு**
**முகுதிய ஸுக$^2$வனுணிஸுவெனு ।।6**

ஸகலஸுூரரங்க்ரி – அனைத்து தேவதைகளின் பாதங்களில் விழுந்து வணங்குகிறேன். விகஸித பாதபதுமவ – (அவர்களின்) அற்புத பாத கமலங்களை. நெனெது – நினைத்து. நிகிலஜக காவ – அனைத்து உலகினையும் காக்கும். நரெயணன – நாராயணனின் கதெய – மகிமைகளை. பகுதியிந்த – பக்தியுடன். அதனு – அதையே (மற்ற விஷயங்களை புறக்கணித்து). பண்ணிஸுவெனு – வர்ணிக்கிறேன். யுகுதிகோவிதரனு – யுக்தி சாஸ்திரத்தில் சிறந்தவர்களை (பண்டிதர்களை). குணிஸுவெனு – மகிழ்ச்சியுடன் நடனமாடுமாறு செய்கிறேன். அகில குஜனரன்னு – அனைத்து துர்வாதிகளையும். தணிஸுவெனு – (சோர்வடையச் செய்து) தோற்கடிப்பேன் (என் யுக்திகளை எதிர்க்க முடியாமல் தோற்று அமைதியாகுமாறு செய்கிறேன்). ஈ களர – இந்த துஷ்டர்களின். மதவனு – துர்மதத்தை. மாணிஸுவெனு – ஸுஜனர்களால் புறக்கணிக்க வைக்கிறேன். முகுதிய – மோட்சத்தின். ஸுகவனுணிஸுவெனு – (அந்த சஜ்ஜனர்களுக்கு) மகிழ்ச்சி அனுபவிக்குமாறு செய்கிறேன்.

சச்சிதானந்த விக்ரகனான ஸ்ரீஹரி, எப்போதும் எங்கும் ப்ராக்ருத இந்திரியங்கள் இல்லாதவன். ப்ராக்ருத இந்திரியங்களுக்கு தரிசனம் அளிப்பவனும் அல்ல. அவதார ரூபங்களை தன் விருப்பத்தினாலேயே ப்ராக்ருத தேகமாக காட்டிக் கொள்கிறான்.

## 1. மோட்ச ஸந்தி

---

யத்ததத்ரேஷ்யமக்ராஹ்ய மகோத்ரம வர்ணமசக்ஷு: ஸ்ரோத்ரம் ததபாணிபாதம் நித்யம் விபும் ஸர்வகதம் ஸுஸூக்ஷ்யம் | ததவ்யயம் யத்பூதயோனிம் பரபஷ்யந்தி தீரா: ||

என்னும் அதர்வண உபநிஷத் வாக்கியம், அக்ஷர நாயகனான பரமாத்மன், பிரத்யட்சமாக காண முடியாதவன். ஜாதி கோத்திரங்கள் இல்லாதவன். கண் காதுகள் இல்லாதவன். கை கால்கள் இல்லாதவன் என்கிறது. இவ்வாறு ப்ராக்ருத தேக இந்திரியங்கள் இல்லாதவன் ஆகையால், ஞானிகள் சாஸ்வதனும், ஸர்வேஷ்வரனும், ஸர்வாந்தர்யாமியும், மிகுந்த சூக்ஷ்மனும், ஜகஜ்ஜன்மாதி காரணனும் ஆன இந்த அக்ஷரனின் நித்யமும், விகாரம் இல்லாத (அப்ராக்ருத) ரூபத்தை, நன்றாக பார்க்கின்றனர் (தகுதிக்கேற்ப மனதாலும் உணர்கின்றனர்) என்று சொல்கிறது.

ஆனந்தரூபியான ஸ்ரீஹரியின் ஒவ்வொரு ரூபமும் அகண்ட ஸௌந்தர்யமாகவே இருக்கிறது. இந்த ரூபங்களுக்கு கரசரணாதி அவயவங்கள் இல்லை என்று அறிவது, கடும் அனர்த்தங்களுக்கு காரணம் ஆகும் மித்யா ஞானம் ஆகும். நிர்குண, நிராகாரன் என்று பரமாத்மனை புகழ்வது, பகவந்தனை திட்டுவதைப் போலவே ஆகும் என்பதை லௌகிக யுக்திகளாலும், இந்த பதத்தின் 1-2ம் நுடிகளில் விளக்கியிருக்கிறார்.

கால், கண், காதுகள் கொண்ட ஒரு மனிதனை, முடவன், குருடன், செவிடன் என்று அழைத்தால், தன்னை திட்டுகிறார்கள் என்று அவன் நினைப்பான் அல்லவா? நற்குணங்கள் கொண்டவனை, குணஷூன்யன் என்றால், அது அவனை திட்டுவதைப் போலதானே? பரமாத்மன் கரசரணாதி அவயவங்கள் இல்லாதவன் என்று அறிந்து, தியானிப்பது என்பது இருட்டினை உபாசிப்பதைப் போலவே ஆகும்.

ஆகையால், கிடைக்கும் பலனும் தமஸ்ஸே ஆகும். ஆகையால், ஸ்ரீஹரியை நிராகார, அவயவ சஹிதனான ரூபம் இல்லாதவன், என்று அறிவது அந்தம்தமஸ்ஸிற்கு காரணமாகும் மித்யாஞானமே

ஆகும். இந்த பிரமேயத்தை ஸ்ரீசுமத்வ விஜயம் இவ்வாறு சொல்கிறது.

**விதத: ஸுக$^{2}$ ஸச்சித$^{3}$த்$^{3}$வயாத்மா**
**ஸமுபாஸ்யோ விஹிதோ ஹி தத்வவித்$^{3}$பி$^{3}$: |**
**ஸ ச நாவயவீ நிரூப்யதே சேத்**
**த்$^{3}$யுதிமாத்ரம் ச ந ஹீத்யதோ$^{3}$ ரஹஸ்யம் ||**
**யதி$^{3}$ சேத்ப$^{3}$கு$^{3}$பாஸ்யதே஽ஸ்ய ரூபம்**
**திமிரத்வேன விபா$^{4}$தி பாரிசேஷ்யாத்**
**ப$^{2}$லமப்யத$^{2}$ முக்திரீத்$^{3}$யஷீ ஸ்யா**
**தி$^{3}$தினோ நைவ தி$^{4}$னோத்யுபாஸ்தி ரேஷா ||**

தத்வவித்பி: - பவத் தத்வ நிர்ணயத்தின் ஞானம் உள்ளதால், வியாப்தனும், ஸுகஸச்சித் - ஸுகஸ்வரூபனும் நிர்தோஷ ஞானரூபனும், அத்வயாத்மா - ஸமாதிக ரஹித ஸ்வரூபனும் (என்று). ஸமுபாஸ்ய: - தியானம் செய்யத் தக்கவன். விஹிதோ ஹி - இவ்வாறு வேதாதி சாஸ்திரம் சொல்கிறது. ஸ ச - இவ்வாறு உபாசனா விஷயன் என்று சொல்லப்படும் பகவந்தன், அவயவீ - ஞானானந்தாத்மக கரசரணாதி ஸுந்தர ஸகலாவயவகள் உள்ளவனும், ந நிரூப்யதே சேத் - இல்லை என்று கூறினால். அப்போது அந்த பிரம்மவஸ்து, த்யுதிமாத்ரம் ச - வெறும் ஒளிரூபனும். ந ஹி - இல்லை என்றாகிறது. இத்யத: - இவ்வாறு உள்ள இந்த பிரமேயங்களின். ரஹஸ்யம் - சாஸ்திரத்தில் விளக்கப்பட்டுள்ளது. (அவயவ இல்லாமை, நிர்குணத்வ, நிர்விசேஷத்வங்களை சொல்லும் மாயாவாதத்தைப் போல, நிரவயவன் என்னும் பெயராலேயே, ஒளி ரூபனும் அல்ல என்று தெளிவாக விளக்கப்பட்டுள்ளது). மற்றும், இதனால் என்ன பிரச்னை என்றால், அஸ்ய - இந்த பிரம்மனின், ரூபம் - ரூபமானது. யதி ஈத்ருக் - (ஒளிரூபனும் இல்லை என்றும்) அ-பிரகாஷ ரூப என்று, உபாஸ்யதே - தியானித்தால், பாரிசேஷ்யாத் - (அப்போது) ஒளியைத் தவிர மற்ற அனைத்தையும். திமிரத்வேன - தமோரூபத்தினாலேயே. விபாதி - தெரிகிறது. அத - இவ்விதமான உபாசனைக்குப் பிறகு. உபாஸகனிகெ - உபாசனை செய்பவனுக்கு. பல - பல ரூபமான. முக்திரபி - முக்தியும்கூட. ஈத்ருஷீ ஸ்யாத் - தமோ ரூபமே ஆக வேண்டியிருக்கிறது. இதி -

இப்படி இருப்பதால். ஏஷா உபாஸ்தி: - இந்த நிர்குணோபாசனை. ந: - நம்மை. நைவ தினோதி - புஷ்டி கொடுப்பதில்லை (நமக்கு மன அமைதியை கொடுப்பதில்லை).

3-4ம் பத்யங்களிலிருந்து வாயு பிரம்மரை ஞானஸித்திக்காக எப்போதும் நினைக்க வேண்டும் என்கிறார்கள். மத்வ சாஸ்திரத்தினால் மட்டுமே யதார்த்த ஞானம் கிடைக்கிறது. அந்த சாஸ்திரத்தின் நிரந்தர ஸ்ரவண மனனங்களுக்காக சித்தாபிமானிகளான பிரம்மதேவரின் அருள் அதி அவசியம். சித்தவ்ருத்தி, ஸ்திரமாக முக்தி மார்க்கத்தையே அனுசரிக்க வேண்டும் என்று மூன்றாம் நுடியில் பிரார்த்திக்கிறார். சித்த என்பது மனதின் பஞ்சவித விருத்திகளில் ஒன்று. மனோபிமானிகள் ருத்ரதேவர் ஆனாலும், அவர் வாயு-பிரம்மரின் அதீனர் ஆனதால், இந்த ப்ரார்த்தனை சரியாகவே இருக்கிறது. மேலே உள்ள தேவதைகள் அனைவரும், அடுத்து கீழ் இருப்பவர்களின் அபிமான தத்வங்களுக்கும் நியாமகரே ஆகியிருக்கின்றனர். ஆகையால், பிரம்ம வாயுகளும், பிரதான மனோ நியாமகரே ஆகின்றனர். பரம முக்ய நியாமகன் ஸ்ரீஹரியே.

குபேரன் யக்ஷபதியு, மகாதேவரின் நண்பன். நண்பன் என்றால், சமம் என்று அறியக்கூடாது. நாராயண, லட்சுமி, பிரம்ம, வாயு, சரஸ்வதி, பாரதிதேவி - இவர்களுக்குப் பிறகு 5ம் வகுப்பில் சேஷ கருடனுடன் மகாருத்ரர் இருக்கிறார். அஸ்வினி தேவதைகள் மற்றும் கணபதியுடன், குபேரன் 18ம் வகுப்பில் இருக்கிறான்.

5ம் நுடியில் கைலாஸபதி மகாதேவன் மனஸ் தத்வத்தின் முக்யாபிமானி என்று சொன்னதால், சந்திரனே முதலான அமுக்ய (அவாந்தர) மனோபிமானிகளும் இருக்கின்றனர் என்பதை மறக்கக்கூடாது. 'சந்திரமா மனஸோ ஜாத:' (புருஷ சூக்தம்) மற்றும் 'மனஸஸ்த்வ நிருத்தஸ்ச சந்த்ரஸ்சான்யே யதோதிதம்' (பாக - த்ருதிய தாத்பர்ய), ஆகிய பிரமாணங்கள், சந்திரனும் மனோபிமானி என்பதை சொல்கிறது.

ஈஷ்வராத் ஞானமன்விச்சேத் மோக்ஷமிச்சேத் ஜனார்த்தனாத் – என்று (பாகவத) சொல்வதைப் போல, முக்தி கொடுப்பவனான ஸ்ரீவிஷ்ணுவின் பிரசாதத்திற்கு அவசியமான ஞானத்தை ருத்ரதேவரிடமிருந்து பிரார்த்தித்துப் பெற்றுக் கொள்ள வேண்டும். இதனால், விஷ்ணு ஸர்வோத்தமத்வ ஞானத்திற்கு ருத்ரதேவரின் அருள் கண்டிப்பாக தேவை என்று அர்த்தம் கொண்டு, பிரம்ம வாயுகளின் அருள் தேவையில்லை என்று புரிந்து கொள்ளக்கூடாது. ருத்ரதேவரைவிட உத்தமரான பிறரின் அருளும் கண்டிப்பாக தேவை.

'யுக்திகோவிதர குணிஸுவெனு' ஆகிய 6ம் நுடியில் ஸ்ரீவாதிராஜர் செய்திருக்கும் ஆணையை, தம் 'யுக்திமல்லிகா' கிரந்தத்திலிருந்து அற்புத ரீதியில் சொல்லியிருக்கிறார். இந்த கிரந்தத்திலும், அந்த ஆணையை பின்பற்றுவதை நாம் பார்க்கிறோம்.

மங்களாசரண 5 பத 7
ராகம் : ஸௌராஷ்டிர. தாளம் : ரூபக
**இந்த்$^{3}$ரன்ன ராஜ்யவ தந்த$^{3}$ன்ன ஷுப$^{4}$கு$^{3}$ண**
**ஸாந்த்$^{3}$ரன்ன ஸுரஸபா$^{4}$ சந்தி$^{3}$ரன்ன**
**நந்த$^{3}$ன கந்த$^{3}$ன வந்த்$^{3}$யன நித்யானந்த$^{3}$ன துதிபெ முகுந்த$^{3}$ன்ன ||1**

இந்திரன்ன ராஜ்யவ தந்தன்ன – (பலியை வென்று) இந்திரனின் ஸ்வர்க்காதிபத்யத்தை திரும்ப அவனுக்கே கொடுத்தான். ஷுபகுண ஸாந்த்ரன்ன – அற்புத கல்யாண குணங்களே தேகமாக உள்ளவனும், ஸுரஸபாசந்திரன்ன – தேவசபையில் சந்திரனைப் போல ஒளி பொருந்தி நிலைப்பவனும், நந்தன கந்தன – நந்தகோபனின் மகனும். நித்யானந்தன – எப்போதும் பூர்ணானந்த ஸ்வரூபனும். ஆகியிருக்கும். முகுந்தன – மோட்ச பிரதானன ஸ்ரீஹரியை. துதிபெ – வணங்குகிறேன்.

முந்தைய பதத்தின் 6ம் நுடியில் 'நரெயணன கதெய பகுதியிந்த பண்ணிஸுவெனு' என்று செய்த சங்கல்பத்தை இந்த பதத்தில் விளக்கியிருக்கிறார்.

**ஷௌரிய நெனெவெனுதா$^{3}$ரிய குஜனர**

---

**வைரிய மந்த$^3$ரோத்$^3$தா$^3$ரிய**
**ஹரிய து$^3$ரிதநிவாரிய ஸுஜனோப**
**காரிய முகுதிகெ$^3$ தா$^3$ரிய ||2**

ஷௌரிய – சூர என்னும் யாதவனின் வம்சத்தில் அவதரித்த ஸ்ரீகிருஷ்ணனை. உதாரிய – உதாரியை (பக்த அபராதங்களை சகித்துக்கொள்ளும் கருணை மனம் கொண்ட). குஜனர வைரிய – துஷ்ட தைத்யர்களை த்வேஷிக்கும். மந்தரோத்தாரிய – மந்தர பர்வதத்தை தூக்கிப் பிடித்த கூர்மாவதாரியை, ஸுஜனோபகாரிய – சஜ்ஜனர்களை (யோக்ய சாதனைகளை செய்வித்து) அருளும். முகுதிகெ தாரிய – மோட்சத்திற்கு (மார்க்க) வழியாகுபவனை. நெனெவெனு – நினைக்கிறேன்.

பரமாத்மன் தன் ப்ராப்திக்கு தானே மார்க்க ரூபனும் ஆகியிருக்கிறான். 'ஏஷ: பந்தா:' என்னும் (ஐதரேய) உபநிஷத் வாக்கியம், சங்கர்ஷண ரூபியான ஸ்ரீஹரியே 'மார்க்க' என்று சொல்வதை, பாஷ்யத்தில் ஸ்ரீமதாசார்யர், 'ஏஷ ஏவ ஸதா பந்தா பகவான் புருஷோத்தம: | நித்யம் ஸ்வப்ராப்தஹேதுத்வாத்' – தன் பிராப்திக்கு (ஸாயுஜ்யாதி மோட்ச பிராப்திக்கு) நியமத்துடன் தானே காரணன் ஆகியிருப்பதால், 'பந்தா:' (மார்க்க – வழி) எனப்படுகிறான்' என்று விவரிக்கிறார்.

**இஷ்டன்ன து$^3$ரிதாக$^4$ரட்டன்ன ஜக$^3$கதி**
**தி$^3$ட்டன்ன ஸதத ஸந்துஷ்டன்ன**
**ஷிஷ்டன்ன ஷுப$^4$கு$^3$ண புஷ்டன்ன துதிபெனு**
**க்ருஷ்டன்ன ஸ்ருதிகி$^3$ம்பு$^3$ கொட்டன்ன ||3**

இஷ்டன்ன – ப்ரியனான (என் இஷ்ட தேவதையான). துரிதாகரட்டன்ன – பாவியான அகாஸுரனைக் கொன்ற (பாபராசிகளை எரிக்கும்). ஜகக்கெ – உலகில். அதிதிட்டன்ன – மிகவும் திட்டனான (திட்ட – வீரன், தைரியசாலி). ஸதத ஸந்துஷ்டன்ன – நித்ய த்ருப்தனான. சிஷ்டன்ன – சம்பன்னனான (ஞானிஸ்ரேஷ்ட – சர்வக்ஞரான). ஷுபகுணபுஷ்டன்ன – கல்யாண குணபூர்ணனான. ஸ்ருதிகெ – வேதங்களுக்கு

(வேதாபிமானினியான லட்சுமிதேவிக்கு). இம்புகொட்டன்ன - ஆஸ்ரயனான (ஸ்ருதிகளால் வணங்கப்படுபவனான) ஸ்ரீகிருஷ்ணனை. துதிபெனு - வணங்குகிறேன்.

'ஸர்வே வேதா யத்பதமாமனந்தி' - 'அனைத்து வேதங்களும் யாருடைய ஸ்வரூபத்தையே வணங்குகிறதோ', 'நமாமி ஸர்வாணி யமானிஷந்தி' - அனைத்து சொற்களும் யாரில் நுழைகிறதோ - பரம முக்கிய வ்ருத்தியினால் யாரின் மகிமைகளையே சொல்கிறதோ' ஆகிய ஸ்ருதி தாத்பர்யத்தை 'ஸ்ருதிகெ இம்புகொட்டன்ன' என்னும் இரு சிறிய சொற்களால் நிரூபிக்கிறார்.

**நீலன நிஜஜனபாலன நிர்மலஷீலன ஸுசரித்ரஜாலன**
**பாலன ஸங்கீ³தலோலன துதிபெனு**
**காலனவரிகெ³ அனலன ||4**

நீலன - நீல வர்ண தேகம் கொண்ட. நிஜஜனபாலன - தன் பக்தர்களை அருளும். நிர்மலஷீலன - சுத்த ஸ்வபாவத்தைக் கொண்ட (தோஷதூரனான). ஸுசரித்ரஜாலன - தன் மங்களகர லீலைகளால் பக்தர்களை கட்டுப்படுத்தும் சக்தி கொண்ட அல்லது, ஷுபசரித்திரங்களின் கூட்டங்களைக் கொண்ட (ஜால - பலம் அல்லது கூட்டம்). பாலன - பாலரூபியான. ஸங்கீதலோலன - கானலோலனான (வேணுகாலத்தில் விருப்பம் கொண்ட அல்லது, தன் மகிமைகளை பாடுவதில் விருப்பம் கொண்ட). காலனவரிகெ - யமதூதர்களுக்கு. அனலன - அக்னியைப் போல இருக்கும் (தன் பக்தர்களை அருகில் வரவிடாத) (ஸ்ரீகிருஷ்ணனை) துதிபெனு - வணங்குகிறேன்.

**ரங்க³ன கருணாந்தரங்க³ன க²லகுல**
**ப⁴ங்க³ன முனிஜன ஸங்க³ன**
**அங்க³னாஜனகெ³ ஆலிங்க³னவீவ ஷுபா⁴ங்க³ன துதிபெனுத்துங்க³ன ||5**

ரங்கன - எப்போதும் மகிழ்ச்சியுடன் நடனமாடும், அல்லது, உலகத்தில் இருந்துகொண்டு, உலகத்தை அருள்வதால் ரங்க

----------------------------------------------------------------------------------------------
நாமகனான. கருணாந்தரங்கன - கருணைக்கடலான. (தயாபூர்ண அந்த:கரணம் உள்ள). கலகுல பங்கன - துஷ்ட குல மர்த்தனான. முனிஜனஸங்கன - ஞானிகளுடன் சுற்றி திரிபவனான (முனிஜன ப்ரேமியான). அங்கனாஜனகெ - பெண்களுக்கு. ஆலிங்கனவன்னு (அங்க சங்கத்தை) கொடுக்கும். ஷுபாங்கன - சிதானந்த தேகத்தைக் கொண்ட. உத்துங்கன - சர்வோத்தமனான ஸ்ரீகிருஷ்ணனை. துதிபெனு - வணங்குகிறேன்.

அதிகாரம் உள்ள சில அப்ஸராதி பெண்களுக்கு, ஸ்ரீஹரி, அவர்களில் லட்சுமியின் சன்னிதானத்தை வைத்து, அங்கசங்கத்தை - தன்னுடன் க்ரீடை செய்யும் பாக்கியத்தை அருள்கிறான். இந்த வித பாக்கியத்தை அருள்கிறான். இந்த வித பாக்கியம் இதர பெண்களுக்கு இல்லை. அவர்களுக்கு பதியின் அங்கசங்கத்தினால் கிடைக்கும் ஆனந்தத்தை, பத்யந்தர்கதனாக இருந்து, ஸ்ரீஹரியே கொடுக்கிறான் என்பதை மறக்கக்கூடாது. இவ்வாறாக இருந்தாலும், பெண்கள் அனைவரும் பரமாத்மனை தம் பதி என்று அறியக்கூடாது. தமக்கு அவன் கணவன் ஆகவேண்டும் என்றும் விரும்பக்கூடாது. பதித்வேன பகவந்தனை உபாசிப்பது பெண்களுக்கு மஹாதோஷம் ஆகும். இந்த பிரமேயங்கள், அடுத்து வரும் இந்த பிரமாண வாக்கியங்களிலிருந்து தெரிய வருகிறது.

பகவத்பார்யதா யோக்ய: காஸ்சிதப்ஸரஸ: ஸ்த்ரிய: |
ரமாவேஷாத் கதாசித் ஸ்யு: தாஸ்வேகா பிங்கலாபவத் ||
ததன்யாஸாம் மஹான் தோஷோ பகவத்பர்த்ருதா ஸ்ம்ருதௌ ||
(பாக 11 தாத்பர்ய)

பதித்வேன த்ரயோபாஸ்யோ பிரம்மணா மே பிதேதி ச |
பிதாம்ஹதயா஽ன்யேஷாம் த்ரிதஷானாம் ஜனார்த்தன: ||
ப்ரபிதாமஹோ மே பகவானிதி ஸர்வஜனஸ்ய து |
உபாஸ்ய: ஷ்வஷுரத்வேன தேவஸ்த்ரீணாம் ஜனார்த்தன: |
காமபத்யா அப்ஸரஸ்த்ரீணாம் அன்யேஷாம் நைவ காமத: ||
(பாக 10 தாத்பர்ய)

பகவந்தனின் அங்க சங்கத்தைப் பெறுவதற்கு தகுதியான சில அப்ஸரஸ் ஸ்த்ரீகள் இருக்கின்றனர். அதுவும் ரமா ஆவேஷத்தில் இருக்கும் சில கால விசேஷங்களில் மட்டும். பிங்களா என்பவள் அத்தகைய அப்ஸரைகளில் ஒருத்தி.

பகவந்தனை லட்சுமிதேவி 'பதி' என்றும், பிரம்மதேவர் 'பிதா' என்றும், மற்ற தேவதைகள் 'பிதாமஹ' என்றும் உபாசிக்க வேண்டும். மற்ற அனைவரும் 'ப்ரபிதாமஹ' என்று சிந்திக்க வேண்டும். தேவ ஸ்த்ரீயர்கள் பகவந்தனை 'ஷ்வஷுர' (மாமனார்) என்றும், அப்ஸரஸ்கள் காமத்துடனான பக்தியுடனும் (மேலே கூறியதைப் போல சில அப்ஸரஸ் மட்டும்) உபாசிக்க வேண்டும். மற்ற பெண்கள் காமத்தினால் சிந்திக்கவே கூடாது.

ஸ்லோக 5-6-7

**தரவ: கிம் ந ஜீவந்தி ப$^{4}$ஸ்ரா: கிம் ந ஷ்வ ஸந்த்யுத |**
**ந காத$^{3}$ந்தி ந மேஹந்தி கிம் க்$^{3}$ராம்யா: பஷவோऽபரே ||5**

**பி$^{3}$லே ப$^{3}$தோருக்ரம விக்ரமான்யே ந ஸ்ருண்வத: கர்ணபுடே நரஸ்ய**
**ஜிஹ்வாऽஸதீ தா$^{3}$ர்து$^{3}$ரிகீவ ஸூத**
**ஸ சேத் ப்ரகா$^{3}$யத்யுருகா$^{3}$யகா$^{3}$தா$^{2}$ம் ||6**

**ப$^{3}$ர்ஹாயிதே தே நயனே நராணாம்**
**லிங்கா$^{3}$னி விஷ்ணோர்ன நிரீக்ஷதோ யே |**
**பாதௌ$^{3}$ ந்ருணாம் தௌ த்$^{3}$ருமஜன்மபா$^{4}$ஜௌ**
**க்ஷேத்ராணி நானுவிரஜதோ ஹரேர்யௌ ||7**

தரவ: - மரங்கள். கிம் ந ஜீவந்தி - பிழைத்திருக்கவில்லையா?. உத - மற்றும் (மரங்கள் மூச்சு விடுவதில்லை என்றால்). பஸ்ரா: குழல் (பொற்கொல்லர்கள் பயன்படுத்துவது). கிம் ந ஷ்வ ஸந்தி - ஸ்வாசம் விடுவதில்லையா? (அவை நிர்ஜீவ வஸ்துகள் என்றால்). க்ராம்யா: பஷவ: - கிராமத்து பசுக்கள். ந காதந்தி - ஆகாரத்தை தின்பதில்லையா. ந மேஹந்தி (கிம்) - மூத்ர விசர்ஜனாதிகளை செய்வதில்லையா?. அபரே - மற்ற பிராணிகள் (காட்டு விலங்குகள், பறவைகள் ஆகியவை). (ந காதந்தி, ந மேஹந்தி கிம்

-----------------------------------------------------------------------------------------

– இவை அனைத்தையும் செய்வதில்லையா?. கண்டிப்பாக செய்கின்றன). (இதைப் போலவே, கண், காது, முதலான மற்ற இந்திரியங்களின் செயல்களும்கூட மனிதனுக்கும் மற்ற பிராணிகளுக்கும் சமானமே ஆகியிருக்கிறது).

நரஸ்ய – மனிதனின். யே கர்ணபுடே – காது ஓட்டைகள். உருக்ரம விக்ரமான் ந ஷ்ருண்வத: – ஸ்ரீஹரியின் மகிமைகளை கேட்கவில்லையெனில் (கேட்பதில் பயன்படவில்லையெனில்). பிலே பத – குப்பையே ஆகிறது (பூமியில் இருக்கும் அழுக்குகளே ஆகும்). ஸூத – ஹே ஸுதரே. உருகாயகாதாம் – ஸ்ரீஹரி சரித்திரங்களை. ந ப்ரகாயதி சேத் – பாடவில்லையெனில். அஸதீ ஜிஹ்வா – ஆ துஷ்ட நாக்கு. துர்துரிகேவ – தவளையின் நாக்கிற்கு சமானமே ஆகிறது.

நராணாம் யே நயனே – மனிதனின் எந்த கண்கள். விஷ்ணோ: – விஷ்ணுவின். லிங்கானி – மூர்த்திகளை. ந நிரீக்ஷத: – பார்ப்பதில்லையோ. தே – அவை. பர்ஹாயிதே – மயிற்தோகையில் இருக்கும் கண்களே ஆகின்றன. ந்ருணாம் – மனிதனின். யௌ பாதௌ – எந்த கால்கள். ஹரே: – ஸ்ரீஹரியின். க்ஷேத்ராணி – க்ஷேத்திரங்களைக் குறித்து. ந அனுவ்ரஜத: – போவதில்லையோ. தௌ – அந்த பாதங்கள். த்ருமஜன்மபாஜௌ – மர ஜென்மத்தை எடுத்தவன் போலவே. (மரக்கட்டை போலவே இருக்கிறான்).

மனித தேகத்தில் இருக்கும் ஞானம், கர்மேந்திரியங்களை ஸ்ரீஹரி மகிமைகளை ஞான ஸம்பாதனைக்கும் ஸ்ரீஹரி சேவைக்காகவும் பயன்படுத்தாவிட்டால், அவை வீண் என்பதை அறிய வேண்டும்.

உருக்ரம – எண்ணிக்கையற்ற சாமத்தியம் உள்ள, அல்லது, சிறந்த பாதங்களை வைத்த, வாமனரூபி ஸ்ரீஹரி. உருகாய காதா – ஸ்ரீஹரி மகிமைகளின் கதை. தேவோத்தமனான பிரம்மாதிகளால் வணங்கப்படுபவனான ஸ்ரீஹரி 'உருகாய' ன்.

பத 8 ராக : பைரவி. தாளம் : ரூபக

**ஹரிகதெ$^{2}$க$^{3}$ள கேளத$^{3}$வ ப$^{3}$ஹுகால பா$^{3}$ளி**
**த$^{3}$ரெ ப$^{2}$லவேனு கானனத$^{3}$**
**மர ஸாஸிர காலவிரதெ$^{3}$ காகெ$^{3}$ய பெஸரு**
**ஸ்திரஜீவியெனரெ ஸஜ்ஜனரு ||1**

ஹரிகதெகள - ஸ்ரீஹரி மகிமைகளை. கேளதவ - கேட்காதவன். பஹுகால பாளிதரெ - வெகு காலம் வாழ்ந்தால் (சிரஞ்சீவியானால்). பலவேனு - என்ன பலன்? கானனத மர - காட்டில் இருக்கும் சில மரங்கள். ஸாஸிரகாலவிரதே - ஆயிரக்கணக்கான ஆண்டுகள் இருப்பதில்லையா? சஜ்ஜனர்கள் - சரியான அறிவு உள்ளவரும். காகெய பெஸரு - காக்கையின் பெயர்களை. ஸ்திரஜீவியெனரெ - ஸ்திரமாக உள்ள பறவை என்பதில்லையா? (காக்கையைப் போல நீண்ட காலம் வாழ்ந்தால் என்ன? அது வீண் வாழ்க்கையே என்று அர்த்தம்).

**காருகன ததி$^{3}$ ஷ்வாஸவ பி$^{3}$ட$^{3}$தெ$^{3}$**
**ஊர ஹந்தி$^{3}$ நாயி நரிக$^{3}$ளு**
**பூரயிஸிகொள்ளவெ தம்ம தம்மாஹாரக$^{3}$ள**
**மாரகொ$^{3}$ளகா$^{3}$கி$^{3}$ ரமிஸவெ ||2**

காருகன திதி - பொற்கொல்லனின் குழல். ஷ்வாஸவ பிடதெ - மூச்சு விடுவதில்லையா?. ஊர ஹந்தி நாயி நரிகளு - பன்றி, நாய், நரி முதலான பிராணிகள். தம்ம தம்ம ஆஹாரகள - தமக்குத் தேவையான ஆகார வஸ்துகளை. பூரயிஸிகொள்ளவெ - தேடிக் கொள்வதில்லையா?. மத்து மாரகொளகாகி - காம வசப்பட்டு. ரமிஸவெ - விளையாடி, சுகமாக இருப்பதில்லையா?

**மூஷிகன பி$^{3}$லத$^{3}$ந்தெ ஹரிகதெ கேளி ஸந்**
**தோஷிஸத$^{3}$வன கர்ணக$^{3}$ளு**
**ஸ்ரீஷன க்ஷேத்ரக்கெ போக$^{3}$த$^{3}$ கால்க$^{3}$ளு**
**பாஷாண ப்ரதிமெயங்க$^{4}$ரிக$^{3}$ளு ||3**

ஹரிகதெ கேளி - ஸ்ரீஹரி மகிமைகளைக் கேட்டு. ஸந்தோஷ ஸதவன - மகிழ்ச்சியடையாதவனின். கர்ணகளு - காதுகள். மூஷிகன பிலதந்தெ - எலிவளையைப் போல ஆகும். ஸ்ரீஷன

---

க்ஷேத்ரக்கெ - ஸ்ரீஹரி சன்னிதானத்தினால் பவித்ரமான க்ஷேத்திரங்களுக்கு (புண்ய க்ஷேத்திரங்களுக்கு). போகத கால்களு - போகாத கால்கள். பாஷாண ப்ரதிமெய - கல்லால் செய்த மூர்த்திகள். அங்க்ரிகளு - பாதங்களைப் போல ஆகும்.

**ஹரிய நோட[3]த[3] கண்ணு ஹீலிய கண்ணு**
**நரஹரிய பாட[3]த[3]வன ஜிஹ்வெ**
**வரலி ப[3]ளலுவ ஜிஹ்வெ மண்டூகன ஜிஹ்வெ**
**ஹரிசரணகெரகத[3] ஷிரவு ஹெட[3]தலெ ஷிரவு ||4**

ஹரிய நோடத கண்ணு - ஸ்ரீஹரியைக் காணாத கண்கள். ஹேலிய கண்ணு - மயிற்தோகையின் கண்கள். நரஹரிய பாடதவன ஜிஹ்வெ - நரஹரியை கொண்டாடாதவனின் நாக்கு. வரலி பளலுவ - வீணாக வாடுகிறது. ஜிஹ்வெ - நாக்கு. மண்டூகன ஜிஹ்வெ - தவளையின் நாக்கினைப் போல. ஹரிசரணகெரகத - ஸ்ரீஹரி பாதங்களை வணங்கும். ஷிரவு - தலை. ஹெடதலெ ஷிரவு - பிணத்தின் தலை.

ஸ்லோக 8-9
**தமாப்யேதர்ஹி கௌ[1]ரவ்ய ஸப்தாஹம் ஜீவிதாவதி[4]: |**
**உபகல்பய தத்ஸர்வம் யத்தாவத் ஸாம்பராயிகம் ||**
**க[2]ட்வாங்கோ[3] நாம ராஜர்ஷிர் ஞாத்வேயத்தாமிஹாயுஷ: |**
**முஹூர்தாஸ்ஸர்வ முத்ஸ்ருஜ்ய க[3]தமானப[4]யம் ஹரிம் ||**

ஸ்ரீசுகர் பரீக்ஷித் ராஜனுக்கு இவ்வாறு சொல்கிறார். கைரவ்ய - குரு வம்சத்தவரான ஹே பரீக்ஷித் ராஜனே. தவாபி - உனக்கு. ஏதர்ஹி - இப்போது (இப்போதிலிருந்து). ஜீவிதாவதி: - வாழ்க்கைக் காலம். ஸப்தாஹம் - ஏழு நாட்களே. ஸம்பராயிகம் யத் - பரலோக சம்பந்தமானது எதுவோ (மரண காலத்தில் உத்தம கதிக்காக செய்ய வேண்டிய). தத்ஸர்வம் - அந்த எல்லாவற்றையும். உபகல்பய - செய்து கொள்.

கட்டாங்கோ நாம ராஜர்ஷி: - கட்டாங்க என்னும் ராஜரிஷி. ஆயுஷ: - தன் ஆயுளின். இயத்தாம் - காலத்தை. ஞாத்வா -

அறிந்து. முஹூர்த்தாத் - (மிச்சம் இருந்த) ஒரு முகூர்த்தத்தில் (2 நாழிகைக் காலத்தில்). ஸர்வம் உத்ஸ்ருஜ்ய - சர்வ சங்கத்தையும் துறந்து. அபயம் ஹரிம் - நித்யமுக்தனான (முக்திபிரதனான) ஸ்ரீஹரியை. கதவான் - அடைந்தான்.

பத 9 ராகம் : ஸௌராஷ்டிர. தாளம் : அட

**ஏளுதி3ன ஹரிகதெ2ய கேளியொப்3ப3**
**தா3ளியிட3னெ ஹரிபுரகெ**
**ஸ்ரீலோலன நெனெதெ3ரடு3 க4ளிகெ3யொளொப்3ப3**
**மேலெனிப முக்திகே3ரனெ ||1**

ஒப்ப - ஒரு பக்தன் (பரீக்ஷித்). ஏளுதின - ஏழு நாட்கள். ஹரிகஹெய - ஹரி மகிமைகளை. கேளியெ - கேட்டவாறே. ஹரிபுரக்கெ - வைகுண்டத்திற்கு. தாளியிடனெ - செல்லவில்லையா?. எரடு களிகெயொளு - இரண்டு நாழிகைகளில் (ஒரு முகூர்த்த காலத்தில்), ஒப்ப - ஒருவன். ஸ்ரீலோலன - நாராயணனை. நெனெது - தியானித்து. மேலெனிப - உத்தம கதியான. முக்திகெ - மோட்சஸ்தானத்திற்கு. ஏரனே - செல்லவில்லையா?

**அத3ரிந்த3 நாராயணன கொண்டா3டு3வ**
**பு3த4னு ஸம்ஸாரவ தொரெது3**
**முத3தி3ந்த3 வைகுண்டக்கெய்தி3 ஸ்ரீக்ருஷ்ணன**
**பத3 ஸன்னிதி4யலி ஸுகி2ஸுவரு ||2**

அதரிந்த - அதனால் (இந்த இரண்டு உதாரணங்களால்). நாராயணன கொண்டாடுவ - நாராயணனைக் கொண்டாடும். புதரு - ஞானிகள். ஸம்ஸாரவனு - சம்சாரத்தை. தொரெது - துறந்து. முததிந்த - மகிழ்ச்சியுடன். வைகுண்டக்கெ - வைகுண்டத்திற்கு. ஐதி - சேர்ந்து (வைகுண்டத்தை அடைந்து). ஸ்ரீகிருஷ்ணன பதஸன்னிதியல்லி - ஸ்ரீகிருஷ்ணனின் பாத மூலத்தில். சுகிஸுவரு - மகிழ்ச்சியை அனுபவிப்பர்.

---

'பேஜே ககேந்த்ரத்வஜ பாதமூலம்' என்று இருப்பதைப் போல, பரிக்ஷித் ராஜன், ஸ்ரீசுகர் மூலமாக ஏழு நாட்கள் பாகவதத்தைக் கேட்டதால், கருடத்வஜனின் பாதங்களை அடைந்தான்.

சூர்ய வம்சத்தின் புகழ்பெற்ற அரசன் - கட்வாங்கன் (திலீபன்). இந்த திலீபனின் மகனே ரகு. இவனின் வம்சத்திலேயே ஸ்ரீராமன் அவதரித்தான். கட்வாங்கன், ஒரு முறை தேவதைத்யரின் போரில் தேவதைகளின் சார்பாக போர் புரிந்து அவர்களை அருளினான். ஏதேனும் வரத்தைக் கேள் என்று அவர்கள் கூற, தன் ஆயுட்காலத்தை சொல்லுங்கள் என்றான். அதற்கு அவர்கள், இன்னொரு முகூர்த்தம் மட்டுமே இருக்கிறது என்று சொல்ல, அவன் உடனடியாக தன் தலைநகருக்குத் திரும்பி, மகனான ரகு ராஜனுக்கு பட்டாபிஷேகம் செய்து, ஸ்ரீஹரி தியானத்தினால் ஒரே முகூர்த்தத்தின் பரமபதவியை அடைந்தான்.

ஸ்ரீகிருஷ்ணன் முக்தியைக் கொடுப்பவன். முக்தர்களால் வணங்கப்படுபவன். 'கிருஷ்ணோ இஜ்யதே வேதமோஹை:' என்று முக்தர்களால் வணங்கப்படுபவன் என்று சொல்லப்பட்டிருக்கிறது. வஸுதேவ மகனாக அவதரித்த ஸ்ரீகிருஷ்ணன், முக்தசேவ்யனான ஸ்ரீகிருஷ்ண ரூபத்தினால் அத்யந்த அபின்னன்.

ஸ்லோகம் 10-11

**ததோ வைகுண்ட²மக³மத்³ பா³ஸ்வரம் தமஸ: பரம் |**
**யத்ர நாராயண: ஸாக்ஷாத் ந்யாஸினாம் பரமா க³தி: ||10**
**ஷாந்தானாம் ந்யஸ்தத³ண்டா³னாம் யதோ நாவர்த்ததே யதி: |**
**வைகுண்ட²ம் நாம லோகம் தம் தி³வ்யம் நித்யம் ஸனாதனம் ||11**

தத: - பிறகு. தமஸ: பரம் - அப்ராக்ருதமான (தமஸ். ஜட-ப்ராக்ருத). பாஸ்வரம் - ஒளிமயமான. வைகுண்டம் - வைகுண்ட நகரியை. அகமத் - அடைந்தான். யத்ர - எந்த நகரிலும். நியாஸினாம் - பரமஹம்ஸரின் (ஸர்வ சமர்ப்பணை செய்யும் ஞானிகளின்). பரமாகதி: - உத்தம ஆஸ்ரயனான. மத்து ஷாந்தானாம் - எப்போதும் பிரசன்ன சித்தனான. ந்யஸ்ததண்டானாம் - ப்ராக்ருத தேகம் இல்லாத முக்தர்களுக்கு.

நாராயண: - நாராயணன். ஸாக்ஷாத் - எப்போதும் ப்ரத்யக்ஷனோ. மத்து யத: - எங்கிருந்து. யதி: அங்கு சென்ற முக்தன். நாவர்த்ததே - திரும்ப வருவதில்லையோ. தம் - அந்த. திவ்யம் - லோக விலக்ஷணமான. நித்யம் - நாசம் இல்லாதவனான. ஸனாதனம் - அனாதிகாலத்திலிருந்து இருக்கும். வைகுண்டன்னாம லோகம் - வைகுண்ட என்னும் லோகத்தைக் குறித்து (அகமத் - அந்த ப்ருகு ரிஷி. ஹோதனு - வைகுண்டத்தை அடைந்தான்).

பத 10 ராக : தோடி. தாள: ரூபக

**ஸாக்ஷான் நாராயணனிப்ப வைகுண்ட$^{2}$வ**
**பொக்கு ப$^{3}$து$^{3}$குவுதே$^{3}$ மோக்ஷ**
**பக்ஷபாதவில்ல ஷுகமுனிய வாக்ய வி**
**வேகிக$^{3}$ளித$^{3}$ நீவே நோடி$^{3}$ரோ ||1**

ஸாக்ஷான் நாராயணனிப்ப - எப்போதும் ப்ரத்யக்ஷமாகி நாராயணன் இருக்கும். வைகுண்டவ - வைகுண்டத்தை. பொக்கு - சென்று சேர்ந்து. பதுக்குதே - வாழ்வதே. மோக்ஷ - முக்தி. பக்ஷபாதவில்ல - எந்தவொரு சித்தாந்தத்திலும் பாரபட்சம் இல்லாத. ஷுகமுனிய - சுகாசார்யரின். வாக்ய - (இவ்வாறு இருக்கிறது என்னும்) நுடி. இத - இதனை. விவேகிகளு - புத்திசாலிகளான. நீவே நோடிரோ - நீங்களே அறிந்து கொள்ளுங்கள்.

**எந்தெ$^{3}$ந்து$^{3}$ குண்ட$^{2}$னவெம்ப$^{3}$ நாஷவில்ல**
**தி$^{3}$ந்தி$^{3}$ரேஷனெ விகுண்ட$^{2}$**
**சந்த$^{3}$த$^{3}$வன மனெயெனிப ஸ்ரீவைகுண்ட$^{2}$க்கெ**
**மந்த$^{3}$மதியெ நாஷ உண்டெ ||2**

எந்தெந்து - காலகிரமத்தில். குண்டனவெம்ப - குண்டன என்று அழைக்கப்படும். நாஷவு இல்லத - நாசம் இல்லாத இந்திரேஷனெ - எவ்விதமான நாசமும் இல்லாதவனான லட்சுமிபதியே. விகுண்ட - விகுண்ட என்னும் பெயர் கொண்டவன். சந்தத - விலக்ஷணமான. அவன - அந்த விகுண்டனின் (அல்லது சந்தனனின் - மங்கள ஸ்வரூபனான அந்த விகுண்டனின்). மந்தமதியே. மனெயெனிப - வீடான. ஸ்ரீவைகுண்டக்கெ - வைகுண்ட லோகத்திற்கு. நாஷவுண்டே - நாசம் இருக்கிறதா?

---

நித்யமான விகுண்டனின் வீடும் நித்யமாகவே இருக்க வேண்டும் என்பதில், லௌகிக உதாரணத்தைக் காட்டுகிறார்.

**தன்ன மனெ போத$^{3}$மேலெ நாராயணனு**
**பி$^{3}$ன்னகா$^{3}$ரனந்தெ கானனதி$^{3}$**
**வனிதெயர கூடி$^{3}$ ப$^{1}$ண்ணுப$^{2}$ல மெலுவனெ**
**மனப$^{3}$ந்த$^{3}$ந்தெ நுடி$^{3}$யதி$^{3}$ரு ||3**

தன்ன மனெ - தன் வீடான வைகுண்டம். போதமேலெ - நஷ்டமானால் (அழிந்து போனால்). நாராயணனு - அந்த லட்சுமிபதி. பின்னுகாரனந்தெ - வேடனைப் போல. கானனதி - காட்டில். வனிதெயர கூடி - தன் மனைவியருடன் கூடி. பண்ணு பல மெலுவனெ - காய், கனிகளை தின்பானா? மனபந்தந்தெ நுடியதிரு - பைத்தியக்காரனைப் போல பேசவேண்டாம்.

**நஷ்வரவல்லத$^{3}$ ஈ பத$^{3}$வெ புத$^{3}$ரிகெ$^{3}$**
**ஷாஷ்வத ஸ்தா$^{2}$னவெனிபுது$^{3}$**
**பா$^{4}$ஸ்வர வைகுண்ட$^{2}$வத$^{3}$ரிந்த$^{3}$ எல்லரிகு$^{3}$**
**நிஷ்சித முகுதி காணிரோ ||4**

நஷ்வரவல்லத - நாசம் இல்லாதவனான. ஈ பதவே - இந்த ஸ்தானமே. புதரிகெ - அறிஞர்களுக்கு. ஷாஷ்வத ஸ்தானவெனிஸுவுது - மாற்றம் இல்லாத நித்யஸ்தானம் என்று சாஸ்திரங்கள் சொல்கின்றன. அதரிந்த - இந்த காரணத்தால். பாஸ்வர வைகுண்டவு - இவ்வாறு இருக்கும் இந்த வைகுண்டம் (அதன் பிராப்தி). எல்லர்கு - அனைத்து சுஜீவிகளுக்கும். நிஸ்சித முக்தி காணிரோ - தவறாமல் கிடைக்கும் மோட்சம் என்று அறியுங்கள்.

வைகுண்டாதி முக்தலோகங்கள் அப்ராக்ருத மற்றும் லக்ஷ்ம்யாத்மகங்கள் என்று சொல்லப்படுகின்றன. அப்ராக்ருத, லக்ஷ்ம்யாத்மக சொற்களால் சொல்லப்படும் அர்த்த சூக்ஷ்மங்களை சரியாக புரிந்து கொள்ள வேண்டியது அவசியம். லக்ஷ்ம்யாத்மகம் என்றால் எப்படி? முக்த லோகங்கள் மற்றும்

அங்கிருக்கும் அனைத்து பொருட்களும் லக்ஷ்மிரூபங்களே ஆனால், முக்த ஜீவர்களுக்கு அவற்றின் போகங்கள் எப்படி கிடைக்கின்றன மற்றும் போக என்றால் என்ன, என்பதை தெளிவாக புரிந்து கொள்ள வேண்டும் அல்லவா?

'விமலாக்ருதி: ப்ரக்ருதிரேவ மஹாமணி ஹேமமய்யகில வஸ்துமயீ' (மத்வவிஜயம்). விஷ்வ வைபவ பதமான வைகுண்டத்தை வர்ணித்தவாறு, 'இஹ – இந்த வைகுண்டத்தில், விமலாக்ருதி: – நிர்தோஷ ஸ்வரூபளான, ப்ரக்ருதிரேவ – மகாலட்சுமியே. மஹாமணிஹேமமயீ – அனர்க்யங்களான ரத்னஸுவர்ண ரூபளும், அகிலவஸ்துமயீ – அனைத்து வஸ்துஸ்வரூபளும் (ஆகியிருக்கிறாள்)' என்று சொல்லப்படுகிறது.

இந்த ஸ்லோகத்தின் 'சலாரி வ்யாக்யான' த்தில் – 'க்ருஹமணிஸுவர்ணாத்யகில பதார்த்தானாம் நிர்தோஷாதி ஸுந்தரகாந்தி ரமாஸ்வரூபஸ்வாத்' என்று இருக்கிறது. அதி சுந்தர காந்தி உள்ளதுமான ரமாஸ்வரூபத்வம் இருப்பதால்' வைகுண்டத்தின் ஷோபாதிஷயம் சாத்தியமே என்று சொல்லப்பட்டிருக்கிறது. 'ஸ்ரீரேவ லோகரூபேண விஷ்ணோஸ்திஷ்டதி ஸர்வதா' என்று (கீதா தாத்பர்ய) சொல்லியிருப்பதுகூட இதே அர்த்தத்தையே சொல்கிறது.

விஷ்ணு ரஹஸ்யத்தில் (17ம் அத்தியாயம்) இவ்வாறு இருக்கிறது.

அசேதனைவ ப்ரக்ருதிர் நித்யைவ பரிகீர்த்திதா |
ஸத்வம் ஷுத்தம் தம: ஷுத்தம் ஆகாஷ: கால ஏவ ச |
ஆகாராத்யாஸ்ததா வர்ணா: வாசோ வேதாத்மிகாஸ்ததா |
இத்யாதி ப்ரக்ருதிர் நித்யா நானாபேத ஸமன்விதா |
அனந்தாஸன வைகுண்ட நாராயணபுரேஷு யே ||
ஸ்ரீபாகா: ஷுத்தஸத்வஸ்தா: பத்ம ஷங்காம்பராதி ச |
கிரீடகடகாத்யா யேப்யலங்காரா மம ஸ்ரீய: |
இத்யாத்யா: ஸத்வரூபா: ஸ்யு: நித்யானாதய ஏவ தே ||

இதே விஷயத்தில் திரும்ப 59ம் அத்தியாயத்தில் இவ்வாறு இருக்கிறது.

## 1. மோட்ச ஸந்தி

---------------------------------------------------------------------------------------------

மத்யபாக: ஸ்ரீயஸ்தத்ர ஸ து லோக: ஸனாதன: |
முக்தா ஏவ ரமந்தேSத்ர புனராவ்ருத்தி வர்ஜிதா: ||
ஸ்ரீபாக: ஷுத்தஸத்வாத்மா முக்த்யைரேவ நிஷேவித: |
யதா யதைவ முக்தேச்சா பலம் புஷ்பாதிகம் ததா ||
ஸத்வதோ ஜாயதே ஷீக்ரம் இச்சாந்தே தத்ர லீயதே |
தரங்கா இவ தோயேஷு தாதாத்மானோபி தல்லயா: ||

இவற்றின் அர்த்தம் இவ்வாறு:
அசேதனமான ப்ரக்ருதியும் நித்யமே ஆகும். ஷுத்தஸத்வ, ஷுத்ததம, ஆகாஷ, கால, அகாராதி வர்ணங்கள், மற்றும் வேதவாக்கியங்கள் (வேதத்தில் உள்ள வர்ண, பதாதி க்ரமங்கள்). ஆகிய பற்பல பேதங்களைக் கொண்ட வஸ்து சமுதாயங்களின் ஸ்வபாவங்கள் நித்யமானவை. அனந்தாஸன, வைகுண்ட, நாராயணபுரங்களில் இருக்கும் ஸ்ரீபாகங்கள் ஷுத்த ஸத்வமானவை. பத்ம, ஷங்க, பீதாம்பர, கிரீட, வளையல், முதலான என் மற்றும் லட்சுமிதேவியின் (அல்லது லட்சுமிதேவி, எனக்கு செய்யும்) அலங்கார வஸ்துகள் அனைத்தும் ஷுத்த ஸத்வ ஸ்வரூபங்களே - அனாதி நித்யங்கள்.

குறிப்பு: மூலப்ரக்ருதி, அனந்தமும் அபாரமும் ஆகியிருக்கிறது. அதில் ஒரு பாகம் (ஏகாம்ஷ) மட்டும், பிரம்மாண்டத்தின் ஸ்ருஷ்டிக்காக பயன்படுத்தப்பட்டது. ஸ்ருஷ்டியில் பயன்படுத்தப்படும் பாகத்தில் இருக்கும் ஸத்வ தமோ குணங்கள் ஷுத்த ஸத்வ, ஷுத்த தமோ குணங்கள் என்று அழைக்கப்படுகின்றன. ஸ்ருஷ்டிக்காக பயன்படுத்தப்பட்ட மூல ப்ரக்ருதியில் ஸ்ரீஹரியின் இச்சையினால், ஸத்வகுண, தமோகுணங்களின் கலவையினால் ரஜோகுணமும் வெளிப்படுகிறது. பிரளய காலத்தில் ரஜோகுணத்தின் ஸத்வ-தம அம்சங்கள், ஸத்வ தமோகுணங்களில் அடங்குகிறது. இந்த பிரமேயங்கள், விஷ்ணு ரஹஸ்யத்தில் வேறொரு இடத்தில் சொல்லப்பட்டிருக்கின்றன.

ஸ்ரீ, பூ, துர்கா பாகங்கள் என்னும் மூன்று பாகங்கள் உள்ள, வைகுண்டாதி மூன்று ஸ்தானங்களில், மத்யபாகம் ஸ்ரீபாகம்.

அங்கு புனராவ்ருத்தி ரஹிதரான முக்தர்கள் மட்டும் இருக்கின்றனர். முக்தர்களால் வணங்கப்படும் இந்த ஸ்ரீபாகம், ஷுத்த ஸத்வாத்மகமானது. அங்கு, பழ,புஷ்பாதி அனைத்து பொருட்களும், முக்தர்களின் விருப்பதிற்காக (அங்கங்கு அதே காலத்தில்) ஷுத்த ஸத்வத்தினால் பிறக்கின்றன. (அந்தந்த உருவம் கொள்கின்றன). அவரின் விருப்பங்கள் நிறைவேறிய பிறகு, (போகானந்தர), ஜலாத்மகமே ஆன அலைகள், அந்த தண்ணீரிலேயே அடங்குவதைப் போல, ஷுத்த ஸத்வத்திலேயே லயம் ஆகிறது. (அடங்கிவிடுகிறது).

ஸ்ரீசுமத்வ விஜயத்தில் இருக்கும் வர்ணனைக்கும், இங்கு கொடுக்கப்பட்டுள்ள விஷ்ணு ரஹஸ்யத்தில் உள்ள முக்த லோக நிரூபணைக்கும், தெரியும் விரோதம், பரிகரிக்கத்தக்கதே. வைகுண்டலோகத்தில், வைகுண்ட என்றே அழைக்கப்படும், வைகுண்ட நாமக ஸ்ரீஹரி சஞ்சரிக்கும் வைகுண்ட நகரி, ஸ்ரீசுமத்வ விஜயத்தில் சொல்லப்பட்ட விஷயம் என்றும், விஷ்ணு ரஹஸ்யத்தில் அதையும் உள்ளடக்கிய மொத்தமான வைகுண்ட உலகமே குறிப்பிடப்பட்டுள்ளது என்று அறிய வேண்டும். வைகுண்ட நகரியில் இருக்கும் அனைத்து வஸ்துகளும் லட்சுமி ஸ்வரூபங்களும் ஸத்வாத்மகமும் ஆனவை என்று அறியவேண்டும். சத்ர, சாமர, பர்யங்க ரூபங்களாக லட்சுமிதேவி தானே ஸ்ரீவைகுண்டத்தை வணங்குகிறாள் என்று பல தாசர்களின் வாக்குகளும் இருக்கின்றன. ஸ்ரீஹரியின் ஸ்வரூபங்களே ஆன ஆயுத, ஆபரணங்களும் இருக்கின்றன என்பதையும், இங்கு கவனிக்க வேண்டும். முக்தர்கள் போகிக்கும், பழ, புஷ்ப, வாகனாதி அனைத்து வஸ்துகளும் ஷுத்த ஸத்வாத்மகமானவை. அவற்றை லட்சுமி ஸ்வரூபங்கள் என்று அறியும் காரணமில்லை. ஒரு அர்த்தத்தில் அவையும் லக்ஷ்ம்யாத்மகங்களே. லக்ஷ்மியே ஸ்வாமியாக இருக்கிறாள். அவளே ஷுத்த ஸத்வத்தின் அபிமானியும் நியாமகளும் ஆகியிருக்கிறாள். ஷுத்தஸத்வவும் நித்யமே. அதன் நியாமக லக்ஷ்மிரூபமும் நித்ய என்பதை அறிந்தால், லக்ஷ்ம்யாத்மக வஸ்துகளை முக்தர்கள் போகிப்பது ஏன் என்னும் கேள்வியே வருவதில்லை.

இதற்கு மாறான அபிப்பிராயம் உள்ள வேறு சிலர், தாயின் துடையில் குழந்தைகள் படுப்பது, முலைப்பால் குடிப்பது ஆகியவற்றை செய்வது போல என்று நினைத்தால், முக்தர்கள் லக்ஷ்மி ஸ்வரூப வஸ்துகளை போகிக்கின்றனர் என்பதில் எந்தவொரு பிரச்னையும் இருப்பதில்லை என்கின்றனர். ஆனால், விஷ்ணு ரஹஸ்யத்தின் ஸ்பஷ்ட வாக்கியங்களால் இந்த வாதத்தை வளர்க்கும் அவசியம் இருப்பதில்லை. ஸ்ரீஹரியின் தேக ப்ரவேசத்தினால், ஸாயுஜ்யமுக்தர் போகிக்கும் போகங்கள் ஸ்ரீஹரியின் போகத்திலிருந்து வேறுபட்டவையே என்று சொல்லும் வாக்கியங்களையும் இந்த சந்தர்ப்பத்தில் நினைக்க வேண்டும்.

ஸயுஜ: பரமாத்மா நம் ப்ரவிஷ்ய ச பஹிர்கதா: |
சித்ரூபான் ப்ராக்ருதான்ஸ்சாபி வினா போகான்ஸ்து கான்ஸ்சன ||
(பாஷ்ய)

சில லக்ஷ்ம்யாத்மகங்களான, பகவந்தனுக்கு அஸாதாரண போக்யங்களான, கந்தாதி வஸ்துகளை விட்டு, ஸ்வஸ்வரூபபூத ஆனந்தாதிகளையும், ப்ராக்ருத ஷூத்தஸத்வாத்மக போகங்களையும் ஸாயுஜ்ய முக்தியை அடைந்திருக்கும் பிரம்மாதிகள், போகிக்கின்றனர் என்று இந்த பாஷ்ய வாக்கியத்தின் அர்த்தம் விளக்குகிறது. விஷ்ணு உலகத்திற்கும், விஷ்ணுபுரிக்கும் இருக்கும் வேறுபாட்டினை அறிந்தால், வெவ்வேறான அபிப்பிராயங்களுக்கு எந்தவொரு சந்தர்ப்பமும் இல்லை. இந்த விஷயகமான சாந்தோக்ய பாஷ்யத்தின் சில வாக்கியங்களையும் இங்கு கவனிக்க வேண்டும். ஷ்வேதத்வீபத்தில் இருக்கும் நாராயணனின் இருப்பிடம் நாராயணபுரி என்றும் 'அபராஜிதா' என்றும் அழைக்கப்படுகிறது.

தத்ர விஷ்ணோ: புரம் திவ்யமபராஜித நாமகம் |
விமிதாக்யம் ச பர்யங்கம் விஷ்ணோர்மானேன ஸம்மிதம் |
சித்ஸுவர்ணமயம் திவ்யம் லக்ஷ்மீஸ்துத்தத் ஸ்வரூபிணே ||

அந்த ஷ்வேதத்வீபத்தில் ஸ்ரீவிஷ்ணுவின் அபராஜித என்னும் பெயர் கொண்ட திவ்ய நகரம் இருக்கிறது. விஷ்ணுவின்

பரிமாணத்திற்கு சரியாக இருந்து அதனாலேயே 'விமித' என்று அழைக்கப்படும் ஒரு படுக்கை இருக்கிறது. அது சுவர்ணமயமாக இருக்கிறது. அங்கிருக்கும் வஸ்துகள் அனைத்தும் லக்ஷ்மீஸ்வரூபங்களே ஆகியிருக்கின்றன. இந்த பிரமேயம் வைகுண்ட மற்றும் அனந்தாஸனங்களுக்கும் பொருந்துகிறது என்பதில் சந்தேகம் இல்லை. 'லக்ஷ்ம்யாத்மக' என்பதற்கு பதில் 'லக்ஷ்மீ: தத்தத்ஸ்வரூபிணீ' என்று சொல்லியிருப்பதை கவனிக்கலாம். முக்த லோகங்களில் (வைகுண்டாதி உலகங்களின் ஸ்ரீபாகங்களில்) ஸ்ரீஹரியின் இருப்பிடங்களான புரிகளில் இருக்கும் வஸ்துகள் அனைத்தும் லக்ஷ்மி ஸ்வரூபங்கள் என்று புரிகிறது.

மஹாபிரளய காலத்தில் முக்த ஸ்ரீபாகங்களும் மற்றும் முக்தரும் பரமாத்மனின் உதர பிரவேசம் செய்கின்றனர். அப்போது முக்தர்கள் போக இச்சை இல்லாதவர்களாக வெறும் தியானத்தில் இருக்கின்றனர். ஆகையால், ஷுத்த ஸத்வாத்மக லக்ஷ்ம்யாத்க வஸ்துகளின் கேள்வியே வருவதில்லை. ஷுத்த ஸத்வமும் அனாதி நித்யமானதால், 'அப்ராக்ருத' என்று அழைக்கப்படும் வைகுண்டாதி முக்த லோகங்களும், ஸ்ருஷ்டியில் பயன்படுத்தப்படும் ஸத்வகுணத்தால் செய்யப்பட்டவை அல்ல என்னும் அர்த்தத்தை அறியவேண்டும்.

சந்த்ரதவன மனெ – என்றதால் அற்புத ஸௌந்தர்யத்தைக் கொண்ட மூர்த்தியைப் போல இருக்கும் வைகுண்டபதியின் அழகு ஒளிர்கிறது என்று அறிய வேண்டும். 'ஸௌந்தர்யஸாரைகரஸம் ரமாபதே ரூபம் ஸதானந்தமதீஹ மோக்ஷிண:' (மத்வ விஜய) என்று, முக்தரின் ஆனந்தத்திற்கு முக்கிய காரணமானது, ஸ்ரீஹரியின் திவ்ய சுந்தர விக்ரஹம் என்று வர்ணிக்கப்படுகிறது.

சகல வைபவபூர்ணமான வைகுண்டத்தையே நாசம் ஆகத்தக்கது என்று அறியும் மூர்க்கனுக்கு பதில் சொல்வதைப் போல, சம்சாரம் என்னும் காட்டில், காய், கனி தின்று வாழும் வியாதிக்காரனின் உதாரணத்தைக் கொடுத்து, அப்படி அறிபவர்கள், ஸ்ரீஹரியின் ஸ்வாதந்த்ர்யம், மஹதைஷ்வர்யாதிகளை, சர்வோத்தமனான அவனின் இருப்பையே புறக்கணிக்கும் நாத்திகர்களே ஆவார்கள் என்று குறிப்பால் உணர்த்துகிறார்.

## 1. மோட்ச ஸந்தி

---

பத 11 ராகம் : சங்கராபரணம். தாளம் : ரூபக

**பரமாக$^3$தி எந்து$^3$ வைகுண்டத$^3$ரஸ**
**ஸிரிபதியெந்து$^3$ ஷுக$^1$யோகி$^3$ வர்ணிஸித$^3$**
**அரிகெயுள்ள பு$^3$த$^3$ரு அதரிந்தீ$^3$பத$^3$வன்னு**
**பரம முகுதியெனபே$^3$கு ||1**

வைகுண்டதரஸ – வைகுண்டத்தின் தலைவனே. பரமாகதியெந்து – அனைவருக்குமான சிறந்த தலைவன் என்று, (பெறவேண்டிய மிகவும் சிறந்த வஸ்து என்று), ஸிரிபதியெந்து – லட்சுமிபதி என்று. ஷுகயோகி – சுக முனிவர். வர்ணிஸித – வர்ணித்தார். அதரிந்த – இந்த காரணத்தால். அரிகெயுள்ள – அறிவுள்ள. புதரு – பண்டிதர்கள் (சாஸ்திரத்தை அறிந்தவர்கள்). இந்த பதவன்னு – இந்த இடத்தை (வைகுண்டத்தை). பரமமுகுதியெனபேகு – (புருஷார்த்தங்களில்) சிறந்ததான மோட்சம் என்று அறியவேண்டும்.

**த$^4$ன்யயதிக$^3$ளீலோகவ பொக்க மேலெ**
**புனராவ்ருத்தி இல்ல காணிரோ**
**இன்னொந்து$^3$ மோக்ஷ உண்டெம்ப$^3$ க$^2$ளர**
**முன்ன முத்$^3$ரிஸிதாகி$^3$ ||2**

தன்யயதிகளு – க்ருதக்ருத்யரான ஞானிகள். ஈ லோகவ – வைகுண்டத்தை. பொக்கமேலெ – நுழைந்த பிறகு. புனராவ்ருத்தியில்ல காணிரோ – (சம்சாரத்திற்கு) திரும்ப வருவது என்பது இல்லை. இன்னொந்து மோக்ஷவுண்டெம்ப – வேறு ஒரு வித முக்தி (ஸகுணமுக்தி) இருக்கிறது என்று சொல்லும். களர – துர்ஜனரின். மன்ன – மனம். முத்ரிஸிதாகி – மூடப்பட்டிருக்கிறது என்பதைத் தவிர வேறு இல்லை.

**'ந ச புனராவர்த்ததே' எம்ப$^3$ வேதா$^3$ந்த**
**மன்னிஸித$^3$ முக்தி இன்னொந்து$^3$**
**ஹெஸரில்லத$^3$ முக்தி ஸல்லதா$^3$கி$^3$ நம்ம**
**எஸெவ வைகுண்ட$^2$வெ முக்$^2$ய மோக்ஷ ||3**

ந ச புனராவர்த்ததே - என்றும் திரும்ப வருவதில்லை. எம்ப வேதாந்த - என்று கூறும் பிரம்மஸூத்ரத்தின் வாக்கியம். மன்னிஸித - நிர்ணயித்து மரியாதை கொடுத்த. முக்தி - மோட்சம் (இதே மோட்சம்). இன்னொந்து ஹெஸரில்லத முக்தி - சொல்ல முடியாத இன்னொரு மோட்சம் என்பது (பெயர் இல்லாத) இல்லை. மற்றும், ஸல்லதாகி - கொடுப்பதில்லை என்பதால் (அங்கீகார யோக்ய இல்லாததால்). நம்ம - நாம் சொல்லும் (சாஸ்திரத்தின்படியான). எஸெவ வைகுண்டவே - நிலைத்திருக்கும் வைகுண்டமே. முக்யமோக்ஷ - மோட்சம் என்பதன் முக்கிய அர்த்தம் ஆகும்.

**ஹேளிலோ வாதி3 தமவெம்ப3 நின்ன ஞான**
**பீ3ளுகொட்ட லோக புஸியெ**
**ஆலோசிஸிகோ நின்ன மதத3 ரஹஸ்யவ**
**ஈ லோகவெ தி3வ்யமுக்தி ||4**

எலோ வாதி - ஹே வாதியே. கேளு - பதில் சொல். தமவெம்ப - இருட்டு என்னும் (தமஸ் சாதகமான). நின்ன ஞான - உன் அறிவு (புத்தி). பேளுகொட்ட - புறக்கணித்த. லோக - வைகுண்ட லோகம். புஸியே - பொய்யா?. நின்ன மதத ரஹஸ்ய - உன் மதத்தின் தவறான அபிப்பிராயத்தை. ஆலோசிஸிகோ - உனக்குள் நீயே யோசித்துப் பார். ஈ லோகவே - நாம் சொல்லும் வைகுண்டலோகமே. திவ்யமுக்தி - சிறந்ததான (ப்ரகாஷபூர்ணவாத - இருட்டு இல்லாத) மோட்சம்.

**இந்து நோட3லு ஸர்வபத3த3 ஸம்பத3 நினகெ**
**ப்4ராந்த க3ண்டல காணவாயிது**
**ஹந்ததனவ பி3டு3 நாவெந்த3ர்த்த2வனு நீனு**
**ஸந்தோஷதி3ந்த3கீ3கரிஸு ||5**

இந்து நோடலு - இவ்வாறு விமர்சிக்க. ஸர்வபதத ஸம்பத - அனைத்து உலக ஆதிபத்யம் என்னும் செல்வத்தையும் மீறிய செல்வம். ப்ராந்த - ஹே மித்யாவாதியே. நினகெ - உன் வாதங்களுக்கு (மோட்சஸ்வரூப பிரதிபாதனைக்கு). கண்டலகாணவாயிது - கழுத்தை இறுக்கி திருப்பி மூச்சு

விடாதவாறு செய்வது. ஹந்ததனவ – மூர்க்கத்தனத்தை (தற்கொலையை). பிடு – விடு. நாவெந்தர்த்தவனு – நாம் கூறும் நிர்ணயத்தை. அங்கீகரிஸு – ஒப்புக்கொள்.

வேதார்த்தங்களின் நிர்ணயம் (அந்தநிர்ணயம்) எதனால் ஆகிறதோ, அது வேதாந்த ஆகும். நான்கு அத்தியாயம் உள்ள பிரம்ம மீமாம்ஸா சாஸ்திரமே (பிரம்மஸூத்ரங்களே) வேதாந்த என்று புகழ்பெற்றிருக்கிறது.

முக்தியில், ஸகுணமுக்தி, நிர்குண முக்தி என்னும் பேதம் இல்லை. பிரம்மஸாக்ஷாத்காரம் ஆன பிறகு, ப்ராரப்த கர்மபோகாவஸ்தையில் இருக்கும் ஜீவன், 'ஜீவன்முக்த' என்று அழைக்கப்படுகிறான். முக்தன் என்று அல்ல. இத்தகையவனை, ஸகுணமோட்சத்தை அடைந்தவன் என்று சொல்ல முடியாது. ப்ராரப்த கர்மத்தின் சுக துக்காதி பலன்களை பௌதிக தேகத்தில் இருந்து அனுபவித்துக் கொண்டிருப்பவனை முக்தன் என்று சொல்ல முடியுமா? பிற தேகத்தை அடைவதற்கு காரணமாகும் கர்மபந்தங்கள் இல்லாதவன் ஆகையால் மட்டுமே, முக்தன் ஆகிறான் அவ்வளவே. சூக்ஷ்மமான அனாதிலிங்க தேகத்தை விட்டு, ஸ்வரூப மாத்திரத்தால் வைகுண்டாதி முக்தலோகத்தை அடைந்தவனே முக்தன். அவனே ப்ராக்ருத குணத்ரயங்களை விட்டவன். குணங்கள் இல்லாதவன். நிர்குணன். வைகுண்டாதிகளும் அப்ராக்ருதங்களே. ஆகையால், இதுவே நிர்குண முக்தி ஆகும். சம்சார நிலையில் ஜீவஸ்வரூபத்தை போர்த்திக் கொண்டிருக்கும் பிற ரூபங்களை (ப்ராக்ருத குணங்களை – தேகங்களை) விட்டு ஸ்வஸ்வரூபத்தினால் நிற்பதே முக்தி ஆகும்.

முக்திர்ஹித்வா஽ன்யதாரூபம் ஸ்வரூபேண வ்யவஸ்திதி: = என்று பாகவதத்தில் இதுவே சொல்லப்பட்டிருக்கிறது. இதன் தாத்பர்ய பாகத்தில் 'ந சான்யமுக்திரஸ்தேத்யத்ர கிஞ்சின்மா நம்' – வேறான இன்னொரு முக்தி இருக்கிறது என்பதில் எந்த பிரமாணமும் இல்லை என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஞான, ஆனந்தாதி குணங்கள் ஜீவஸ்வரூப தர்மங்களே ஆகும். ஜீவன்

நித்யன். இப்படி இருக்கையில், ஜீவன் நிர்குணன் என்றால் ப்ராக்ருத ஸத்வாதி குணம் இல்லாதவன் என்றே அர்த்தம். வேறு எந்த அர்த்தமும் இல்லை.

ஸ்ருதி புராணங்களில் நிர்குணமுக்தி விஷயக என்று புகழ்பெற்ற பிரகரணங்களிலேயே, முக்தருக்கு பற்பல போகங்களை சொல்லியிருக்கிறார்கள்.

* ஸோऽஷ்னுதே ஸர்வான் காமான்
* ஆனந்தமயமாத்மான முபஸங்க்ரம்ய இமாம்லோகான் காமான்னீ காமரூப்யனு ஸஞ்சரன்
* ஸ்வேன ரூபேணாபி நிஷ்பத்யதே ஏஷ ஆத்மேதி ஹோவாச ஸ தத்ர பர்யேதி ஜக்ஷன் க்ரீடன் ரமமாண:

என்று கூறி,

* நிர்குணமுக்தி விஷயத்வேன ப்ரஸித்தேஷ்வேவ ஸ்தலேஷு முக்த்யனந்தரம் போகோக்தேஸ்ச

என்று முக்தருக்கு போகத்தை சொல்லியிருக்கிறார்கள். இந்த வாக்கியங்களின் பொருள் இவ்வாறு இருக்கிறது. முக்தன் விரும்பிய அனைத்து போகங்களையும் பெறுகிறான். பூர்ணானந்த ஸ்வரூபனான பரமாத்மனை அடைந்த முக்தன் விரும்பிய லோகங்களையும், விருப்பங்களையும், ரூபங்களையும் பெற்று சுகப்படுகிறான். ஸ்வஸ்வரூப ஆவிர்பாகத்தைப் பெற்ற இந்த ஜீவன் (முக்தன்), வைகுண்டத்தில் விரும்பியவற்றை அடைந்தவாறு தன் செயல்களை செய்கிறான். பெண்களுடன் இருக்கிறான். இவ்வாறு நிர்குண முக்தி விஷயங்கள் என்று சொல்லப்பட்டிருக்கும் ஸ்ருதி வாக்கியங்களில்கூட முக்தர்களுக்கு போகம் சொல்லப்பட்டிருக்கிறது.

இன்னும், பிரம்ம ஐக்யமே நிர்குணமுக்தி என்று சொல்வதற்கும்கூட சாத்தியம் இல்லை. பிரம்மனில் சென்று சேர்வது, பிரம்ம ஐக்யமல்ல. நதிகள் கடலில் நுழைந்து ஒன்றாக கலப்பது போல, முக்தஜீவர்கள் பரபிரம்மனில் சேர்ந்து ஐக்கியத்தை அடைகின்றனர் என்றும் மற்றும் அதற்கு சம்பந்தப்பட்ட ஆதாரங்களை சொல்வதுண்டு. இவற்றை நிராகரிக்கும் கருத்துகளை ஸ்ரீமதானந்ததீர்த்த பகவத்பாதர் தம் ‘விஷ்ணுதத்வ

நிர்ணய' கிரந்தத்தில் சொல்லியிருக்கிறார். இப்புத்தகம் பெரிதாகிவிடும் என்பதால் அதில் ஒரு பாகத்தை மட்டும் இங்கு உதாரணம் கொடுக்கிறோம்.
தா: ஸமுத்ராத் ஸமுத்ர ஏவாபியந்தி ஸ ஸமுத்ர ஏவ பவதி (ஸ்ருதி)

இதனை விமர்சிக்கும் வாக்கியம்:
இத்யத்ராபி பேத ஏவ உச்யதே |
அன்யதா தா: ஸமுத்ர ஏவ பவதீதி வ்யபதேஷ: ஸ்யாத் |
அதோ நத்ய: ஸமுத்ராதாகச்சந்தி தம் ப்ரவிஷந்தி ச
ஸமுத்ரஸ்து ஸ ஏவ நைதாஸாம் ஸமுத்ரத்வம் பவதீத்யர்த்த: ||

அதாவது, 'அவை (நதிகள்) கடலிலிருந்து கடலையே சேர்கின்றன – கடல் கடலாகவே இருக்கிறது. என்று சொல்லும் இந்த ஸ்ருதியில்கூட, ஜீவபரமாத்மரின் பேதமே சொல்லப்பட்டிருக்கிறது. அப்படியில்லை எனில், அந்த நதிகள் கடலே ஆகின்றன என்று சொல்ல வேண்டும். ஆகையால், கடலிலிருந்து நதிகள் உருவாகின்றன. திரும்ப கடலையே அடைகின்றன. கடல் அப்படியே (முதலில் இருந்ததைப் போலவே) இருக்கிறது. அந்த நதிகளுக்கு சமுத்ரத்வம் (சமுத்ர பாவம், ஸ்வரூபம்) உண்டாவதில்லை என்றே அர்த்தம்.

கங்கை நதியின் தண்ணீர் கடலில் நுழைந்து, கடலாகவே ஆகிவிடுவதைப் போல அஞ்ஞானிகளுக்கு தெரிந்தாலும், விஞ்ஞானிகள் அந்தந்த நதி தண்ணீரில் லட்சணத்தினால், அந்தந்த தண்ணீரை தனித்தனியே அறிய வல்லவர்கள். அது மட்டுமா? சூரிய ஒளியில் மறைந்து வெளிப்படையாக தெரியாமலிருக்கும் நட்சத்திரங்களின் ஒளியைக்கூட விஞ்ஞானிகள் வேறுபடுத்தி, ஆய்வுக்கூடங்களில் காட்டுகின்றனர். மிகப்பெரிய ஒளியில், சிறிய ஒளி அடங்கி, மறைந்து போகிறது என்பதால், அதன் சிறிய ஒளி நஷ்டமாகி விடுகிறது என்று அல்ல.

பேதேனைவ ஜகத்ஸர்வம் பேதேனேஷம் குணை: ஸஹ |
பேதேன ஜீவானன்யோன்யம் முக்தா: பஷ்யந்தி ஸர்வஷ| ப்ரு.உப

அனைத்து உலகும் தன்னிடமிருந்து வேறுபட்டது என்றும், குணபூர்ணனான ஸ்ரீஹரியையும், ஸ்ரீஹரியிடமிருந்து பிற ஜீவர்களையும், முக்தர் அறிகின்றனர் மற்றும் பார்க்கின்றனர். அனைத்து விதங்களிலும் (தாரதம்யத்துடன் அனைத்தையும் அறியும்) முக்தரின் ஞானம் பேதத்தையே சொல்கிறதே தவிர அபேதத்தை அல்ல).

முக்தானாம் சாஸ்ரயோ விஷ்ணுரதிகோऽதிபதிஸ்ததா |
தத்வஷா ஏவ தே ஸர்வே ஸர்வதெய்வ ஸ ஈஷ்வர: ||
(பரமஸ்ருதி)

விஷ்ணுவே அனைத்து முக்தர்களுக்கும் கதி. உத்தமன். மற்றும் முக்தர்களை ஆளும் அதிபதியும் அவனே. முக்தர் அனைவரும் எப்போதும் விஷ்ணுவின் வசத்தில் இருக்கின்றனர். அவனே அந்த அனைவரின் ஸ்வதந்த்ர நியாமகனாக இருக்கிறான்.

ஆகிய பல பிரமாணங்களால், விஷ்ணு லோகத்தில் விஷ்ணுவசராகி எப்போதும் ஆனந்தப்படுவதே மோட்சம். வேறொன்றும் இல்லை என்று தெளிவாக புரிகிறது.

சம-அதிகம் இல்லாதவன் என்றும், சச்சிதானந்த ஸ்வரூபன் என்றும், பகவந்தனை உபாசனை செய்யவேண்டும் என்று வேதாந்த சாஸ்திரங்கள் சொல்கின்றன. இப்படியிருந்தாலும், உபாசனா விஷயனான பரமாத்மனை, நிர்குண - நிர்விசேஷ - நிரவய - நிராகரன் என்று உபாசித்தால், அந்த உபாசனையின் பலன், துக்கபூர்ணமான தமஸ்ஸாகவே இருக்கிறதே தவிர, சுகரூபமாக இருப்பதற்கு சாத்தியம் இல்லை. இந்த பிரமேயத்தை சொல்லியவாறு 'நின்ன மதத ரஹஸ்ய ஆலோசிஸிகோ' என்கிறார் (4ம் நுடி). இதன் விவரத்தை பத 6ன் குறிப்பில் பார்க்கலாம்.

ஸ்லோக 12-15

**அவைஷ்ணவா நாமப்ராப்யம் கு³ணத்ரய விவர்ஜிதம் |**
**நித்யஸித்⁴யை: ஸமாகீர்ணம் தன்மயை: பாஞ்சகாலிகை: ||12**
**ஸபா⁴ப்ராஸாத³ ஸம்யுக்தம் வனைஸ்சோப வனைர்வ்ருதம் |**

-------------------------------------------------------------------------------------------

**வாபிகூபதடாகைஸ்ச வ்ருக்ஷ ஷ²ண்டை³ஸ்ச மண்டி³தம் ||13**
**அப்ராக்ருதம் ஸுரைர்வந்த்³ய மயுதார்க்க ஸமப்ரப⁴ம் |**
**ப்ரக்ருஷ்ட ஸத்வராஷிம் த்வாம் க¹தா³ த்³ரக்ஷாமி சக்ஷுஷா ||14**
**பி³ரம்மலோக பதா³தூ³ர்த்³வம் யத்புரம் சக்ரபாணின: |**
**கோ³விந்த³ப⁴க்தி மாஹாத்ம்யம் நராணாம் ச ந ஸம்ஷய: ||15**

அவைஷ்ணவானாம் – விஷ்ணுபக்தி இல்லாதவர்களுக்கு. அப்ராப்யம் – அடைய முடியாததும், குணத்ரய விவர்ஜிதம் – (ஸத்வ, ரஜஸ், தமஸ் என்னும்) ப்ராக்ருத குணத்ரயங்கள் இல்லையென்றாலும், தன்மயை: – ஸ்ரீஹரியையே ப்ரதானன் என்று (சர்வோத்தமன் என்று) அறிந்த, பாஞ்சகாலிகை: – காலநியாமக (பஞ்ச கால நாமக) ஸ்ரீஹரியின் அனன்ய பக்தரான. நித்யஸித்யை: – முக்தரால். ஸமாகீர்ணம் – நிரம்பியிருக்கிறது. ||12

ஸப்ராப்ராஸாத ஸம்யுக்தம் – சபா மந்திரங்கள். உப்பரிகைகள், வீடுகள் மற்றும், வனை: வனங்கள். உபவனைஸ்ச – உபவனங்கள், ஆகியவற்றைக் வ்ருதம் – கொண்ட, வாபிகூபதடாகைஸ்ச – வாபி – இறங்கும் கிணறு. கூப – இறைக்கும் கிணறு. தடாக – ஏரி, கடல் ஆகியவை. வ்ருக்ஷஷண்டைஸ்ச – வ்ருக்ஷ சமூகங்களாலும், மண்டிதம் – அழகாக இருக்கிறது (அலங்கரிக்கப்பட்டிருக்கிறது). ||13

அப்ராக்ருதம் – ப்ரக்ருதி நிர்மிதம் இல்லாததும் (விகாரம் இல்லாததும்). ஸுரை: – தேவதைகளால். வந்த்யம் – வணங்கத்தக்கதும். அயுதார்க்க ஸமப்ரபம் – எண்ணிக்கையற்ற சூரிய ஒளியைக் கொண்டவனும் (அயுத – 10,000 அல்லது அனந்த). ப்ரக்ருஷ்ட ஸத்வராஷிம் – உத்தம ஜீவ ஸமூகங்கள் கொண்டவை ||14

பிரம்மலோக பதாதூர்த்வம் – ஸத்ய லோகத்தைவிட மேலே இருக்கும். நராணாம் – மனிதனுக்கு (விவேகிகளுக்கு). ந ஸம்ஷய – சந்தேகம் இல்லாதவாறு. கோவிந்தபக்தி மாஹாத்ம்யம் – ஹரிபக்தியினாலேயே கிடைக்கிறது எனும் மஹாத்ம்யத்தை சொல்லும். சக்ரபாணின: – சக்ரபாணி (ஸ்ரீஹரி). யத்புரம் – எந்த

வைகுண்டமோ. அதனை, ||15 த்வாம் - (அதற்கு அதிபதியான). உன்னை. கதா - என்று. த்ரக்ஷ்யாமி - பார்க்கிறேன்? (பக்தனின் வேண்டுதலை சொல்கிறது).

** முந்தைய 14ம் ஸ்லோகத்திலிருந்து சேர்த்து படிக்க வேண்டும்.

இந்த ஸ்லோகங்கள் 'ஜிதந்தே ஸ்தோத்திர' த்திலிருந்து உதாரணம் கொடுக்கப்பட்டுள்ளது. அங்கு, சதுர்முக பிரம்மதேவர், வைகுண்டத்தையும், வைகுண்டபதியையும் தினமும் பார்த்தவாறு வணங்கியவாறு, தம் மஹாபாக்ய ரூபத்தின் எதிர்கால முக்த ஸ்தானத்தை வர்ணிக்கிறார். முன்னர் ஒரு முறை, பகவந்தனே அருளி, பிரம்மதேவருக்கு முக்த லோகத்தை காட்டுகிறான். அந்த தரிசனத்தின் சிந்தனை, இந்த வைகுண்ட ஸ்துதிக்கு ஆதாரம் என்று அறிய வேண்டும்.

தஸ்ம்யை ஸ்வலோகம் பகவான் ஸபாஜித:
ஸந்தர்ஷயாமாஸ பரம் ந யத்பரம் |
ப்ரவர்த்ததே யத்ர ரஜஸ்தமஸ்தயோ:
ஸ்வயம் ச மித்ரம் ந ச காலவிக்ரம: || (பாகவதம் 3ம் ஸ்கந்தம்)

என்று, வைகுண்ட லோகத்தைப் பற்றியும் மற்றும் வைகுண்டத்தின் வர்ணனையையும் சொல்கிறது. இந்த ஸ்லோகத்தின் அர்த்தம் இவ்வாறு உள்ளது.

பூஜிதனான பகவந்தன் பிரம்மதேவனிடம், தன் உலகத்தைக் காட்டுகிறான். அதுவே மிகச்சிறந்த இடமாகும். அதைவிட உத்தமமான ஸ்தானம் வேறொன்று இல்லை. அங்கு ஸத்வ, ரஜஸ், தமோகுணங்களின் அல்லது அவற்றின் கலவையின் அல்லது கால வேகத்தின் ப்ரபாவங்கள் இல்லை.

ஸ்ரீஹரியே பஞ்சகாலன். அவனே பரம பிரசாதத்திற்கு பாத்திரரானவன் 'பாஞ்சகாலிகர்'. பகல்-இரவு, பக்ஷ-மாஸ-சம்வத்ஸர, ஆகிய கால பேதங்களால், யுக, மன்வந்தர, தினகல்ப, பர (பிரம்மனின் நூறு ஆண்டு காலம்) மற்றும் பிரளயங்கள் என்னும் பஞ்சவித காலங்களின் நியாமகனான கால நாமக

## 1. மோட்ச ஸந்தி

---

ஸ்ரீஹரி, பஞ்சகாலன். ஜாக்ருத, ஸ்வப்ன, ஸுஷுப்தி, ஸமாதி ஆகிய மோட்சங்கள் என்னும் நிலைகளின் கால விசேஷங்களை நியமிப்பவன் ஆகையால், அந்த ஸ்ரீஹரியே பஞ்சகாலன் ஆகிறான். அதுவே 'ஜிதந்தே ஸ்தோத்திரத்தில்',

நமஸ்தே பஞ்சகாலக்ஞ பஞ்சகால பராயண |
பஞ்சகாலைகமனஸா த்வமேவ கதிரவ்யயா ||

பஞ்சகாலனே முக்தியைக் கொடுக்கிறான் என்று சொல்லப்படுகிறது.

பத 12 ராகம் : முகாரி. தாளம் : ரூபக
**லோகைகனாத நாராயணகெ[3] ப்ரியவாத[3]**
**வைகுண்ட[2]புரிய வர்ணிபெனு**
**ஸ்ரீகாந்தனனெந்தெந்து[3] அல்லித்து[3] முக்தர நி**
**ராகுல ஸுக[2]வித்து பொரெவ ||1**

லோகைகநாத நாராயணகெ – அனைத்து உலகங்களின் ஸ்வதந்த்ர பிரபுவான நாராயணனுக்கு. ப்ரியவாத – ப்ரீதிவிஷயனான. வைகுண்டபுரிய – வைகுண்ட நகரத்தை. வர்ணிஸுபெ – வர்ணிக்கிறேன். ஸ்ரீகாந்தனு – லட்சுமிபதி. அல்லித்து முக்தர – அங்கிருக்கும் முக்தர்களுக்கு. எந்தெந்து – எப்போதும். நிராகுல ஸுகவித்து – துக்கம் இல்லாத, பூர்ண சுகத்தை அருளி. பொரெவ – அருள்கிறான்.

வைகுண்ட லோகத்தின் ஸ்ரீபாகம் மற்றும் வைகுண்ட நகரியின் விஷயங்களில் சொல்லப்படும் அனைத்து லட்சணங்களும் (பிரமேயங்களும்), ஷ்வேதத்வீப – அனந்தாஸனங்களில் இருக்கும் ஸ்ரீபாகங்களுக்கும், புரிகளுக்கும் பொருந்துகிறது. ஷ்வேதத்வீபத்தில் இருக்கும் ஸ்ரீஹரியின் இருப்பிடம் 'நாராயணபுர' என்று அழைக்கப்படுகிறது. வைகுண்ட மற்றும் அனந்தாஸனத்திலும், ஸ்ரீஹரியின் இருப்பிடங்கள் அதே பெயரிலேயே இருக்கின்றன என்று அறிய வேண்டும்.

ப்ரியோ ஹி ஞானோடத்யர்த்தம் அஹம் ஸ ச மம ப்ரிய: (கீதை) என்று சொல்லப்பட்டிருப்பதைப் போல, ஞானிகளுக்கு ஸ்ரீஹரி மிகவும் ப்ரியமானவனாக இருப்பதாலேயே, ஸ்ரீஹரிக்கும் அவர்கள் ப்ரியர்கள். இந்த காரணத்தினாலேயே முக்தர்களுக்கு ப்ரியமான வைகுண்டமும் ஸ்ரீஹரிக்கு ப்ரியமே ஆகும். 'நாராயணனுக்கு ப்ரியமான வைகுண்டபுரி' என்பது இதனாலேயே. இதனால் அனைத்திடங்களிலும் வசிக்கும் வாசுதேவனுக்கு பிற இடங்கள் ப்ரியமில்லை என்பது இல்லை. 'ஸர்வஸமனான' ஸ்ரீஹரிக்கு பிடித்த / பிடிக்காத என்பது எதுவும் இல்லை.

**ஸ்ரீகிருஷ்ணனங்க்4ரிய நெனெயலொல்லத3வரிகெ3 ஈ**
**லோகவெந்தெந்து3 தொ3ரகது3 ।**
**ப்ரக்ருஷ்ட ஸத்வராஷிக3ளிப்பவு க3ட3**
**ப்ராக்ருதவல்ல நித்ய க3ட3 ||2**

ஸ்ரீகிருஷ்ணனங்க்ரிய – ஸ்ரீஹரி பாதங்களை. நெனெயலொல்லதவரிகெ – என்றும் பக்தியுடன் நினைக்கும் தமோ யோக்யருக்கு. ஈ லோகவு – இந்த வைகுண்டலோகம். (நகரி மட்டுமல்ல). எந்தெந்து – எந்த காலத்திற்கும். தொரகது – கிடைப்பதில்லை. ப்ரக்ருஷ்ட ஸத்வ ராஷிகளு – உத்தம ஸாத்விக ஜீவ ஸமூகங்கள். அல்லி – அந்த வைகுண்ட லோகத்தில். இப்பவு கட – இருப்பது என்பது சாஸ்திரத்திற்கு ஒப்பியதே. ப்ராக்ருதவல்ல – அந்த லோகம் விகாரமுள்ள ப்ரக்ருதியால் செய்யப்பட்டதல்ல. நித்யகட – நித்யமானதே என்பது நிச்சயம்.

'ப்ரக்ருஷ்டஸத்வராஷிகளு அல்லிப்பவு' என்பதில் இருக்கும் 'ப்ரக்ருஷ்ட' சொல்லில் அடங்கியிருக்கும் ரகசிய பிரமேயம் இவ்வாறு இருக்கிறது.

ஷ்வேதத்வீபம் ததோ கத்வா விஷ்ணும் த்ருஷ்ட்வா ச தே தத: |
அனுக்ஞாதா: ப்ரமோதந்தே நிர்துக்காஸ்து தராதிஷு ||
கேசதேவ வஸந்த்யத்ர அந்தரிக்ஷே ச கேசன |
கேசத்ஸ்வர்கே மஹர்லோகே ஜனே தபஸி சாபரே ||
கேசத்ஸத்யே மஹாக்ஞானா கச்சந்தி க்ஷீரசாகரம் |
ஷ்வேதத்வீபம் ச வைகுண்டம் அனந்தாஸன மப்யுத ||

# 1. மோட்ச ஸந்தி

---

(ஸரஸ பாரதி விலாஸ)

என்னும் வாக்கியங்கள் முக்தரின் வசிப்பிடங்களை விளக்குகிறது. அனைத்து முக்தியோக்ய ஜீவர்களுக்கும் வைகுண்டாதி முக்ததாமங்களில் ஸ்ரீபாகம் இருப்பதில்லை. உத்தமாதிகாரிகள் மட்டுமே அங்கு இருக்கின்றனர். இங்கு கொடுக்கப்பட்டுள்ள ஸ்லோகங்களில் அர்த்தம் இவ்வாறு உள்ளது.

லிங்க தேகத்தை விட்டபிறகு அனைத்து முக்தர்களும், முதலில் ஷ்வேதத்வீபத்திற்கு சென்று, ஸ்ரீநாராயணனின் தரிசனத்தைப் பெற்று, அவனின் ஆணைப்படி தமக்கு விதிக்கப்பட்ட பூம்யாதி யோக்ய இடங்களைச் சென்று அடைந்து, நிர்துக்கானந்தத்தை அனுபவித்தவாறு வசிக்கின்றனர். சிலர் பூலோகத்திலும், சிலர் அந்தரிக்ஷத்திலும், வேறு சிலர் ஸ்வர்க்க, மஹர்லோக, ஜனலோக, தபோலோகங்களிலும், மற்றும் வேறு சிலர் சத்யலோகத்திலும், அவர்களைவிட உத்தமர்கள் அமுக்த வைகுண்டாதி பாகங்களிலும் (பூ, துர்கா பாகங்கள்), வசிக்கின்றனர்.

சில மஹாஞானிகள் பாற்கடலில் வசிக்கின்றனர். இவ்வாறு ஞானாதிக்ய கிரமத்தில் (ஸ்வரூப யோக்யதைக்கேற்ப தாரதம்யத்திற்கேற்ப), வைகுண்டாதிகளின் ஸ்ரீபாகங்களிலும், அங்கேயும் வைகுண்ட நகரத்தின் அருகிலும் வசிக்கின்றனர். பூம்யாதிகளில் இருக்கும் முக்தர்கள், ப்ராக்ருத தேகங்கள் இல்லாமல், சம்சாரி ஜீவர்களுக்கு தெரியாமலேயே இருந்து, ஷுத்த ஸத்வாத்மக தேகங்களை தம் இஷ்டத்திற்கேற்ப பெற்று, ஸ்வரூப தேகத்தினால்கூட, நித்யானந்த போகிகளாகவே இருக்கின்றனர் என்று அறிய வேண்டும்.

**எந்தெ$^3$ந்து$^3$ நித்ய ஸனாதனவெம்ப$^3$ ஈ**
**சந்த$^3$த$^3$ பத$^3$ தி$^3$வ்யாஸ்பத$^3$**
**நித்ய த்ரிகு$^3$ணங்க$^3$ளு ஹொந்த$^3$வி லோகக்கெ**
**குந்து$^3$ கொரதெக$^3$ளு இல்ல க$^3$ட$^3$ ||3**

எந்தெந்து - அனைத்து காலங்களிலும் (பிரளய காலத்தில் கூட). நித்ய - அழிவு இல்லாததும், ஸனாதனவெம்ப - அனாதி காலத்திலிருந்து இருக்கிறது என்னும். இந்த சந்தத பத - இந்த சிறந்த லோகம். திவ்யாஸ்பத கட - தேவதைகளுக்கு மட்டும் கிடைக்கும். நித்ய - அனைத்து காலங்களில். த்ரிகுணகளு - சத்வரஜஸ் தமோ குணங்கள். ஈ லோகக்கெ ஹொந்தவு - சம்பந்தமாவதில்லை. குந்துகொரதெகளு இல்ல கட - (இந்த காரணத்தினால்) துக்காதி குறைகள் எப்போதும் இல்லை என்பது தெளிவு.

சத்வாதி குணங்கள் என்பது, தற்காலிகமான சுகங்களுக்கு காரணங்கள் ஆகும். முக்த லோகங்களில் ப்ராக்ருத குண சம்பந்தமே இல்லாததால், அனித்ய மற்றும் அபூர்ண சுகங்களுக்கு அங்கு வாய்ப்பே இல்லை. அனைத்து முக்தரும் ஸ்வயோக்யதைகளின் பரிபூர்ணத்வத்தை கண்டிப்பாக அடைந்திருக்கின்றனர். துக்காதி தோஷங்கள் என்றும் அவர்களை அண்டுவதே இல்லை. ஆகையாலேயே ‘குந்துகொரதெகளில்ல’ என்றார். குந்து - தோஷம். கொரதெ - குறைகள்.

**அத³ரிந்த³ பொம்மாதி³ தே³வரெல்லரு ஹரிய**
**ஸத³னவெனிப புரத்ரயக்கெ**
**முத³தி³ந்த³ கைமுகி³து³ பூஜிஸுவரெந்து³**
**பத³ நித்ய ஸித்³த³ராஸ்பத³ க³ட³ ||4**

அதரிந்த - உத்தமாதிகாரிகள் என்னும் காரணத்தால். பிரம்மாதி தேவரெல்லரு - பிரம்ம முதலான அனைத்து தேவதைகளும். ஹரிய ஸதனவெனிப - ஸ்ரீஹரியின் நித்ய இருப்பிடமான. புரத்ரயக்கெ - வைகுண்ட, நாராயணபுரி, அனந்தாஸன என்னும் மூன்று நகரங்களுக்கு. முததிந்த - மகிழ்ச்சியுடன். எந்தெந்து - எப்போதும். கைமுகிது - கைகூப்பி (பக்தியுடன் வணங்கி). பூஜிஸுவரு - பூஜிக்கின்றனர். பதநித்யஸித்தர - இந்திராதி பத யோக்யரான முக்த ஜீவர்களுக்கு மட்டும், நியமத்துடன். ஆஸ்பத கட - கிடைக்கிறது. அல்லது, பத - இந்த புரிகள், நித்யசித்தராஸ்பத - அனாதி அபரோக்ஷ ஞானிகளான தத்வாபிமானி தேவதைகளுக்கே கிடைப்பவை ஆகும். கட -

(இவர்களுக்கு மட்டுமே இந்த புரிகள். பிறருக்கு இல்லை) என்பது சாஸ்திரத்தில் சொல்லப்பட்டவையாகும்.

தத்வாபிமானிகளின் பொதுவான லட்சணங்களை விளக்கியவாறு,
அனாதிதோடப்யாபரோக்ஷயுக்தா ரூபேஷு ச க்வசித்
ஸமஸ்தலக்ஷணை: பூர்ணா: ஸமஸ்த ஜகதீஷ்வரா: |
முக்தப்ராயா: ஸதா ஸர்வே...
(ஸரஸ பாரதி விலாஸ)

என்று சொல்லப்பட்டிருக்கிறது. இவர் அனாதி காலத்திலிருந்து பகவந்தனின் சாமான்யாபரோக்ஷ (சில ரூபங்களின் சாமான்ய சாக்ஷாத்கார) உள்ளவர்கள். ஸாதன காலத்தில் அதிக ரூபங்களின் அபரோக்ஷமும், ஸ்வபிம்பத்தின் ஸ்பஷ்டமும் வளர்கிறது. பக்தி வைராக்யாதி குணங்களால் (லட்சணங்களால்) பூர்ணர்கள். (சமஸ்த லக்ஷணை: என்றால் லட்சண சாஸ்திரோக்த 32 லட்சணங்களால்).

**அல்லித்$^{3}$த$^{3}$ வாபிகூப தடாகங்க$^{3}$ளு ம**
**த்தலித்$^{3}$த$^{3}$ மனெ கோ$^{3}$புரக$^{3}$ளாகி$^{3}$**
**ப$^{3}$ல்லித்$^{3}$தா$^{3}$ லகுமி தன்ன நல்லன ஸேவெகெ$^{3}$**
**அல்லி பே$^{3}$காகி$^{3}$ஹளு க$^{3}$ட$^{3}$ ||5**

அல்லித்த - வைகுண்டபுரியில் இருக்கும். வாபிகூப தடாகங்களு - வாபி கூப தடாகங்கள் (நீர்நிலைகள்). மத்தல்லித்த - மற்றும் அங்கிருக்கும். மனெகோபுரகளாகி - வீடு, கோபுரங்களின் ரூபத்தினால். பல்லிதா லகுமி - சர்வஷக்தளான அந்த லட்சுமிதேவி. தன்ன நல்லன ஸேவெகெ - தன் கணவனின் சேவைக்காக. அல்லி - அந்த நகரியில். பேகாகி - மனப்பூர்வகமாக விரும்பியே. (அங்கேயும் பதிசேவை தனக்கு மிகவும் பிடித்தமானது என்பதால்). இஹளு கட - இருக்கிறாள்.

**அர்க்ககோடிக$^{3}$ளந்தெ வைகுண்ட$^{2}$லோக த$^{3}$ஷ**
**தி$^{3}$க்கினொளகெ$^{3}$ பெ$^{3}$ளகு$^{3}$வுது$^{3}$**
**லக்ஷ்மீக$^{3}$ல்லதெ$^{3}$ இந்த$^{2}$ காந்தி மிக்கவரிகெ$^{3}$**
**ப$^{3}$க்கெ நீவெ விசாரிஸிரோ ||6**

அர்க்ககோடிகளந்தெ - கோடி சூரியர்களைப் போல. வைகுண்டலோக - வைகுண்ட லோகம் (அந்த உலகம் முழுவதுமே). தஷதிக்கினொளகெ - 10 திசைகளிலும். பௌகுவுது - ஒளிர்கிறது. லக்ஷ்மீகல்லதெ - லட்சுமிக்கு இல்லாமல். இந்த காந்தி - இப்படியான (அற்புத) ஒளியானது. மிக்கவரிகெ பக்கெ - மற்றவர்களுக்கு (இப்படியான ஒளியானது) வருமா? நீவெ விசாரிஸிரோ - நீங்களே பார்த்துக் கொள்ளுங்கள்.

ந தத்பாஸய தே ஸூர்யோ ந ஷஷாங்கோ ந பாவக: |
யத்கத்வா ந நிர்வதந்தே தத்தாம பரமம் மம || (கீதை)

எந்த உலகத்தை சூர்ய, சந்திர, அக்னிகள் என யாரும் ஒளிர்விப்பதில்லையோ, எந்த உலகத்திற்கு செல்பவர்கள் திரும்பி வருவதில்லை என்று சொல்லப்படுகிறதோ - அது வைகுண்டம்தானே தவிர, வேறு இல்லை. கோடி சூர்ய ஒளி இருந்தாலும், வெப்பம் இல்லாமல் கோடி சந்திர ஒளியைப் போல குளிர்ச்சியாக இருப்பதான உலகம், வைகுண்ட உலகத்தைத் தவிர வேறு எதுவும் இல்லை. காடகோபநிஷத்கூட வைகுண்டத்தை இவ்வாறே வர்ணிக்கிறது.

ந தத்ர ஸூர்யோ பாதி ந சந்த்ரதாரகம் நேமா வித்யுத:

வைகுண்ட உலகத்தை மட்டும் லட்சுமிதேவியின் ஒளி சாட்சாத்தாக தானே ஒளிர்விக்கிறது. 'தமேவ பாந்தமனுபாந்தி ஸர்வம்' ஆகிய பிரமாணங்கள் சொல்வதைப் போல. அக்னி சூர்யாதி அதிஷ்டானங்களின் மூலம் ஒளிர்விப்பது கூட அந்த லட்சுமிதேவியின் ஒளியே. லட்சுமிதேவியின் பிரகாஷன சக்தி ப்ரகாஷ ரூபனான ஸ்வதந்த்ர ஸ்ரீஹரியின் ப்ரகாஷாதீன என்பதை மறக்கக்கூடாது.

**வைகுண்ட2வெம்ப ஹரிய லோக பொ3ம்மன**
**லோகக்கிந்த மேலிஹுது3**
**ஷோகரஹிதராத3 ஸித்த3ஸாத்3யரல்லி**
**பே3காத3 ஸுக2வனுணுதிஹரு ||7**

## 1. மோட்ச ஸந்தி

---

வைகுண்டவெம்ப ஹரிய லோக - வைகுண்ட என்னும் பகவந்தனின் உலகம். பொம்மன லோகதிந்த - சத்யலோகத்தைவிட. மேலிஹது - மேலே இருக்கிறது. ஷோகரஹிதராத - எவ்விதமான சோகமும் இல்லாத. ஸித்தஸாத்யரு - ஸித்தியை பெற்றுள்ள முக்தர் (அல்லது சித்தர்கள், ஸாத்யர் என்னும் பெயருள்ள ஜீவ ஸமுதாயங்கள் / குழுக்கள்). அல்லி - அந்த வைகுண்ட லோகத்தில். பேகாத சுகவன்னு - விரும்பிய விஷயங்களை. உணுதிஹரு - பெறுகின்றனர் / அடைகின்றனர்.

பேகாத ஸுகவனுணுதிஹரு - என்றதால் முக்தர்கள் 'அகாமஹதரு' (காமஹதர் அல்ல). பூர்ணகாமர் என்னும் ஸ்ருதி பிரமேயத்தை சொல்கிறார். முக்தர்கள் தாம் விரும்பும் அனைத்து போகங்களையும் விரும்பிய நொடியில், எவ்வித முயற்சியும் இல்லாமல், பெறுகின்றனர். அயோக்யமான, தமக்கு தகுதியில்லாத, விஷயங்களை முக்தர்கள் என்றும் விரும்புவதில்லை.

யம்யம் ஸுகீ காமயதேsர்த்தமத்ர
ஸங்கல்பமாத்ராத் ஸகலோsபி ஸஸ்யாத் |
இத்யேவ வேதா அபி வேதயந்தி
முக்திம் தத: கோ விபவாதிரேக: || (மத்வவிஜய)

வைகுண்டத்தில் முக்தர்கள் எந்தெந்த போகங்களை விரும்புகின்றரோ, அந்த அனைத்தும், உடனடியாக அவர்கள் நினைத்த நொடியில் (எந்த முயற்சியும் செய்யத் தேவையில்லாமல்) அதனை பெறுகின்றனர். வேதமும் இவ்வாறே சொல்கிறது. வைகுண்டத்தைவிட சிறந்ததான இடம் வேறொன்று இல்லை.

**லக்ஷ யோஜனத$^3$ மேலிக்கு அனந்தாஸன**
**லக்ஷ்மீஷனிஹ ஷ்வேதத்$^3$வீப**
**லக்ஷவைவத்து, வைகுண்ட$^2$ இப்பத்தைது$^3$**
**லக்ஷ ஷோட$^3$ஷ கோடியல்லிஹுது$^3$ ||8**

அனந்தாஸன - அனந்தாஸனம். லக்ஷயோஜன மேலிக்கு - (பூமியைவிட) ஒரு லட்ச யோஜனம் உயரத்தில் இருக்கும். லக்ஷ்மீஷனிஹ - நாராயணன் இருக்கும். ஷ்வேதத்வீப - (பாற்கடலின் நடுவில் இருக்கும்) ஷ்வேதத்வீப. லக்ஷவைவத்து - 1,50,000 யோஜன உயர வைகுண்டம். இப்பத்தைது லக்ஷ ஷோடஷ கோடியல்லிஹது - (பூமியிலிருந்து மேலே) 16,25,00,000 யோஜன தூரத்தில் இருக்கிறது.

த்ரிதாமங்கள் என்று புகழ்பெற்ற வைகுண்ட, ஷ்வேதத்வீப, அனந்தாஸனங்களின் உயரங்களை இவ்வாறு சொல்கிறார்.
ப்ருதிவீஸ்தேஷு ஸர்வோச்சோ லோகோடனந்தாஸனாத்ம க: |
அந்தரிக்ஷாத்ம கேப்யஸ்ச ஷ்வேதத்வீபஸ்திதோ ஹரி: |
த்வாத்ம கேப்யஸ்ச ஸர்வேப்யோ வைகுண்டஸ்சோச்ச உச்யதே ||
(பாகவத தாத்பர்ய)

ப்ருத்வியில் இருக்கும் அனைத்து ஸ்தானங்களைவிட அனந்தாஸனம் உயரமானது. அந்தரிக்ஷ ஸ்தானங்களில் ஷ்வேதத்வீபம் (அங்கிருக்கும் ஸ்ரீஹரி), இந்த இரண்டையும்விட என்றும்; அனைத்து உலகங்களையும்விட உயரமானது வைகுண்டம் என்றும் சொல்கிறது. இந்த ஸ்தானங்களின் உயரங்களை, யோஜன எண்ணிக்கைகளை சொல்லி, தெளிவாக விளக்குகிறது இந்த நுடி.

அனந்தாஸனம் பூமியின் மேல் இருக்கும் உயரமான இடம். வைகுண்டம் பூமி-ஸ்பர்ஷம் இல்லாதது. ஸத்யலோகத்தைவிட மேலே இருக்கிறது. ஆனால், ஷ்வேதத்வீபம் பாற்கடலில் இருக்கிறது என்று, 'தஸ்யாம் ப்ருதிவ்யாம் ஷ்வேதாக்யே த்வீபே முக்த்யைருபாஸித:' என்னும் ப்ருஹதாரண்யக பாஷ்ய வாக்கியம், சொல்கிறது. பாற்கடலானது, ப்ருத்வியிலேயே இருக்கும் ஏழு கடல்களில் ஒன்றாகிறது.

இப்படியிருக்கையில், மேற்சொன்ன பாகவத தாத்பர்ய வாக்கியம், அந்தரிக்ஷ ஸ்தானங்களில் ஷ்வேதத்வீபம் மிகவும் உயரமான இடத்தில் இருக்கிறது என்று எப்படி சொல்லலாம் என்னும் சந்தேகத்தை:

---

கனீபூதக்ஷீரோபரி அவஸ்திதஸ்ய ஷ்வேதத்வீபஸ்ய ஸாக்ஷாத்பூஸ்பர்ஷாபாவாத்
க்ஷீரார்ணவஸ்ய பூம்யபேக்ஷயா அத்யௌன்னத்யாச்ச தத்விவக்ஷயா |
ததா ச ப்ருதிவ்யாம் ஸாந்த்ரக்ஷீரோதகம் ததுபரி ஸம்பத்த ஷ்வேதத்வீப: இதி பரம்பரயா ப்ருதிவீஸ்தத்வம் ச இதி ||
(ஸரஸ பாரதி விலாஸ)

வாக்கியம் பரிகரிக்கிறது. பூமியிலிருந்து ஒரு லட்ச யோஜனையின் மேல் இருக்கும் இடம் அந்தரிக்ஷ என்று அழைக்கப்படுகிறது. ஷ்வேதத்வீப ஒரு லட்ச யோஜனை இருப்பதால், அந்தரிக்ஷத்தில் இருக்கிறது என்று ஆகிறது. பாற்கடலில் மேல் ஒரு லட்ச யோஜனை தூரத்தில் இருக்கும் ஷ்வேதத்வீபத்திற்கு சாட்சாத் பூ (bhu) ஸ்பர்ஷம் இல்லையென்றாலும், பாற்கடல் மூலம் சம்பந்தம் இருக்கிறது. ஆகையால், பாகவத தாத்பர்யத்திற்கும், ப்ருஹதாரண்யக பாஷ்யத்திற்கும் மாற்றுக் கருத்து இல்லை என்று அறிய வேண்டும்.

ஸ்லோக 16

**ஸ வை மஹாபா$^4$க$^3$வத: பரீக்ஷித்$^3$ யேனாபவர்கா$^3$க்$^2$ய மத$^3$ப்$^4$ரபுத்$^3$தி$^4$:**
**ஞானேன வையாஸகிஷப்$^3$தி$^3$தேன பே$^4$ஜே ககே$^3$ந்த்$^3$ரத்$^4$வஜ பாத$^3$மூலம் ||**

வையாஸிகிஷப்திதேன - சுகாசார்யரால் சொல்லப்பட்ட (பாகவத சாஸ்த்ரோபதேசத்தினால் ஆன) யேன ஞானேன - எந்த ஞானத்தினால். அபவர்க்காக்யம் - மோட்ச என்று அழைக்கப்படும். ககேந்த்ரத்வஜ பாதமூலம் - கருடத்வஜனின் (ஸ்ரீஹரியின்) பாதங்களை. பேஜே - அடைந்திருக்கிறானோ, ஸ: அதப்ரபுத்தி: - அந்த மஹாபுத்திசாலியான பரீக்ஷிதனே. மஹாபாகவத: வை - மகாபாகவத பக்தன் அல்லவா?

பத 13 ராகம் : காம்போதி. தாளம் : ரூபக

**ஞானஸாத்4யவாத3 முக்2யமுக்திஸ்தா2ன**
**ஸ்ரீநாத2னிஹ வைகுண்ட2வெந்து3**
**யேனாபவர்கா3க்யவெம்ப3 பா4க3வதோக்தி**
**தானெ நிர்ணயிஸி பேளித1ல ||1**

ஞானஸாத்யவாத – பகவந்தனின் ஞானத்தினாலேயே கிடைக்கக்கூடிய. முக்யமுக்திஸ்தான – பிரதான முக்த உலகத்தின். ஸ்ரீநாதனிஹ – லட்சுமிபதி (நித்யப்ரகடனாக) வசிக்கும். வைகுண்டவெந்து – வைகுண்ட என்பதை. யேனாபவர்க்காக்யவெம்ப பாகவதோக்தி – ‘யேனாபவர்க்காக்யம்’ என்னும் பாகவதத்தின் நுடி சொல்கிறதே.

கருடத்வஜனின் பாதங்கள் கண்டிப்பாக கிடைக்கும் இடங்கள் என்றால், அது வைகுண்டமே. இதையே அபவர்க்க அல்லது மோட்ச என்று பாகவதம் சொல்கிறது.

‘ஞானேனைவ அம்ருதீபவதி’, ‘வித்யயாऽம்ருதமஷ்னுதே’ -- ஆகிய ஸ்ருதிகள் ஞானத்தினாலேயே மோட்சம் என்று சொல்கிறது. ‘ஸ்னேஹோ பக்திரிதி ப்ரோக்த:தயா முக்திர் நசான்யதா’ – ஆகிய பிரமாண வாக்கியங்கள் பக்தியினாலேயே மோட்சம் என்று சொல்கிறது. இந்த இரு தரப்பு வாக்கியங்களிலும் மாற்றுக் கருத்து இல்லை. ‘மஹாத்ம்ய ஞானபூர்வஸ்து ஸுத்ருட: ஸர்வதோऽதிக: ஸ்னேஹோ பக்தி:’ என்றால், ஞானபூர்வகமான ஸ்னேஹமே பக்தி என்று சொல்வதால், ஞானத்தினால் மோட்சம் என்று சொல்லும் வாக்கியங்களில் பக்தியே ஞான என்னும் சொல்லால் அழைக்கப்பட்டிருக்கிறது என்று அறியவேண்டும். ‘ஞானஸ்ய பக்திபாகத்வாத் பக்திர்ஞானமிதீர்யதே’ (அனுவியாக்யான) என்பதில் ஞானம் என்பது பக்தியின் முக்கிய பாகமாக இருப்பதால், பக்தி, ஞானம் என்றே அழைக்கப்படுகிறது என்று நிர்ணயிக்கப்படுகிறது.

முக்ய முக்திஸ்தான – என்றதால் வைகுண்டம் முக்யாதிகாரிகளால் மட்டுமே அடையத்தக்கது என்னும் பிரமேயம் சொல்லப்படுகிறது. பத 12ம் குறிப்புகளை இங்கு பார்க்கலாம்.

**இதே$^3$ அபவர்க்க$^3$வெந்து$^3$ வ்யாஸதே$^3$வ தாளொ**
**லிது பேள்த$^3$ ஹரிபத$^3$வெ மோக்ஷ**
**அத$^4$ம வாதி$^3$க$^3$ளிகே$^3$ இத$^3$கேளி சித்தத$^3$**
**ம$^3$தவளிவுது$^3$ ஏனாஷ்சர்ய ||2**

இதெ அபவர்க்கவெந்து - இதுவே (வைகுண்ட பிராப்தியே) மோட்சம் என்று. வியாஸதேவ - பாகவதத்தை இயற்றிய வேதவியாஸரூபி ஸ்ரீஹரியே. தாளொரெது - தான் நிச்சயித்து. பேள்த - கூறினான். (ஆகையால்). ஹரிபதவெ - ஸ்ரீஹரியின் ஸ்தானமே. மோட்ச - மோட்ச என்பது. அதமவாதிகளிகெ - நீசவாதிகளுக்கு. இத கேளி - இதனைக் கேட்டு. சித்தத - மனதின். மதவளிவுது - (பிரம்ம ஐக்யமே மோட்சம் என்னும்) கெட்ட சிந்தனையைக் கொண்ட மதம் அழியும் என்பதில். ஏனாஸ்சர்ய - வியப்பு என்ன இருக்கிறது?

**நாட$^3$ கோ$^2$டி$^3$க$^3$ள அனுஷாஸனவ நம்பு$^3$வ**
**மூட$^3$ ஸர்வர கு$^3$ருவெனிப**
**ப்ரௌட$^3$ர்கெ$^3$ ஸம்மதவாத$^3$ வியாஸன மத**
**நோடி$^3$ மன்னிஸி மன்னிஸதி$^3$ரெ நக$^3$ரெ ||3**

நாடகோடிகள - உலகத்தில் துரஹங்காரிகள் ஆனவரின். அனுஷாஸனவ - உபதேசங்களை. நம்புவ - (தன் நலனுக்காகவே என்று) நம்பிக்கை கொள்ளும். மூட - ஹே முட்டாளே. ஸர்வர குருவெனிப - ஜகத்குருகள் என்று புகழ்பெற்றவரான வியாஸன - வேதவியாசரின். ப்ரௌடர்க்கெ - ஞானிகளுக்கு (புத்திசாலிகளான அனுபவஸ்தர்களுக்கு) ஸம்மதவாத - ஒப்பும் விஷயமான. மத நோடி - நிர்ணயாத்மக ஸித்தாந்தங்களை சிந்தித்து. மன்னிஸி - மரியாதை செலுத்தி. மன்னிஸதிரெ - அங்கீகரிக்கா விட்டால். நகரெ - (ஞானிகள் உன்னை மூர்க்கன் என்று) கேலி பேச மாட்டார்களா?

'நாடகோடிகள அனுஷாஸனவ நம்புவ' என்பதற்கு, தேசத்தை ஆளும் துரஹங்காரிகளான ராஜர்கள் அல்லது அதிகாரிகளின் ஆணைகளை பின்பற்றுவது நமது நலனுக்காகவே என்று நம்பி

நடக்கும் நீ (லௌகிக விதிகளை பின்பற்றும் நீ). என்னும் அர்த்தத்தை புரிந்து கொள்ளலாம். இந்த ஆணைகளை பின்பற்றும் அஞ்ஞானி, சர்வக்ஞரான ஸ்ரீபாதராயணரின் ஆணைகளைப் பின்பற்றி, இஹபரங்களின் நலன்களை ஏன் பின்பற்றக்கூடாது என்னும் யுக்தியை இந்த நுடியில் அறியலாம்.

**பே$^{4}$ஜே க$^{2}$கே$^{3}$ந்த்ரத்$^{4}$வஜபாத$^{3}$ மூலவெந்து$^{3}$**
**ஆ ஜக$^{3}$த்க்$^{2}$யாத பா$^{4}$க$^{3}$வத**
**ஓஜியிந்த$^{3}$லி பேளிதா$^{1}$கெ$^{3}$ அன்யர மத**
**ராஜிபுதெ$^{3}$ந்து$^{1}$ ஸபெ$^{4}$யொளு ||4**

பேஜே ககேந்த்ரத்வஜாபாதமூல எந்து – 'பேஜே ககேந்த்ர த்வஜபாதமூலம்' என்று, ஆ ஜகத்க்யாத பாகவத – (அனைத்து வேதாந்த சாரம் என்று) உலகில் புகழ்பெற்ற பாகவத புராணம், ஒஜெயிந்தலி – புகழ்பெற்றது என்று விளக்கி. பேளிதாகெ – சொல்வதால். அன்யர மத – (இதற்கு எதிராக சொல்லும்) மற்றவர்களின் அபிப்பிராயம். ஸபெயொளு – வாத சபைகளில். ராஜிபுவெந்து – ஒளிர முடியுமா?

ஸர்வவேதாந்தஸாரம் ஹி ஸ்ரீபாகவதமிஷ்யதே – ஸ்ரீபாகவதம் அனைத்து உபநிஷத்களின் (அல்லது பிரம்மஸூத்ரத்தின்) ஸாரம் என்று, பாகவதத்திலும்,
அர்த்தோऽயம் பிரம்ம ஸூத்ராணாம் பாரதார்த்த வினிர்ணய: |
காயத்ரி பாஷ்யரூபோऽஸௌ வேதார்த்த பரிப்ரம்ஹித: ||

ஸ்ரீபாகவதம் பிரம்மஸூத்ரங்களையே (ஆதாரமாகக் கொண்டு) நிரூபிக்கிறது. பாரதார்த்தத்தை நிர்ணயித்து சொல்கிறது. வேதமாதை என்று பிரசித்தியான காயத்ரி மந்திரத்தின் பாஷ்யத்தைப் போல இருக்கிறது. மற்றும் வேதார்த்தங்கள் நிரம்பியிருக்கிறது. என்று தாத்பர்யத்தில் உதாரணம் கொடுக்கப்பட்டுள்ள இதர பிரமாணங்கள் சொல்கின்றன. ஆகையால் பாகவதம் பரம பிரமாண கிரந்தம் ஆகிறது. இதில் சொல்லப்பட்டிருக்கும் பிரமேயங்களுக்கு எதிரான எந்தவொரு வாதங்களும் எங்கும் இல்லை.

**பேளெலோ வாதி$^{3}$ க$^{2}$கே$^{3}$ந்த்$^{3}$ர த்$^{4}$வஜபாத$^{3}$**
**மூல நின்ன முக்தியொளுண்டெ**
**ஈ லிங்க$^{3}$ ஹரிலோகக்கெ ஸாதா$^{3}$ரணவெந்து$^{3}$**
**பா$^{3}$லகரெல்ல ப$^{3}$ல்லரலை ||5**

வாதி – (பிரம்ம ஐக்யமே மோட்சம் என்று சாதிக்கும்) வாதியே. நின்ன முக்தியொளு – நீ சொல்லும் மோட்சத்தில். ககேந்த்ரத்வஜ பாதமூல – கருடத்வஜனின் பாதமூல என்பது. உண்டே – இருக்கிறதா?. பேளெலோ – சொல் மூர்க்கனே. ஈ லிங்க – இந்த (ஹரிபாதமூல என்னும்) லட்சணம். ஹரிலோகக்கெ – வைகுண்டத்திற்கு. ஸாதாரணவெந்து – (நித்யலோகமாகையால்) எப்போதும் இருக்கிறதென்று. பாலகரெல்ல – (பூர்வ புண்ணியத்தினால் பரதகண்டத்தில் பிறந்த மக்கள் அனைவரும்) சாஸ்திர அப்யாஸம் இல்லாத அஞ்ஞானிகள்கூட (அனைவரும்). பல்லரலை – (சம்ஸ்காரத்தினாலேயே) அறிகின்றனர். (இப்படியிருக்கையில், வைகுண்ட ப்ராப்தியும் மோட்சம் இல்லை என்று வாதிக்கும் நீ அதிகமான அஞ்ஞானி – மூர்க்கனே ஆகிறாய்).

**அல்லி கிருஷ்ணன பாத$^{3}$ஸேவெயே கைவல்ய**
**வல்லதெ$^{3}$ அவலைக்ய ஸல்ல**
**எல்லரு ப$^{3}$ல்லரு ஹரிய பே$^{4}$த$^{3}$**
**வல்லதெ$^{3}$ இல்லவெம்பு$^{3}$த$^{3}$னு ||6**

அல்லி – அந்த வைகுண்டத்தில். கிருஷ்ணன பாதஸேவெயே – ஸ்ரீகிருஷ்ணனின் பாத ஸேவையினாலேயே. கைவல்ய – மோட்சானந்தம். அல்லதெ – இது இல்லாமல். அவனைக்ய – ஸ்ரீகிருஷ்ணனுடன் ஐக்யம் அடைகிறேன் என்பது. ஸல்ல – கூடுவதில்லை. ஹரிய பேதவல்லதெ இல்லவெம்புதனு – ஸ்ரீஹரியினால் பேதமில்லாமல் இல்லை (பேதம் இருக்கிறது), பேதமே சரி. ஐக்யம் இல்லை என்பது. எல்லரு பல்லரு – அனைவரும் அறிகின்றனர் (ஆனால் நீ மட்டும், அனைவரின் அனுபவத்திற்கு எதிரான ஐக்யத்தை சாதிப்பதற்கு வாதிக்கிறாய்).

வைகுண்டத்தில் ஸ்ரீகிருஷ்ணனின் பாதஸேவையே ஆனந்தம் - அதற்கு வேறு பலன் இல்லை. அங்கு முக்தர்கள் செய்யும், அத்யயனம், தியானம், அர்ச்சனை, கீர்த்தனை, நர்த்தனங்கள், என அனைத்துமே ஆனந்தரூப க்ரியைகளே ஆகும்.

ஹரேருபாஸனா சாத்ர ஸதெய்வ சுகரூபிணே |
ந து ஸாதனரூபா ஸா ஸித்திரேவாத்ர ஸா யத: || (பாஷ்ய)

என்றும், 'பக்திஸ்ச ஸுகரூபைவ முக்தானாம் ந து ஸாதனம்' (நியாய விவரண) என்றும், சொல்லப்பட்டிருக்கிறது. இவற்றின் அர்த்தம் என்னவெனில்: அத்ர - முக்த ஸ்தானங்களில். ஹரே: ஸ்ரீஹரி. உபாஸனா - அர்ச்சனாதி ரூபத்தின் சேவை. ஸதெய்வ - அனைத்து காலங்களில். ஸுகரூபிணே - சுகரூபமாகவே. ஸா - அந்த உபாஸனை. ஸாதனரூபா ந து - (அன்ய பலன்களைக் கொடுக்கும்) ஸாதனரூபமானது இல்லவே இல்லை. யத: - எந்த காரணத்தினால். அத்ர - அங்கு. ஸித்திரேவ - ஸித்தியே (பலனாக) இருக்கிறதோ (ஆகையால் ஸாதனை அல்ல). முக்தானாம் - முக்தர்கள் செய்யும். பக்திஸ்ச - ஹரிபக்தியும்கூட. ஸுகரூபைவ - சுகரூபமானதே. ஸாதனம் ந து - ஸாதனை இல்லவே இல்லை (பக்தியினால் கிடைக்கும் வேறு பலன் இல்லை).

**க2கே3ந்தி3ர நாமவே அத்3வைத தரதமபா4வ**
**ப3கெ3யருபிது பாத3பது3ம**
**ப4க3வந்தன ஸாகாரனெந்து3 பேளிது வியாஸோ**
**க்திகெ3 காமதே4னோக்தி ப்ரதியே ||7**

ககேந்த்ரனாமவே - 'ககேந்த்ர' என்னும் சொல்லே ('பேஜே ககேந்த்ரத்வஜ பாதமூலம்' என்பதில் இருக்கும் ககேந்த்ர ஷப்தமே). அத்வைத தரதம பாவபகெய - அத்வைத (ஜீவ பிரம்ம ஐக்யமான) மற்றும் தாரதம்ய மதங்களின் பிரகாரத்தை (அவற்றில் எது சரி என்னும் நிர்ணயத்தை). அருபிது - சொன்னது. பாதபதம - 'பாத' என்னும் (பாதபத்ம) சொல், பகவந்தன - ஸ்ரீஹரியை. ஸாகாரனெந்து - (கர சரணாதி அவயவங்கள் உள்ள) திவ்ய ரூபம் உள்ளவன் என்று, ஹேளிது - கூறியது. வ்யாஸோக்திகெ -

## 1. மோட்ச ஸந்தி

-----------------------------------------------------------------------------------------------

ஸ்ரீவேதவியாசரின் நுடிக்கு. காமதேனோக்தி – பசுவின் வாக்கு. ப்ரதியே – விரோதியா? (எதிரில் நிற்கமுடியுமா?).

ககேந்த்ரத்வஜ பாதமூலம் -- என்னும் பகவத் வசனம், தாரதம்யத்துடனான ஜீவ பிரம்மரின் பேத ஞானமே மோட்ச சாதகமான, யதார்த்த ஞானம் என்று நிர்ணயிக்கிறது என்கிறார். ககேந்திர என்றால், பக்ஷிராஜனான கருடன். அவனை வாகனமாகக் கொண்டவன் ஸ்ரீஹரி. கருடனே த்வஜமாக உள்ளவன் என்றால், சின்னம் மற்றும் குறியீடாக வைத்திருக்கிறான் என்று அர்த்தம். கருடனின் வருகை, ஸ்ரீஹரியின் வருகையைக் குறிக்கிறது. தேகம் என்னும் மரத்தினை அடைந்திருப்பவன் 'கக' என்னும் ஜீவன். 'ககேந்திர' என்னும் சொல், ஜீவர்களில் தாரதம்ய உண்டு என்பதை சொல்கிறது. இந்திரன் என்றால், ஸ்ரேஷ்டன் – உத்தமன். இவன் உத்தமன் என்பதற்கு, பிறரும் இருக்க வேண்டும் அல்லவா? இருப்பவன் ஒருவனே ஆனால், அவனை உத்தமன் என்று சொல்ல முடியாது. இருவர் இருந்தால்கூட முடியாது. பலர் இருக்க வேண்டும். தர-தமங்களில் 'தம' என்பது அப்போதே பயன்படுத்த முடியும். ஆகையால், தாரதம்யபாவ சகிதமான அனேக ஜீவர்கள் இருக்கிறார்கள் என்று அறிய முடிகிறது. இத்தகைய ககேந்திரனை வாகனமாக பயன்படுத்தி உலா வருபவன், அவனைவிட உத்தமன் இல்லையா? (உத்தமனே).

ககேந்திரன் என்றால், ஜீவோத்தமனான வாயுதேவன் என்றும் சொல்லலாம். ஸ்ரீஹரிக்கு அவனே முக்ய வாகனன் – கருடனைவிட அதிக வேகம் மற்றும் சாமர்த்தியம் உள்ளவன். இவ்வாறு தாரதம்ய சகிதமான சர்வோத்தமத்வத்தை ஸ்ரீஹரிக்கு சொல்கிறது 'ககேந்திர த்வஜபாத' என்னும் சொல். பாத என்னும் சொல், உத்தமரின் ஸ்வரூப வாசகமாக இருப்பதைப் போல, கமன ஸாதனமான கால்கள் என்னும் அவயவத்தினை சொல்கிறது. பாதம் உள்ளவன் என்றால் கர, சிர, தோள்கள் முதலான அவயவங்களையும் கொண்ட உருவம் உள்ளவன் என்று அறிய வேண்டும். அபேத வாதிகள் சொல்வதைப் போல, நிராகாரன் அல்ல என்றும் பாகவதத்தின் இதே பதம் நிரூபிக்கிறது.

ஜீவ ஜீவ பேத, ஜீவ ஜட பேத, ஜட ஜட பேதங்கள், அஞ்ஞானிகளுக்கும்கூட அனுபவத்திலிருந்து புரிகிறது. தவறான ஞானத்தைக் கொண்டவர்களுக்கு, இந்த ஜீவ ஜடாத்மக பிரபஞ்சத்தின் ஸ்ருஷ்ட்யாதி காரியங்கள், அற்புத சக்தி உள்ள ஒரு ஸ்வதந்த்ர ஸர்வக்ஞனாலேயே ஸாத்தியம் என்று புரிவதில்லை. ஸர்வக்ஞனான இந்த ஈஷ்வரனின் இருப்பு மற்றும் மகிமைகளின் யதார்த்த ஞானம், வேதாதி ஆகமங்களைத் தவிர வேறான பிரமாணங்களாலும் புரிவதில்லை. மற்றும் அனைவரும் விரும்பக்கூடிய நித்ய நிர்துக்க ஆனந்த நிலையை (மோட்சத்தை) அடையும் சாதனைகள் எது என்றும்கூட அவர்களுக்கு புரிவதில்லை.

ஆகமங்கள், மாயாவாத தத்வ என்னும் ஜீவ பிரம்ம ஐக்யத்தை புறக்கணித்து, பேதத்தையே சொல்கிறது. ஆகமங்களில் 'ஐக்ய' என்னும் சொல்லின் பிரயோகம் அங்கங்கு தெரிய வருகிறது. ஆனால், அது, ஜீவ பிரம்மரின் ஐக்யத்தை (அவர்கள் அபின்னர் என்னும் பாவத்தை) சொல்வதில்லை. ஸ்ருதிவாக்கியங்களே 'ஐக்ய' சொல்லின் தாத்பர்யத்தை விவரிக்கிறது. பரமஸ்ருதியின் ஒரு வாக்கியத்தை இதற்கு உதாரணமாகப் பார்க்கலாம்.

ஜீவஸ்ய பரமைக்யம் து புத்திஸாரூப்யமேவ து
ஏகஸ்தான நிவாஸோ வா வ்யக்திஸ்தானமபேக்ஷ்ய ஸ: |
ந ஸ்வரூபைகதா தஸ்ய முக்தாஸ்யாபி விரூபத:
ஸ்வாதந்த்ர்ய பூர்ணதே஽ல்பத்வ பாரதந்த்ரே விருபிதே ||

ஜீவஸ்ய - முக்தஜீவர்களுக்கு. பரமைக்யம் து - பரமாத்மனால் ஐக்யம் என்றாலும். புத்திஸாரூப்யமேவ து - பரமாத்மனின் இச்சானுரூப இச்சை உள்ளவன் என்பதாகவே ஆகிறது. வா - மற்றும். ஏகஸ்தான நிவாஸ: - ஒரேயிடத்தில் வசிப்பது (ஸ்தானைக்ய). [ஜீவபரமாத்மரில் ஸ்தானைக்யம் எப்போதும் எல்லா இடங்களிலும் இருக்கிறது. அவர் நித்யஸுகர். அவர்களில் வியோக என்பது இல்லவேயில்லை, என்றால்] ஸ: - ஐக்யபாவம். வ்யக்தி ஸ்தானமபேக்ஷ்ய - நித்யவ்யக்தமாக இருக்கும் ஸ்தானத்தின் (முக்ததாமத்தின்) சிறப்பாக வருகிறது. (ஜீவர்களுடன் எப்போதும் இருக்கும் ஈஷ்வரன், ஜீவனுக்கு

நித்யவ்யக்தன் அல்ல). தஸ்ய - ஜீவனுக்கு. முக்தஸ்தாபி - முக்தனுக்கும்கூட. ந ஸ்வரூபைகதா - ஸ்வரூபத்தினால் ஐக்யமல்ல (இருவரின் ஸ்வரூபங்களும் ஒன்றே அல்ல). (ஏனெனில்). விரூபத: எதிர்மறை ஸ்வரூப தர்மங்கள் உள்ளவர்கள் ஆகையால். (அவை என்னவெனில்). ஸ்வாதந்த்ர்யபூர்ணதே - ஸ்வாதந்த்ர்ய மற்றும் பூர்ணத்வங்கள் (ஸ்ரீஹரியின் ஸ்வரூப தர்மங்கள்). அல்பத்வ பாரதந்த்ரே - அல்பத்வ மற்றும் பாரதந்த்ரங்கள். விரூபிதே - எதிர்மறை தர்மங்களாக இருக்கின்றன.

காமதேனோக்தி - என்று சொன்னதில் காமதேனு ஷப்தம், ஒரு நகைச்சுவையாக (கேலியாக) இங்கு பயன்படுத்தப்பட்டுள்ளது. காமதேனு, பசு ரூபம் கொண்டது. காமதேனுவிற்கு மோட்சம் கொடுக்கும் சாமர்த்தியம் இல்லை. அதைப் போல, நித்யஸுகரூபத்தின் மோட்சத்திற்கு சிறிதும் சாதனம் ஆகாத, அதற்கு பதிலாக, துக்கமயமான தமஸ்ஸிற்கே காரணமாகும், ஜீவ பிரம்ம ஐக்ய - பரமாத்மனுக்கு நிர்குணத்வ நிராகாரத்வாதிகளை சொல்லும் மாயாவாதியின் உபதேசமானது, பசுவிற்கு சமானமான மூர்க்கனின் பேச்சினைப் போலவே ஆகிறது - என்று பொருள்.

ஸ்லோக 17

**ந வர்த்ததே யத்ர ரஜஸ்தமஸ்தயோ**
**ஸ்ஸத்வம் ச மிஸ்ரம் ந ச காலவிக்ரம: |**
**ந யத்ர மாயா கிமுதா[1]பரே ஹரே**
**ரனுவ்ரதா யத்ர சுராசுரார்ச்சிதா: ||**

யத்ர - எந்த முக்த உலகங்களில். ரஜ: - ரஜோ குணம். தம: - தமோ குணம். தமோ: மிஸ்ரம் ஸத்வம் ச - அவற்றின் கலவையான ஸத்வகுணம் (சுத்த ஸத்வத்தின் இருப்பிற்கு விரோதம் இல்லையென்றும் குறிக்கிறது). ந வர்த்ததே - இருப்பதில்லையோ. ந ச காலவிக்ரம: - காலத்தின் சாமர்த்தியம் இல்லையோ. யத்ர மாயா ந - எங்கு த்ரிகுணாத்மக ப்ரக்ருதியே இல்லையோ. (ஏதோவொரு குணம் இல்லையென்றாலும், த்ரிகுணாத்மகமானது இருக்கலாம் என்னும் சந்தேகத்திற்கும் இடம்

இல்லை). கிமுத அபரே - ப்ரக்ருதி விகாரங்கள் இல்லை என்பது. ஸுதராம் ஸித்தவோ - (விகாரங்கள் இல்லை என்று சொல்லவும் வேண்டுமா?). யத்ர - எங்கு. ஸுராஸுரார்ச்சிதா: - தேவதைகள் (சுரர்கள்) மற்றும் தத்வாபிமானி தேவதைகள் (அசுரர்கள்) தங்களின் யோக்யதைக்கேற்ப வணங்கப்படுவரோ, ஹரேரனுவ்ரதா: - (இந்த அனைவரும்). ஸ்ரீஹரியின் ஸேவகராகி இருக்கிறார்களோ. (இத்தகைய முக்த உலகத்தை ஸ்ரீஹரி சதுர்முகனுக்கு அருளி, தரிசனம் செய்வித்தான்). அத்தகைய முக்த உலகத்தை பாகவத 2ம் ஸ்கந்தம் இவ்வாறு வர்ணிக்கிறது.

பத 14 ராகம் : நாதநாமக்ரிய. தாளம்: ரூபக

**முக்தியொளிஹ பே$^{4}$த$^{3}$ ஸத்யவெம்பு$^{3}$து$^{3}$ ஸித்$^{3}$த$^{4}$**
**மத்த ன யத்ர மாயா எம்ப$^{3}$**
**யத்ர பா$^{4}$க$^{3}$வதோக்தி முக்தர பே$^{4}$த$^{3}$வ**
**ஸத்யவனெ ஸ்தா$^{2}$பிஸித$^{3}$லா ||1**

**ஹரேரனுவ்ரதா யத்ர எந்து$^{3}$ ஸ்ம்ருதி**
**நிரூபிஸிது$^{1}$ ஹரிய பே$^{4}$த$^{3}$**
**பரமார்த்தஸத்ய நினகு$^{3}$ வாதி$^{3}$ ஆ மாயெ**
**இரதெ$^{3}$ கல்பிதவஹுதே$^{3}$ ||2**

**ஈஷன்மாயெ இரெ யத்ர மாயா நேதி**
**வியாஸன ஸாமான்ய நிஷே$^{2}$த$^{4}$**
**புஸி கொடு$^{3}$வுது$^{3}$ புட்டொந்து$^{3}$ க$^{4}$டவிரலு**
**நாஸ்த்யத்ர க$^{4}$டவெந்து$^{3}$ நுடி$^{3}$வுதே$^{3}$ ||3**

**நின்னிச்செகெ$^{3}$ பே$^{3}$காத$^{3}$ர்த்த$^{2}$வ பேள்வுதெ$^{3}$ ஷப்$^{3}$த$^{3}$**
**தன்ன ஷக்யவாத$^{3}$ர்த்த$^{2}$வனெ**
**என்ன ப$^{3}$ஹுதெ$^{3}$ய்ஸெ து$^{1}$ஹின பத$^{3}$ வன்ஹிய**
**வன்ஹித்ரயகூடி$^{3}$ நுடி$^{3}$வுதெ$^{3}$ ||4**

முக்தியொளகிஹ - முக்தியில் இருக்கும். பேத - பேதம். ஸத்யவெம்புது - ஸத்யம் என்று சொல்வது. ஸித்த - சாஸ்திரத்தின்படியே ஆகும். மத்த - ஹே உன்மத்தவாதியே. 'ந யத்ர மாயா' எம்ப - 'ந யத்ர மாயா' என்பது, 'யத்ர' பாகவதோக்தி - 'யத்ர ஸுராஸுரார்ச்சிதா:' என்னும் பாகவத வாக்கியம். முக்தர

1. மோட்ச ஸந்தி

---------------------------------------------------------------------------------------------

பேதவ – முக்தர்கள் பரஸ்பரம் மற்றும் ஸ்ரீஹரியிடமிருந்து பின்னர்கள் (வேறுபாடு உள்ளவர்கள்) என்பதை சொல்லி. ஸத்யவனெ – (சாஸ்திரத்தின்படி) ஸத்யத்தையே. ஸ்தாபிஸிதலா – நிறுவியது, பார். ||1||

ஹரேரனுவ்ரதா யத்ர எந்து ஸ்ருதி – 'ஹரேரனுவ்ரதா:' ஹரியின் சேவகர்கள் எந்த வைகுண்டத்தில் இருக்கிறார்களோ என்று பாகவதம் கூறி, ஹரிய பேத – (முக்தரால்) ஹரியின் பேதத்தை. பரமார்த்தஸத்ய – மோட்சத்தில்கூட சத்ய என்று (பரம சத்ய என்று). நிரூபிஸிது – நிரூபித்தது (நிறுவியது). வாதி – ஹே மாயாவாதியே. நினகு – உன் மதம் சொல்வதைப் போல. அந்த மாயெ – நீ கூறும் மாயை. இரதெ – உனக்கு இருக்கிறது அல்லவா?. கல்பிதவஹுதெ – மித்யை ஆகுமா? அல்லது, அந்த மாயெ – 'அல்லி மாயெயில்ல' என்று பாகவதம் கூறிய மாயை. கல்பிதவஹுதே – உண்மைக்கு புறம்பான கற்பனை என்று சொல்ல முடியுமா? ||2||

[வைகுண்ட என்பது ஸகுணமுக்தி. நிர்குணமுக்தி என்னும் பிரம்ம ஐக்யம் அல்ல. ஸகுண முக்தியில் மாயை சிறிது இருக்கிறது. சம்சார நிலையில் இருக்கும் அளவிற்கு பந்தகம் அல்ல, என்று கூறினாய் என்றால்], ஈஷன்மாயெயிதெ – சிறிது மாயை இருந்தால், யத்ர மாயா நேதி – எங்கு மாயை இல்லையோ என்னும், வியாஸன – ஸ்ரீவியாசரின் (பாகவத கர்த்ருவின்). ஸாமான்ய நிஷேத – மாயையே இல்லை என்னும் (சாமான்ய) நிஷேத வாக்கியம். புஸிகொடுவுது – பொய் என்று ஆகிறது. புட்டொந்து – சிறியதான ஒரு. கடவிரலு – பானை இருக்க. நாஸ்த்யத்ர கடவெந்து – இங்கு பானை இல்லை என்று. நுடிவுதே – சொல்ல முடியுமா? ||3

ஷப்த – சொல். நின்னிச்செகெ – உன் மனதிற்கு. பேகாதர்த்தவ – தெரியும் அர்த்தத்தை. பேள்வதெ – சொல்லலாமா? (இல்லை). தன்ன ஷக்யவாதர்த்தவனெ – தன் முக்கிய வ்ருத்தியின் அர்த்தத்தையே. என்னபஹுது – சொல்கிறது எனலாம். ஐஸெ – இவ்வாறு சொல்வதே சரி. (முக்கிய வ்ருத்தியை விட்டு. சொல்

எந்த அர்த்தத்தையாவது சொல்லலாம் என்பது). துஹினபத - 'துஹின' என்னும் சொல். வன்ஹிய - அக்னியை. வன்ஹித்ரயகூடி - அக்னி, அக்னி, அக்னி என்று மூன்று முறை கூறினாலும். அது துஹின என்று சொல்வதாக ஆகுமா? எப்போதும் சாத்தியம் இல்லை ||4

2ம் நுடியில் 'ஸ்ம்ருதி நிருபிஸிது' என்று கூறியதில், ஸ்ம்ருதி என்றால் அது ஸ்ரீமத் பாகவதம். ஸ்ம்ருதி கிரந்தங்களும், வேதார்த்தங்களையே விளக்குவதால், அவையும் பிரமாணங்களே. ஆகமங்கள் அபௌருஷேய மற்றும் பௌருஷேய என்று வேறுபட்டிருப்பதால், இரு விதங்களாக இருக்கின்றன. ஸ்ருதிகள் அபௌருஷேய - யாரொருவராலும் இயற்றப்பட்டதல்ல மற்றும் அனாதி நித்யம் ஆகும். புராண, இதிஹாஸ, தர்ம சாஸ்திராதி வேதானுசாரி கிரந்தங்கள் புருஷ க்ருதமானவை மற்றும் அநித்ய. ஆனாலும் அவையும் பிரமாணங்களே. ஸ்ரீமத் பாகவதம், ஸ்ருதி. நாராயண அவதாரரான ஸ்ரீவேதவியாசரால் இயற்றப்பட்டது.

ஸ்ருதிர்வா வ நித்யா அனித்யா வா வ ஸ்ம்ருதயோ
யாஸ்சான்யா வாச: (பைங்கி ஸ்ருதி)

ஸ்ருதிகளே நித்யமானவை. ஸ்ம்ருதிகள் மற்றும் மற்ற அனைத்து வாக்கியங்களும் அநித்யமானவை -- என்று ஸ்ருதியே சொல்கிறது.

நித்யா வேதா: ஸமஸ்தாஸ்ச ஷாஷ்வதா விஷ்ணுபுத்திகா:
ஸர்கே ஸர்கேsமுனைவைத உத்கீர்யந்தே ததைவ ச |
புராணானி ததர்த்தானி ஸர்கே ஸர்கேsன்யதைவ து
க்ரியந்தேsதஸ்வ நித்யானி ததர்த்தா: பூர்வஸர்க்கவத் ||

புராணானாமஸ்யதாஷப்த ரசனமேவா நித்யத்வம் (விஷ்ணு தத்வ நிர்ணய) என்னும் வாக்கியத்தினால் மேற்கண்ட ஸ்ருத்யர்த்தம் விவரிக்கப்பட்டுள்ளது.

அனைத்து வேதங்களும் நித்ய. ஒரு விதத்தில் விஷ்ணு கூறியதாகவே இருக்கிறது. ஒவ்வொரு ஸ்ருஷ்டி காலத்திலும் அவனிடமிருந்தே உச்சரிக்கப்பட்டு வெளிப்படுகிறது.

## 1. மோட்ச ஸந்தி

-----------------------------------------------------------------------------------------------

வேதார்த்தங்களையே சொல்லும் புராணாதிகள் முந்தைய கல்பங்களைப் போலவே இருக்கின்றன. ஆனால், ஒரே மாதிரியான அர்த்தங்களைக் கொண்டு, சொற்களால் வேறுபட்டதாக தெரிகிறது. அதனாலேயே அவை அநித்ய எனப்படுகின்றன.

பொதுவான அர்த்தம் என்றால், சொல்லின் முக்கிய செயலால் தெரியவரும் (சொல்லப்படும்) அர்த்தம். அந்த சொல்லினை பயன்படுத்தும் விதங்கள் (இலக்கணங்கள்) வெவ்வேறாக இருக்கின்றன. பரமமுக்கிய வ்ருத்தி, முக்கிய வ்ருத்தி, அமுக்ய வ்ருத்தி ஆகியவை சொல்லை விளக்கும் முக்கிய வகைகள். பரம முக்ய வ்ருத்தியினால், அனைத்து சொற்களும், விஷ்ணுவைக் குறிப்பவையே (விஷ்ணு என்னும் அர்த்தம் உள்ளவை). முக்ய ப்ரவ்ருத்தி என்பது, ரூடி, யோக, யோகரூடி என்று மூன்று வகையானவை. அமுக்ய வ்ருத்தி, லக்ஷ்ணா, கௌணீ உபசார, ரூடி உபசார, ரூட லக்ஷணா என பல வகைகளைக் கொண்டதாகும்.

இப்போது முக்ய வ்ருத்தியை மட்டும் பார்ப்போம். பேச்சுவார்த்தையில் பயன்படுத்துவதை ரூடி என்கிறோம். பசு, பானை ஆகிய சொற்கள், அந்தந்த பொருட்களை குறிப்பிடுகின்றன. சொல் தன் அவயவங்களாலேயே பொருளை சுட்டிக் காட்டுவது – யோக. உதாரணம்: வாசக (படிப்பவர்). யோகரூடி என்பது பங்கஜ என்னும் சொல்லைப் போல. பங்கே – சேற்றில். ஜ – பிறந்தது (இது சொல்லின் அவயவார்த்த – யோக). ஆனால், நீரில் பிறந்த மேலும் பல வஸ்துகள் இருந்தாலும், பங்கஜ என்றால், அது தாமரையையே குறிப்பிடுகிறது. ஆகையால், இது 'யோகரூடி' என்று அழைக்கப்படுகிறது.

இவ்வாறு மூன்று விதமாக இருக்கும் முக்கிய வ்ருத்தி 'ஷக்தி' என்றும் அழைக்கப்படுகிறது. ஷக்தியினால் தெரிய வரும் அர்த்தத்தையே 'ஷக்த்யார்த்த' என்று அழைக்கிறோம். பிரபல காரணங்களைத் தவிர, முக்யவ்ருத்தி அல்லது ஷக்த்யார்த்தத்தை புறக்கணிக்க முடியாது என்று அனைத்து வாதிகளும் அங்கீகரித்திருக்கின்றனர்.

மாயா என்னும் சொல், பற்பல அர்த்தங்களைக் கொண்டது.

மஹாமாயேத்யவித்யேதி நியதிர் மோஹினீதி ச |
ப்ரக்ருதிர் வாஸனேத்யேவ தவேச்சாடனந்த கத்யதே || (ஸ்காந்த)

என்று, மஹாமாயா, அவித்யா, நியதி, மோஹினி, ப்ரக்ருதி, வாஸனா, என்னும் சொற்கள் பகவத் இச்சையையே சொல்கிறது என்று சொல்லப்பட்டிருக்கிறது.

அதாவது, மாயா, அவித்யா, ப்ரக்ருதி, வாஸனா ஆகிய சொற்கள் ஒரே அர்த்தத்தை தருகின்றன என்று தெரிய வருகிறது. 'மாயா' சொல்லினால் தெரியப்படும் எந்த வஸ்துவும் வைகுண்டத்தில் இல்லை. முக்த ஜீவர்களுக்கு பகவத் இச்சையும் பந்தகம் இல்லை. அவர்களின் இச்சைகள் அனைத்தும் எப்போதும் பகவத் இச்சைக்கேற்பவே இருப்பதால்.

** 2ம் நுடியில், 'ஹரிய பேத பரமார்த்த ஸத்ய' என்று இருக்கிறது. மாயாவாதம் சொல்வதைப் போல, சத்ய என்பது மூன்று விதங்கள் ஆகும். கயிற்றில் தவறாகக் காணப்படும் பாம்பு என்பது, ப்ராதிபாஸிகஸத்ய; அதாவது, தற்காலத்தில் தோன்றி, பிறகு இல்லை என்னும் ஞானம் வருவது. மேலும், ஜீவபிரம்ம ஐக்ய ஞானம் ஆகும்வரை தோன்றியிருந்து, பற்பல செயல்களுக்கு சந்தர்ப்பம் கொடுக்கும் ப்ரபஞ்சத்தை, வியாவஹாரிக ஸத்ய என்று சொல்வர்.

முக்காலங்களில் ஒரே மாதிரியாக ஞானம் இருக்கும் வஸ்து மட்டும் பாரமார்த்திக ஸத்ய ஆகிறது. வைகுண்டம், த்ரிகாலங்களில் ஒரே மாதிரியாக இருக்கும் நித்ய லோகம். ஜீவோத்தமரான (ஞானி ஸ்ரேஷ்டரான) அமுக்த பிரம்ம வாயுகள், ஸ்ருஷ்டி காலத்தில்கூட பகவத் அருளால் முக்த லோகத்தை கண்டிருக்கிறார்கள். பிரளயத்திற்கு பிறகும், அடுத்து அனைத்து காலத்திலும் இருப்பதாக, அனாதி காலத்திலிருந்து அங்கிருக்கும் முக்த ஜீவர்கள் பார்த்தவாறே இருக்கிறார்கள்.

---

வைகுண்டம் பரமார்த்த ஸத்யத்வ உள்ளதாக இருக்கிறது என்றும், அங்கு மாயை என்பது இல்லை என்றும், ஜீவர்கள் பரஸ்பரம் மற்றும் ஸ்ரீஹரியிடமிருந்து பின்னரே ஆகியிருக்கின்றனர் என்றும், பாகவத ஸ்ம்ருதி சொல்வதால், பேதத்தை பரமார்த்த ஸத்ய என்று ஒப்புக்கொண்டே ஆகவேண்டும் என்னும் யுக்தியை விவரிக்கின்றனர் என்று அறிய வேண்டும்.

ஸ்லோக 18

**தன்மத்4யே நக3ரீ தி3வ்யா ஸாऽயோத்4யேதி ப்ரகீர்த்திதா |**
**ஆரூட3யௌவனைர் நித்யா தி3வ்யநாரீ நரைர்யுதா ||**

தன்மத்யே - வைகுண்ட லோகத்தின் நடுவில். திவ்யா நகரி - திவ்ய நகரி இருக்கிறது (ஸ்ரீஹரியின் இருப்பிடம் இருக்கிறது). ஸா - அந்த நகரி. அயோத்யா இதி ப்ரகீர்த்திதா - அயோத்யை என்னும் புகழ்பெற்ற பெயர் கொண்டது. நித்யா (அது) அனைத்து காலத்திலும் இருக்கக்கூடியது. ஆரூடயௌவனை: - நித்ய தாருண்ய உள்ள. திவ்யநாரீநரை: - முக்த ஸ்த்ரி புருஷர்களால். யுதா - கூடியிருக்கிறது.

பத 15 ராகம் : வசந்தபைரவி. தாளம் : ரூபக

**ரன்ன கெத்திஸித3 சின்னதொளு கோடி**
**மன்மத2னய்யன புரிகெ**
**தன்மத்4யத3லி அயோத்4யவெம்ப3 நக3ரி ஸு**
**வர்ண கோ3புருதொலொப்பிஹவு ||1**

**ஸிரிதே3வி தானெ முரஹரன பட்டணதொ3ளு**
**பரிபரிய மனெய ரூபத3ல்லி**
**மிரிமிரனெ மிஞ்சுவளு ஹச்சப்ரக்ருதியிந்த3**
**விரசித க்3ருஹக3ளொப்பிஹவு ||2**

மன்மதனய்யன புரிகெ - ஸ்ரீஹரியின் தலைநகருக்கு. ரன்ன கித்திஸித - ரத்ன கசிதமான. சின்னதொளு - தங்கமயமான. கோடி - கோடி இருக்கிறது. தன்மத்யதலி - (அந்த விஷாலமான தலைநகரின்) அந்த புரியின் நடுவில். அயோத்யவெம்ப - அயோத்யை என்று அழைக்கப்படும். நகரி - நகரி இருக்கிறது.

(ராஜக்ருஹகளிருவ - அரண்மனைகள் இருக்கும் அந்த நகரி). ஸுவர்ண கோபுரதலி - தங்கமயமான கோபுரங்களால். ஒப்பிஹவு - (அரண்மனைகள்) ஒளிர்கின்றன.

முரஹரன - ஸ்ரீஹரியின். பட்டணதொளு - நகரில். ஷிரிதேவி - ஸ்ரீமகாலட்சுமியே. தானெ - ஸ்வயம் (சாட்சாத்தாக). பரிபரிய - பற்பல விதமான. மனெய ரூபதல்லி - வீடுகளின் (அரண்மனைகளின்) ரூபத்தினால். மிரிமிரனெ - பளபளவென்று. மிஞ்சுவளு - ஒளிர்கிறாள். ஹச்சப்ரக்ருதியிந்த - தன் சுத்த ஸ்வரூபத்தினால். விரசித - அவளே நிர்மாணித்த. க்ருஹகளொப்பிஹவு - அழகான வீடுகள் இருக்கின்றன. அல்லது, (வைகுண்ட லோகத்தில்). ஹச்சப்ரக்ருதியிந்த - சுத்த ஸத்வத்தினால். விரசித - நிர்மாணிக்கப்பட்ட. க்ரஹகளொப்பிஹவு - (முக்தர்களின்) க்ருஹங்கள் ஒளிர்கின்றன.

** புரி - விஷாலமான தலைநகர். நகர - அனேக அரண்மனைகள் இருக்கும் புரியின் நடுப்பாகம். பட்டண, நகர ஆகிய சொற்கள் ஒரே அர்த்தத்தைக் கொடுப்பதாக பயன்படுத்தப்பட்டிருக்கின்றன.

* மன்மதனய்ய - மன்மதனை புத்திரனாக அடைந்தவன். முரஹர - முர நாமக தைத்யனை கொன்றவன். இந்த சொற்களால் அழைக்கப்பட்டவன் ஸ்ரீகிருஷ்ணன். வைகுண்டாதிபதி, ஸ்ரீகிருஷ்ணனிடமிருந்து மிகவும் வேறுபடாதவன் என்று குறிப்பிடுகிறது என்று அறிய வேண்டும். 'கிருஷ்ணோ இஜ்யதே வீதமோஹை:' - முக்தரால் ஸ்ரீகிருஷ்ணனே பூஜிக்கப்படுகிறான் என்று சொல்லப்படுகிறது.

* வைகுண்டபுரியின் நடுவில் இருக்கும். அனேக விசாலமான அரண்மனைகள் (தங்குமிடம், படுக்கை, ஆசனம், போஜன ஆகியவற்றிற்கு இடம் இருக்கும்) இருக்கும் நகரம் - அயோத்யை என்னும் இன்னொரு காரணப் பெயரும் இதற்கு உள்ளது. ஸ்ரீஹரியின் இச்சை இல்லாமல் - அனுமதி இல்லாமல் யாரும் (முக்த பிரம்மாதிகளும்கூட) நுழைய அனுமதியில்லாத நகர் இது. இச்சைக்கு எதிராக யாரும் நுழைவதற்கு சாமத்தியம் இல்லாதவர்கள் என்று சொல்லவா? இந்த வைகுண்ட நகரத்திற்கு

ஒப்பாக இருப்பதாலேயே, ஸ்ரீஹரி ராமாவதாரத்தில் வசித்த நகரமும் 'அயோத்யை' என்றே அழைக்கப்பட்டது.

ஸ்லோக 19

**ந தத்3பா4ஸயதே ஸூர்யோ ந ஷஷாங்கோ ந பாவக: |**
**யத்ப4க்த்வா ந விவர்த்தந்தே தத்3தா4ம பரமம் மம ||**

இது கீதையின் 15ம் அத்தியாயத்தின் ஸ்லோகம். தத் – அந்த வைகுண்ட லோகம். மம பரமம் தாம – என் மிகச்சிறந்ததான உலகம். தத் – அதனை. ஸூர்ய: – சூரியன். ந பாஸயதே – ஒளிர்வதில்லை. யத்கத்வா – எந்த உலகத்தை அடைந்திருக்கிறார்களோ. ந நிர்வதந்தெ – (மற்ற) பூம்யாதி உலகங்களுக்கு, தேகத்தைப் பெற்று வாழ்வதற்கு) திரும்ப வருவதில்லையோ. அதுவே என் இருப்பிடமாகும்.

பத 16 ராகம் : கேதாரகௌள. தாளம் : ஆதி

**அனர்க்4யரதுன மந்தி3ரக3ளொளுப்பரிகெ3க3ள**
**ப3ண்ணிஸலென்னளவல்ல**
**ரத்னத3 த்4வார ப்ராகார காந்திகெ3**
**தன்ன லோடு3வுத3ந்த4கார ||1**

அனர்க்யரதுன மந்திரகளொளுப்பரிகெகள – விலைமதிப்பற்ற ரத்னமயமான அரண்மனைகளை. அவுகளல்லிருவ (பற்பல சிறப்புகளைக் கொண்ட) உப்பரிக்கைகளை. பண்ணிஸலு – வர்ணிப்பதற்கு. என்னளவல்ல – என்னால் முடியாது (என் தகுதிக்கு மீறியது). ரத்னத த்வார – ரத்னமயமான த்வாரங்களின். ப்ராகாரகாந்திகெ – பிரகாரங்களின் (சுற்றியிருக்கும் சுவர்களின்) ஒளிக்கு. அந்தகார – இருட்டு. எத்தன்னலோடுவுது – எங்கேயோ ஓடிப்போகிறது.

**ஆயுதார்க்க ஸமப்ரபெ4யெம்ப3 பஞ்சராத்ர**
**ப4யவில்லத3ச்யுதன புரவ |**
**ப்ரியதி3ந்த3 கொண்டா3டி3தாகி3 ஈ புர கத்த**
**லெய கெடி3ஸிதொ3ந்த3ரிதே3 ||2**

அயுதார்க்க ஸமப்ரபெயெம்ப – அயுதார்க்க ஸமப்ரபம் – 10,000 சூரியர்களின் ஒளியைப் போல ஒளியைக் கொண்டது என்று கூறும் 'பஞ்சராத்ர' ஆகமம். பயவில்லதச்யுதன புரவ – எப்போதும் எவ்விதமான பயங்கள் இல்லாத (ஆகவே, அபயஸ்தான என்று அழைக்கப்படுகிறது). ஸ்ரீஹரிபுரத்தை. ப்ரியதிந்த – மகிழ்ச்சியுடன். கொண்டாடிதாகி – வணங்குவதால். கத்தலெய – இருட்டினை (தமஸ்ஸினை). கிடிஸிதொந்தரிதே – ஓட்டியது என்பதில் என்ன வியப்பு இருக்கிறது?

வாபிகூப தடாகைஸ்ச வ்ருக்ஷஷண்டை: ஸுமண்டிதம் |
அப்ராக்ருதம் ஸுரைர் வந்த்யம் அயுதார்க்க ஸமப்ரபம் ||

என்று முக்தி லோகம் (வைகுண்டம்) வர்ணிக்கப்படுகிறது. பற்பல நீர்நிலைகளாலும், பற்பல வகையான விசித்திரமான மரங்களாலும், அலங்கரிக்கப்பட்ட வைகுண்டம் த்ரிகுணாத்மக ப்ரக்ருதிகள் இல்லாததும், தேவதைகளால் வணங்கப்படுவதும், (10,000 அல்லது) எண்ணிக்கையற்ற சூரியரின் ஒளிக்கு ஒப்பான அற்புத ஒளியைக் கொண்டதாகவும் ஆகியிருக்கிறது, என்பது உதாரணம் கொடுக்கப்பட்டுள்ள வாக்கியத்தின் பொருள்.

**நால்கு தி$^{3}$க்குக$^{3}$ளல்லி பா$^{3}$கி$^{3}$ல ஸால்க$^{3}$ளு**
**சௌகஷுத்$^{3}$த$^{4}$வாத$^{3}$ கோடெயொளகெ$^{3}$**
**லோகபாலகர மன்னணெயிந்த$^{3}$லல்லிகெ$^{3}$**
**ஸ்ரீகாந்தனொம்மொம்மெ பா$^{3}$ஹ ||3**

நால்கு திக்குகளல்லி – கிழக்கிலிருந்து நான்கு திசைகளில். பாகில ஸால்களு – த்வாரங்களின் வரிசைகள். சைகஷுத்தவாத கோடெயொளகெ – சதுரமான (உயர அகலங்களில் சிறிதும் வேறுபாடுகள் அற்ற அல்லது பவித்ரமான) கோட்டை வாயிற்கதவுகள் இருக்கின்றன. லோகபாலகர – இந்திராதி தேவதைகளின். மன்னணெயிந்தலி – பிரார்த்தனையினால். (அவர்களுக்கு தன் திவ்ய தரிசனத்தைக் கொடுப்பதற்கு). அல்லிகெ – அந்த த்வாரங்களின் அருகில். ஸ்ரீகாந்த – லட்சுமிபதி. ஒம்மொம்மெ – ஒவ்வொரு வேளை (அவ்வப்போது). பாஹ – வருகிறான்.

---

**‘ஸ ஏவான் பி3ரம்ம கமயதி’ என்ப3 ஸ்ருதி**
**நயதி3ந்த3 நிர்ணைஸிதாகி3**
**ப்ரியவாத3 லிங்க3தே3ஹ ஜீவன்முக்தரு**
**ஜய ஜயவென்னுத்திஹரல்லி ||4**

‘ஸ ஏனான் பிரம்ம கமயதி’ என்னும் ஸ்ருதி சொல்வது, அந்த வாயுதேவன் ஜீவன் முக்த ஜீவர்களை (சாதனையை முடித்துக்கொண்ட ஜீவர்களை) பிரம்மனிடம் சேர்ப்பிக்கிறான் என்று கூறும் ஸ்ருதி, நயதிந்த - நியாயத்திற்கு கட்டுப்பட்டு. நிர்ணயிஸிதாகி - நிர்ணயித்திருப்பதால். ப்ரியவாத - அனாதி காலத்திலிருந்து தம்முடனே இருந்து அவருக்கு (அபிமானத்தை விடும் வரைக்கும்) தமக்கு ப்ரியமாக இருந்து. லிங்கதேக ஜீவன்முக்தரு - லிங்கதேக சகிதரான ஜீவன்முக்தர்கள். அல்லது, அனாதி சம்பந்தத்தினால் நித்ய நண்பனாக இருந்த லிங்கதேகத்தைக் கொண்ட ஜீவர்கள். அல்லி - (ஸ்ரீபாகத்தின்) வெளிப்புறத்தில். ஜயஜயவென்னுத்திஹரு - ஜயகோஷம் செய்து கொண்டிருக்கிறார்கள் (ஜய ஜய என்று ஸ்ரீஹரியை வணங்குகின்றனர்).

**அப்ரதீகாலம்பனர முக்2யப்ராண**
**ஸப்த ப்ராகாரங்க3ளொளகெ3**
**முக்தி பர்யந்த போ4க3ங்க3ளுண்டு கொண்**
**டிப்பந்தெ கட்டுமாடு3வனு ||5**

அப்ரதீகாலம்பனர - வியாப்தோபாஸகரான ஜீவர்களை. முக்யபிராண - ஸ்ரீவாயுதேவன். ஸப்தப்ராகாரங்களொளகெ - வைகுண்டத்தின் புற ஏழு பிரகாரங்களில். முக்தி பயந்த - லிங்க தேக பங்கம் ஆகும்வரை. போகங்கள - பற்பல போகங்களை. உண்டுகொண்டுப்பந்தெ - போகிப்பவனாக. கட்டுமாடுவனு - செய்விக்கிறான் (ஸ்ரீபாகத்தை நுழைவதாக ஆணையிடுகிறான்).

**முக்தாமுக்தரு கூடி3 அத3ரிந்த3 பெ3ரெஸிஹரு**
**ஸப்த ப்ராகாரங்க3ளொளகெ3**
**சித்ர சாவடி3யொளு அல்லிர்த3 ஹரியீகெ3**

**முக்தஸுரரு பி³ன்னைஸுவரு ||6**

அதரிந்த - இந்த காரணத்தால். ஸப்தப்ரகாரங்களொளகெ - அந்த ஏழு பிரகாரங்களில். முக்தாமுக்தரு கூடி - லிங்க பங்கம் ஆனவர்கள் மற்றும் ஆகாதவர்கள் கூட. பெரசிஹரு - கலந்தே இருக்கின்றனர். சித்ரசாவடியொளு - விசித்ர (அந்த பிரகாரங்களில் இருக்கும்) மண்டபங்களில். அல்லிர்த்த - அங்கிருக்கும். ஹரியீகெ - ஸ்ரீஹரி மற்றும் லட்சுமிதேவிக்கு (ஈ - லட்சுமிதேவி). முக்தஸுரரு - முக்த தேவதைகள். பின்னயிஸுவரு - வேண்டிக் கொள்கிறார்கள். (லிங்க தேகம் உள்ளவர்களை, பங்கம் செய்து, அருளுமாறு வேண்டிக் கொள்கிறார்கள்).

**முக்தர்கெ³ மனெயாத³ ஹரிய அந்த:புரத³**
**ஸுத்தலிப்புது³ விரஜா நதி³**
**தத்வக்³ஞானிக³ளிகெ³ அத³ரொளு முளுகி³ நி**
**ர்முக்தவாஹது³ லிங்க³தே³ஹ ||7**

முக்தர்கெ மனெயாத - ஒவ்வொரு முக்தருக்கும் நித்யக்ரஹமான. ஹரிய அந்த:புரத - ஸ்ரீஹரியின் புரத்தின் (வைகுண்டபுரியின் வெளியே). ஸுத்தலிப்பது விரஜாநதி - சுற்றியும் விரஜா நதி இருக்கிறது. அதரொளு - அந்த நதியில். முளுகி - மூழ்கி ஸ்னானம் செய்து. தத்வஞானிகளிகெ - அந்த ஜீவன் முக்தருக்கு. லிங்கதேஹ - (அவர்களின்) லிங்க தேகம். நிர்முக்தவாஹது - விட்டுப் போகிறது.

** இந்த பதத்தின் 3-4ம் நுடிகளில் சொல்லப்பட்டுள்ள 'ஸ ஏனான் பிரம்ம கமயதி' மற்றும் 'அப்ரதீகாலம்பனர முக்ய ப்ராண' என்னும் இந்த இரு பிரமேயங்களுக்கு சம்பந்தப்பட்ட விவரங்களை கவனிக்க வேண்டியது அவசியம். முக்தி யோக்ய ஜீவர்களை இரு பெரிய விதங்களாக பிரிக்கலாம். ஒவ்வொரு வகையிலும்கூட (ஜீவ ஜீவர்களில்) தாரதம்யம் இருக்கிறது என்பதை மட்டும் மறக்கக்கூடாது.

ப்ரதீகம் தேஹ உத்திஷ்டோ யேஷாம் தத்ரைவ தர்ஷனம் |
ந து வ்யாப்ததயா க்வாபி ப்ரதீகாலம்பனாஸ்து தே ||

## 1. மோட்ச ஸந்தி

-----------------------------------------------------------------------------------------------

அப்ரதீகா தேவதாஸ்து ரிஷீணாம் ஷதமேவ ச |
ராக்ஞாம் ச ஷதமுத்திஷ்டம் கந்தர்வாணாம் ஷதம் ததா ||
ஏதேsதிகாரிணோ வ்யாப்த தர்ஷனேsன்யே ந து க்வசித் |
அப்ரதிகாஸ்ரயா யே ஹி தே யாந்தி பரமேவ து ||
ஸ்வதேஹே பிரம்ம த்ருஷ்ட்யைவ கச்சேத்பிரம்ம ஸலோகதாம் |
பிரம்மணா ஸாஹ ஸம்ப்ராப்தே ஸம்ஹாரே பரமம் பதம் ||
(கருட புராணம்)

தேகம் ப்ரதீக என்று அழைக்கப்படுகிறது. யாருக்கு தேகத்திலேயே பரமாத்மனின் தரிசனம் ஆகிறதோ, வியாப்தனான ஸ்ரீஹரி தரிசனம் இல்லையோ, அவர் பிரதிகாலம்பனர். (உபாசனைக்கேற்ப தரிசனம் ஆகிறது. ப்ரதிகாலம்பனர் வியாப்தோபாஸனையில் சமர்த்தர் அல்ல). தேவதைகள் வியாப்தோபாசகர்கள். அவரே அப்ரதிகாலம்பனர்கள். இவர்களுடன், நூறு ரிஷிகள், நூறு அரசர்கள், நூறு கந்தர்வர்கள்கூட இருக்கின்றனர்.

இந்த அனைவரும் பகவந்தனின் வியாப்தோபாசனையில் அதிகாரிகள் (வியாப்தோபாஸகரின் உபாசனா வியாப்தியில்கூட தாரதம்ய இருக்கிறது என்று மறக்கக்கூடாது). அப்ரதிகாலம்பனர் தம் ஸாதனை பரிபூர்ணம் ஆனபிறகு பரபிரம்மனை சேர்கின்றனர். ஸ்வ தேகத்திலேயே பிரம்மதரிசனம் பெற்றவர்கள், சதுர்முக பிரம்மனை (கார்ய பிரம்மன் என்று அழைக்கப்படும்) ஸத்யலோகாதிபதியை அடைந்து, மஹாபிரளயத்திற்குப் பிறகு, அவருடன் பரபிரம்மத்தை அடைகின்றனர்.

'பிரதிமாஸ்வ ப்ரபுத்தானாம் ஸர்வத்ர விதிதாத்மனாம்' என்றால், ப்ரசுர ஞானம் இல்லாதவர்களுக்கு சிலைகளிலும்; விஷால ஞானிகளுக்கு அனைத்து இடங்களிலும் ஸ்ரீஹரி தரிசனம் ஆகிறது என்று சொல்லும் பிரமாண வாக்கியம், ப்ரதீகாலம்பனர் மற்றும் அப்ரதிகாலம்பனரின் உபாஸனாவின் சிறப்பினை சொல்கிறது. அப்ரதிகாலம்பனர்கள் பரபிரம்மனை அடைவது என்றால், லிங்க பங்கத்திற்குப் பிறகு, சதுர்முகனுடன் அடைவது என்று அறிய வேண்டும். அவர்கள் ஸத்யலோகத்தைத் தாண்டி, அமுக்த வைகுண்ட பாகத்தில் சஞ்சரிக்கின்றனர் என்று அர்த்தம். இந்த இரு

வர்க்கத்தின் ஜீவர்களை, லிங்க பங்கம் வரை அவர்கள் இருக்க வேண்டிய ஸ்தானத்தை வாயுதேவர் கொடுக்கிறார் என்று, 'ஸ ஏனான் பிரம்ம கமயதி' என்னும் ஸ்ருதி சொல்கிறது. 'ஏனான்' என்றால், ஸாதனை முடிந்து, ப்ராரப்த போகமும் முடிந்திருக்கும் ஜீவர்கள் ஆவர். 'பிரம்ம கமயதி' பிரம்மனை அடைகிறான் என்றால், எந்த வழியினால் என்னும் அம்சத்தை அறிய வேண்டும்.

'மாஸேப்ய: ஸம்வத்ஸரம் சம்வத்ஸராதாதித்யம் ஆதித்யாச்சந்த்ரமஸம் சந்த்ரமஸோ வித்யுதம் தத்புருஷோ மானவ: ஸ ஏனான் பிரம்ம கமயதி ஏஷ தேவயா: பந்தா இதி' (சாந்தோக்ய) என்னும் ஸ்ருதியில் 'ஸ ஏனான் பிரம்ம கமயதி' என்பது ஒரு வாக்கியம்.

இந்த ஸ்ருத்யர்த்தம் என்னவென்றால்: மாஸாபிமானி லோகத்திலிருந்து, சம்வத்ஸராபிமானி லோகத்தை, அங்கிருந்து ஆதித்ய லோகத்தை, அங்கிருந்து சந்த்ர லோகத்தை, அங்கிருந்து வித்யாதபிமானி (பாரதிதேவியின்) லோகத்தை அடைந்து, அங்கிருந்து, அந்த பாரதிபதியான ஸர்வக்ஞான வாயுதேவர் (தத்புருஷோ மானவ:) பிரம்மனின் சமீபத்தை அடைகிறார். இதே தேவ-யான என்னும் மோட்ச மார்க்கம் ஆகும். இங்கிருக்கும் பிரம்மன் யார் என்பதில், சுகாசார்யரின் மற்றும் ஜைமின்யாசார்யரின் அபிப்பிராயங்கள் வேறுபடுகின்றன.

சுகர் 'கார்யபிரம்மன்' என்றும், ஜைமினிகள் பிரம்ம சொல்லின் முக்கிய அர்த்தத்தையே வைத்துக்கொண்டு 'பரபிரம்மன்' என்றும் சொல்கின்றனர். இந்த இருவரின் அபிப்பிராயங்களும் ஒரு வகையில் சரியானவையே. ஶ்ரீபாதராயணரின் அபிப்பிராயமும் இதுவே. 'ஓம் அப்ரதிகாலம்பனான்னயதீதி பாதராயண உபயதா ச தோஷாத்தத்க்ரதுஸ்ச ஓம்' (பிரம்ம ஸூத்ர) என்று சொல்கிறார்.

இதன் அர்த்தம்: வாயுதேவர், அப்ரதிகாலம்பனர்களை, பரபிரம்மனிடம் சேர்ப்பிக்கிறார். ஆனால், அனைவரையும் அல்ல. ப்ரதிகாலம்பனர்களை சதுர்முக பிரம்மனிடம் சேர்க்கிறார். அனைவரையும் பரபிரம்மனிடமோ, அல்லது அனைவரையும் சதுர்முக பிரம்மனிடமோ சேர்க்கிறார் என்னும் இரு பட்சங்களும்

தோஷத்தையே கொண்டிருக்கின்றன. ஏனெனில், 'தத்க்ரதுர்பவதி' என்னும் ஸ்ருதி, அவரவர்களின் பகவத் பூஜைக்கேற்பவும், யோக்யதா தாரதம்யத்திற்கேற்பவும் அடைகின்றனர் என்று சொல்வதால், அதிகார பேதத்தினால், 'பிரம்ம கமயதி' என்பதில் இருக்கும் பிரம்ம ஷப்தத்தின் அர்த்தத்தை அறிய வேண்டும். சுகாசார்யரின் அபிப்பிராயத்தில் ப்ரதிகாலம்பனர்களே தகுதியானவர்கள். ஜைமினிகளின் அபிப்பிராயத்தில் அப்ரதிகாலம்பனர்களே தகுதியானவர்கள். இவ்வாறு இருவரின் மதங்களும் உண்மையே ஆகவே, இந்த இரண்டு கருத்துகளும், ஸ்ரீபாதராயணரின் ஏகதேஷாபிப்பிராயமாகவே இருக்கிறதே தவிர, அதற்கு எதிராக அல்ல.

** பக்திமயமான (யதாயோக்யம் ஷமதமாதி குணங்கள் உள்ள முக்தியோக்ய ஸ்வரூபம் உள்ள ஜீவர்களால் செய்யப்படும்) சிரவண, மனன, தியானங்களால், பகவந்தன் மகிழ்ந்து தரிசன பாக்கியத்தை அருள்கிறான். இந்த தரிசனம், பிரம்ம சாக்ஷாத்காரம் என்றும் அபரோக்ஷம் என்றும் அழைக்கப்படுகிறது. அபரோக்ஷத்தால் சஞ்சித கர்மங்கள் அழிகின்றன. அபரோக்ஷ காலத்தில் பலனாக, துவங்கியிருக்கும் கர்மத்தை மட்டும் அனுபவித்து, மறுபிறவி இல்லாதவனாக, தன் அடுத்த கதிக்கு செல்கிறான். அபரோக்ஷத்திற்குப் பிறகு, ப்ராரப்த போக காலத்தில் அல்லது அடுத்து லிங்க தேகம் பங்கத்தின் வரை செய்யப்படும் கர்மங்கள் லேபம் ஆவதில்லை.

அனைத்து சாதனங்களும் பூர்த்தியான ஜீவர்கள், 'பிரம்மணா ஸஹ தே ஸர்வே ஸம்ப்ராப்தே ப்ரதிஸஞ்சரே | பரஸ்யாந்தே பராத்மான: ப்ரவிம்ஷதி பரம் பதம்' -- பகவந்தனின் பக்தர்களான இந்த அனைத்து ஞானிகளும், 'பர' நாமக பிரம்மதேவனின் ஆயுட்காலம் முடிந்தபிறகு, மஹா பிரளயம் ஆகும் சமயத்தில், லிங்க பங்கம் அடைந்து, அவருடன் பரமாத்மனின் உதரத்தில் பிரவேசம் செய்து, தியானத்தில் இருந்து, ஸ்ருஷ்டி காலம் வந்தபிறகு, ஸ்வயோக்ய நித்ய ஸ்தானங்களை அடைகின்றனர் என்று சொல்வதால், பிரளய காலத்தை எதிர்பார்த்து காத்திருக்க வேண்டும்.

பிரம்மதேவரின் ஆயுட்காலத்தில், பல சமயங்களில், பல ஜீவர்களின் சாதனம் பூர்த்தி ஆகியிருக்கும். ஜீவோத்தமனான பிரம்மதேவனைவிட அனைத்து ஜீவர்களும் குறைவானவர்களே (அதமர்) ஆனதால், அவரவர்களின் ஸ்வரூப தாரதம்யத்திற்கேற்ப, சாதன காலம் மிகக் குறைவாகவே இருக்கும். பிரம்மதேவருடன் புறப்படும் காலத்தை எதிர்பார்த்தவாறு, அவர்கள் வசிக்கும் காலமும் வேறாகவே இருக்கிறது.

அப்ரதிகாலம்பனர் அமுக்த வைகுண்டத்திலும், ப்ரதிகாலம்பனர் சதுர்முகனின் லோகத்திலும் இருக்கின்றனர். சதுர்முகனின் லோகம் என்றால், ஸத்யலோகம் மட்டுமல்ல. அவனின் அதிபத்யத்திற்கு உட்பட்ட 14 உலகங்களும் அவனின் உலகங்களே. ஒவ்வொரு ஜீவனும் தனக்கு யோக்யமான இடங்களில் இருக்கிறான்.

இந்த இரு வர்க்கத்து ஞானிகளையும் அவரவர்களின் ஸ்தானங்களுக்கு சேர்ப்பிப்பவர் - வாயுதேவர். வைகுண்டம் பரபிரம்மனின் லோகமே. அங்கு (அமுக்த பாகத்தில் இருப்பவர்களுக்கும்கூட) அவ்வப்போது வைகுண்டபதியின் தரிசனம் ஆகிறது. ஸ்தான பேதத்தினால், அங்கு, அந்த ஜீவர்கள் அனுபவிக்கும் போகங்களும் தாரதம்யத்திற்கேற்ப வெவ்வேறாகவே இருக்கிறது.

** ஸ்ரீபாக வைகுண்டத்தின் வெளிப்புற ஏழு பிரகாரங்கள் மிகவும் விஸ்தாரமானவை. நானா சுக போகங்களுக்கான வாய்ப்பு இருக்கின்றன. அது, முக்த, அமுக்தர்கள் என்னும் இரு பாகங்களும் சேரும் இடம். அமுக்தபாகம் கிரமமாக முக்த பாகத்துடன் கூடியவாறு பழகும் இடம் இது. அந்த பிரகாரங்கள் முடிந்தவுடன், வெறும் முக்த பாகங்களே இருக்கின்றன. அமுக்த பாகங்களைக் கொண்ட, லிங்கத்தைக் கொண்ட அப்ரதிகாலம்பனர், ஸ்ரீஹரியின் அருளால் தாங்கள் விருப்பப்பட்ட ரூபங்களை ஏற்று, இங்கு சஞ்சரிக்கின்றனர். முக்தபாகத்தில் இருக்கும் முக்த ஜீவர்கள்கூட, அந்த பிரகாரங்களில் வந்து சஞ்சரிக்கின்றனர். இவ்வாறு, இருவரும் இணைந்து, இந்த பிரகாரங்களில் சஞ்சரிக்கின்றனர்.

---

** முக்தர்களின் போகங்களுக்கேற்ப மற்றும் விரஜா நதியில் லிங்கதேகங்களை விடுவது முதலான பிரமேய விவரங்களை அடுத்த 17-18ம் பதங்களின் சிறப்புக் குறிப்புகளில் பார்க்கலாம்.

ஸ்லோக 20-21-22

**பிரதா$^{3}$ன பரமவ்யோம்னோரந்தரா விரஜா நதி$^{3}$ |**
**தே$^{3}$வாங்க$^{3}$ஸ்வேத$^{3}$ ஜனிதா தோயை: ப்ரஸவிதா ஷுபா$^{4}$ |**
**மோக்ஷம் பரம்பத$^{3}$ம் தி$^{3}$வ்யமம்ருதம் விஷ்ணுமந்தி$^{3}$ரம் |**
**அக்ஷரம் பரமம் தா$^{4}$ம வைகுண்ட$^{2}$ம் ஷாஷ்வதம் பத$^{3}$ம் |**
**நித்யம் ச பரம வ்யோம ஸர்வோத்க்ருஷ்டம் ஸனாதனம் |**
**பர்யாய வாசகாஸ்தஸ்ய பரந்தா$^{4}$ம்னோऽச்யுதஸ்ய ச ||**

பிரதானபரமவ்யோம்னோ: - ப்ரக்ருதி மற்றும் அவ்யாக்ருதாகாஷங்களின், அந்தரா - நடுவில் இருக்கும். விரஜா நதி - விரஜா நதியானது. தேவாங்க ஸ்வேதஜனிதா - ஸ்ரீஹரியின் தேகத்தின் வியர்வையிலிருந்து பிறந்ததாகும். தோயை: (அந்த வியர்வையால் ஆன) தண்ணீரினால். ப்ரஸவிதா - பாய்கிறது. ஷுபா - மிகவும் பவித்ரமானதாகும் ||20

** 'பரமவ்யோம' என்பது வைகுண்டத்தில் இருக்கும் ஸ்ரீஹரியின் பட்டணத்தின் பெயர். இதற்கும், ப்ரக்ருதி சம்பந்தம் உள்ள அமுக்த பாகத்திற்கு நடுவில் விரஜா நதி இருக்கிறது.

** ஸ்ரீஹரியின் வியர்வையும்கூட சிதானந்தாத்மகமானதாகும். ஸ்ரீஹரியின் ஸ்வரூப தேகத்திலும் இருக்கும் ஸ்ரீதேவியும், இந்த வியர்வையுடன் வெளியே பாய்கிறாள் - இதில் வெளிப்படும் லட்சுமிரூபமே விரஜா நதி. இந்த பிரமேயங்களை அடுத்த பதங்களில் கிரந்தகர்த்தர் விவரிக்கிறார்.

மோட்சம், பரம்பதம் - பரமபத. விஷ்ணுமந்திரம் - விஷ்ணுவின் மந்திரம். திவ்யம் - திவ்ய. அம்ருதம் - அமிர்தம். அக்ஷரம் - நித்யமான. பரமம் தாம - பரம இருப்பிடம் ஆகும். வைகுண்டம். ஷாஷ்வதம் பதம் - நிரந்தரமான இடம். நித்யம் - நித்யமான. ஸர்வோத்க்ருஷ்டம் - சர்வஸ்தானங்களைவிட சிறந்ததான.

ஸனாதனம் - அனாதி நித்யமான. பரமம் வ்யோம ச - பரமவ்யோம என்பதுகூட. அச்யுதஸ்ய - ஸ்ரீஹரியின். பரம் தாம்ன: - சிறந்த வசிப்பிடமான. பர்யாயவாசகா: - ஒரே அர்த்தம் உள்ள நாமங்கள் (21-22ம் ஸ்லோகங்கள்).

பத 17 ராகம் : பந்துவராளி. தாளம் : ரூபக

**மத்தெ முக்தியொளிப்ப ஹரிய**
**உத்தமாந்த: புரவிந்தெரட$^3$ர நடு$^3$வெ**
**ஸுத்தலிப்புது$^3$ விரஜா நதி$^3$ ||1**

ஸப்தமத்வார பர்யந்த - (சப்த பிரகாரங்களில் அனைத்திற்கும் வெளிப்புறமான ஏழாம் பிரகாரத்தில் இருக்கும்) ஏழாம் மஹாத்வாரத்தின் வரை. பந்தகமாயெ - சுற்றியிருக்கும் ப்ரக்ருதி இருக்கிறது. மத்தெ - ஆனால் (மற்றும்). முக்தியொளு - முக்த பாகத்தில் இருக்கும். உத்தமாந்த:புரவு - சிறந்த மத்ய ஹரிபுரம். இந்தெரடர - இந்த இரண்டின். நடுவெ - நடுவில் (ஏழாம் பிரகாரத்தின் வெளியே இருக்கும் ப்ரக்ருதி மற்றும் ஹரிபுரங்களின் நடுவில்). விரஜா நதி - விரஜா நதியானது. ஸுத்தலிபுது - சுற்றிலும் இருக்கிறது.

**ஏளனெ பா$^3$கி$^3$லலித்$^3$த$^3$ ஜய விஜயரு**
**பூ$^4$லோகத$^3$லி புட்டித$^3$ராகி$^3$**
**காலனவர ப$^4$யவல்லி பர்யந்தர**
**காலூரி ஜன கட்டுவளு ||2**

ஏளனே பாகிலலித்த - ஏழாம் (வெளியிலிருந்து முதலாம்) மஹாத்வாரத்தில் இருந்த. ஜயவிஜயரு - ஜய, விஜய என்னும் த்வார பாலகர்கள். பூலோகதல்லி - பூமியில். புட்டிதராகி - பிறந்ததால். காலனவர பய - (சாபத்தினால்) ம்ருத்யு பயம். அல்லி பர்யந்தர - அதுவரை மட்டும் (என்று அறிய வேண்டும்). காலூரி ஜன மெட்டுவளு - ம்ருத்யு தேவதை மக்களை தன் கால்களால் தொடுகிறாள் (தன் வசப்படுத்திக் கொள்கிறாள்).

---

**அத$^3$ரிந்தொ$^3$ளகெ$^3$ முக்தர் ஹோகு$^3$வரல்லதெ$^3$ மிக்க**
**பு$^3$த$^4$ரிகெ சஞ்சார ஸல்ல**
**அது$^3$ காரண நாராயண தானல்லிகெ$^3$ ப$^3$ந்து$^3$**
**முத$^3$வித்த ஸனகாதி$^3$க$^3$ளிகெ$^3$ ||3**

அதரிந்தொளகெ – (ஜயவிஜயர் இருக்கும்) த்வாரத்தின் வெளியே. முக்தரு – முக்தர்கள் மட்டும். ஹோகுவரல்லதெ – நுழைகின்றனரே தவிர. மிக்க புதரிகெ – மற்ற ஞானிகளுக்கு (அமுக்த வைகுண்டத்தை அடைந்த அப்ரதிகாலம்பனர்களுக்கும்). ஸஞ்சார ஸல்ல – சஞ்சாரம் இருப்பதில்லை. அது காரண – அந்த காரணத்தினால். நாராயண – ஸ்ரீவைகுண்டன். தானல்லிகெ பந்து – தானே த்வாரத்தின் வரைக்கும் வந்து. ஸனகாதிகளிகெ – ஸனகாதி யோகிகளுக்கு. முதவித்த – தரிசனானந்தத்தை அளிக்கிறான்.

** ஸ்ரீபாக வைகுண்ட லோகத்தின் புற ஆவரணத்தில் இருக்கும் ஏழாம் ப்ராகாரத்தின் வரை ம்ருத்யு பயம் இருக்கிறது என்பதற்கு, அங்கிருந்து மார்த்ய லோகத்திற்கு (மனுஷ்ய லோகத்திற்கு) சாபத்தின் காரணத்தால் விழும் (போகும்) வாய்ப்பு இருக்கிறது என்று அறிய வேண்டுமே தவிர, அங்கிருக்கும் பிரஜைகளுக்கு மனுஷ்ய லோகத்தைப் போல ஜனன மரணங்கள் உண்டு என்றோ, யமதூதர்களின் பயம் உண்டு என்றோ அறியக்கூடாது. ஸனகாதிகளின் சாபத்தினால் ஜயவிஜயர்கள் பூலோகத்தில் பிறவி எடுத்தனர் என்பது, இந்த பிரமேயத்தை விளக்குகிறது.

** ஸ்ரீபாக வைகுண்டத்தின் பிரகாரங்களைப் போல, அதன் நடுவில் இருக்கும், வைகுண்டனின் அந்தப்புரமான நகரத்திற்கும் ஏழு பிரகாரங்கள் இருக்கின்றன. இந்த நகரி 'பரமவ்யோம' என்று அழைக்கப்படுகிறது. இதன் புற (கடைசி) பிரகாரத்தின் சுற்றிலும் விரஜா நதி இருக்கிறது.

பதம் 16-9 நுடியில் சொல்லியிருப்பதைப் போல, முக்தாமுக்தர்கள் சேர்ந்து, ஏழு பிரகாரங்களில் சஞ்சரிக்கின்றனர் என்பது ஸ்ரீபாக வைகுண்டனின் சப்த பிரகரங்கள், அதாவது, ஸ்ரீஹரியின்

அந்தப்புரத்தின் பிரகாரங்கள் அல்ல. அந்த ப்ரகாரங்களிலாவது அமுக்தர்கள், விசேஷமாக வாயுதேவரால் அமுக்த வைகுண்டத்தை சேர்ந்த அப்ரதீகாலம்பனர்கள். கால விசேஷங்களில் நுழைந்து சேர்கிறார்களே தவிர, அங்கேயே தேகம் பெற்று அவர்கள் வசிப்பதில்லை.

** முக்த ஸ்தானத்தில் இருக்கும் ஸ்ரீஹரியின் அந்தப்புரத்தில் (நகரியில்), ஸ்ரீபாகத்தில் இருக்கும் சர்வ முக்தர்களுக்கும் பிரவேசத்திற்கு வாய்ப்பு இல்லை. ஸ்ரீஹரியின் விசேஷ அருளால் மற்றும் பிரவேசம் இருந்தால்கூட, அது ஸர்வ காலங்களிலும் அல்ல. அமுக்த வர்க்கத்தை சேர்ந்தவரானாலும், வாயுதேவர், தன் விருப்பத்திற்கேற்ப, வைகுண்ட முதலான முக்தபாகத்தின் ஸ்ரீஹரியின் அந்தப்புரத்தில் நுழைந்து, தரிசன, சம்பாஷணைகளை நடத்தி, திரும்பி வரும் விசேஷ வாய்ப்புகளைப் பெற்றிருக்கிறார்.

பயோத்பிமத்யம் ச மே ஸுஸத்ம சான்யதேவ வா |
யதேஷ்டதோ கமிஷ்யஸி ஸ்வதேஹ ஸம்யுதோऽபி ஸன் ||
(தாத்பர்ய நிர்ணய)

ஸ்வேத த்வீபத்தில் இருக்கும் அல்லது என் இதர முக்த லோகங்களில் இருக்கும் அந்தப்புரங்களை இந்த தேகத்தினாலேயே உன் விருப்பத்திற்கேற்ப பிரவேசிப்பவன் ஆவாயாக – என்று ஸ்ரீராமசந்திரன் ஹனுமந்த அவதாரமான வாயுதேவனுக்கு வரங்களைக் கொடுத்தான் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

**ஹரியந்தர்னக$^{3}$ரிகெ$^{3}$ பரமம் வ்யோம நாம**
**ஹொரகி$^{3}$த்$^{3}$த$^{3}$ ப்ரக்ருதியே ப்ரதா$^{4}$னா**
**புராணங்க$^{3}$ளத$^{3}$ரிந்த$^{3}$ ப்ரதா$^{4}$ன**
**பரமவ்யோமாந்ததி$^{3}$ விரஜெயொந்தொ$^{3}$ரெத$^{3}$வு ||4**

ஹரிய – ஸ்ரீஹரியின். அந்தர் நகரிகெ – அந்தபுரத்திற்கு. பரமம்வ்யோம நாம – பரமவ்யோம என்னும் பெயர். ஹொரகித்த – ஸ்ரீபாக வைகுண்டத்தின் வெளியில் இருக்கும். ப்ரக்ருதியே ப்ரதானா – ப்ரக்ருதியே பிரதான என்னும் பெயர் கொண்டது. அதரிந்த – இந்த காரணத்தினாலேயே. புராணங்களு – புராணங்கள்.

-----------------------------------------------------------------------------------------------

ப்ரதானபரமவ்யோமாந்ததி – பிரதான பரமவ்யோமங்களின் நடுவில். விரஜெயெந்தொரெதவு – விரஜா நதி இருக்கிறது என்று சொல்கிறது.

** ஸ்ரீஹரியின் அந்தப்புரத்தின் வெளியே சுற்றிலும் விரஜா நதி இருக்கிறது. அது ஸ்ரீபாவ வைகுண்டத்திலேயே இருக்கிறது. இதன் புற சப்த பிரகாரங்களின் வெளியே அமுக்த வைகுண்ட பாகம் இருக்கிறது. அது அப்ராக்ருதமல்ல. ப்ரக்ருதி சம்பந்தம் உள்ளது. அதாவது, ப்ரக்ருதிக்கும், ஸ்ரீஹரியின் அந்தப்புரத்திற்கும் நடுவே விரஜா நதி இருக்கிறது.

**ஹரியங்க³தொ³ளகி³ர்த³ பெ³வருத³கவாகி³**
**ஸிரி தே³வி தானே பொரமட்டு**
**பரிவளு ரஜஷப்த³ ஸூசித கு³ணத்ரய விரத³**
**காரண விரஜெ எனிபளு ||5**

ஹரியங்கதொளகிர்த்த – ஸ்ரீஹரியின் தேகத்தில் இருந்த. பெவரு – வியர்வை என்பதே. உதகவாகி – தண்ணீராக. ஷிரிதேவி தானெ – லட்சுமிதேவியே அந்த ரூபத்தினால். பொரமட்டு – புறப்பட்டு வந்து (வெளியே வந்து). பரிவளு – பாய்கிறாள். ரஜஷப்த ஸூசித – 'ரஜ' சொல்லினால் குறிப்பிடப்படும். குணத்ரயவு – மூன்று குணங்கள். இரத காரண – (அந்த லட்ச்ம்யாத்மக தண்ணீரில்) இல்லாத காரணத்தால். விரஜெ எனிபளு – (வி – விகதமான. ரஜ – த்ரிகுணங்கள் உள்ள) 'விரஜா' என்னும் காரணப் பெயர் கொண்டவள்.

** லட்சுமி நாராயணர் இருவரும் அனைத்து காலங்களிலும் (அவதார காலங்களில்கூட) சச்சிதானந்த ஸ்வரூபம் கொண்டவர்கள். அவர்களுக்கு ப்ராக்ருத தேக சம்பந்தம் எந்த காலத்திற்கும் இல்லவே இல்லை. ஸ்ரீஹரியின் தேகத்திலிருந்து வெளிவரும் வியர்வையும், ஞானானந்த ஸ்வரூபமானதே. ஸ்ரீஹரியின் தேகத்தில் இருக்கும் லட்சுமிதேவியும் இந்த ரூபத்திலிருந்து, இதனுடன் வெளியேறுகிறாள். ஜலரூபத்தினால் பாய்ந்து வருவதால், தேகத்திலிருந்து வரும் வியர்வை என்று

அழைக்கப்படுகிறது. கெட்ட வாசனையுடன், துர்லட்சணங்களைக் கொண்ட, ப்ராக்ருத தேகத்திலிருந்து வெளிவரும் மல, மூத்ர ஜலம் என்று இதனை எப்போதும் சிந்திக்கக்கூடாது.

** ரஜோ குணமானது, ஸத்வ – தமோ குணங்களின் கலவையால் ஆனது. ஸ்ருஷ்டி காலத்தில் ஸ்ரீஹரியின் ஆணையினால் நிர்மாணிக்கப்படுகிறது. ரஜோ குணத்தில் ஸத்வ தமோ குணங்கள் இரண்டும் இருக்கும் காரணத்தால், ரஜோ குணம் இல்லை என்பதால், த்ரிகுணங்களும் இல்லை என்று சொன்னதாகவே ஆயிற்று. விரஜா நதி, ஷுத்த ஸத்வாத்மகமும் (ஸ்ருஷ்டியில் உபயோகிக்கப்படும் ஸத்வ குணத்தினால் ஆனது) அல்ல என்று அறியவேண்டும். அது அப்ராக்ருதம் – லட்சுமி தேவியுடையதே ஒரு ரூபம் ஆகும். சிதானந்தாத்மக ஸ்ரீஹரியின் வியர்வை, நதி ரூபத்தின் லட்சுமிதேவி இருக்கும் இடம் என்று அறிய வேண்டும். அந்த வியர்வை, ஸ்ரீஹரியிடமிருந்து அபின்ன (வேறுபட்டது அல்ல) ஆனதாகும்.

வைகுண்ட பரிதாடக்ருத்தாம் விரஜாயாம் ஸமஸ்தஷ꞉ |
மஹாலக்ஷ்மி ஸ்வரூபிண்யாம் விகாஹ்ய ப்ரக்ருதே꞉ பரம் ||
ப்ராரப்த கர்மசேஷம் ச லிங்கதேஹாதிகம் ததா |
வினாஸ்ச ஜடரே விஷ்ணோ꞉ ப்ரவிஷ்யானுக்ரஹாத்தரே꞉ |
தமேவ பரமஸ்ரேஷ்டம் த்யாயந்த꞉ கமலாபதிம் ||
(ஸரஸ பாரதி விலாஸ)

என்னும் வாக்கியங்கள், 'வைகுண்டத்தை சுற்றிப் பாயும் மஹாலட்சுமி ஸ்வரூபத்தின் விரஜா நதியில் மூழ்கி ஸ்னானம் செய்து, ப்ராரப்த கர்ம சேஷத்தை, லிங்க தேகாதி ப்ராக்ருத சம்பந்தத்தை இழந்து கொண்டு, (பிரளய காலத்தில் அனைத்தையும் வயிற்றில் தரித்திருக்கும்) விஷ்ணுவின் உதரத்தில் நுழைந்து, ஸ்ரீஹரி தியானத்தினால் ஸ்வரூபானந்தத்தை அனுபவிப்பர்' என்று சொல்கிறது.

ஸ்ருஷ்டி காலத்தில் வைகுண்ட லோகம் பிரம்மாண்டத்திற்குள் (ஸத்ய லோகத்தின் மேல்) இருக்கிறது. பிரளயத்தில்

## 1. மோட்ச ஸந்தி

-----------------------------------------------------------------------------------------------

பிரம்மாண்டம் லயம் அடைந்துவிட, அதன் புற ஆவரணகளான ஜல, தேஜஸ், வாயு, ஆகாஷ, அஹங்கார, மஹத்; மற்றும் த்ரிகுணங்கள், பிரம்மாண்ட ஸ்ருஷ்டிக்கு முன்னர், சூக்ஷ்ம ஸ்ருஷ்டியில் படைக்கப்பட்டவர்களான தத்வாபிமானிகளுடன் முறையே லயம் அடைகின்றனர்.

அந்த சமயத்தில் பிரம்மாண்டத்தின் உள்ளே இருந்து, நித்ய வைகுண்டம், நித்யமான அவ்யாக்ருதாகாஷ மற்றும் த்ரிகுணாத்மக ப்ரக்ருதியின் நடுவில் வந்து, ஸ்ரீஹரியின் அசிந்த்ய சக்தியினால், அவனின் உதரத்தில் பிரவேசம் செய்து, அவ்யக்த ரூபத்தினால் அங்கு நிலைக்கிறது. ஸ்ருஷ்டி காலத்தில் (அதாவது பிரம்மாண்டம் படைக்கப்பட்ட பிறகு, ஸ்திதி காலத்தில் – பிரளய காலம் வரை) விரஜா நதி, பரம வ்யோம என்று அழைக்கப்படும் ஸ்ரீஹரியின் அந்தப்புரத்தின் சுற்றிலும் பாய்கிறது. பிரம்மாண்டத்தின் புற-ஆவரணங்கள் லயம் அடையும்போது, அப்போது அங்கிருக்கும் விரஜா நதியின் ஸ்னானத்தினால் லிங்கதேகம் அழிகிறது என்றும் சொல்லப்பட்டுள்ளது.

[இந்த பிரமேயத்தை விளக்கும்படியான ஸத்தத்வ ரத்ன மாலா மூல வாக்கியங்களை, இந்த புத்தகம் பெரிதாகிவிடும் என்னும் காரணத்தால் விளக்கவில்லை].

** ஜகத் ஸ்ருஷ்டியில் ரஜோ குணம் எப்படி பயன்படுத்தப்படுகிறது என்னும் ப்ரமேயம் விஷ்ணு ரஹஸ்யத்தில் சொல்லப்பட்டுள்ளது.

ததோ மமேச்சயைவைஷா லக்ஷ்மீர் பூரூப மாஸ்திதா |
ததோ பூஸ்தமஸோ ரஷே: கிஞ்சிச்சக்ரே தம: ப்ருதக் ||
ஸத்வராஷேஸ்ததா ஸத்வம் ப்ருதக்சைவ சகார ஹ |
விலோடயாமாஸ தம: ஸத்வே ஸத்வம் தமஸ்யபி ||
ததஸ்தஸ்மாத் ஸமாதாய மிஸ்ரி பூதாத் குணத்வயாத் |
பாகத்வயயுதம் சக்ரே ஷபலம் தத்ரஜோபவத் ||
ஏவம் ராஷித்ரயே ஜாதே...

என் விருப்பத்தாலேயே லட்சுமிதேவி பூ (Bhoo) ரூபளாக இருக்கிறாள். தமோ குணத்தின் ராஷியிலிருந்து சிறிது தமோ

குணத்தை தனியே பிரித்தெடுத்தாள். அதைப் போல, ஸத்வ குணத்தின் ராஷியிலிருந்து சிறிது ஸத்வ குணத்தை தனியே பிரித்தெடுத்தாள். அவை இரண்டினையும் கலந்தாள். அதுவே ரஜோ குணம். கலவை குணங்களைக் கொண்டது.

பிரளய காலத்தில் இந்த ரஜோகுணம் அழிந்து, அதில் உள்ள ஸத்வ - தமோ பாகங்கள் அந்தந்த ராஷியில் சேர்கிறது. ஸத்வ தமோ குண ரஷிகள் முதலில் இருந்ததைப் போலவே இருக்கிறது. இதையே இந்த விவரங்களிலிருந்து அறிந்து கொள்ளலாம்.

**லெக்கவில்லத$^{3}$ முக்தி யோக்$^{3}$ய ஜீவரனு முஸுகி$^{1}$ர்த்த$^{3}$**
**ப்ரக்ருதிய கெடி$^{3}$ஸுவ**
**ஷக்தி வ்யக்திக$^{3}$ளிகெ$^{3}$ ஹரியங்க ஸங்கா$^{3}$டி$^{3}$**
**த$^{3}$க்கவாத$^{3}$ளு லக்ஷ்மீதே$^{3}$வி ||6**

லெக்கவில்லத - அஸங்க்யாத. முக்தி யோக்யஜீவரனு - முக்தி யோக்ய ஜீவர்களின் ஸ்வரூப தேகங்களை. முஸுகிர்த்த - (அனாதி காலத்திலிருந்து) மூடியிருக்கும். ப்ரக்ருதிய - (லிங்க தேக ரூபத்தில் இருக்கும்) ப்ரக்ருதியை. கெடிஸுவ - அழிக்கும். ஷக்திவ்யக்திகளிகெ - சாமர்த்தியங்கள் வெளிப்படுவதற்கு. ஹரியங்கஸங்காடி - ஸ்ரீஹரியின் தேக சம்பந்தத்தின் (வியர்வையுடன் இருந்த). லட்சுமிதேவி - லட்சுமிதேவி ஆனவள். தக்கவாதளு - சாமர்த்தியம் கொண்டாள். விரஜா நதி ஸ்னானம், லிங்கதேக பங்கத்தை செய்யும் ஸாமர்த்தியத்தை கொண்டிருப்பதும்கூட ஸ்ரீஹரியினாலேயே என்பதன் விவரம் இது.

ஸ்லோக 23
**நி:ஸ்ரேயஸம் ச நிர்வாணம் கைவல்யம் மோக்ஷ உச்யதே**
**நானாஜாதி ஸமாகீர்ணம் வைகுண்ட$^{2}$ம் தத்$^{3}$த$^{3}$ரே: பத$^{3}$ம் ||**

மோட்ச - மோட்சமானது. நி:ஸ்ரேயஸம் - விரும்பிய அனைத்தும் உடனடியாக கிடைக்கும் அதி உன்னத நிலையானது. நிர்வாணம் - ப்ராக்ருத தேகம் இல்லாத நிலை. கைவல்யம் ச - அயோக்யர்கள் இல்லாத ஸ்வரூப நிலை. உச்யதே - (என்று) சொல்லப்படுகிறது. தத் வைகுண்டம் - அந்த மோட்ச ஸ்தானமே வைகுண்டம். ஹரே:

## 1. மோட்ச ஸந்தி

---

பதம் – ஸ்ரீஹரியின் ஸ்தானம் (தினமும் தரிசனம் அளிப்பவனாக, முக்தர்களுக்கு விருப்பங்களை நிறைவேற்றுபவனாக இருக்கும் இடம்). நானாஜாதி ஸமாகீர்ணம் – பலவிதமான முக்த ஜீவ சமூகங்களால் நிரம்பியது.

பத 18 ராகம் : வஸந்தபைரவி. தாளம் : ஜம்பெ

**விரஜெயெம்ப3 பட்டணதொ3ளு முக்தர**
**விரிஞ்சாதி3 ஸுரரு மானவரு**
**தரு பக்ஷி மொத3லாத3 நானா ஜாதியரிஹரு**
**வர ப்ரபா4வ தமகி3ம்பு3கொ3ட3து3 ||1**

விரஜெயெம்ப – த்ரிகுணங்கள் இல்லையென்பதால் 'விரஜா' என்று அழைக்கப்படும், முக்தர பட்டணதொளு – முக்தர்கள் வசிக்கும் நகரிகளில். விரிஞ்சாதி ஸுரரு – பிரம்மாதி தேவதைகள். மானவரு – மனிதர்கள். தரு, பக்ஷி மொதலாத – மரம், பறவை ஆகிய. நானாஜாதியரிஹரு – பற்பல வகையினரான முக்த ஜீவர்கள் இருக்கிறார்கள். வரபிரபாவ – (உத்தமரின்) வர பலம். தமகெ – அந்த முக்தருக்கு. இம்புகொடது – கிடைக்கவில்லை (விரும்பிய அனைத்தையும் அடைகின்றனர் என்னும் முக்தரின் ஸத்ய ஸங்கல்ப ரூப சாமர்த்தியம், ஸ்வாபாவிகமானது. வர-பலத்தினால் வந்ததல்ல).

**ஜாதி ஹீனரெந்து3 நீகரிஸதி3ரு ஸ்ரீ**
**பதி மத்ஸ்ய கூர்மாக்ருதியிம்**
**க்2யாதனாகி3ரனெ ப3ல்லவரு ஆ ரூபக3ள**
**ஓடு மன்னிஸுத துதிஸுவரு ||2**

ஜாதிஹீனரெந்து – (அவரவரின் ஸ்வரூபாக்ருதி மற்றும் குணங்களின் காரணத்தால்) வர்க்க பேத உள்ளவராகி, உச்ச நீச தரதமங்கள் உள்ளவர்கள் என்னும் காரணத்தால், நீகரிஸதிரு = முக்தர்களை (இவர்கள் ஹீனர் – நீசர்கள் என்று), புறக்கணிக்காதே. ஸ்ரீபதி – நாராயணன். மத்ஸ்யகூர்மாக்ருதியிம் – மீன், ஆமை, ரூபங்களால். க்யாதனாகிரனெ – புகழ்பெற்ற மகிமனாக இல்லையா?. பல்லவரு – ஞானிகள். ஆ ரூபகள – அந்த

ரூபங்களை. ஓடு – (பக்தியுடன்) மனம் மெச்சி. மன்னிஸுத – பூஜித்தவாறு. துதிஸுவரு – வணங்குவதில்லையா?

** முக்தர்களில் தரதம பாவங்கள் இருந்தாலும். அனைவரும் சத்யகாமர், துக்காதி தோஷங்கள் இல்லாதவர்கள், பூர்ணானந்தம் உள்ளவர்கள். ஞான பூர்ணர் ஆகிய மகிமைகளால், பந்தனத்தில் இருக்கும் சம்சாரி ஜீவர்களிடமிருந்து வேறுபட்டிருக்கிறார்கள். வணங்கப்படுபவரே ஆகியிருக்கிறார்கள். மரம், பறவை முதலான அவரின் ஆக்ருதிகளால் அவர்களை ஹீனர் (நீசர்) என்று சொல்லக்கூடாது.

உருவம் ஹீனத்வ பாவத்திற்கு காரணம் அல்ல என்பதில் மட்டும், மத்ஸ்ய, கூர்மாதி ஸ்ரீஹரியின் அவதார ரூபங்களின் உதாரணங்கள் உள்ளன என்று அறிய வேண்டும்.

** முக்தர்களில் பற்பல உருவங்களுக்கேற்ப ஜாதி (குழு) இருப்பதைப் போல, பிராமணாதி வர்ணபேதத்தினால் கூட, ஜாதிகள் இருக்கின்றன. முக்த மனுஷ்யோத்தம ஜீவர்களில் கூட, ஜாதிகள் (வர்ணபேதங்கள்) ஹீனத்வ பாவனைக்கு காரணம் அல்ல. முக்தர்கள் அனைவரும் ஸ்வாவரர்களால் பூஜ்யரும் ஸேவ்யரும் ஆகியிருக்கின்றனர் மற்றும் உத்தமர்களால் தகுந்த முறையில் மரியாதை செலுத்தப்படுகின்றனர்.

பிராமணாத்யாஸ்சதுர்வர்ணா ஆத்யா யே பரிகீர்த்திதா: |
மூர்த்தாவஸ்திக்த ஸூதாத்யா அனுலோம விலோமின: ||
த்விதீயா த்வாதஷைவம் ஸ்யுர் ந்ருப ஷோடஷ ஜாதய: |
ஏதஜ்ஜாதீய லோஷாபி: ஸ்வீயாபி: ஸர்வதெய்வ து |
ஸ்வரூபானாந்த மாபன்னா மோதந்தே விஷ்ணுஸத்ம ஸு ||
(விஷ்ணு ரஹஸ்ய)

* பிராமணாதி முதலாம் நான்கு வர்ணங்கள்.
* மூர்த்தாவஸிக்த – பிராமண புருஷ, க்ஷத்ரிய பெண்ணிற்கு பிறந்தவன்.;
* ஸூத – க்ஷத்ரிய புருஷ, பிராமண பெண்ணிற்கு பிறந்தவன். ;

மற்றும் அனுலோம, ப்ரதிலோம ஜாதிகளை சேர்ந்த 12 ஜாதிகள் என்னும் இரண்டாம்

வர்க்கத்தவர். என இவ்வாறு மொத்தம் 16 ஜாதியின் புருஷர்கள் தம் வர்க்கத்தின் பெண்களுடன், ஸ்வரூபானந்தத்தை அடைந்து, விஷ்ணு லோகத்தில் சஞ்சரிக்கின்றனர் என்று சொல்லப்படுகிறது. இந்த 16 ஜாதிகளிலிருந்து ஆயிரக்கணக்கான ஜாதிகள் உலகத்தில் பிறந்தன. ஆனால், அந்த ஜாதிகள் ஸ்வரூபத்தில் இல்லை. மூலபூத 16 ஜாதிகள் ஸ்வரூபத்தில்கூட உண்டு என்று சொல்லப்பட்டுள்ளது. அதாவது, இந்த 16 ஜாதிகளின் ஜீவர்களில் கண்டுவரும் அனைத்து சத்குணங்களும், அந்த ஜாதியின் முக்த ஜீவ ஸ்வரூபங்களில் பரிபூர்ணமாக இருக்கின்றன என்று அர்த்தம்.

**பெ$^3$ல்லத$^3$ ஜேனினிந்த$^3$ மாடி$^3$த$^3$ காஸர**
**ஸல்லதெ$^3$ ப$^3$ல்ல பு$^3$த$^3$ரிகெ$^3$**
**கல்லெந்து$^3$ பி$^3$டு$^3$வரெ மாணிக்ய ரத்னவ**
**அல்லிர்த்த$^3$ ஜாதி ஷோப$^4$னவு ||3**

பெல்லத ஜேனினிந்த - இனிப்பான தேனினால். மாடித - செய்யப்பட்ட. காஸார - சரோவரம். பல்லபுதரிகெ - ஹரியின் அற்புத மஹிமாஞான உள்ளவர்களுக்கு. ஸல்லதெ - மனதிற்கு ஒப்புவதில்லையா? (மகிழ்ச்சி கொடுப்பதில்லையா?). மாணிக்யரத்னவ - மாணிக்க என்னும் ரத்தினத்தை. கல்லெந்து - கல் என்று சொல்வது. பிடுவரெ - (ஏற்றுக்கொள்ளாமல்) விடுவார்களா? அல்லிர்த்த ஜாதி - அங்கிருக்கும் ஜாதியே. ஷோபனவு - சுபம் (மாணிக்கத்தில் இருக்கும் ஜாதி என்னும் தர்மமே பவித்ரமானது). [அதைப் போலவே, அனைத்து முக்தர்களின் முக்தர் என்னும் ஜாதியே - அந்த குழுவின் தர்மமே சுபம் என்று அறிய வேண்டும்].

**உரக$^3$ க$^3$ருட$^3$ ஹம்ஸ வ்ருஷ மேஷ**
**துரக$^3$ மஹிஷ மகர கரிக$^3$ளு**
**ஸூரரு மன்னிஸிகொளரெ ஷாமஷப$^3$ளரனு**
**நரரில்லி நிருத பூஜிஸரெ ||4**

உரக - சர்ப்ப. கருட, ஹம்ஸ, வ்ருஷ - எருது (வ்ருஷப). மேஷ - ஆடு, துரக - குதிரை. மஹிஷ - எருமை. மகர - முதலை.

கரிகளு - யானை (இவற்றை). ஸூரரு - தேவதைகள். மன்னிஸி கொளரெ - (அவற்றின் ஜாதிகளை கௌரவித்து தம் வாகனங்களாக) ஏற்றுக்கொள்கிறார்களா?. இல்லி - இந்த வைகுண்டத்தில். நரரு - முக்த மனுஷ்யர்கள். ஷாம ஷபளரனு - நீல வர்ண மிஸ்ர வர்ணங்கள் என்னும் வர்ணங்களால் பிரிக்கப்பட்ட ஜாதியவர்கள் என்று (ஸ்வோத்தமர்களை) நிருத - தவறாமல். பூஜிஸரே - பூஜிக்காமல் விடுகிறார்களா?

**உத்தர லோகதி[3] நானா ஜாதிக[3]ளிகெ[3]**
**உத்தமாஷெயு தப்பதெ[3]னலு**
**சித்தின புத்த[2]ளியாகி[3] முக்தியொளிர்த்த[3]**
**சித்ரஜாதிக[3]ள பண்ணிபரு ||5**

உத்தரலோகதி - ஸ்வர்க்காதி மேல் லோகங்களில். நானா ஜாதிகளிகெ - (தரதம பாவங்கள் உள்ள) பற்பல வர்க்கங்களைக் கொண்ட ஜீவர்களுக்கு. உத்தமாஷெயு - சிறந்த விருப்பங்கள். தப்பதெனலு - நிறைவேறாமல் போகாது என்று சொல்லும்போது. சித்தின - ஞானத்தின். புத்தளியாகி - பிரதிமை (மூர்த்தியாகி) (ஞானாதி குணங்களே தேகமாக உள்ள). முக்தியோளிர்த்த - முக்த லோகங்களில் இருக்கும். சித்ரஜாதிகள - பற்பல ஜீவ சமூகங்களை. பண்ணிபரு - வர்ணிப்பதில் என்ன அதிசயம்? (முக்தர்கள், தாம் விரும்பிய அனைத்தையும், ஜாதி பேதங்கள் இல்லாமலேயே அடைகின்றனர் என்று அவரின் மகிமையை வர்ணிப்பது எந்த யுக்திக்கும் விரோதமல்ல என்கிறார்). ஜீவஸ்வரூபங்கள் பற்பல ஆகாரங்களைக் (உருவங்களை) கொண்டது. பசு, பறவை, மரம் ஆகிய ரூபங்களைக் கொண்டவர்களும் இருக்கின்றனர். அனைவரின் தேகங்களும் ஞானாத்மகமே - ப்ராக்ருதமல்ல. ஆகையாலேயே விகாரமில்லாத நித்ய தேகங்கள். அனைவரும் சுக ஸ்வரூபர் ஆவர். துக்கங்களே இல்லாதவர்கள். முக்தன் துக்கம் இல்லாதவர் என்றால், சுகம் உள்ளவன் என்றும் அல்ல. சம்சார ஜீவனத்தில் சுகதுக்கங்களின் அனுபவங்கள் கண்டு வருகின்றன - என்னும் தர்க்கத்தால், முக்தனுக்கு சுகதுக்கங்கள் இரண்டின் இல்லாமையை அறியும் மந்தமதி, முக்தனுக்கு, 'முக்தன், ஸ்வரூப ஷூன்யன், சேதனத்வ இருந்தும், துக்கம் இல்லாததால், ஸ்வரூப ஷூன்யன்

இல்லாதவன், துக்க ரஹிதனும் அல்ல, சம்சாரி ஜீவனைப் போல' என்னும் தர்க்கத்தினால், ஸ்வரூபமும் இல்லை என்று கூறினால், ஷூன்யமாக இருக்கிறது என்று சொல்வதில்லையா?

துக்கவ்யாப்தம் ஸுகம் பத்தே த்ருஷ்ட்வாமுக்தீர் நிரஸ்ய்தா |
ஸ்வரூபம் ச நிரஸ்யேத ஷுன்யவாதி ததா பவேத் ||

என்று (மத்வவிஜய) முக்தனுக்கு ஸ்வரூபத்தை ஒப்புக் கொண்டே ஆகவேண்டும் என்னும் விஷயத்தை சொல்கிறது. ஸ்வரூபமே இல்லை என்றால் மோட்சம் புருஷார்த்தமே ஆவதில்லை.

ஸ்ருதி 2-3

**ஸர்வே நந்த$^3$ந்தி யஷஸாக$^3$தேன**
**ஸபா$^4$ஸாஹேன ஸக்$^2$யா ஸகா$^2$ய: |**
**கில்பி$^3$ஷஸ்ப்ருத் பிதுஷணிர்ஹைஷாமரம்**
**ஹிதோ ப$^4$வதி வாஜினாய ||**

**ருஜாந்த்வ:போஷயாஸ்தே புபுஷ்வான்**
**கா$^3$யத்ரந்த்வோ கா$^3$யதி ஷக்வரீஷு |**
**பி$^3$ரம்மா த்வோ வத$^3$தி ஜாதவித்$^3$யாம்**
**யக்$^3$ஞஸ்ய மாத்ராம் மிமிமீத உத்வ: ||**

அடுத்த பதத்தின் 3-4ம் நுடிகளில் முதலாம் ஸ்ருத்யர்த்தையும், 5-6ம் நுடிகளில் இரண்டாம் வாக்கியத்தின் அர்த்தத்தையும், கிரந்த கர்தா் விவரிக்கிறார். அவற்றின் சுருக்க உரை இவ்வாறு இருக்கிறது. பாஹ்யாந்த:கரணாதி துக்கஜனக மூல காரணங்கள் உள்ள லிங்கதேகத்தை இழந்து, தாம் விரும்பிய போகங்களை நினைத்த மாத்திரத்திலேயே கொடுக்கும், பவித்ர புகழைக் கொண்ட தம் நித்ய ஸகனான ஹயவதன ஸ்வாமியை, முக்தர், தம் சபைகளில் மகிழ்ச்சியுடன் பாடல்களைப் பாடியவாறு வணங்குகின்றனர்.

முக்தரான பிரம்மர் அனேக பேர் இருக்கின்றனர். அவர்களில் ஒருவர் ரிக்வேத மந்திரங்களை மிகவும் தெளிவாக உச்சரிக்கிறார். இன்னொரு பிரம்மன், ஷக்வரி சந்தஸ்ஸின் ரிக்குகளில் 'காயத்ர'

என்னும் ஸாமத்தை பாடிக் கொண்டிருக்கிறார். இன்னொருவர் புராணாதி பௌருஷேய கிரந்தங்களுக்கு உரை எழுதிக் கொண்டிருக்கிறார். இன்னொருவர், யக்ஞ நாமக விஷ்ணுவின் அம்சத்தை சிந்தித்துக் கொண்டிருக்கிறார்.

அனேக முக்த பிரம்மர் விவித காலங்களில், பற்பல விதங்களில் ஸ்ரீஹரியை உபாசித்துக் கொண்டிருக்கின்றனர். பிரம்ம என்னும் சொல்லானது, ஸ்வயோக்ய பூர்ணத்வத்தை அடைந்த முக்த ஜீவனைக் குறிக்கும் சொல் ஆகும். ஆகையால், பிரம்மாதி அனைத்து முக்த ஜீவர்களால் வணங்கப்படும் ஸ்ரீஹரியே ஸர்வோத்தமன் என்றும், முக்தியில்கூட, பேதம் மற்றும் தாரதம்யங்கள் உண்டு என்றும் இந்த ஸ்ருதிகள் சொல்கின்றன என்பதை அறிய வேண்டும்.

பத 18

**யத்ர பி$^3$ரம்மா பவமான ச$^2$ந்த$^3$ஸ்யாம் வாசம் வத$^3$ன்**
**இத்யாதி$^3$ வேத$^3$வெ**
**முக்தியல்லிப்ப பி$^3$ரம்மாதி$^3$ ஜீவர**
**வர்த்தனெயனு வர்ணிஸுதலித$^3$கோ ||1**

யத்ர பிரம்மா பவமான சந்தஸ்யாம் வாசம் வதன் - எந்த வைகுண்டத்தில், முக்தபிரம்மன், பவமான சூக்தத்தில் இருக்கும் வாக்கியங்களை படித்தவாறு. இத்யாதி வேதவே - இவ்வகையான அர்த்தத்தை சொல்லும் வேதமே. முக்தியல்லிப்ப - முக்த ஸ்தானங்களில் இருக்கும். பிரம்மாதி ஜீவர - பிரம்மனே முதலான ஜீவர்களின். வர்த்தனெயன்னு - நடவடிக்கைகளை. வர்ணிஸுதலிதகோ - வர்ணிக்கிறது. நோடு - பார். (வேறு என்ன பிரமாணம் வேண்டும். முக்தரின் பேத மற்றும் ஸ்வரூபாதிகளைப் பற்றி தெரிவதற்கு?).

**ஹரிபுரதொ$^3$ளகி$^3$ப்ப ஸகல முக்தருக$^3$ள**
**இரவ ப$^3$ண்ணிஸி பொக$^3$ளுவ**
**ஸர்வே நந்த$^3$ந்தீத்யாதி$^3$ யெம்ப$^3$ர்த்த$^2$வனெ**
**வரெவெனு கேளி ஸஜ்ஜனரு ||2**

---

ஹரிபுரதொளகிப்ப - வைகுண்டத்தின் தலை நகரில் இருக்கும். ஸகல முக்தருகள - அனைத்து முக்த ஜீவரின். இரவ - நிலையை. பண்ணிஸி பொகளுவ - வர்ணித்து புகழும். ஸர்வே நந்தந்தீத்யாதி - அனைவரும் மகிழ்ச்சியுடன் இருக்கின்றனர் என்றெல்லாம். எம்பர்த்தவனெ - சொல்லும் பலன்களையே (புருஷார்த்தத்தையே). எரெவெனு - சொல்வேன். ஸஜ்ஜனரு - ஹரிபக்தர்கள். கேளி - சொல்லி அதில் நிஷ்டையை அடையுங்கள்.

**ஹ்ருத$^{3}$யத$^{3}$ பாபவ தொ$^{3}$ளெவனவ நீவு**
**பது$^{3}$மனாப$^{4}$னெ முக்தருக$^{3}$ள**
**குது$^{3}$ரெயந்தெ குணிவ கண்ணெ கோ$^{3}$சரனாகி$^{3}$**
**ஒத$^{3}$கி$^{3}$ஸி கொடு$^{3}$வ ஸுகா$^{2}$தி$^{3}$க$^{3}$ள ||3**

நீவு - சம்சாரிகளான சுஜீவர்கள். கேளி - (முந்தைய நுடியில் சொல்லியதை பார்க்கவும்) கேளுங்கள். அவ - ஸ்ரீஹரியே. ஹ்ருதயத பாபவ - சம்சாரத்திற்கு காரணமாகும் மனதின் தோஷத்தை (லிங்கதேக என்னும் ப்ராக்ருத பந்த என்னும் தோஷத்தை). தொளெவனு - (விரஜா நதியில்) போக்கி ஶுத்த ஸ்வரூபரன்னாக ஆக்குகிறான். முக்தருகள - முக்த ஜீவரின். கண்ணெ கோசரனாகி - கண் முன் நின்று (பிரத்யட்சமாகி). பதுமனாபனெ - அந்த பத்மனாபனே (ஸ்ரீஹரியே). குதுரெயந்தெ குணிவ - குதிரையைப் போல (முக்தர்களை ஈர்த்து) நடனமாட வைக்கிறான். ஸுகாதிகள - விரும்பிய விஷயங்களை. ஒதகிஸிகொடுவ - எந்த முயற்சியும் இல்லாமல் உடனடியாக கொடுக்கிறான்.

**அல்லல்லி பாடு$^{3}$வ முக்தர ஸபெ$^{4}$க$^{3}$ள**
**உல்லாஸவ தா கண்டு$^{3}$ திளிவ**
**ப$^{3}$ல்லித$^{3}$ யஷஸ்ஸுள்ள ஹரியெம்ப$^{3}$ ஸக$^{2}$னிந்த$^{3}$**
**எல்ல முக்தரு ஸுகி$^{2}$ஸுவரு ||4**

அல்லல்லி - அந்தந்த முக்த ஸ்தானங்களில் (வைகுண்டாதி ஸ்தானங்களில்). பாடுவ - தன் குணகானத்தில் ஈடுபட்டிருக்கும்.

முக்தர ஸபெகள - முக்த சமூகங்களின். உல்லாஸவ கண்டு - உற்சாகத்தைக் கண்டு. தா தளிவ - தான் (அவர்களுக்கு) தரிசனம் அளிக்கிறான். (மகிழ்கிறான்). பல்லித யஷஸ்ஸுள்ள - மிகப்பெரிய புகழ் உள்ள (உத்தம கீர்த்தியுள்ள). ஹரியெம்ப - ஸ்ரீஹரி என்னும். ஸகனிந்த - எப்போதும் தம்முடன் இருக்கும் ப்ரியமான நண்பர்களுடன் சேர்ந்து, அனைத்து முக்தர்களும். ஸுகிஸுவரு - எப்போதும் மகிழ்ச்சியுடன் இருக்கின்றனர்.

**ஒப்$^{3}$ப$^{3}$ பி$^{3}$ரம்மனு ரிக் வாக்$^{3}$யவ போஷி$^{2}$ஸுவ க$^{3}$ட$^{3}$ ம**
**த்தொப்$^{3}$ப$^{3}$ கா$^{3}$யத்ர ஸாமவனு**
**உப்$^{3}$பி$^{3}$த$^{3}$ மனதி$^{3}$ந்த$^{3}$ கா$^{3}$னவ மாடு$^{3}$த்த**
**ஒப்$^{3}$ப$^{3}$ பி$^{3}$ரம்மனு புராணக$^{3}$ள ||5**

ஒப்ப பிரம்மனு - முக்த பிரம்மரான அனேகரில் ஒருவன். ரிக்வாக்யவ - ரிக்வேதத்தின் மந்திரங்களை. போஷிஸுவ கட - போஷிக்கிறான் (அத்யயனம் செய்து கொண்டிருக்கிறான், பார்!). மத்தொப்ப - இன்னொரு முக்த பிரம்மன். காயத்ர ஸாமவனு - 'காயத்ர' என்னும் ஸாமவேத பாகத்தை. உப்பித மனதிந்த - அதி சந்தோஷத்தினால். கானவ பாடுத்த - கானம் செய்தவாறு. ஒப்ப பிரம்மனு - இன்னொரு பிரம்மன். புராணகள - புராணங்களை (தொடர்ச்சி அடுத்த பத்யத்தில் இருக்கிறது).

**அப்$^{3}$ஜனாப$^{4}$ன புரதி$^{3}$ ஓது$^{3}$திப்பனு க$^{3}$ட$^{3}$**
**மத்தொப்$^{3}$ப$^{3}$ ஸ்ரீஹரிய மூர்த்தியனெ**
**அப்$^{3}$ப$^{3}$ரதி$^{3}$ந்த$^{3}$ நெனெது$^{3}$ ஸுகி$^{2}$ஸுவ க$^{3}$ட$^{3}$**
**ஒப்$^{3}$ப$^{3}$ பி$^{3}$ரம்மனு ஸோமரஸவ ||6**

பத்மனாபன புரதி - ஸ்ரீஹரிபுரத்தில். ஓதுதிப்பனு கட - (புராணங்களை) படித்துக் கொண்டிருக்கிறான் அல்லவா?. மத்தொப்ப - இன்னொரு பிரம்மன். ஸ்ரீஹரிய மூர்த்தியனெ - ஸ்ரீஹரியின் ரூபத்தை. அப்பரதிந்த - வியப்புடன். நெனெது ஸுகிஸுவ கட - தியானித்து மகிழ்ச்சியடைகிறான். ஒப்ப பிரம்மனு - வேறொரு பிரம்மன். ஸோமரஸவ - ஸோம ரஸத்தை (அடுத்த நுடியில் தொடர்கிறது).

**அப்3ஜனாப4னிக3க்3னி முக2தி3 கொடு3வ க3ட3 ம**
**த்தொப்3ப3 பி3ரம்மனு பூஜிஸுவ க3ட3**
**ஸர்ப்ப தே3வருக3ளீபரியல்லி நரஹரிய**
**க3ர்ப்ப3வாஸத3ல்லிஹரு க3ட3 ||7**

அப்ஜனாபனிகெ – ஸ்ரீபத்மனாபனுக்கு. அக்னிமுகதி – அக்னியின் மூலம். கொடுவ கட – (ஸோம ரஸத்தை). அர்ப்பிக்கிறான் அல்லவா?. மத்தொப்ப பிரம்மனு – இன்னும் வேறொரு முக்த பிரம்மன். பூஜிஸுவ கட – பூஜித்துக் கொண்டிருக்கிறான். ஸர்வதேவருகளு – அனைத்து முக்த தேவதைகள். ஈ பரியல்லி – இப்படியான பற்பல வியாபாரங்களில் (செயல்களில்). நரஹரிய – ஸ்ரீநரசிம்மனிடம். கர்ப்பவாஸதலிஹரு – சரணடைந்திருக்கின்றனர்.

**இந்தனந்த பி3ரம்மாத்4யரு வைகுண்ட2த3ல்லி**
**அந்தரந்தரத3லிஹரெந்து3**
**மந்த்ரக3ளே கொண்டா3டு3தலிவெயத3ரிந்த3 ஸ்ரீ**
**காந்தன புரிய நெனெவெ ||8**

இந்து – இவ்வாறு. அனந்தபிரம்மாத்யரு – எண்ணிக்கையற்ற பிரம்மாதி முக்தர்கள். வைகுண்டதல்லி – வைகுண்டபுரியில். அந்தரந்தரதலி – வெவ்வேறு செயல்களில் (பிரம்மாதிகள் தரதம பாவத்தினால்). இஹரெந்து – இருக்கிறார்கள் என்று. மந்த்ரகளெ – (அனாதி நித்ய) வேதங்களே. கொண்டாடுதிவெ – ((முக்த லோகங்களின் மகிமைகளை) கொண்டாடுகின்றன. அதரிந்த – ஆகையால். ஸ்ரீகாந்தன புரிய – லட்சுமிபதியின் தலை நகரை (சர்வைஷ்வர்ய சம்பன்னனாகி நிலைத்திருக்கும் ஸ்ரீஹரியின் புரத்தை). நெனெவெ – நினைத்து வணங்குகிறேன்.

** மிகவும் சுறுசுறுப்பாக இருப்பதால், குதிரை, 'அஷ்வ' (காரணப்பெயர்) என்று அழைக்கப்படுகிறது. நடனமாடும் குதிரை, தன் அங்காங்கங்களின் சுறுசுறுப்பினால், பார்ப்பவர்களின் மனங்களை ஈர்ப்பதைப் போல, ஸ்ரீஹரி, முக்தர்களை ஈர்த்து சுகத்தைக் கொடுக்கிறான்.

** ஸ்ரீஹரி, ஜீவர – சேதனர்களின் அனாதி நித்யசுகன் (உடன் இருப்பவன்). முக்தியிலோ, எப்போதும் தரிசனம் அளித்தவாறு, சுகத்தைக் கொடுக்கக்கூடிய நண்பனாகவே இருக்கிறான்.

** முக்தியில் (முக்த லோகத்தில்) அனாதி காலத்திலிருந்து தத்தம் பிரம்ம கல்பத்தில்) முக்தராகி வந்த, எண்ணிக்கையற்ற பிரம்மா் இருக்கின்றனர். அவர்கள் தம் விருப்பப்படி பற்பலவிதமான ஹரிபூஜைகளில் ஈடுபட்டு மகிழ்ச்சியுடன் இருக்கின்றனர். வேத அத்யயன, புராணங்களை படித்தல், கேட்டல், யக்ஞாதி ஸ்ரீஹரியின் அர்ச்சனைகள் ஆகிய முக்தர்களின் செயல்கள், அவர்களுக்கு கிடைக்கப்போகும் வேறொரு பலன்களுக்கு சாதனங்கள் அல்ல. இங்கு முன்னர் கூறியதைப் போல ('ஸாத்யானந்த ஸ்வரூபாஸ்து பக்திர்னைவாத்ர ஸாதனம்') இந்த செயல்களை மகிழ்ச்சியுடன் செய்கின்றனரே தவிர, இவை மகிழ்ச்சிக்காக செய்யப்படுபவை அல்ல என்னும் முக்கிய பிரமேயத்தை மறக்கக்கூடாது. காயத்ர ஸாமத்தை, சாந்தோக்ய உபநிஷத், இவ்வாறு சொல்கிறது. 'மனோ ஹிங்காரோ வாக் ப்ரஸ்தாவ: சக்ஷுருத்கீத: ஸ்ரோத்ரம் ப்ரதிஹார; ப்ராணோ நிதனம் ஏதத்காயத்ரம் ப்ராணேஷு ப்ரோதம்'. 'ஹிம்' எனப்படும் (ஹிங்கார என்று அழைக்கப்படும்) பிரத்யும்னன் மனதில் இருந்து மன என்று அழைக்கப்படுகிறான்.

ப்ரஸ்தாவ எனப்படும் வாசுதேவன் வாக் என்று அழைக்கப்பட்டு, வாக் இந்திரியத்தில் இருக்கிறான். உத்கீத எனப்படும் நாராயணன், கண்ணில் இருந்துகொண்டு, சக்ஷு எனப்படுகிறான். ப்ரதிஹார எனப்படும் அனிருத்தன், காதில் இருந்துகொண்டு, ஸ்ரோத்ர எனப்படுகிறான். நிதன நாமக சங்கர்ஷணன் ப்ராணனில் இருந்துகொண்டு ப்ராண எனப்படுகிறான். ப்ராணனில் இருக்கும் விஷ்ணுவை அடையும் காயத்ர நாமமானது, இந்திரியங்களில் இருக்கும் விஷ்ணுவை வணங்குகிறது. ஆதி மற்றும் உபத்ரவங்கள் என்னும் நாமங்கள் சேர்ந்து, ஸப்த வித ஸாமங்கள் என்றும் சொல்லப்படுகின்றன. அனைத்து நாமங்களால் புகழப்படுபவன் 'ஸாம' நாமக ஸ்ரீஹரியே.

# 1. மோட்ச ஸந்தி

-----------------------------------------------------------------------------------------

** 'அனந்தபிரம்மாத்யரு' என்றால், எண்ணிக்கையற்ற (ஏராளமான) பிரம்மனே முதலான முக்த ஜீவர்கள். நித்யமான தம் ஸ்வரூப தர்மங்களுக்கு தக்கதான, ஹரிஸேவைகளை முக்தியில் ஸ்வபாவத்தினாலேயே செய்கின்றனர். அவை ஸாதன ரூபங்களாக இல்லை. முக்தர்கள் விதியால் கட்டுப்பட்டவர்களும் இல்லை.

இஜ்யஹே யக்ஞ ஷீலைஸ்ஸ யக்ஞ: ப்ராக்ஞமத்யே பர: ப்ரோச்யதேऽனை: |
கீயதே கீயகீர்த்தி: சுகீதை: வித்யபத்தை: ஸதானந்த ஸாந்த்ரை: ||
(மத்வ விஜய)
முக்தர்கள் ஸ்வபாவத்திலேயே யக்ஞாதி கர்மங்களை செய்கின்றனர் என்றும், விதிக்கு கட்டுப்பட்டு அல்ல என்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

** 'வ்யவேத ஸங்க்லேஷ விவோஹஸாத்வஸம் ஸ்வத்ருஷ்டவத்பிர் விபுதைரபிஷ்டுதம்' என்று பாகவதத்தில் வைகுண்ட லோகத்தை ரிஷி முதலான சித்தர்கள் நினைத்து வணங்குகின்றனர் என்று சொல்லப்பட்டிருக்கிறது. வைகுண்ட ஸ்மரணையின் மகிமையை குறிப்பிட்டவாறு 'ஸ்ரீகாந்தன புரிய நெனெவெ' என்கிறார் கிரந்தகாரர்.

பத 20 ராகம்: நாதநாமக்ரிய. தாளம் : ஜம்பெ
**மனோஜவேஷ்வஸமா ப$^3$பூ$^3$வு: எம்ப$^3$**
**சினுமயராத$^3$ முக்தரிகு$^3$**
**அனுப$^4$விஸுவ ஆனந்தா$^3$தி$^3$க$^3$ள தாரதம்ய**
**வனு ஸ்ருதி தானெ பேளிதல்ல ||1**
**அத$^3$ரிந்த$^3$ பொ$^3$ம்மபட்டத$^3$வரெல்லவரொளு**
**மொத$^3$லிக$^3$ரெந்த$^3$வர சந்த$^3$தி$^3$**
**பத$^3$விய பே$^3$ரெ கொண்டா$^3$டி$^3$து மத்துளித$^3$வர**
**நொந்தா$^3$கி$^3$ துதிஸிது ||2**

மனோஜவேஷ்வஸமா பபூவு: - ப்ரக்ஞாதி குணங்களில் தாரதம்ய உள்ளவர்கள். எம்ப - என்று சொல்லப்படும். ஸ்ருதி - ஸ்ருதி. சினுமயராத - ஞானஸ்வரூபரான. முக்தரிகு - முக்த

ஜீவர்களுக்கும்கூட. அனுபவிஸுவ - அவர்கள் அனுபவிக்கும். ஆனந்தாதிகள - சுக ஞானாதிகளின். தாரதம்யவனு - தரதம பாவங்களை. தானே - ஸ்வ்யம். பேளிதல்ல - சொல்லப்பட்டிருக்கிறது அல்லவா? ||1

அதரிந்த - இந்த ஸ்ருதி பிரமாணத்தினால். பொம்மபட்டதவரு - பிரம்ம பதவிக்கு தகுதி பெற்ற ஜீவர்கள் (பிரம்ம பதவியிலிருந்து முக்தர் ஆனவர்கள்). எல்லவரொளு - அனைத்து முக்தர்களில். மொதலிகரெந்து - சிறந்தவர்கள் என்று. அவர சந்தத - அவர்களுக்கு தகுதியான. ஈ பதவிய - இந்த பிரம்ம பதவியை (அல்லது அவர, சந்தத ஈ பதவிய - அவர்களின் இந்த மிகச்சிறந்த பதவியை). பேரெ - தனியாக. கொண்டாடிது - ('ருஜாம் த்வ: போஷயாஸ்தே' என்னும் ஸ்ருதி) வணங்கி வர்ணிக்கிறது. மத்துளிதவரனு - முக்த பிரம்மர்களைத் தவிர மற்ற முக்தர்களை. ஒந்தாகி - ஒன்றாக (முக்தர் என்னும் ஒரு குழுவினராக). துதிஸிது - புகழ்கிறது. ||2

** 1ம் நுடியில் சொல்லப்பட்ட ஒரு ஸ்ருதி இவ்வாறு இருக்கிறது.

அக்ஷண்வந்த: கர்ணவந்த: ஸகாயோ மனோஜவேஷ்வஸமா பபூவு: |
ஆதக்னாஸ உபகக்ஷாஸ த்வே ஹ்ரதா இவ ஸ்னாத்வா உ த்வேதத்ருஷ்ரே ||

அக்ஷண்வந்த: - கண் உள்ளவர்கள். கர்ணவந்த: - காது உள்ளவர்கள். (பகவத் தரிசனம் - பகவன் மகிமைகளை சிரவணம் செய்வதான முக்கிய பலன்களைக் கொண்ட; அதாவது, பலன்களைக் கொடுக்கும் கண் முதலான இந்திரியங்களைக் கொண்டவர்கள்). ஸகாய: - பரஸ்பரம் அன்பு செலுத்துபவர்கள் (பொறாமை ஆகியவை இல்லாதவர்கள்). அல்லது, ஸ்ரீஹரியையே நித்ய நண்பனாக உள்ளவர்களான முக்தர்கள். மனோஜவேஷு - மனோவேகத்தில் (ஞானாதி குணங்களில்). அஸமா: - சமம் இல்லாதவர்கள் (தாரதம்ய உள்ளவர்கள்). பபூவு: - ஆனாலும். த்வேஉ - அவர்களில் சிலர். ஆதக்னாஸ: - விஸ்தாரமான பாற்கடலில் க்ரீடை செய்பவர்களாகவும். த்வே - மேலும் சிலர்.

1. மோட்ச ஸந்தி

-----------------------------------------------------------------------------------------------

உபகக்ஷாஸ: - அருகில் இருக்கும் அஷ்வத்த மரத்தில் க்ரீடை செய்பவர்களும். த்வே - மேலும் சிலர். ஸ்னாத்வா உ ஹ்ரதா இவ - ஸ்னான யோக்யமான (மூழ்கி ஸ்னானம் செய்யத்தக்கவரான) ஸரோவரகளந்தெ - (ஹ்ரத - மடு). தியானதல்லி - தியானம் செய்தவாறு. தத்ருஷ்ரே - (பரமாத்மனை) கண்டார்கள். (பற்பல செயல்களை செய்யும் இந்த அனைவரும் காண்கிறார்கள்).

பத 21 ராகம்: காம்போதி. தாளம்: ஜம்பெ

**ஹரியரமனெய ஒலக$^3$ ஷாலெயொளகி$^3$ப்ப**
**விரிஞ்சராஷிகெ$^3$ லெக்கவில்ல**
**தரதரத$^3$லி பா$^3$ள்வ ககே$^2$ந்தி$^3$ர சந்தி$^3$ராதி$^3$ ஸுரர**
**திந்தி$^2$ணியனேனெம்பெ$^3$ ||1**

**புட்ட முனிய பொட்டெயம்பு$^3$தி$^4$ ஜலகிம்பு$^3$**
**கொ$^3$ட்டதெ$^3$னலு ஸர்வேஷ்வரன**
**பட்டத$^3$ மனெய சாவடி$^3$ ப$^3$ந்த$^3$ ப$^3$ந்த$^3$ஷ்டு**
**முக்தர்கி$^3$ம்பு$^3$ கொட$^3$தெ$^3$ ||2**

**ஒந்தொ$^3$ந்து$^3$ கல்பதி$^3$ முக்தராத$^3$மரரு**
**சந்த$^3$ சந்த$^3$த$^3$லல்லிஹரு**
**இந்தி$^3$ரெயோலக$^3$தி$^3$ வாணி மொத$^3$லாத$^3$**
**இந்து$^3$முகி$^2$யரொப்பிஹரு ||3**

**அவர லாவண்யத$^3$ அவர தாருண்யவ**
**அவருட்ட சித்ராம்ப$^3$ரவ**
**அவர ஸர்வாங்க$^3$ தி$^3$வ்யாப$^4$ரணங்க$^3$ளா**
**விவரவனாவ ப$^3$ண்ணிஸுவ ||4**

ஹரிய - வைகுண்டபதியின். அரமனெய - திவ்ய அரண்மனையின். ஒலகஷாலெயொளகிப்ப - (தரிசனம் அளித்து ஸேவையை ஏற்றுக்கொள்ளும்). சபா மண்டபத்தில் இருக்கும். விரிஞ்சிராஷிகெ - முக்த பிரம்மரின் சமூகத்திற்கு. லெக்கவில்ல - எண்ணிக்கை இல்லை. தரதரதி - பற்பல விதங்களில். பாள்வ - ஒளிரும். (பற்பல கார்யங்களில் ஈடுபட்டிருக்கும்). ககேந்த்ர சந்த்ராதி சுரர - கருட, இந்திர, சந்திராதி தேவதைகளின்.

திந்திணியனு - ஸமூகங்களை. ஏனெம்பெ - என்னவென்று வர்ணிப்பேன்.

புட்டமுனிய - அல்பனான அகஸ்த்ய ரிஷி. பொட்டெயு - வயிறு. அம்புதிஜலகெ - கடல் நீருக்கு. இம்புகொட்டந்தெ - (தன்னில் நிரப்பிக் கொள்ள) வாய்ப்பு கொடுத்தது என்று. எனலு - சொல்வதற்கு. ஸர்வேஷ்வரன - சார்வபௌமனான வைகுண்டபதியின் (எண்ணிக்கையற்ற சாமர்த்தியம் உள்ள ஸ்ரீஹரியின்). பட்டதமனெய சாவடி - அரண்மனையின் சபாமண்டபம். ஒந்தபந்தஷ்டு முக்தர்க்கெ - வரும் அனைத்து முக்தர்களுக்கும் (முக்த சமூகத்திற்கு). இம்புகொடதே - இடத்தினை கொடுப்பதில் என வியப்பு இருக்கிறது? ||2

ஒந்தொந்து கல்பதி - ஒவ்வொரு பிரம்ம கல்பத்தில். முக்தராதமரரு - முக்தியை அடையும் தேவதைகள். சந்ததலிஹரு - பற்பல விதமானவர்கள் இருக்கின்றனர் (தரதமயுக்தமான வகைவகையான சுகங்களை அனுபவித்துக் கொண்டிருக்கின்றனர்). இந்திரேய - ஸ்ரீலட்சுமிதேவி. ஒலகதி - ஸபையில். வாணி மொதலாத - சரஸ்வதிதேவி முதலான. இந்து முகியரு - முக்த ஸ்த்ரீயர். ஒப்பிஹரு - நிலைத்திருக்கின்றனர். ||3

அவரின் லாவண்யவ - அந்த பெண்களின் ஸௌந்தர்யத்தை. அவர தாருண்யவ - அவர்களின் நித்ய யௌவனத்தின் அழகினை. அவருட்ட - அவர்கள் தரித்துக் கொண்டிருக்கும். சித்ராம்பரவ - தம் சர்வ அங்கங்களில் தரித்திருக்கும் அவரின் திவ்ய பூஷணங்களை. விவரவனு - அவற்றின் விவரங்களை. அவ பண்ணிஸுவ - வர்ணிக்க யாரால் முடியும்? (யாராலும் முடியாது. வர்ணிக்க அப்பாற்பட்டது). ||4

** மிகவும் வைபவமான வைகுண்டத்தில் இருக்கும் முக்த பிரஜைகளைப் பற்றி யாராலும் முழுதாக வர்ணிக்க முடியாது. மஹாகவிகளின் சாமர்த்தியத்தை மீறி நிற்கும் சிறப்பு அது.

வைகுண்டே தே ஸ்ரீவிசேஷா ஜனானாம
த்யாஸ்சர்யம் சித்தவாசாம பூமி:

## 1. மோட்ச ஸந்தி

---

வைகுண்ட லோகத்தின் அந்த மக்களின் சிறப்புகள் மிகவும் விசித்திரமானவை. பேச்சினில் சொல்வதற்கும், மனதில் சிந்திப்பதற்கும், முடியாததாக இருக்கிறது என்றும், 'இஹ ஸம்பவேத்ஸகல காந்திரஸ: கதகோsதிகோக்திபிரத: கவிபி:' -- அதாவது, மஹாமுனிகள் மிகவும் உயர்வு நவிற்சியாக சொல்லும் விஷயங்கள் அனைத்தும் அந்த உலகத்தில் இருக்கிறது -- என்றும் ஸ்ரீஸுமத்வ விஜயத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அங்கு சொல்லப்பட்டிருக்கும் வைகுண்டத்தின் விவரங்களின் சாரமே இந்த பத்யத்தில் இருக்கிறது.

ததனாதிகாலமிதமுக்திரதே
ரகணேய ஷம்புமுக ஸங்கததே: |
நகரைர் மஹாபுரமஸம்ஹதிமல்லஸதி
ப்ரபோரயமஹோ மஹிமா ||

விதயோ விஹங்கபதயோsகணிதா ரமணியுதாஸ் ஸபணிபேந்த்ர முகா:
அதிஸுந்தரா: ஸுரபய: புருஷா:... விசரந்தி நித்ய தருணா இஹ தே

மற்றும்

கரபல்லவைஸ்தரலிதைர் லலிதைரஸக்ருத்க்வணத் கனககங்கணகை:
வரஹாரராஜிபுருதானுபதம் ப்ரதிலோடிதாப்ரஷனைருரஸி

ஆகிய வாக்கியங்களின் பாவத்தை இங்கு சிந்திக்க வேண்டும். அனாதிகாலம் – அனாதி காலத்திலிருந்து. இதமுக்திரதே: – அடைந்த மோட்ச சுகம் உள்ள. அகணேயஷம்புமுக ஸங்கததே: – சதுர்முகரே முதலான எண்ணிக்கையற்றவர்கள் (பற்பல). (ஷம்புபிரம்மத்ரிலோசனெள – அமரகோசம்). நகரை: – பட்டணங்களால். அஸம்ஹதியத் – இடப்பற்றாக்குறை இல்லாமல் (ஸம்ஹதி – நெரிசல்). தத் – அந்த. மஹாபுரம் – (வைகுண்டம் என்னும்) மஹா நகரி. லஸதி – நிலைத்திருக்கிறது. அயம்

மஹிமா – (அனாதி காலத்திலிருந்து பிரம்ம, கருடாதி பலர் வந்து சேர்ந்தாலும், அந்த நகரங்கள் இடப்பற்றாக்குறை இல்லாமல், அனைவருக்கும் இடம் அளிப்பதாக இருக்கிறது என்னும்) இந்த மகிமை. அஹோ – வியப்பு. அகணிதா: – எண்ணிக்கையற்ற (பற்பல). விதய: – சதுர்முக பிரம்மர். விஹங்க பதய: – கருடர். ஸ்கணிபேந்த்ரமுகா: – சேஷன் முதலான இந்திராதி தேவதைகள். ரமணீயுதா: – தம் (நியத யுவதியரான) பெண்களுடன் (மோதரஸவன்னு – ஸ்ரீஹரி தரிசனத்தால் மிகச் சிறந்த ஆனந்தத்தை அனுபவிக்கின்றனர்).

அதிஸுந்தரா: – (அந்த முக்தர்கள்) மஹா சுந்தரரும். ஸுரபய: – சகஜமான சுகந்த நறுமணத்துடன் கொண்ட தேகம் கொண்ட. புருஷா: – முக்த புருஷர்கள். இஹ – இந்த வைகுண்டத்தில். நித்யதருணா: – நித்ய யுவகராகி. விசரந்தி – சஞ்சரிக்கின்றனர்.

மற்றும்

தரலிதை: – சபலங்களான (நடமாடிக் கொண்டிருக்கும்). லலிதை: – மிருதுவான. அஸக்ருத் – நிரந்தரமாக. க்வணத்கனக கங்கணகை: – ஓசை கொடுக்கும் தங்கமயமான கங்கணங்களை (கை-வளை) அணிந்திருக்கும். கரபல்லவை: – மென்மையான கைகளாலும். அனுபதம் – ஒவ்வொரு தப்படிக்கும். உரஸி – வக்ஷ ஸ்தளத்தில் (இதயத்தின் மேல்). அஷனை: – வேகமாக. ப்ரதிலோடிதாபீ: – நடப்பதால் அசைந்தாடும் குச்சங்களால். வரஹாரராஜிபி: – முத்து மாலைகளின் ஒளியினாலும் (ஒளிரும் முக்த ஸ்த்ரீ மக்களால் நிரம்பியிக்கின்றன).

ஸ்லோக 24-25

**இத[3]ம் ஞானமுபாஸ்ரித்ய மம ஸாத[4]ர்ம்யமாக[3]தா: |**
**ஸர்கே[3]ऽபி நோபஜாயந்தே ப்ரளயே ந வ்யத[2]ம் தி ச ||24** (கீதை)

**ஸர்வே சதுர்பா[4]ஹவ உன்மிஷன்மணி ப்ரவேகனிஷ்காப[4]ரணா: ஸுவர்ச்சஸ: |**
**ப்ரவாளவைடூர்ய ம்ருணாலவர்ச்சஸ: பரிஸ்புரத் குண்ட[3]லமௌளி மாலின: ||25** (பாகவத)

1. மோட்ச ஸந்தி

---

இதம் ஞானம் - (ஸ்வதந்த்ரனான என் இச்சையினால், என் அதீனமான ப்ரக்ருதி, ஜீவர்களை கட்டுப்படுத்தியிருக்கும் விதத்தை, அந்த பந்தனத்திலிருந்து முக்தர் ஆக்கும் மார்க்கத்தை போதிக்கும்) இந்த ஞானத்தை. உபாஸ்ரித்ய - அடைந்து (அதில் நிஷ்டையை அடைந்து). மம - என். ஸாதர்ம்யம் - சமான தர்மத்தை. ஆகதா: - அடைந்தவர் (என் லோகத்திற்கு வந்தவர்கள்). ஸர்க்கேடபி - ஸ்ருஷ்டி காலத்தில் கூட. ந உபஜாயந்தே - (ப்ராக்ருத தேஹ யோக ரூபத்தின்) உற்பத்தியை (பிறவியை) பெறுவதில்லை. ப்ரலயே - பிரளய காலத்தில். ந வ்யதந்தி - (மரணாதி) துக்கங்களை பெறுவதில்லை.

(ஸாரூப்ய முக்தியை அடைந்த) அனைவரும். சதுர்பாஹவ: - நான்கு தோள்களைக் கொண்டவர். உன்மிஷன் மணிப்ரவேக நிஷ்கா பரணா: - பளபளக்கும் ரத்னமயமான தங்க ஆபரணங்களைக் கொண்ட. ஸுவர்ச்சஸ: - உத்தம தேக காந்தியைக் கொண்டவர்கள். ப்ரவாள வைடூர்ய ம்ருணாலவர்ச்சஸ: - பவழ, வைடூர்ய, தாமரை மலர்களைப் போல ஒளிர்கிறார்கள். பரிஸ்புரத் குண்டல மௌலிமாலின: - பிரகாசமான கர்ண குண்டல. கிரீட - மாலைகள் உள்ளவர்கள் (இவற்றைக் கொண்டு ஒளிர்கின்றனர்).
பத 22 ராகம்: நாதநாமக்ரிய. தாளம் : ஜம்பெ

**இட்ட முகுடங்க$^3$ள தொட்ட அங்கி$^3$க$^3$ள**
**வட்ட பத$^3$க ஹாரக$^3$ள**
**உட்ட பொ$^3$ம்ப$^3$ட்டெக$^3$ள கங்கணாங்க$^3$த$^3$க$^3$ள**
**மெட்டித$^3$ பொன்ன பாவுகி$^3$ய ||1**

**பொளெவ குண்ட$^3$லக$^3$ள உலிவ கிங்கிணிக$^3$ள**
**நளனளிஸுவ நெவளக$^3$ள**
**நலிவந்து$^3$கெ$^3$க$^3$ள முக்தர தி$^3$வ்யாங்க$^3$தா$^3$**
**செலுவனதா$^3$வ ப$^3$ண்ணிஸுவ ||2**

**கரசதுஷ்டயத$^3$ முக்தரு க்ருஷ்ணனொட$^3$னல்லி**
**ஸரி பெ$^3$ரெஸிஹ ஸமயத$^3$ல்லி**
**உரத$^3$ ஸ்ரீவத்ஸ கௌஸ்துப$^4$த$^3$ குருஹனெ கண்டு$^3$**

**ஹரி இவனெந்த³ரிவனு க³ட³ ||3**

**விரிஞ்ச கைமுகி³யலு க³ருட³னேரி ப³ரலு**
**உரக³ன மஞ்சத³ல்லிரலு**
**அரிவரு அல்லதி³த்த³ரெ ஸாரூப்யதி³**
**தெரெபடி³ஸிகொட³லிஹுது க³ட³ ||4**

இட்ட முகுடகள - தரித்த கிரீடங்களை. தொட்ட அங்கிகள - அணிந்த கவசங்களை. வட்ட பதகஹாரகள - அணிந்த பதக்கங்களைக் கொண்ட மாலைகளை. உட்ட பொம்பட்டெகள - அணிந்திருக்கும், தங்கமயமான வஸ்திரங்களை (அல்லது சரிகை உடனான பீதாம்பரங்களை). கங்கணாங்கதகள - தோள் ஆபரணங்களை. மெட்டித பொன்னபாவிகெய - கால்களில் தரித்த பொன் அணிகலைகளை ||1

பொளெவ குண்டலகள - ஒளிரும் குண்டலங்களை. உலிவ கிங்கிணிகள - சத்தம் செய்யும் கொலுசுகளை. நளநளிஸுவ நெவளகள - ஆடும் லோலாக்குகளை. நலிவந்துகெகள - சரசரக்கும் கால் அணிகலன்களை. முக்தர - (ஆகிய அலங்காரங்களைக் கொண்ட) முக்தரின். திவ்யாங்கத - திவ்ய தேகத்தின். ஆ செலுவ - அற்புத அழகினை. அதாவ - யாரால். பண்ணிஸுவ - வர்ணிக்க முடியும்? ||2

கரசதுஷ்டயத - நான்கு தோள்களைக் கொண்ட. முக்தரு - இந்த முக்தர்கள். கிருஷ்ணனொடனெ - ஸ்ரீஹரியுடன். அல்லி - வைகுண்டத்தில். ஸரிபெரஸிஹ ஸமயதல்லி - ஒன்றாக சேர்ந்திருக்கும் சமயத்தில். உரத - இதயத்தில் இருக்கும். ஸ்ரீவத்ஸ கௌஸ்துபத - ஸ்ரீவத்ஸ மற்றும் கௌஸ்துப (கழுத்தில் இருக்கும்) கௌஸ்துப மணிகளின். குருஹனெ கண்டு - லாஞ்சனங்களைப் பார்த்து. ஹரியெவனெந்து - இவனே ஸ்ரீஹரி என்று. அரிவனு கட - அறிகிறான். (இவ்வாறு அடையாளம் சொல்ல வேண்டுமே தர வேறு காரணத்தினால் அல்ல). ||3

விரிஞ்ச கைமுகியலு - முக்தபிரம்மன் கை குவித்து வணங்கியபோது. கருடனேரி பரலு - கருடாரூடனாக வந்தபோது.

---

உரகன மஞ்சதல்லிரலு - சேஷன் படுக்கையாக ஆனபோது (சேஷதேவனின் தேகத்தில் படுத்தபோது). அரிவரு - (அவனே ஸ்ரீஹரி என்று) அறிகின்றனர். அல்லதித்தரெ - இந்த லட்சணங்கள் இல்லையென்றால் (இவற்றைத் தவிர). ஸாரூப்யாதி - ஸாரூப்ய முக்தியில். தெரவடிஸிகொடலிஹரு கட - (ஸாரூப்ய முக்தரின் ரூபம்) மோகம் கொள்ளச் செய்கிறது (இவனே ஸ்ரீஹரி என்னும் நிர்ணயத்தை) மறக்கச் செய்கிறது. ||4

** முக்தர்களின் ஸாரூப்யம் இவ்வாறு வர்ணிக்கப்பட்டுள்ளது.

ஸசதுர்புஜா வனஜபத்ரத்ருஷோ வரவேஷிணோऽத்ர ஸபிஷங்கபடா: |
அருணப்ரபாஸ்ச தருணாப்ரருசோ விசரந்தி நாதருசய: புருஷா: ||
(மத்வ விஜய)

அத்ர - இந்த வைகுண்டத்தில். நாதருசய: - (தம்) நாதனாத வைகுண்டபதியின் ஒளிக்கு (சிறிது) ஒப்பான ஒளியைக் கொண்ட. புருஷா: - முக்த ஜீவர்கள். விசரந்தி - சஞ்சரிக்கின்றனர். ஸசதுர்புஜா: - (அவர்கள்) நான்கு தோள்களைக் கொண்டவர்கள். வனஜபத்ரத்ருஷ: - தாமரை தளத்தைப் போல கண்களைக் கொண்ட. வரவேஷிண: - உத்தம வஸ்திர அலங்காரங்கள் செய்து கொண்டவர்கள். ஸபிஷங்கபடா: - பீதாம்பர தாரிகள். அருணப்ரபா: - உதய சூரியனைப் போல ஒளி உள்ளவர்கள். தருணாப்ரருச: - (சிலர்) கார்மேகத்தைப் போல வண்ணத்துடன், ஒளிர்கின்றனர்.

முந்தைய 24ம் ஸ்லோகத்தில் கூறியதைப் போல, முக்தர்கள் பிறப்பு இறப்பு இல்லாதவர்கள் என்பதில், பரமாத்மனின் சமான தர்மம் உள்ளவர்கள். பரமாத்மனுக்கு சமமான ஞானானந்தாதிகள் மட்டும் அவர்களில் இல்லவேயில்லை. ஜனன மரணங்களால் வரக்கூடிய பிற தோஷங்கள்கூட இல்லை என்று மத்வவிஜயம் தெளிவாக சொல்கிறது.

ந பவந்தி யத்ர ம்ருதிஜன்ம ஜராஸ்த்ரிவிதம் பயம் கிமுத துக்க கண: |

அபரம் ச கிஞ்சிதஶுபம் ந பவேன்ன குணாதி தத்ப்ரவமூலமபி ||

யத்ர - வைகுண்டத்தில். ம்ருதிஜன்மஜரா: - மரண, ஜனன, முதுமை ஆகியவை. த்ரிவிதம் - ஆதிபௌதிக, ஆத்யாத்மிக, ஆதிதெய்விக என்னும் மூன்று வித. பயம் - பயங்களோ. ந பவந்தி - இருப்பதே இல்லையோ (இவ்வாறு இருக்கையில்), கிமுத துக்ககண: - பிற துக்கங்களின் சமூகம் எங்கு வந்தது? (இருப்பதற்கு எப்படி சாத்தியம்?). அபரம் ச - திரும்ப (அடுத்து). கிஞ்சித் அஶுபம் - எந்தவொரு (மாத்ஸர்யாதி) தோஷங்கள். ந பவேத் - இருப்பதற்கு வாய்ப்பே இல்லை (ஏனெனில்) தத்ப்ரபவமூலம் - தோஷங்களின் உற்பத்திக்கு காரணமான. குணாத்யபி - சத்வாதி ப்ராக்ருத குணங்கள். ந - இல்லை.

பத 23 ராகம்: பந்துவராளி. தாளம்: ஆதி

**ஸாயுஜ்ய ஸாலோக்ய ஸாமீப்ய ஸாரூப்ய**
**ஈ யந்த$^{3}$தி$^{3}$ சதுர்வித$^{3}$ முகுதியொளு**
**ஹேயலிங்க$^{3}$தே$^{3}$ஹ போத$^{3}$ரே மேலவரவர**
**யோக்$^{3}$யதெயிந்த$^{3}$லொப்புவ க$^{3}$ட$^{3}$ ||1**

ஸாயுஜ்ய, ஸாலோக்ய, ஸாமீப்ய, ஸாரூப்ய (என்னும்) ஈயந்ததி - இப்படியாக. முகுதியொளு - முக்தியில். சதுர்வித - நான்கு விதங்கள் உள்ளன. ஹேய - அழியக்கூடிய (அழிவதற்கு யோக்யமான). லிங்கதேஹ - லிங்கதேகம். போதரெ - சென்றால். மேலெ - அதற்குப் பிறகு. அவரவர - அந்தந்த ஜீவர்களின். யோக்யதெயிந்த லொப்புவுது கட - யோக்யதைக்கேற்ப (அவரின் ஸ்வரூபம் தோன்றி) ஒளிரும்.

**ஸ்ரீகாந்தனங்க$^{3}$வ முட்டிகொண்டி$^{3}$ப்புது$^{3}$**
**பே$^{3}$காத$^{3}$ ஸாயுஜ்ய முக்தி காணிரோ**
**ஈ குஜனரெம்பைக்யவ யுஜிர் யோகே$^{3}$ எம்ப$^{3}$**
**வியாகரணோக்தி பி$^{3}$டி$^{3}$ஸிது ||2**

ஸ்ரீகாந்தன - லட்சுமிபதி. அங்கவ - தேகத்தை. முட்டி கொண்டிப்புது - கொண்டிருக்கிறது. பேகாத - விரும்பிய. ஸாயுஜ்ய முக்தி - சாயுஜ்ய முக்தியானது. காணிரோ -

அறியுங்கள். இந்த குஜனரு - மாயாவாதிகள் என்னும் துர்ஜனர்கள். எம்பைக்யவ - சொல்லும் 'ஐக்ய' ஷப்தார்த்தத்தை. 'யுஜிர் யோகே' என்னும் - யுஜிர் தாது, யோக (ஸம்பந்த) என்னும் அர்த்தத்தில் இருக்கிறது என்னும். வ்யாகரணோக்தி - வ்யாகரண நிரூபணம். பிடிஸிது - தெளிவாக கூறுகிறது.

**ஹரியங்க³வாஸ்ரைஸி இல்லிப்பதே³ அவர**
**பரக³தியாத³ர மேலெ முக்தியொளு**
**தரதரத³ல்லி ஹரிய முக்தியலிஹராகி³ ஆ**
**பரியஸூரரெ ஸாயுஜ்ய மோக்ஷகரு ||3**

ஹரியங்கவ - ஸ்ரீஹரியின் தேகத்தின் ஒவ்வொரு அங்கத்தையும். ஆஸ்ரயிஸி - அடைந்து. அல்லிப்பதே - அங்கு இருப்பதே. அவர பரகதியு - அவர்களுக்கு உத்தமகதியாகும். அதர மேலெ - அவரைவிட அதிக யோக்யதை இருப்பவர்கள் (தாரதம்யத்திற்கேற்ப). முக்த்யொளு - முக்தியில். தரதரதல்லி - (பற்பல விதமாக). (பஹ்வங்ககளல்லி - சர்வ அங்கங்களில்). ஹரியின் முக்தியில் இருப்பவராக. ஸ்ரீஹரியின் தேகத்தில் இருக்கிறார்கள் ஆகையால், ஆ பிரிய - அந்த மூத்த. ஸூரரே - தேவதைகளே. ஸாயுஜ்யமோக்ஷகரு - சாயுஜ்ய மோட்ச உள்ளவர்கள்.

ஏகாதஷேந்த்ரியாண்யேவம் தன்மாத்ரா பஞ்சகம் ததா |
ஷோடஷைவ கலா: ப்ரோக்தா: லிங்கதேஹஸ்ததாத்ம க: ||

கர்மேந்திரியங்கள் ஐந்து. ஞானேந்த்ரியங்கள் ஐந்து. மனஸ் - என மொத்தம் 11 இந்திரியங்கள். ஷப்த, ஸ்பர்ஷ, ரூப, ரஸ, கந்த என்னும் ஐந்து தன்மாத்ரங்கள், என மொத்தம் 16 தத்வங்களின் ஸூக்ஷ்ம அம்சங்களால் ஆனது லிங்க தேகம். மனுஷ்யோத்தமர்களால் துவங்கும் முக்தியோக்ய ஜீவ சமுதாயத்தவர்களுக்கு கிடைக்கும் மோட்சம், ஸாலோக்ய, ஸாமீப்ய, ஸாரூப்ய, ஸாயுஜ்ய என்று நான்கு விதங்கள் ஆகும். மனுஷ்யோத்தமரைவிட கீழான த்ருணாதி ஜீவர்களிலும் முக்தி யோக்யர் இருப்பார்கள். கிடைக்கும் முக்தியானது, அவரவர்களின்

உபாஸனைக்கு ஏற்பவே இருக்கிறது. உபாஸனையின் அதிகாரமோ அவரின் ஸ்வரூப யோக்யதையின் தாரதம்யத்திற்கு ஏற்பவே இருக்கிறது. ஸ்ரீஹரியின் ஒரு குணத்திலிருந்து துவங்கி பல குணங்களையும், அனந்த குணங்களையும் தியானிக்கும் அதிகாரிகள் இருக்கின்றனர்.

த்ருண ஜீவர்கள் ஏக குணோபாஸகர்கள். அவர்களுக்கு, ஆத்மா - மமஸ்வாமி என்னும் ஒரு குணதியானத்தினால் அந்த குண ஸ்வரூபனான ஸ்ரீஹரியின் பிரத்யட்சம் ஆகிறது.

சதுர்முக பிரம்மன், ஸ்ரீஹரியை அனந்தகுணோப ஸம்ஹார பூர்வக தியானித்து, அதன் மூலம் பிரத்யட்சம் ஆக்கிக்கொள்ளும் உத்தமாதிகாரி, தேவர்ஷி பித்ருபனரா: (தத்வ ஸங்க்யான) என்பதில், முக்தியோக்யஜீவ ஸமுதாயங்கள் ஐந்து பெரிய வர்க்கங்களாக பிரிகின்றனர் என்று சொல்லப்படுகிறது.

தேவதைகள், ரிஷிகள், பித்ருகள், சக்ரவர்த்திகள், மனுஷ்யோத்தமர்கள் என்னும் இந்த ஐந்து வர்க்கங்கள், மனுஷ்யோத்தமர் ஸத், சித், ஆனந்த, ஆத்மா என்னும் நான்கு குணங்களின் தியானத்திலும், அவர்களைவிட உத்தமர், யதா யோக்யமாக பல குணங்களின் உபாஸனையிலும் அதிகாரிகள் என்று சொல்லப்படுகிறது. இந்த அனைவருக்கும் கிடைக்கும் முக்தி, மேற்கூறியபடி நான்கு விதங்களாக இருக்கின்றன. அவரவர்களின் யோக்யதைக்கேற்ப அந்தந்த முக்தியே அவர்களுக்கு கிடைக்கிறது. உத்தம அதிகாரிகளான தேவதைகளில் சிறந்தவர்கள் மட்டும் (சுரர்கள்) ஸாயுஜ்ய முக்தியை அடைகின்றனர்.

** ஸ்ரீஹரியில் ஐக்யத்தை அடைவதே ஸாயுஜ்ய மோட்சம் என்று அறிவது, தமஸ் ஸாதக மித்யா ஞானம் ஆகும். பரமாத்மனில் பிரவேசிப்பது - அவனை அடைவதே 'ஸாயுஜ்ய' ஆகும். இவ்வாறு 'யுஜிர் யோகி' என்னும் தாதுவின் அர்த்தத்திலிருந்தும் தெரிகிறது. 'அங்காவல்லப' என்னும் தேவதைகள் ஸ்ரீஹரியின் கண் முதலான அங்கங்களிலிருந்து தோன்றி (ப்ராக்ருத தேக யோக்ய என்னும் ஜன்மத்தைப் பெற்று) அந்த பகவத் அங்கங்களையே விசேஷமாக

---

உபாசனை செய்து, முக்தியில், அந்தந்த அங்கங்களில் நிலைத்திருந்து, அங்கேயே பற்பல போகங்களை அனுபவித்து மகிழ்கின்றனர். தத்வாபிமானி தேவதைகளும் இந்த கும்பலை சேர்ந்தவர்களே ஆவர்.

'சக்ஷோ: ஸூர்யே அஜாயத இத்யாத்யுபாஸனம் ச தேவானாம் கார்யமேவ ஸ்வோத்பத்தி ஸ்தானத்வாத் முக்தௌ தத்ர லயஸ்ய அபேக்ஷிதத்வாச்ச உபபன்னம் தேஷாம் ததோபாஸனம் தேஷாம் தத்ர ப்ரவேஷோ ஹி முக்திரித்யுச்யதே புத்யை: (ஸூத்ர பாஷ்ய).

இதன் அர்த்தம்: சூரியன் கண்களிலிருந்து பிறந்தான். ஆகிய ஸ்ருதியில் சொல்லப்பட்ட பகவத் அங்கங்களின் மகிமைகளை, ஸூர்யாதி தேவதைகள் உபாசிக்கவே வேண்டும். ஏனெனில், அந்தந்த பகவத் அங்கங்கள் தமக்கு உற்பத்தி ஸ்தானம் ஆகியிருக்கிறது - அனைத்து விதங்களால் தமக்கு இருப்பிடமாக இருக்கிறது. முக்தியில் அங்கு தாம் பிரவேசிக்க வேண்டுமென்றால் (லய - பிரவேஷத்தினால் அதிலேயே அடங்குவது). ஆகையால், அவர் இவ்வாறு உபாசிக்க வேண்டியது சரியே ஆகும். அந்த தேவதைகளுக்கு பகவத் அங்க பிரவேசமே முக்தி என்று ஞானிகள் அறிந்திருக்கின்றனர்.

இந்த சாயுஜ்ய முக்தர், ஸ்ரீஹரியின் தேகத்திலிருந்து வெளியேயும் இருந்து, பற்பல போகங்களை அடைகின்றனர். இந்த இரு விதமான போகத்தினால் ஸ்வயோக்யமான பூர்ணானந்தத்தை அடைகின்றரே தவிர, ஸ்ரீஹரியின் அமிதானந்தத்தை அல்ல. முக்தருக்கு போகத்தினால் ஆனந்தம் அல்ல. ஆனந்தத்தினாலேயே போகம் என்பதை மறக்கக்கூடாது. சாயுஜ்ய முக்தரின் போகத்தையும் ஆனந்தத்தையும் நிர்ணயித்து சொல்லும் பிரமாண வாக்கியங்கள் இவ்வாறு இருக்கின்றன.

ப்ருஹத் தந்த்ர மற்றும் பவிஷ்யத் புராண:
ஆதத்தே ஹரிஹஸ்தேன ஹரித்ருஷ்ட்யைவ பஷ்யதி |
கச்சேச்ச ஹரிபாதேன முக்தஸ்தைஷா ஸ்திதிர்பவேத் ||
ததங்கானுக்ருஹீதைஸ்ச ஸ்வாங்கைரேவ ப்ரவர்த்தனம் |

குர்வந்தி புஞ்சதே போகான் ததந்தர் பஹிரேவ ச ||
முக்தா:ப்ராப்ய பரம் விஷ்ணும் தத்போகாம் லேஷத: க்வசித் |
பஹிஷ்டான் புஞ்ச்தே நித்யம் நானந்தாதீன் கதஞ்சன ||

ஹரிஹஸ்தேன ஆதத்தே - ஸ்ரீஹரியின் கைகளால் எடுத்துக் கொள்கிறான். ஹரித்ருஷ்ட்வா ஏவ பஷ்யதி - ஸ்ரீஹரியின் கண்களால் பார்க்கிறான். ஹரிபாதேன கச்சேத் ச - ஸ்ரீஹரியின் பாதங்களால் நடக்கிறான். ஏஷா ஸ்திதிம் - இவ்விதமான நிலை. முக்தஸ்ய - ஸாயுஜ்ய முக்தனுக்கு. பவேத் - இருக்கிறது. (ஸ்ரீஹரியின் தேகத்தில் இருக்கும்போது, சர்வாங்க சாயுஜ்யத்திற்கு அதிகாரியான பிரம்மதேவனின் ஸ்திதி வர்ணிக்கப்பட்டிருக்கிறது. ஆதித்யாதி பிறர், அவர்களின் அங்கங்களில் மட்டும் இருந்துகொண்டு, போகிக்கின்றனர்). ததங்கானு க்ருஹீத்யைஸ்ச - ஸ்ரீஹரியின் அவயவங்களின் அருள் உள்ள. ஸ்வாங்கைரேவ - தம் அங்கங்களாலேயே. ப்ரவர்த்தனம் - செயல்களை செய்வதை. குர்வந்தி - செய்கிறார். ததந்தர்பஹிரேவ வா - ஸ்ரீஹரியின் தேகத்தில் மற்றும் வெளியேயும்கூட. போகான் - போகங்களை. புஞ்சதே - அனுபவிக்கிறார்.

முக்தா: - ஸாயுஜ்ய முக்தர்கள். பரம் விஷ்ணும் - தம்மிடமிருந்து பின்னனும், சர்வோத்தமனும் (பர-பின்ன-உத்தம) ஆன விஷ்ணுவை. ப்ராப்ய - அடைந்து. தத்போகான் - ஹரி தேகத்தில் இருந்து அங்கிருக்கும் போகங்களையும். க்வசித் - கால விசேஷத்தில் மட்டும். லேஷத: - மிகவும் சிறிதாக (கொஞ்சமாக). பஹிஷ்டான் - புற போகங்களை (பகவத் ஸ்வரூபத்தினால் அபின்னமானவை அல்ல). புஞ்சதே - போகிக்கின்றனர். கதஞ்சன - எங்கும் எப்படியும் (எந்த வகையினாலும்). ஆனந்தாதீன் - (பகவத் ஸ்வரூப பூத போகங்களோ, அவனுக்கு, விதிக்கப்பட்ட லக்ஷ்ம்யாதிகளோ, முக்தரின் மகிழ்ச்சியைவிட, சிறப்பான) ஸ்ரீஹரியின் ஆனந்தாதிகளை. ந - அடைவதே இல்லை. 'சித்ரூபான், ப்ராக்ருதான்ஸ்சாபி வினா போகான்ஸ்துகான்ஸ்சன' - அப்ராக்ருத மற்றும் ப்ராக்ருத (ஷுத்த ஸத்வாத்மக) போகங்களை அனுபவிக்கிறார்கள். ஆனால், அனைவரும் அனைத்தையும் அல்ல.

---

**இத்த முக்திக$^3$ளல்லி பே$^3$த$^3$ உண்டெம்பு$^3$து$^3$**
**ஸித்$^3$த$^3$ ஸகல வாதி$^3$க$^3$ளிகு$^3$**
**ஷப்த$^3$ ஷக்தியிந்த$^3$யித$^3$ரொளு பே$^4$த$^3$ தா ப$^3$ந்தா$^1$கி$^3$**
**பி$^3$த்$^3$து$^3$ ஹோயிது பரஸித்$^3$தா$^3$ந்த ||4**

இத்த முக்திகளல்லி – இவ்வாறான பற்பல முக்திகளில். பேதவுண்டெம்புது – பேதம் இருக்கிறது என்பது. ஸகல வாதிகளிகு – அனைத்து வாதிகளுக்கும். ஸித்த – பொருந்துகிறது. (ஏனெனில்). ஷப்த ஷக்தியினால் – (ஸாலோக்யாதி) ஷப்தங்களின் ஷக்த்யர்த்தினால் (யௌகிக அர்த்த). இதரொளு – பற்பல முக்த்யர்த்தங்களில். பேத தா பந்தாகி – பேதம் தானாகவே ப்ராப்தம் ஆவதால். பரஸித்தாந்த – ஐக்யத்தை சொல்லும் (ஜீவ பிரம்ம ஐக்யத்தை சொல்லும்) சித்தாந்தம் (மாயாவாத மதம்). பித்து ஹோயிது – நஷ்டவாயிது (பொய் ஆயிற்று – உடைந்தது).

** 'ஷக்த்யர்த்த' த்தின் விவரணையை பத 14ம் சிறப்புக் குறிப்பில் பார்க்கலாம். ஸாலோக்யாதி ஷப்தங்களின் ஷக்த்யர்த்தினால் கிடைக்கும் பேதத்தை அடுத்த நுடிகளில் விவரிக்கிறார்.

**ஸாலோக்ய ஹரிய லோகதொ$^3$ளகெ$^3$ தும்பி$^3$புது$^3$**
**ஆ லோகத$^3$ ஹத்திர ஸுத்த முத்த**
**பாலஸாக$^3$ரத$^3$ல்லி ஸுகி$^2$ஸுவ ஜீவர**
**ஸாலிகெ$^3$ ஸாமீப்ய முக்தி காணிரோ ||5**

ஹரிய ஸாலோக்ய – ஹரியின் லோகத்தில் இருக்கிறது என்னும் முக்தி. லோகதொளு – வைகுண்ட லோகத்தில். தும்பிப்புது – போய் வசிப்பது. ஆ லோகத – வைகுண்ட லோகத்தின். ஹத்திர – அருகில். ஸுத்தமுத்த – அதன் சுற்றும் முற்றுமான இடங்களில் (அல்லது) பாலஸாகரதலி – ஷ்வேதத்வீபத்தின் சுற்றும் முற்றும் இருக்கும் பாற்கடலில். ஸுகிஸுவ – நடமாடி மகிழ்விக்கும். ஜீவர – முக்த ஜீவரின். ஸாலிகெ – சமூகத்திற்கு. ஸாமீப்ய முக்திகாணிரோ – ஸாமீப்ய என்னும் முக்தி என்று அறியுங்கள்.

** ஸ்ரீஹரி ஸர்வகதன். அவனின் தரிசனத்தால் மகிழ்ச்சியடைந்தவாறு, முக்தர்கள் வசிக்கும் இடங்கள் அனைத்தும் ஸ-லோகங்கள். அதனை அடைவதே ஸாலோக்யம். இப்படி இருந்தாலும் வைகுண்ட, ஷ்வேதத்வீப மற்றும் அனந்தாஸங்கள் என்னும் முக்தர்களுக்காகவே இருக்கும் லோகங்களை அடைந்து, அங்கு வசிப்பது முக்கியமாக 'ஸாலோக்ய' என்று அழைக்கப்படுகிறது. இந்த இடங்களின் அருகில் இருக்கும் பாற்கடல் முதலான தேசங்களில் சஞ்சரிப்பது ஸாமீப்ய ஆகிறது. 'முக்யஸாலோக்ய' முக்தியை அடைவதைவிட, வைகுண்டாதி லோகங்களிலேயே ஸ்ரீஹரியின் தலைநகருக்கு (ஸ்ரீஹரிபுரத்திற்கு) அருகில் உள்ள இடங்களை அடைவதை 'முக்யஸாமீப்ய' என்று அறியலாம்.

ஸாலோக்ய என்பது, முன்பு விளக்கியதைப் போல, அனைத்து முக்தர்களுக்கும் இருக்கிறது. ஸ்ரீஹரியின் தேகத்தை பிரவேசிக்கும் ஸாயுஜ்ய முக்தரைவிட தாரதம்யத்தில் கீழானவர்கள், பற்பல ஸ்தான விசேஷங்களில் மகிழ்ச்சியுடன் நடமாடிக் கொண்டிருக்கின்றனர். அனைத்து முக்தர்களுக்கும் ஷ்வேதத்வீபத்தில் இருக்கும் ஸ்ரீநாராயணனின் தரிசனமான பிறகே அவரவர்களின் ஸ்தானங்கள் கிடைக்கின்றன. அங்கிருந்து தங்களின் விருப்பப்படி நடமாடியவாறு, ஸ்வஸ்வரூபானந்தத்தை அனுபவிக்கின்றனர்.

பஹுநாத்ர கிமுக்தேன யாவச்ச்வேதம் ந கச்சதி
யோகீ தாவன்ன முக்தஸ்யாத்

ஆகிய வாக்கியங்கள் 'அத்ர - முக்தர் அடையும் ஸ்தான விஷயங்களில், பஹுனா உக்தேன கிம் - அதிகம் சொல்வதற்கு என்ன இருக்கிறது?. யாவத் - எதுவரைக்கும். யோகீ - தியானத்தில் இருக்கும் முக்தன். ஷ்வேதம் ந கச்சதி - ஷ்வேதத்வீபத்திற்கு சென்று நாராயணனின் தரிசனத்தை பெறுவதில்லையோ, தாவத் - அதுவரை. முக்தஃ ந ஸ்யாத் - முக்தனே இல்லை (இதற்குப் பிறகே தனக்கு விதிக்கப்பட்ட இடத்தில் இருந்து சுகப்படுகிறான் என்று அர்த்தம்) என்று

தெளிவாக சொல்கிறது. ஜீவர்களுக்கு அவர்களின் தாரதம்யத்திற்கேற்ப முக்த ஸ்தானங்கள் சொல்லப்பட்டிருக்கிறது.

ஆத்மேத்யேவ பரம் தேவமுபாஸ்ய ஹரிமவ்யயம் |
கேசிதத்ரைவ முச்யந்தே நோத்க்ராமந்தி கதாசன ||
அத்ரைவ ச ஸ்திதிஸ்தேஷாமந்தரிக்ஷே து கேசன |
கேசித்ஸத்யே மஹாஞானா: கச்சந்தி க்ஷீர ஸாகரம் ||

என்னும் பாஷ்யோதாஹ்ருத ப்ரமாணங்கள் இந்த விவரங்களை தெரிவிக்கிறது. அவ்யயம் - நிர்விகாரனான (அனாதி நித்யனான). பரம் தேவம் - ஸர்வோத்தமனும் ஸ்ருஷ்ட்யாதி க்ரீடாவிசிஷ்டனும் ஆன. ஹரிம் - ஸ்ரீஹரியை. ஆத்மா இத்யேவ - ஆத்மா என்னும் குணத்தினாலேயே (மம ஸ்வாமி - ஸர்வஸ்வாமி என்னும் ஒரு குணத்தினால்). உபாஸ்ய - உபாசனை செய்து. கேசித் - சிலர் (ஏக குணோபாஸகர்) (பல குணங்களால் பகவந்தனை உபாசிக்கும் பிரம்மாதிகள் கூட இந்த 'ஆத்ம' குணத்தை விடாமல் உபாஸிக்கின்றனர் என்பதை மறக்கக்கூடாது). அத்ரைவ - இந்த பூலோகத்திலேயே. முச்யந்தே - முக்தராகி வசிக்கின்றனர். இவரிகெ கதாசன - இவர்களுக்கு என்றும், ந உத்க்ராமந்தி - பிரம்ம நாடியின் மூலம் தேகதியாகம் என்பதல்ல; (தேவதைகளுக்கு, அம்சத்தினால் மனுஷ்ய தேகத்தில் இருந்தபோது, பிரம்ம நாடியின் மூலம் உத்க்ரமண என்பது உண்டு - ஸ்வோத்தமரில் லயம் அடைவதால் முக்தர் ஆகின்றனர்). தேஷாம் - இந்த ஏக குணோபாஸகர்களுக்கு. அத்ரைவ ஸ்திதி: - பூலோகத்திலேயே நித்யமாக வசிக்கின்றனர். கேசன - இவரைவிட உத்தமமான சிலர். அந்தரிக்ஷே - அந்தரிக்ஷ லோகத்திலும். கேசித் - அவரைவிட உத்தமர். ஸத்யலோகே - ஸத்யலோகத்திலும் (ஸத்யலோகத்திற்கு மேலான லோகங்களில் வசிப்பவர்). மஹாஞானா: - சில மஹாஞானிகள் (ஸாமீப்ய முக்திக்கு அருகதை உள்ளவர்கள்). க்ஷீரஸாகரம் - பாற்கடலை (ஷ்வேதத்வீபத்திற்கு சமீபமான ஸ்தானங்களை). கச்சந்தி - அடைகின்றனர். தாரதம்யத்திற்கேற்ப (ஞானாதிக்யத்தை அனுசரித்து ஸாமீப்யாதி முக்திகள் கிடைக்கின்றன என்று அறிய வேண்டும்.

தத்ராபி க்ரமயோகேன ஞானாதிக்யாத் ஸமீபகா: |
ஸாலோக்யம் ச ஸரூபத்வம் ஸாமீப்யம் யோகமேவ ச ||

என்பது இந்த விஷயத்திற்கு பிரமாணம் ஆகும்.

**ஸ்ரீவத்ஸ கௌஸ்துப[4] ஹொரதாகி[3] ஹரியந்தெ**
**ஆவாக[3] கரசதுஷ்டயத[3]ல்லி**
**பாவன சக்ராதி[3]க[3]ள த[4]ரிஸி கொண்டா[3]டு[3]வ முக்த**
**ஜீவரிகெ[3] ஸாரூப்ய ஸிரி காணிரோ ||6**

ஸ்ரீவத்ஸ கௌஸ்துப – ஸ்ரீவத்ஸ சின்னம் மற்றும் கௌஸ்துப ரத்னங்களை. ஹொரதாகி – விட்டு. ஹரியந்தெ – ஸ்ரீஹரியைப் போல. ஆவாக – முக்தியில் (எப்போதும்). கரசதுஷ்டயதல்லி – நான்கு கைகளில். பாவனசக்ராதிகள – பவித்ரமான சக்ர ஆகியவற்றை (சங்கு, சக்ர, கதா, பத்மங்களை). தரிஸிகொண்டாடுவ – தரித்து சஞ்சரிக்கும் (அல்லது அந்த சின்னங்களை தரித்து, சக்ராதி தாரகனான தம் ஸ்வாமியை எப்போதும் துதிக்கும்). முக்தஜீவரிகெ – முக்தர்களுக்கு. ஸாரூப்ய ஸிரிகாணிரோ – ஸாரூப்ய முக்தி என்னும் மஹாபாக்யம் உண்டு என்று அறியுங்கள்.

** ஸாரூப்ய முக்தர்கள், ஸ்ரீஹரியின் சிறந்த சின்னங்களான ஸ்ரீவத்ஸ மற்றும் கௌஸ்துபங்களைத் தவிர, சதுர்புஜாதி இதர அங்கங்களில், ஸ்ரீஹரிக்கு ஸமானமான (ஒப்பிடும்படியான) ரூபங்கள் உள்ளவர்கள் என்று சொல்லப்படுகிறது.

**ஸாரூப்யவெம்புது[3] ஸகலரிகு[3] ஸரியெந்து[3]**
**மூரு முகுதியிந்த்[3]ஹொரகி[3]ப்பரு |**
**ஸாரூப்ய முக்தரெந்து[3] பிரியரு கரெவரு**
**பே[3]ரெ பே[3]ரவரிகி[3]ரவு க[3]ட[3] ||7**

ஸாரூப்யவெம்புது – (சதுர்புஜாதி ஸ்ரீஹரிக்கு சமானமான தேகம் உள்ளவர்கள் என்னும்) ஸாரூப்யம். ஸகலரிகு – அனைத்து முக்தர்களுக்கும் (வைகுண்டாதி லோகங்களின் ஸ்ரீபாகத்தில் இருப்பது மற்றும் அங்கும் ஸ்ரீஹரிபுரத்திற்கு சமீபமான

ஸ்தானங்களில் இருப்பது என்னும் முக்யஸாலோக்யம், ஸாமீப்ய மற்றும் ஸாயுஜ்ய முக்தியை அடைந்த அனைத்து முக்தர்களுக்கும்). ஸரியெந்து - ஸமம் என்னும் காரணத்தினால் (ஸர்வ ஸாதாரணமானதால்) மூரு முகுதியிந்த ஹொரகிப்பவர - பூமி, அந்தரிக்ஷ, ஸத்யலோகாதிகளில் இருக்கும் ஸாமீப்ய முக்தி மற்றும் அத்யுத்தமமான ஸ்ரீஹரிதேக பிரவேசம் என்னும் ஸாயுஜ்ய முக்தி, இவ்வாறு இருக்கும் மூன்று முக்திகளின் வெளியே இருக்கும் (அதாவது, இந்த மூன்று விதத்தின் முக்தி இல்லாதவர்களை, ஸாரூப்ய முக்தர் என்று - ஸாரூப்ய முக்தியை அடைந்தவர் என்று, பிரியரு - ஞானிகள். கரெவரு - சொல்கிறார்கள். அவரிகெ - இவ்வாறு இருக்கும் நான்குவித முக்தர்களுக்கு. பேரெ பெரெ இரவு கட - வெவ்வேறு ஸ்தானங்களில் இருப்பு என்பது சாஸ்திரத்தின்படியே ஆகும்.

** இந்த பதத்தின் 4-5ம் நுடிகளின் குறிப்பில் சொல்லப்பட்டுள்ள பிரமேயங்களால், ஸாரூப்ய முக்தர் என்று யார் சொல்லப்பட்டிருக்கிறார் மற்றும் ஏன் என்பதை அறிய வேண்டும். அதையே இந்த நுடியில் தெளிவாக சொல்லியிருக்கிறார். ஸாரூப்ய என்பது சர்வ முக்தருக்கு ஸம என்று தெரியும் அர்த்தத்தில் அடங்கியிருக்கும் இந்த விசேஷத்தை கவனிக்க வேண்டியது அவசியம். அது இல்லாமல், ஏக குணோபாஸகரான, த்ருண ஸ்வரூபத்தின் ஜீவருக்குகூட சதுர்புஜ, சக்ராதி தாரணங்களை அறிய வேண்டும் என்று சொல்லியிருப்பதையும் கவனிக்க வேண்டும்.

**மூரு ஷாகவ மாடி³ லவணவ கூடித³ரு**
**மூரு ஷாகவெந்து³ கரெயபரைஸெ**
**பே³ரெ பே³ரெ ப³டி³ஸித³ரு லவண வெனிபுது³ ஈ**
**பரியலி ஸாரூப்ய முக்தரிகு³ ||8**

மூரு ஷாகவ மாடி - மூன்று வித பொரியல்களை செய்து. லவணவ கூடிதரு - (அந்த மூன்றும்) உப்புடன் சேர்ந்தாலும். (அனைத்திலும் உப்பு இருந்தாலும்). மூரு ஷாகவெந்து - அவை மூன்று தனித்தனியான பொரியல்கள் என்று. கரெவரைஸெ -

அழைக்கின்றனர். பேரெ பேரெ படிஸிதரு – ஒவ்வொன்றையும் தனித்தனியாக பரிமாறினாலும். லவணவெனிபுது – உப்பு இருக்கிறது என்றே சொல்லப்படுகிறது. ஈ பரியல்லி – இதே ரீதியில். ஸாரூப்யமுக்தரிகு – ஸாரூப்ய முக்தியை அடைந்த முக்தருக்கும். (சாயுஜ்ய, ஸாமீப்ய, ஸாலோக்ய முக்தி அடைந்தவர்களுக்கும்), ஸாரூப்ய என்பது இருந்தே இருக்கிறது என்று (ஸர்வ சாதாரணமான விஷயம் என்று) அறிய வேண்டும்.

**ஸ்ரீலோலனாக்$^3$ஞெயிந்த$^3$ ஸத்யாதி$^3$ லோகக$^3$ளல்லி**
**நெலெஸிர்த$^3$ ஸாரூப்யத$^3$ முக்தரிகு$^3$**
**ஆலஸ்ய ஹஸி த்ருஷெ கால கர்மத$^3$ கோ**
**டலெக$^3$ளொம்மவு க$^3$ட$^3$ ||9**

ஸ்ரீலோலனாக்ஞெயிந்த – நாராயணனின் ஆணையினால். ஸத்யாதி லோககளல்லி – ஸத்யலோகமே முதலான ஸ்தானங்களில். நெலஸிர்த்த – வசிக்கும். ஸாரூப்யத முக்தரிகு – ஸாரூப்ய முக்தர்களுக்கும். ஆலஸ்ய ஹஸி த்ருஷெ கால கர்மத கோடலெகளு – சோர்வு, பசி, தாகம், கால கர்மாதி பீடைகள் (பிரச்னைகள்). ஒப்புவு கட – அருகில் ஓடுகிறது என்பதை அறிய வேண்டும் (ஸத்யாதி லோகங்களில் இருக்கும் இதர முக்தர்களைப் போல, இந்த பிரச்னைகளும் இவர்களுக்கும் சமானமே ஆகும்). ஸாரூப்யமானது இதரருக்கும் ஸமானமாக இருப்பதைப் போல, பிரச்னைகள் இல்லாமல் சத்ய லோகத்திற்கு வந்தாலும், ஸாரூப்ய முக்தருக்கு மேற்சொன்ன பிரச்னைகள் இருந்தே இருக்கிறது என்பதை, மேலே சொன்ன பொரியல்-உப்பு உதாரணம் விளக்குகிறது.

** 8ம் நுடியில் 'ஈ பரியல்லி ஸாரூப்ய முக்தரிகு' என்று கூறியதில், 9ம் நுடியில் இருக்கும் 'ஸ்ரீலோலனாக்ஞெயிந்த ஸத்யாதி லோககளல்லி நெலெஸித்த ஸாரூப்யத முக்தரிகு' என்பதுடன் படித்து, பொருத்திக் கொள்ள வேண்டும். அப்போது, ஸாரூப்ய முக்தி, அந்த முக்திக்கு அதிகாரிகள் ஆனவர்கள் எங்கிருந்தாலும் (வைகுண்டத்தில், பாற்கடலுக்கு அருகிலான இடங்களில்) சதுர்புஜாதி சமான ரூபத்வம், சமம் என்று, அதே 'ஷாக லவண' உதாரணத்தினால் (இந்த முறையில்) அறிய

வேண்டும். இவ்வாறு பொருந்திக் கொண்டபோது, 9ம் நுடி, 'அலஸ்ய, ஹஸி, த்ருஷெ' (சோர்வு, பசி, தாகம்) ஆகிய உத்தரார்த்தம், குண சங்கங்கள் இல்லாததால், தோஷதூரர்கள் என்னும் சமான அர்த்தம், சர்வ முக்தர்களுக்கு அறிய வேண்டும் என்று அர்த்தம் வருகிறது.

** மனுஷ்யோத்தமருடனான மேற்கண்ட முக்தி யோக்யர்களை மட்டும் எடுத்துக் கொண்டால், ஸாரூப்ய என்பது ஸாலோக்ய, ஸாமீப, ஸாயுஜ்ய முக்திக்கும் உண்டு என்று (ஸாதாரணம் என்று) அறிவதில் எந்த சந்தேகமும் இல்லை. அப்போது, ஸாலோக்ய என்பதற்கு (ஏக குணோபாஸகர் ஆகிய த்ருண ஜீவர்கள் அதிலிருந்து விலக்கப்படுகிறார்கள் ஆகையால்), முக்தர்கள் எங்கிருந்தாலும் அதையே ஸாலோக்ய என்றும், விசேஷமாக வைகுண்ட லோக என்னும் ஸமான ஸ்தான பிராப்தி என்றும், அறிவதால் எந்த பிரச்னையும் இல்லை. இந்த சதுர்வித முக்தி விஷயங்களில் வரக்கூடிய சூக்ஷ்ம சந்தேகங்களை மகாத்மரிடமிருந்து (ஞானிகளிடமிருந்து) கேட்டு தெரிந்து கொள்ள வேண்டும்.

பத 24 ராகம்: காம்போதி. தாளம்: ஜம்பெ

**தி$^{3}$வ்ய போ$^{4}$க$^{3}$ங்க$^{3}$ள லீலெயிந்து$^{3}$ம்ப$^{3}$ரு**
**தி$^{3}$வ்ய கீ$^{3}$தவ பாடு$^{3}$வரு**
**க$^{3}$ந்த$^{4}$ பரிமளக$^{3}$ள பூ$^{1}$ஸுவரு**
**தி$^{3}$வ்ய நரனாரியரல்லி ||1**

அங்கு - முக்தியில். நரநாரியரு - புருஷர்கள். ஸ்த்ரீயர்கள், லீலெயிந்த - அனாயாசமாகி (சாதாரணமாக). திவ்யபோகங்கள - அற்புத போகங்களை. உம்பரு - போகிக்கின்றனர். திவ்யகீதவ - சிறந்த கானத்தை. பாடுவரு - பாடுகின்றனர். திவ்யகந்த பரிமளகள - திவ்ய கந்த நறுமணங்களை. பூஸுவரு - முகர்வர் மற்றும் பூசிக் கொள்வர்.

முக்தர் திவ்ய தேஹிகள். (லோகத்தில் காணப்படாத) மிகச்சிறந்த தேகம் உள்ளவர்கள். அவர்களின் ஸ்வரூபமே அவரின் தேகம் -

அது சிதானந்தாத்மகம் ஆனது. அந்த தேகத்திலிருந்து பற்பல போகங்களை அனுபவிக்கின்றனர். 'நான் அனுபவிக்கிறேன்' என்னும் ஞானம் உள்ளவர்களாகவே இருக்கின்றனர். ஞேய வஸ்துகள் இல்லையென்றால் ஞானம் என்பது இல்லை. ஞானம் இல்லை என்றால், ஸ்வரூப இல்லை என்றே அர்த்தம். ஸ்வரூப நாஷ அல்லது ஷூன்யத்வம் என்பது புருஷார்த்தம் ஆகாது.

விஷ்ணோர் ஞானாதிகம் மோக்ஷஸ்தததபாவே குத: ஸுகம் |
ஞேயாபவான்ன ஹி ஞானம் ஞானாபாவே ஹி ஷுன்யதா |
தஸ்மாத் ஞேயயுதோ மோக்ஷ: ஸுகரூபத்வத: ஸதா ||
(பிரம்மதர்க்க)

என்றால், விஷ்ணு ஞான, ஜீவ ஞான, விஷய ஞானங்களால் முக்தனாக இருப்பதே மோட்சம். க்ஞேயங்களான (அறியப்படும் வஸ்துகளான விஷ்ணு முதலான வஸ்துகளே இல்லையென்றால், ஞானம் என்பது இல்லை. ஞானாபாவவே (ஞானம் இல்லாததே) ஷூன்யத்வம். ஆத்மனே இல்லையென்றால், யாருக்கு சுகம்? என்பதற்கு பதில் இல்லை. மோட்சம் ஆனாலும் எப்போதும் சுகரூபம் ஆனதால், சுகத்தை கிரகிக்கும் ஆத்மன் இருக்கிறான் என்று ஒப்புக் கொண்டே ஆகவேண்டும். அந்த காரணத்தினால் முக்தியில், விஷ்ணு, ஜீவ, போக்ய வஸ்துகள், அனைத்தும் உண்டு என்று அங்கிகரிக்கவே வேண்டும்.

ந ச ஸர்வாஞானம் புருஷார்த்த: |
மக்னஸ்ய ஹி பரேஞானே கிம் ந துக்கதரம் பவேத்
(மோக்ஷதர்ம)

ஸர்வவிஷயக அஞ்ஞானம் – புருஷார்த்தம் அல்ல. இது மட்டுமல்ல. அஞ்ஞானத்தில் மூழ்கியிருப்பவனுக்கு வராத துக்கம் எது? துக்கமயமே ஆனதால், அஞ்ஞானம் அனர்த்தகரமே ஆகிறது. ஆகையால், முக்தருக்கு திவ்யதேகங்களும், திவ்ய போகங்களும் உண்டு.

**ஜ்யோதிர்மயவாத³ ஹெண்ணுக³ண்டு³க³ள ப்ரா**
**க்ருத தே³ஹங்க³ளல்லிஹவு**
**ப்ரீதியிந்தொ³ம்மொம்மெ அத³ரொளு பொக்கு நானா**

---

**க்ருதியல்லி ஸுகி²ஸுவரு ||2**

ஜ்யோதிர்மயவாத - ஒளிமயமான (ஷுத்த ஸத்வாத்மகமான). ஆண் பெண்களின். ப்ராக்ருததேஹகளு - தேஜோமயமான சுத்த ஸத்வாத்மன தேகங்கள். அல்லிஹவு - முக்தியில் உண்டு. ப்ரீதியிந்த ஒம்மொம்மெ - மகிழ்ச்சியுடன் ஒவ்வொரு சமயத்தில். அதரொளு - அந்த ப்ராக்ருத தேகத்தில். பொக்கு - பிரவேசித்து. நானா ஆக்ருதியல்லி - பற்பல ரூபங்களால். ஸுகிஸுவரு - சஞ்சரிக்கின்றனர்.

** ஓம் அணுஸ்ச ஓம் என்னும் ஸூத்ரத்தில் ஜீவ ஸ்வரூபம் அணுமாத்ர என்று நிர்ணயிக்கப்பட்டுள்ளது. அணுமாத்ர தேகத்தினால், மோட்சத்தில் உண்டு என்று சொல்லப்படும் பற்பல போகங்கள் எப்படி வருகிறது என்னும் சந்தேகத்திற்கு இடமில்லை. ஏனெனில்,

அல்பம் தேஜ: ததைவால்பம் ஜீவரூபம் ஹி ஸம்ஸ்ருதௌ |
ததா ச ஸுமஹத்தேஜ: கரோதி பகவான் மஹத் |
அதோ நவதரம் சைதத் பிரம்மாதீனாம் கரோத்யஜ: ||
(ப்ருஹதார்ண்யக பாஷ்ய)

சம்ஸார நிலையில், ஜீவன், அணுரூபனும் அல்ப சக்தியுதனும் ஆகியிருக்கிறான். இவ்வாறு இருந்தாலும், மோட்சத்தில், ஸ்ரீஹரி தன் அசிந்த்ய ஸாமர்த்தியத்தினால் அணுஸ்வரூபத்திற்கு வளர்ச்சியையும், அல்ப ஷக்திக்கு மஹா சாமர்த்தியத்தையும் கொடுக்கிறான். மற்ற ஜீவர்களைவிட அதிகமான ரூப சாமர்த்தியங்களால் பிரம்மாதி முக்தர்களை அருள்கிறான். ஸ்வரூப தேகங்களாலேயே முக்தர் பற்பல போகங்களை அனுபவிக்குமாறு செய்கிறான் என்றும், மற்றும்:

ஸ்வேச்சயா வா ஷரீராஅணி தேஜோரூபாணி கானிசித் |
ஷ்வீக்ருத்ய ஜாகரிதவத்புக்த்வா த்யாக: கதாசன || (பாஷ்ய)

முக்தர்கள் தம் விருப்பத்திற்கேற்ப ஷுத்த ஸத்வாத்மகமான சில தேகங்களை எடுத்துக்கொண்டு (நாம் ஜாக்ரத நிலையில் எப்படியோ, அப்படி). அந்த தேகங்களால் போகங்களைப் பெற்று, தம் இஷ்டப்படியே அவற்றை விலக்குகிறான்' என்றும் பிரமாணங்கள் சொல்கின்றன.

**முக்தர போ4க3க்கெ தக்க ப2லங்க3ள**
**ஹொத்து ஹொத்திலி கொடு3திப்ப**
**நித்யாப்ராக்ருதவாத3 சித்ர வ்ருக்ஷக3ளல்லி**
**ஸுத்தமுத்தலொப்பிஹவு ||3**

முக்தர போகக்கெ – முக்தர்கள் போகிப்பதற்காக. ஹொத்து ஹொத்திலி – விரும்பிய நேரங்களில். தக்க பலங்கள – (விரும்பிய) பழங்களை. கொடுதிப்ப – கொடுத்திருக்கும் (கொடுக்கும்). நித்யாப்ராக்ருதவாத – நித்ய நிர்விகாரங்களான (வைகுண்ட நகரில் அப்ராக்ருதமும், வைகுண்ட லோகத்தின் வேறு இடங்களில் ஷுத்த ஸத்வாத்மகமும் ஆன). சித்ரவ்ருக்ஷகளு – பற்பல திவ்ய வ்ருக்ஷங்கள். அல்லி – வைகுண்டத்தில். ஸுத்தமுத்தலொப்பிஹவு – அனைத்து இடங்களிலும் இருக்கின்றன.

**நித்ய நிர்து3க்க2 ஸுக2 ஸ்வரூபராகி3**
**ஸுத்த ஸுளிவரு லீலெயல்லி**
**நித்யாப்ராக்ருத ப2லங்க3ளு அவர்க்கெ3 ஸுக2வ**
**நித்து முன்னினந்த3த3ல்லிஹவு ||4**

நித்ய நிர்துக்க ஸுகஸ்வரூபராகி – துக்கத்தின் தொடர்பு இல்லாத நித்யானந்த ஸ்வரூபரான முக்தர். லீலெயல்லி – தம் செயல்களில். ஸுத்த – அந்த வ்ருக்ஷங்களின் சுற்றிலும். ஸுளிவரு – சஞ்சரிக்கின்றனர். நித்யாப்ராக்ருத பலங்களு – (அந்த மரங்களின்) அனைத்து ருதுகளில் கிடைக்கும் அனைத்து அப்ராக்ருத பலன்கள், அவர்கெ – அந்த முக்தருக்கு. ஸுகவனித்து – மகிழ்ச்சியைக் கொடுத்தும். முன்னினந்ததல்லிஹவு – முதலில் இருந்ததைப் போலவே (பழங்களைக் கொடுத்தே) இருக்கின்றன.

1. மோட்ச ஸந்தி

---

**இது$^3$ சித்ரவல்ல துண்டி$^3$ஸி ஷாகங்க$^3$ள மாடி$^3$**
**குதி$^3$ஸி விப்ரரிகு$^3$ணிஸித$^3$**
**சதுர வாதாபி தம்மண்ண கரெதா$^3$க$^3$**
**மொத$^3$ல ஹாகெ$^3$ பா$^3$ஹ கண்ட்$^3$ய ||5**

இது - முக்த லோகத்தின் வ்ருக்ஷங்கள் இப்படி இருக்கிறது என்பது. சித்ரவல்ல - வியப்பல்ல. துண்டிஸி - கத்தரித்து (துண்டாக்கி). ஷாகங்கள மாடி - காய்கறிகளைப் போல பயன்படுத்தி. குதிஸி - வேக வைத்து. விப்ரரிகுணிஸித - பிராமணர்களுக்கு பரிமாறி உணவு அளித்து. சதுர வாதாபி - கூர்மையான புத்தி உள்ள வாதாபி. தம்மண்ண - தன் அண்ண 'இல்வன'னை. கரெதாக - 'வா' என்று அழைத்தபோது. மொதல ஹாகெ - முதலில் இருந்ததைப் போலவே தேகம் கொண்டவனாகி. பாஹ கண்ட்ய - (விப்ரரின் வயிற்றினை கிழித்துக் கொண்டு). வெளியே வந்துகொண்டிருந்தான் என்பதை அறிவாயா?

** வைகுண்ட லோகத்தில் முக்தர்கள் பழபுஷ்பாதிகளை போகிக்கும் விதம், ஷுத்த ஸத்வாத்மகமான அந்த வஸ்துகள் தயாராகும் வகைகளைப் பற்றி பத-10-4 நுடியில் பார்த்ததை இங்கு நினைவில் கொள்வோம்.

** ஜக்ஷன் க்ரீடன் ரமமாண: - ஆகிய ஸ்ருதி வாக்கியங்கள், முக்தர் பற்பல போகங்களால் மகிழ்ச்சியடைகின்றனர் என்று சொல்கிறது.

வரபாரி பத்ரகஸுகல்ப தருவ்ரஜ பாரிஜாத ஹரிசந்த்ரனவத் |
ஸஹிதம் ஸமாதி பததானனகை: பரிபூஷயந்தி ததஹோ ருதவ: ||

மற்றும்

ப்ரியமேவ ஸாதயதி நித்யமஹோ ஸ விமுக்திமானிதி விமுக்திபதாம் ||

மற்றும்

யம் யம் ஸுகீ காமயதேsர்த்தமத்ர
ஸங்கல்ப மாத்ராத் ஸகலோsபி ஸ ஸ்யாத் |
இத்யேவ வேதா அபி வேதயந்தி முக்திம் தத: கோ விபவாதிரேக:

என்னும் மத்வவிஜயத்தின் வாக்கியங்கள் இந்த ப்ரமேயங்களையே நிரூபிக்கிறது. இந்த வாக்கியங்களின் தாத்பர்ய அர்த்தம் இவ்வாறு இருக்கிறது. 'சிறந்ததான பாரிஜாத, ஹரிசந்தன, ஸந்தான முதலான மரங்களால் ஒளிரும் வைகுண்டத்தின் வனங்களை அனைத்து ருதுகளும் (வசந்தாதி ருதுகளும்) தத்தம் காலங்களுக்கு ஏற்ப வரும் பழங்களுடன், தினமும் வணங்குகின்றன'. காற்று, குளிர், மழை, வெயில் முதலான தோஷங்கள், வைகுண்டத்தில் ருதுகளுக்கு இல்லை. முக்தருக்கு தினமும் ப்ரியத்தையே சாதிக்கும் இந்த ருதுகளும் முக்த ருதுகளே. எவ்வித தோஷங்களும் இல்லாதவையே. (ருதுதர்மங்களுக்கு நியாமகரான தேவதைகளும் நிர்தோஷர்களே).

முக்தன் எவற்றை விரும்புகிறானோ, அவை அனைத்தும் நினைத்த மாத்திரத்திலேயே (முயற்சி இல்லாமலேயே), கிடைக்கின்றன. வேதங்களும் முக்தியை இவ்வாறே நிரூபிக்கின்றன. முக்தர்களின் விஹாராதி வர்ணனை, ஸ்ரீமத் பாகவதத்திலும், இதே விதமாக இருப்பதை காண்கிறோம். இது வேதோக்தமே ஆகியிருக்கிறது.

** வாதாபி மற்றும் இல்வல, இருவரும் விப்ரசித்தி என்பவனின் மக்கள். இந்திரனைப் போன்ற மக்களை கொடுக்க வேண்டும் என்று பிராமணரை கேட்டுக் கொண்டனர். அது நடக்கவில்லை. ஆகையால், அவர்கள் பிராமணர்களை வெறுக்கத் துவங்கினர். இல்வலன், வாதாபியை ஒரு ஆடு ஆக மாற்றி, அதனைக் கொன்று, மாமிசத்தை எடுத்து, பிராமணர்களுக்கு பரிமாறி, அவர் உண்டபிறகு, 'ஹே வாதாபி, வா' என்று அழைப்பான். உடனடியாக அந்த பிராமணரின் வயிற்றைக் கிழித்து, வாதாபி, வெளியே வந்துவிடுவான். அந்த பிராமணர் இறந்துவிடுவார். இப்படியே பல

---

பிராமணர்களைக் கொல்வதை, அவர்கள் வழக்கமாகக் கொண்டிருந்தனர்.

ஒருமுறை அகஸ்த்ய ரிஷிகள் இவர்களிடம் வந்தார். இவர்கள் அரசர்களான காரணத்தால், இவர்களிடம் பொருள் உதவி பெறுவதற்கு வந்தார். அப்போது இல்வலன், வழக்கம்போல, வாதாபியை அகஸ்த்யரின் வயிற்றில் சேருமாறு செய்து, உணவிற்குப் பிறகு, வாதாபியை வெளியே அழைத்தான். ஆனால், இதனை அறிந்திருந்திருந்த ரிஷிகளோ 'வாதாபி ஜீர்ணோ பவ' என்றார். வாதாபி வெளியே வரவேயில்லை. அங்கேயே ஜீர்ணம் ஆகியிருந்தான். அப்போது தம்பியை இழந்த இல்வலன், துக்கப்பட்டு, மன்னிப்பு கேட்டுக் கொண்டான். அன்றிலிருந்து பிரம்ம த்வேஷத்தை விட்டான். இந்த உதாரணத்தைக் கொடுத்து, முக்தலோகத்து மரங்கள், முக்தர்கள் தம்மை எப்படி - எவ்வளவு போகித்தாலும் முதலில் இருந்ததைப் போலவே இருக்கின்றனர் என்பதில் வியப்பு என்ன இருக்கிறது என்று சொல்கிறார்.

ஸ்லோக 26

**ப்3ராஜிஷ்ணுபி4ர்ய:பரிதோ விராஜதே**
**லஸத்விமானாவலிபி4ர் மஹாத்மனாம் |**
**வித்4யோத1மான ப்ரமதோத்தமாபி4:**
**ஸவித்3யுத3ப்4ராவளிபி4ர்யதா2 நப4: ||**

(வைகுண்டம்) மஹாத்மனாம் - மஹாத்மரான, முக்தரின். பரித: - சுற்றிலும். பிராஜிஷ்ணுபி: - விசேஷமாக ஒளிரும். வித்யோதமான ப்ரமதோத்தமாபி: - சுந்தர அழகுப் பெண்களால் ஒளிரும். விமானாவலிபி: - ஒளிரும் விமான சமூகங்களால். விராஜதே - அலங்கரிக்கப்பட்டுள்ளது. (எப்படியென்றால்), ஸவித்யுதப்ராவளிபி: - மின்னலால் கூடிய மேகக் கூட்டங்களால், யதா நப: - ஆகாயத்தைப் போல.

பத 25 ராகம்: கௌளிவந்து. தாளம்: ரூபக

**ஒப்புவ விமானவனேரி மெரெவ கந்**
**த3ர்பன கேளியல்லிஹரு**

**தப்பரு த4ர்மமார்க்க3வ த4ர்மக்கொளகா3க3**
**தி3ப்பரு அவர்க்கெ3 ஸ்வபா4வ ||1**

(முக்ததம்பதிகளு) ஒப்புவ – ஒப்புக் கொள்ளும். விமானவனு – விமானத்தில். ஏரி – ஏறி. மெரெவரு – சுகமாக சஞ்சரிக்கின்றனர். கந்தர்ப்பன கேளியல்லிஹரு – ரதிக்ரீடைகளில் ஈடுபடுகின்றனர். தர்ம மார்க்கவனு – தர்ம மார்க்கத்தை. தப்பரு – விடுவதில்லை. அதர்மக்கெ ஒளகாகதிப்பரு – அதர்மத்தில் ஈடுபடமாட்டார்கள். அவர்கெ – அவர்களுக்கு. (இவ்வாறு தர்ம மார்க்கத்திலேயே இருப்பது). ஸ்வபாவ – சகஜமானது (ஸ்வபாவத்தினாலேயே இருக்கிறது).

**சித்ர ப3ரெதி3த்3த3 ஹெண்ணுக3ண்ணந்தெ அ**
**ன்ய ஸ்த்ரீயரலி முக்தரிகெ3**
**சித்தவெரக3து3 தம்ம தம்ம ஸ்த்ரீயரொ**
**ளர்த்தி2ய மாடு3வ ரைஸெ ||2**

சித்ரபரெதித்த – வரைபடத்தில் வரைந்திருக்கும். ஹெண்ணகண்ணந்தெ – பெண்ணின் பார்வையைப் போல (பெண் படத்தை பார்க்கும் சாதாரண மனிதன் அதில் போக அனுபவத்தை பெறாதிருப்பதைப் போல). முக்தரிகெ – முக்த ஜீவர்களுக்கு. அன்ய ஸ்த்ரீயரல்லி – பிற பெண்களிடம். சித்தவெரகது – மனம் ஈடுபடுவதில்லை. தம்ம தம்ம ஸ்த்ரீயரொளு – தங்களின் மனைவிகளிடம் மட்டும். அர்த்திய – அன்பினை. மாடுவரைஸே – செய்கிறார்கள் அல்லவா?

**தாய ஸொப3க3 மக்களு கண்ட3 கண்டா3க3**
**ந்யாய பத2வனவர்பி3டு3வரெ**
**ஸ்த்ரியிந்த3 மிஞ்சுவ மக3ள கண்ட3ரெ பித**
**காயஜ ஷரகொளக3ஹனெ ||3**

முக்தரு – நியத பத்னியரில் மட்டும் அன்பு செலுத்துவதில் என்ன வியப்பு என்று லௌகிக உதாரணங்களால் நிரூபிக்கிறார். மக்களு – புத்ரர்கள். தாய ஸொபகெ கண்டகண்டாக – தம் தாயின் அழகினை காணும்போதெல்லாம். அவரு – அந்த புத்திரர்.

நியாயபதவனு – தர்ம மார்க்கத்தை. பிடுவரெ – விடுவார்களா (போக புத்தியை பெறுவார்களா? எப்போதும் இல்லை). மிஞ்சுவ மகள கண்டரெ – அழகான மகளைப் பார்த்து. ஸ்த்ரீயிந்த – அந்த பெண்களால் (மகளின் தரிசனத்தால்). காயஜஷரகெ – மன்மதனின் பாணத்திற்கு. பித – தந்தை. ஔகஹனெ – வசனாகிறானா? (இல்லை).

**செலுவ தங்கி3ய கண்ட3ரொடஹுட்டித வர்மான**
**வளுகாதி3ஹதெ3 பாப பத2கெ**
**கலிகொ3ளகா3த்3வரீ மார்க்கக3த்3ல்லிரெ நி**
**ர்முக்தரிகெ3 மோஸவஹுதெ3 ||4**

செலுவ தங்கிய – அழகியான தங்கையை. கண்டரெ – பார்த்தால். ஒடஹுட்டிதவர – சகோதரரின். மானவு – புத்தி அல்லது மனஸ். பாபபதகெ – (தங்கையின் விஷயத்தில் கெட்ட விருப்பத்தை செய்தல் என்னும்) கெட்ட மார்க்கத்திற்கு. அளுகாதிஹதெ – அடிபணிவதே. கலிகொளகாதவரு – (ஒரு வேளை) துஷ்ட கலிக்கு வசமான துர்ஜனர். ஈ மார்க்கதல்லிரெ – (பெண்களால் ஈர்க்கப்பட்டு) கெட்ட வழியில் சென்றால், நிர்முக்தரிகெ – (ப்ரக்ருதி பந்தனத்தால்) பூர்ண முக்தர் ஆனவருக்கு. மோஸவஹுதே – இத்தகைய சந்தர்ப்பம் வருமா? (ஸ்த்ரீ அழகிற்கு மயங்குவரா? – சாத்தியமே இல்லை). அல்லது, கலியின் மயக்கத்தில் இல்லாதவர்கூட, தாய், தங்கை, மகளின் விஷயத்தில் கெட்ட விருப்பத்தை வைத்தால் முக்தரின் விஷயத்தில் சொல்வதற்கு என்ன இருக்கிறது?

** 'யதா காமம் சரதி யதா காமம் பிபதி யதா காயம் ரமதே யதாகாமமுபரமதே' (தைத்திரிய) ஸ்ருதி 'முக்தன் தன் விருப்பத்திற்கேற்ப சஞ்சரிக்கிறான். சுகங்களை போகிக்கிறான். க்ரீடிக்கிறான்' என்று சொல்கிறது. எப்படியிருந்தாலும், முக்தர்களுக்கு நல்ல விருப்பங்களே பிறப்பதில்லை. தர்ம மார்க்கத்தில் இருப்பதே அவர்களின் ஸ்வபாவம். இதற்காக அவர் எந்த முயற்சியும் செய்ய வேண்டியதில்லை. அவர்களுக்கு விதி, விதிவிலக்குகளே இல்லை. 'ந ச யோக்யம் விமுக்தோऽபி

ப்ராப்னுயான்ன ச காமயேத்' (பாஷ்ய) என்பதில், முக்தர், தமக்கு தகுதியற்றதை (ஸ்வோத்தமர்களின் போகங்கள் மற்றும் ஆனந்த விசேஷங்களை) என்றும் பெறுவதில்லை மற்றும் அவற்றை என்றும் விரும்புவதும் இல்லை என்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

** ஸ்வாயோக்யேச்சாத்ர நோ பவேத்
யோக்யேச்சா ந வினிஹன்யேத நித்யானந்தஸ்ததோத்ர ஹி
மோததே கர்ஹிசித்கேசித் ஸ்த்ரீபிர்யானே க்ருஹே வனே |
யதாஸ்வரூபவ்யக்திஸ்யாத் போஜ்யைக்யேபி ஸுகாதினா ||

என்று விஷ்ணு ரஹஸ்யத்தில், முக்தரின் போகம், நடவடிக்கைகள் வர்ணிக்கப்பட்டுள்ளன.

இந்த ஸ்லோகங்களின் அர்த்தம் இவ்வாறு உள்ளது. முக்த லோகத்தில் யாருக்கும் தகுதியற்ற / கெட்ட விருப்பமே பிறப்பதில்லை. தகுதியுடைய விருப்பங்கள் நிறைவேறாமல் இருப்பதில்லை. இந்த காரணத்தால் முக்தர் நித்யானந்தம் உள்ளவர்கள். சித்ரூப முக்தர்கள் சில சமயங்களில் ஷுத்த ஸத்வாத்மக தேகங்களை ஏற்று, சிலர், பெண்களுடன் வனங்களில், வீடுகளில் மகிழ்ச்சியுடன் சஞ்சரிக்கின்றனர். ஸ்த்ரிபுருஷர்கள் பரஸ்பரம் போஜ்யராக இருந்தாலும் (ஒருவர் மற்றொருவரை போகித்தாலும்), அந்த சமயத்தில் இருவரின் விருப்பத்தினால் திருப்தி அடைந்து, ரேதோத்ஸர்ஜனத்தின் சுகத்தை அடைகின்றனர். மல, மூத்ர, ரேதஸ்களின் உத்ஸர்ஜன என்பது முக்தர்களுக்கு அல்ல - அவரின் போகம் லோக விலக்ஷணமானது.

உலகத்திலும்கூட, மயில் முதலான சில பிராணிகள் இவ்வாறு சம்பந்தம் கொள்கின்றன. இறக்கைகளின் ஸ்பர்சித்தால், பார்வையால், ஸ்மரணையினால்கூட ரதிசுகத்தை அடைகின்றன. இப்படி இருக்கையில், அனைத்தையும்விட சிறந்ததான வைகுண்டத்தில் சொல்வதற்கு என்ன இருக்கிறது? - முக்தரின் போக ரஹஸ்யத்தை சிறிது விளக்குகிறேன்.

** ஸ்ரீஹரியின் அருளால் தான் கண்ட வைகுண்டத்தை சதுர்முகன் வர்ணிக்கிறான்.

---

வைமானிகா: ஸலலனாஸ்சரிதானி யத்ர காயந்தி லோகஷமல க்ஷபணானி பர்த்து: -- (பாகவத)

யத்ர - எந்த வைகுண்டத்தில். ஸலலனா: - தம் நியத மனைவிகளுடன் கூடி. வைமானிகா: - விமானங்களில் சஞ்சரிக்கும் முக்த புருஷர். லோகஷமலக்ஷபணானி - சம்சாரிகளின் அனைத்து பாவங்களை நாசம் ஆக்கும் சாமர்த்தியம் கொண்ட. பர்த்து:சரிதானி - தம் ஸ்வாமியான ஸ்ரீஹரியின் சரித்ரங்களை (மகிமைகளை). காயந்தி - பாடுகிறார்களோ. என முக்தர்களின் ஆனந்த விகாரங்களை வர்ணிக்கிறது. முக்தரின் ரதிக்ரீடையின் பவித்ரத்தை ஸ்ரீசுமத்வ விஜயம் இவ்வாறு சொல்கிறது.

ஸுகஸம்விதாத்ம கதயா வபுஷாம்
ஸுரபித்வமேவ பஹிரந்தரபி |
ஹரிதாம்னி தம்பதிகணஸ்ய ததோ
நனு மான்யதே஽பி முனிபி: ஸுரதம் ||

தம்பதிகளின் ரதிக்ரீடை ஸ்ரமாதி-ரஹிதமானது. அவர்களில், விரக நிலைக்கு வாய்ப்பே இல்லை. கலகங்கள் இல்லை. ஹரிதாம்னி - வைகுண்டத்தில். தம்பதிகணஸ்ய - தம்பதிகளின் சமூகத்தின். வபுஷாம் - சரீரங்களுக்கு. பஹிரந்தரபி - உள்ளே வெளியேகூட. ஸுரபித்வமேவ - சுகந்தமே இருக்கிறது. ஸுக ஸம்விதாத்மகதயா - ஞானானந்த ஸ்வரூபத்தினால் (நறுமணமே. துர்கந்தாதி தோஷங்களே இருப்பதில்லை). தத: - இந்த காரணத்தினால். ஸுரதம் - முக்தரின் ரதிக்ரீடையானது. முனிபிரபி - பிரம்மாதி ஞானிகளால்கூட. மான்யதே நனு - கௌரவிக்கப்படுகிறது.

ஸ்லோக 27

**ஆனந்தா$^3$ன் மந்த$^3$ மந்தா$^3$ த$^3$த$^3$திஹி மருத: குந்த$^3$மந்தா$^3$ர நந்த்$^3$யா வர்த்தாமோதா$^3$ன் த$^3$தா$^3$னா ம்ருது$^3$பத$^3$முதி$^3$தோத்கீ$^3$தகை: ஸுந்த$^3$ரீணாம்**

**வ்ருந்தை³ராவந்த்³ய முக்தைர் மகு³மகு³மத³னா ஹீந்தி³ரதே³வேந்தி³ர ஸேவ்யே**
**மௌகுந்தே³ மந்தி³ரேஸ்மின் அவிரத முத³யன் மோதி³னாம் தே³வதே³வ ||**

ஸ்ரீஹரிவாயு ஸ்துதியின் ஸ்லோகம் இது.

தேவதேவ - ஹே தேவஸ்ரேஷ்டனான வாயுதேவனே. ம்ருதுபதம் - மந்த கமனம் உள்ள (அல்லது ம்ருது ஷப்தங்களைக் கொண்ட). உதிதோத்கீதகை: - பாடப்படும் சிறந்த கானம் உள்ள. ஸுந்தரீணாம் வ்ருந்தை: - அழகான பெண்களின் (தங்களின் மனைவியர் மற்றும் சேவகியர்களால்). அவந்த்ய முக்தீம் த்வஹிமகுமதனா ஹீந்த்ர தேவேந்த்ர ஸேவ்யே - பக்தி பூர்வக வந்த்யரான முக்தசந்த்ர (இந்து) சூர்ய (அஹிமகு - உஷ்ண கிரணங்களைக் கொண்ட). மன்மத (மதன). சேஷதேவ (அஹீந்த்ர). இந்த்ர (தேவேந்த்ர). இவர்களால், பக்தியுடன் வணங்கப்படும். அஸ்மின் மௌகுந்தே மந்தரி - இந்த முகுந்தனின் மந்திரத்தில் (வைகுண்டத்தில்). மந்தமந்தா: - மெதுவாக வீசும். குந்த மந்தாரனந்த்யாவர்தாமோதான் - ஜாதி, மந்தார, நந்த்யாவர்த்த முதலான புஷ்பங்களின் நறுமணங்களை. ததானா: - ஏந்தி வரும். மருத: - காற்று (வாயு). அவிரதம் - நிரந்தரமாக. உதயன்மோதினாம் - மகிழ்ச்சியைக் கொண்ட முக்தருக்கு. ஆனந்தான் - போகவிசேஷங்களை. தததி ஹி - அளிக்கிறது என்பது நிச்சயம்.

பத 26 ராகம்: பந்துவராளி. தாளம்: அட
**குந்த³ மந்த³ர மல்லிகெ³ நந்த்³யாவர்த்தர**
**விந்த³ க³ளெஸெவ ஸௌரப⁴த³**
**க³ந்த⁴வாஹனல்லி பீ³ஸெ முக்தரிகெ³ நித்யா**
**னந்த³த³ ஸுக²வீவ ||1**

குந்தமந்தரமல்லிகெ நந்த்யாவர்த்தரவிந்தகளு - ஜாஜி, மந்தார, மல்லிகை, நந்த்யாவட்டை, கமலாதி புஷ்பங்கள். எஸெவ - வீரும் (அல்லது அரவிந்தாதிகளின். எஸெவ - ஸ்ரேஷ்டமான). ஸௌரபத - பரிமளத்தின். கந்தவாஹனு - சந்தனத்தை தாங்கி

வரும் வாயு (நறுமணம் மிக்க மந்தமாருதன்). அல்லி – முக்தர் இருக்கும் இடங்களில். பீஸெ – வீசியவாறு. முக்தரிகெ – வைகுண்டத்தின் ப்ரஜைகளுக்கு. நித்யானந்தத ஸுகவீவ – நித்யானந்தத்தின் (ஸ்வரூபானந்தத்தின்) போகத்திற்கு காரணம் ஆகிறான்.

முக்தரின் விஷய போகம். ஸ்வரூப ஸித்தமான அவரின் ஆனந்தத்தின் வெளிப்பாடு மட்டுமே. போகத்தினால் ஆனந்தம் அல்ல.

**சந்த$^{3}$னத$^{3}$ ரஸவ பூஸித$^{3}$வன மையொளு**
**ஹொந்தி$^{3}$த$^{3}$ மொத$^{3}$லாஷைத்யவனெ**
**மந்த$^{3}$ மாருத ப$^{3}$ந்து$^{3}$ வ்யக்தவ மாடி$^{3}$ப்ப**
**சந்த$^{3}$த$^{3}$ முக்தர போ$^{4}$க$^{3}$ங்க$^{3}$ளிகே$^{3}$ ||2**

சந்தனத ரஸவ – ஸுகந்த ஸாரத்தை (அல்லது கந்தோதகத்தை). பூஸிதவன – பூசிக் கொண்டிருக்கும் முக்தனின். மையொளு ஹொந்தித – தேகத்தில் (ஸ்வாபாவிகமாகியே) இருக்கும். மொதல – ஆரம்பத்திலேயே இருக்கும். ஆ ஷைத்யவனே – அந்த குளிர்ச்சியையே. மந்தமாருத பந்து – மந்தவாயு வீசி. வ்யக்தமாடிப்ப – வெளிப்படுத்துகிறான் (ஏனெனில்). சந்தத முக்தர போகங்களிகெ – சிறந்தவர்களான (சந்தத – அழகான. மங்களஸ்வரூபமான). முக்தரின் சுகாதிஷயத்திற்காக.

'வபுஷாம் ஸுரபித்வமேவ பஹிரந்தரபி' என்று முக்தர்களின் தேகங்களுக்கு, உள்ளேயும் வெளியேயும், நறுமணம் பரவியிருக்கிறது என்று சொல்லப்பட்டிருக்கிறது. முந்தைய பதத்தின் குறிப்புகளை இங்கும் பார்க்கலாம்.

**மத்த நர்த்தனத$^{3}$ந்தெ ஸந்தோஷ ந்ருபகெ$^{3}$**
**ப்$^{4}$ருத்யன கைலாகி$^{3}$னந்தெ**
**முக்தர லீலெக$^{3}$ளப்பந்தெ ஹரிய**
**சித்ர சரித்ரன லீலெக$^{3}$ளு ||3**

மத்தனர்த்தனதந்தெ – நாட்டியக்காரனின் நாட்டியத்தைப் போல. ந்ருபகெ – அரசனுக்கு. ப்ருத்யன கைலாகினந்தெ – சேவகர்கள் கைகுவித்து வணங்குவதைப் போல (அரசனை கௌரவித்து வரவேற்பதைப் போல). ஸந்தோஷ – மகிழ்ச்சிகரமானது (மகிழ்ச்சிக்கு நடனம், தென்றல் காற்று ஆகியவையே காரணம்). முக்தர்களின் லீலைகள். அப்பந்தெ – முக்தர்களின் லீலைகள் (மகிழ்ச்சியை வெளிப்படுத்தும் சாதனங்கள் மட்டும்) ஆவதைப் போல. சித்ரசரிதன – விசித்ர மகிமனான ஸ்ரீஹரியின். லீலெகளு – லீலைகளும் கூட (அவனின் பூர்ணானந்தத்தின் வெளிப்பாட்டிற்கு காரணம் மட்டுமே).

ஸ்ருஷ்ட்யாதிகம் ஹரேர்னைவ ப்ரயோஜன மபேஷ்யது |
குருதே கேவலானந்தாத்யதா மத்தஸ்ய நர்தனம் ||
பூர்ணானந்தஸ்ய தஸ்யேஹ ப்ரயோஜனமதி: குத: |
முக்தா அப்யாப்தகாமாஸ்யு: கிமு தஸ்யாகிலாத்மன: ||
(நாராயண ஸம்ஹிதா)

என்னும் பிரமாண வாக்கியம் இந்த ப்ரமேயத்தையே நிரூபிக்கிறது. இதன் விளக்கம் இவ்வாறு உள்ளது. ஸ்ரீஹரி, உலகின் ஸ்ருஷ்ட்யாதிகளை தனது பிரயோஜனத்திற்காக செய்வதில்லை. நடனமாடுபவனின் நடனத்தைப் போல, மகிழ்ச்சியுடன் செய்கிறான். ஸ்ரீஹரி, பூர்ணானந்தனாக இருக்கும்போது எவ்வித பிரயோஜனத்தின் நோக்கம் எப்படி இருக்க முடியும்? முக்தஜீவரும்கூட ஆப்த காமராக இருக்கையில், முக்தாமுக்தரின் (அனைவரின்) தலைவனான ஸ்ரீஹரி, ஆப்தகாமன் என்று சொல்வதில் என்ன இருக்கிறது? 'லோகவத்து லீலாகைவல்யம்' என்னும் சூத்திரம் இந்த பிரமேயத்தையே நிர்ணயிக்கிறது.

**நித்யத்ருப்தனு க்ருதக்ருத்யனச்யுத க[3]ட[3]**
**முக்தரெல்ல ப்ரகாமரு க[3]ட[3]**
**இந்தி[1]வராட[1]வ அந்த ஸ்ருதிபத[2]வனா**
**வ்யர்த்தவ மாட[3]த[3]வ ஜாண ||4**

அச்யுத – ஸ்ரீஹரி. நித்யத்ருப்தனு – நித்ய ஸந்துஷ்டன். க்ருதக்ருத்யனு கட – பூர்ணகாமன் அல்லவே? முக்தரெல்ல – அனைத்து முக்தரும். ப்ரகாமரு கட – (விரும்பிய அனைத்தையும்

உடனடியாக பெறும்) பூர்ணகாமர் ஆகியிருக்கின்றனர். இந்திவராடவ - இவ்வாறு இருக்கும் முக்த க்ரீடைகளையும், அந்தஸ்ருதிபதவனு - இவ்வாறு கூறும் அந்த புகழ்பெற்ற வேத நிரூபணையை (அல்லது இவ்வாறு இருக்கும் முக்தியை அடைவதற்கு வேதம் சொல்லும் வழியை). வ்யர்த்தவ மாடதவ ஜாண - வீண் ஆக்காதவனே விவேகி. (ஜீவ பிரம்மைக்யத்தையே முக்தி என்று அறிபவன், இந்த வேதவாக்கியங்களை வீணடிக்கும் அவிவேகியே சரி).

**அத3ரிந்த3 நித்யானந்த3 தப்பது3**
**ஒத3கி3த3 விஷய ராஷிக3ளா**
**மத3னய்யன புரதி3 நெலெஸிர்த3 முக்தர**
**முத3தி3ம் ஸேவிபரைஸெ ||5**

அதரிந்த - (முக்தருக்கு, நறுமணமிக்க தென்றல் ஆகியவை) இல்லை என்னும் காரணத்தினால். நித்யானந்த - நித்யானந்தம். தப்பது - தவறுவதில்லை (குறையில்லை - ஆனந்தமயமாகவே இருக்கிறார்கள்). வதகித - அந்தந்த காலத்தில் கிடைக்கும். விஷயராஷிகளு - போக்யவஸ்துகள். அந்த மதனய்யன - காமபிதனான ஸ்ரீகிருஷ்ணனின். புரதி - வைகுண்டபுரத்தில். நெலஸிர்த்த - வசிக்கும். முக்தர - முக்தர்களை. முததிந்த ஸேவிபரைஸெ - மகிழ்ச்சியுடன் (தம் சேவையை மட்டும் வழங்குகிறது) வணங்குகிறது என்று தெரியவில்லையா?

பழம், புஷ்பம், மந்த-மாருத ஆகிய அனைத்தும் ஸ்ரீஹரிபுரத்தில் அப்ராக்ருதங்களே ஆகியிருப்பதால், அவை விருப்பத்துடன் (மகிழ்ச்சியுடன்) முக்தர்களை வணங்கி, அதனால் தாமும் மகிழ்கிறது என்று அறியவேண்டும். அந்த அனைத்தும், தோஷரஹித முக்த ஸ்வரூபங்களே ஆகியிருக்கின்றன.

பத 27 ராக: கேதாரகௌளி. தாளம்: ரூபக
**அர எந்து3 ண்ய எந்து3 அல்லி ஸுதெ4ஸாக3ர**
**எரடெ3ந்தெ3ந்தி3ப்பவு க3ட3**
**ஸரஸலீலெயிந்த3லத3ர ரஸவனு மு**

**க்தரு ப$^3$ந்தா$^3$ஸ்வாதி$^3$ஸுவரு க$^3$ட$^3$ ||1**

அர எந்து ண்ய எந்து – 'அர' மற்றும் 'ண்ய' என்னும் பெயரின், ஸுதெஸாகர எரடு – இரு அம்ருத சமுத்திரங்கள், அல்லி – முக்த லோகத்தில் (ஷ்வேதத்வீபத்தில்). எந்தெந்திப்பவு கட – எப்போதும் இருக்கிறது என்பது ஸ்ருதியில் சொல்லப்பட்டது. ஸரஸலீலெயிந்தலி – மகிழ்ச்சியுடன் க்ரீடை செய்தவாறு, முக்தரு பந்து – முக்தர்கள் (பாற்கடலுக்கு) வந்து, அதர ரஸவனு – அதன் தண்ணீரை (ஜலரூபத்தின் அமிர்தத்தை), ஆஸ்வாதிஸுவரு கட – குடித்து மகிழ்கிறார்கள்.

அரஸ்ச ஹ வைண்யஷ்சார்ணவௌ பிரம்மலோகே என்னும் சாந்தோக்ய உபநிஷத் வாக்கியத்தை விவரித்தவாறு, ஸ்ரீமத்வாசார்யர், ஸூத்ர பாஷ்யத்தில், 'அரஸ்ச வைண்யஸ்ச ஸுதாஸமுத்ரௌ தத்ரைவ ஸர்வாபிமத ப்ரதௌ த்வௌ' என்று சொல்லியிருக்கிறார். அதாவது, 'அர மற்றும் ண்ய' என்னும் பெயருள்ள இரு அம்ருத சமுத்திரங்கள் விஷ்ணு லோகத்தில் இருக்கின்றன. அனைத்து முக்தர்களுக்கும் இவை ப்ரியமாக இருக்கின்றன. அவர்களின் விருப்பங்களை நிறைவேற்றுகின்றன.

**ஒந்தஷ்வத்தா$^2$வலி! சந்தத$^3$ம்ருதவோ!**
**எந்தெ$^3$ந்து$^3$ கரெவுதிப்புது$^3$ க$^3$ட$^3$**
**ப$^3$ந்த$^3$த$^3$னொமொம்மெ முக்தரு தம்ம மன**
**ப$^3$ந்த$^3$ந்தெ ஸவியுதிப்புது$^3$ க$^3$ட$^3$ ||2**

ஒந்தஷ்வத்தாவலி – அரச மரங்கள் பல இருக்கின்றன. (அரச மரங்களின் தோப்பு). சந்ததம்ருதவோ – மனோகரமான அமிர்தமோ. எந்தெந்து – எப்போதும். கரவுதிப்பது கட – (முக்தர்களை) குளிர்விக்கிறது. பந்து – முக்தர்கள் அங்கு வந்து. அதனொம்மொம்மெ – அதனை ஒவ்வொரு காலத்தில் (தம் விருப்பப்படி, அந்த அரச மரத் தோப்புக்கோ, ஸுதா ஸமுத்திரத்திற்கோ வந்து). தம்ம மனபந்தந்தெ – தம் விருப்பப்படி. ஸவியுதிப்புது கட – (முக்தர்களின் குழு) க்ரீடிக்கிறது.

**ஷுத்$^3$த$^3$ப்ராக்ருதவாத$^3$ புஷ்டித$^4$ ரஸவுள்ள**

---

**ஸ்வாத்த3ன்னக3ள கொடு3திப்ப**
**ஹ்ருத்யநதி3க3ளு ஸூத்த பரிவவு**
**பத்4மனாப4ன புரதொ3ளகெ3 ||3**

ஷுத்த ப்ராக்ருதவாத – ஷுத்த ஸத்வாத்மகமான. ஷட்விதரஸவுள்ள – ஆறு ரஸங்களைக் கொண்ட. ஸ்வாத்வன்னகள – திவ்ய ருசியுள்ள போஜ்ய வஸ்துகளை. கொடுதிப்ப – தருவதான. ஹ்ருத்ய நதிகளு – மனோகரமான நதிகள். பத்மனாபன புரதொளகெ – வைகுண்டபுரத்தில். ஸூத்தபரிவவு – சுற்றிலும் பாய்கிறது.

** எண்ணிக்கையற்ற அரண்மனைகளைக் கொண்ட. ஸ்ரீவைகுண்ட நாமகனான ஸ்ரீஹரியின் இருப்பிடமான நகரி, லட்சும்யாத்மகமானது. அதனை சுற்றிலும் இருக்கும் ஸ்ரீபாகத்தின் வைகுண்ட லோகத்தின் பிரஜைகளுக்கு, அறுசுவை நிறைந்த ஆகார வஸ்துகளை தருவதான ஆறுகள், ஸ்ரீஹரியின் நகரியின் சுற்றிலும் வெளிப்புறத்தில் பாய்கின்றன என்று அறியவேண்டும். இந்த விஷயம் பல பிரமாணங்களால் ஏற்கனவே நிரூபிக்கப்பட்டுள்ளது.
** இனிப்பு, புளிப்பு, கசப்பு, துவர்ப்பு, கரிப்பு, காரம் என்று ரஸங்கள் ஆறு விதம். இவற்றின் கலவையினால் வரும் சுவைகள் அனேகமாக இருக்கின்றன.

**ஸர்ப்பிபாயஸவெம்ப3 கர்த3மங்க3ளு கூடி3**
**ஒப்புவ ப4க்ஷ்ய போ4ஜ்யக3ளு**
**தோர்ப்பவம்ருதான்னாதி3க3ளலி பரிவவு ஆத3**
**னொப்புகொ3ம்பு3வரு லீலெயிந்த3 ||4**

(அந்த நதிகள்) ஸர்ப்பிபாயஸவெம்ப – நெய் மற்றும் பாலின் கலவையால். கர்த்தமங்களு கூடி – பல்வேறு சுவைகளைக் கொண்டு. ஒப்புவ பக்ஷ்ய போஜ்யகள – மனம் விரும்பும் பக்ஷ்ய போஜ்யங்களை. தோர்ப்பவு – (தயார் செய்து) கொடுக்கிறது. அம்ருதான்னாதிகளலி – அம்ருதம் கலந்த அன்னாதிகளைப் போல (அம்ருதத்தைப் போல ருசிக்கும் அன்னாதிகளின் ரூபத்தினால்)

பரிவவு - பாய்கிறது. அதன - அவற்றை. லீலெயிந்த - மகிழ்ச்சியுடன் (க்ரீடார்த்தத்துடன்). ஒப்புகொம்பரு - ஏற்றுக் கொள்கிறார். (கர்தம - அவ்வளவு தண்ணீரும் சுவையாக இருக்கிறது என்று அர்த்தம்).

**வாபி கூப தடாகங்க³ளல்லிஹவு நா**
**னா ப²லவெரஸித³ தருக³ளு**
**தோபுக³ளிஹவு அல்லியு ஒம்மொம்மெ**
**பரிபரியலி க்ரீடெ³யாடு³வரு ||5**

வாபிகூப தடாகங்களல்லி - வாபி - இறங்கி குளிக்கும் கிணறு. கூப - இறைக்கும் கிணறு. தடாக - ஏரி. ஆகியவற்றின் அருகில். நானாபலவெரஸித - பற்பல பழங்களை தாங்கியிருக்கும். தருகளு - மரங்கள். இஹவு - இருக்கின்றன. தோபுகளிஹவு - மரங்களின் தோப்புகள் இருக்கின்றன. அல்லியு - அந்த தோப்புகளிலும். ஒம்மொம்மெ - ஒவ்வொரு சமயம். பரிபரியலி - பற்பல விதமாக. க்ரீடெயாடுவரு - (முக்தர்கள்) விளையாடி, சஞ்சரிக்கின்றனர்.

**நித்யாப்ராக்ருதவாத³ சதுர்விதா³ன்னங்க³ள**
**துத்தனொம்மொம்மெ ஸவிவரு**
**ஸத்திகெ³ பிடி³வரு சாமரங்க³ளனல்லி**
**ப்⁴ருத்யரவரிகெ³ பீ³ஸுவரு ||6**

நித்யாப்ராக்ருதவாத - நித்யமும் அப்ராக்ருதமான. சதுர்விதான்னங்கள - பக்ஷ்ய (கடித்துத் தின்னும்), போஜ்ய (அப்படியே தின்னும்), லேஹ்ய (நாக்கினால் நக்கி தின்னும்), பேய (குடிக்கும்) என்னும் நான்கு வித ஆகாரங்களைக் கொண்ட. துத்தனு - பதார்த்தங்களை. ஒம்மொம்மெ - ஒவ்வொரு சமயம். ஸவிவரு - உண்டு மகிழ்வர். அல்லி - அந்த வைகுண்ட லோகத்தில். அவரிகெ - அந்த முக்தருக்கு. ப்ருத்யரு - சேவகர்கள். சாமரங்களனு - சாமரங்களை. பீஸுவரு - வீசுகின்றனர். ஸத்திகெவிடிவரு - உத்தமமான வஸ்திரங்களை தாங்கிப் பிடித்தவாறு பின் தொடர்கின்றனர். (இது ஒரு ராஜ மரியாதை ஆகும்).

---

** பழ, புஷ்பங்களின் உருவத்தில் இருக்கும் முக்தஜீவர்கள், ஸ்ரீஹரியின் சிந்திக்க முடியாத அளவுள்ள சக்தியினால் வளர்ந்து, ஸ்வோத்தம முக்தர்களை வணங்கும் விதம் இங்கு வர்ணிக்கப்பட்டுள்ளது.

**மக்களெத்திகொம்ப[3] தாய ஸுக[2]தி[3]ந்த[3]**
**உக்குவந்த[1]ல்லி ஸேவிபரு**
**ப[4]க்திப[4]ரித சித்த உப்[3]பி[3]கொம்பு[3]வர**
**ஸௌக்[2]யாப்[3]தி[4]யு துளுகுவுதை[3]ஸெ ||7**

மக்களெத்திகொம்ப – மக்களை தூக்கிக் கொள்ளும். தாயஸுகதிந்த – தாய் பாசத்தினால். உக்குவந்தெ – உருகுவதைப் போல (அதிகமான சுகத்தைப் பெறுவதைப் போல). அல்லி – வைகுண்டத்தில். ஸேவிபரு – (அந்த சேவகர்கள்) வணங்குகின்றனர். பக்திபரிதசித்த – பக்தியுடன் பூர்ணமான (இவரின்) மனம். உப்புகொம்புதர – மகிழ்ந்து. ஸௌக்யாப்தி – ஆனந்தக்கடலில். துளுகுவதெய்ஸெ – பொங்கிப் பெருகுவதில்லையா?

** தாய், தன் மக்களை, அன்புடன் தூக்கிக் கொண்டால், மக்களின் மகிழ்ச்சி அதிகமாவதைப் போல, சேவகர்கள் ஸ்வோத்தமரின் சேவையினால் அதிகமான மகிழ்ச்சியையே அடைகின்றனரே தவிர, சேவகதனத்தின் தோஷங்கள் அங்கு சிறிதளவும் இருப்பதில்லை என்கிறார்.

**பாலும்ப[3] ஸுக[2]தி[3]ந்த[3] ஸக்கரெ கூடி[3]த[3]**
**பால ஸுகி[2]ப ஸுக[2] மேலு**
**லோலாக்ஷியர நோள்ப ஸுக[2]தி[3]ந்த[3] மத்தவரங்க[3]**
**தா[3]லிங்க[3]னத[3] ஸுக[2] மேலு ||8**

பாலும்ப ஸுகதிந்த – வெறும் பால் குடிக்கும் சுகத்தைவிட. ஸக்கரெகூடித பால – சர்க்கரை சேர்த்த பாலை. ஸுகிப ஸுக – போகிக்கும் (குடிக்கும்) சுகம். மேலு – உத்தம. லோலாக்ஷியர – சஞ்சலாக்ஷியரை (அழகான பெண்களை). நோள்ப சுகதிந்த –

பார்க்கும் சுகத்தைவிட. மத்தெ அவரங்கத - இன்னும் தேகத்தின், ஆலிங்கனத சுகமேலு - ஆலிங்கன சுகம் அதிகமானது.

**இந்து மஹந்தர ஸுக2 மேலு முக்தியொளு**
**அந்தரந்தரதி3 ஸேவிபர**
**ஸந்தோஷ தாரதம்யத3ல்லி இம்பாத3**
**ரந்தெ தோரித3 ஹயவத3ன ||9**

இந்து - இவ்வாறே. முக்தியொளு - முக்தியில். மஹத்தர ஸுகமேலு - (கீழானவரைவிட) உத்தமரின் சுகம் அதிகமானது. அந்தரந்தரதி - தாரதம்யத்தினால். ஸேவிபர - (அவரை) வணங்குபவரின். ஸந்தோஷ - சுகம் (குறைவானது). தாரதம்யதல்லி - ஆனந்த தாரதம்யத்தில் இருக்கும். இம்ப - அழகினை (யதார்த்தத்தை). ஹயவதன - (என் உபாஸ்ய மூர்த்தியான) ஹயவதனன். (முக்தியில்) அதரந்தெ - இவ்வாறு இருப்பதை. தோரித - தெரிவித்தான் (ப்ரேரணை செய்து சொல்ல வைத்தான்).

**வைகுண்ட2லோகவெம்ப3 புரத3 கதெ2ய ப**
**ராகு விட்டு கேள்வஜனர**
**ஸ்ரீகாந்த காவனெம்ப3ல்லி மொத3ல ஸந்தி3**
**ஈ காவ்யதொ3ளகெ3 முகி3யிது ||10**

வைகுண்டலோகவெம்ப புரத கதெய - (வைகுண்டலோகத்தில் இருப்பதால்) வைகுண்ட லோக என்று அழைக்கப்படும். வைகுண்டபுரியின் மகிமா வர்ணனையை. பராகுவிட்டு - தூரத்திலிருந்து கௌரவித்து பூஜ்யபுத்தியினால். கேள்வ - கேட்டு நிஷ்டையைப் பெறும். ஜனர - மனிதர்களை. ஸ்ரீகாந்த - லட்சுமிபதி. காவனெம்பல்லி - அருள்கிறான் என்பதில். ஈ காவ்யதொளகெ - இந்த காவியத்தில். மொதலஸந்தி - முதலாம் சந்தி. முகியிது - பூர்ணமாயிற்று.

**ஸ்ரீத4ர ஹயவத3ன ராயன த3யதி3ந்த3**
**வாதி3ராஜேந்தி3ர ரசிஸிதெ3**
**ஈ தி3வ்யகாவ்யதி3 முக்தியோருவ**

## 1. மோட்ச ஸந்தி

---

**மொதல$^{3}$ ஸந்தி$^{3}$ பொஸகெ$^{3}$ ||**

ஶ்ரீதர - லட்சுமிவக்ஷனான. ஹயவதனராயன - ஶ்ரீஹயக்ரீவ ஸ்வாமியின். தயதிந்த - க்ருபையினால். வாதிராஜேந்திர ரசிஸித - வாதிராஜ என்னும் யதிஸ்ரேடர் இயற்றிய. ஈ திவ்யகாவ்யதி - இந்த சிறந்த காவியத்தில். முக்தியேருவ - முக்திக்கு செல்லும் (முக்திக்கு வழிகாட்டியாக இருக்கும்). ரம்யவாத - மனோகரமான (சிரவணத்தினாலேயே மகிழ்ச்சியைக் கொடுக்கும்). மொதலஸந்தி - முதலாம் சந்தி. பொஸகெ - ஒளிர்ந்தது.

***

**|| ஸ்ரீஹயவதனாய நம: ||**
**|| ஸ்ரீவாதிராஜ குருப்யோ நம: ||**

*** தத்வஸார ***

## 2. லய ஸந்தி

**இது[3] புண்யகதெ[2] லோகக்கிது[3] முகுதிய பத[2]**
**இத[3] கேளுவவனெ க்ருதார்த்த[2] ||பல்லவி**

குறிப்பு: இதன் அர்த்தத்தை முதலாம் சந்தியின் துவக்கத்தில் பார்க்கலாம். இதே பல்லவி, அடுத்த அனைத்து சந்திகளின் துவக்கத்திலும் இருக்கிறது.

ஸ்லோக 1
**ஸ ஏவ பூ[4]யோ நிஜவீர்யசோதி[3]தாம்**
**ஸ்வஜீவமாயாம் ப்ரக்ருதிம் ஸிஸ்ருக்ஷதீம்**
**அனாமரூபாத்மனி ரூபனாமனீ**
**விதி[4]த்ஸமானோऽனுஸஸார ஷாஸ்திக்ருத் || (பாகவத)**

ஸ ஏவ – அந்த பரமபுருஷனே. பூய: – திரும்ப. நிஜவீர்யசோதிதாம் – ஸ்வ-சாமர்த்தியத்தினால் வந்த. ஸ்வஜீவ மாயாம் – தன் அதீனரான ஜீவர்களை தன் விருப்பத்தினாலேயே கட்டுப்படுத்தும். ப்ரக்ருதிம் – ஜடப்ரக்ருதியையும். ஸிஸ்ருக்ஷதீம் – ஸ்ருஷ்டியில் விருப்பத்தைப் பெற்ற லட்சுமிதேவியையும். அனாமரூபாத்மனி – ப்ராக்ருத நாமரூபங்கள் இல்லாத, தன்னில் மற்றும் தன்னில் அடங்கியிருக்கும் நாம ரூபங்கள் இல்லாத ஜகத்தையும், ரூபநாமனீ – ரூப நாமங்கள் கொண்டதாக (பிரளய காலத்தில் தன் வயிற்றில் சேர்ந்த ஜகத்தினை ரூப நாமங்களைக் கொடுத்து வெளிப்படுத்தி). விதித்ஸமான: – செய்ய வேண்டும் என்னும் விருப்பத்தினால். ஷாஸ்திக்ருத் – ஸர்வ நியாமகனான ஸ்ரீஹரி.

அனுஸஸார - அடைந்தான். (இரு ப்ரக்ருதிகளில் தன் ஷக்தியை நிறுவி ஸ்ருஷ்டிக்கு சந்தர்ப்பம் ஏற்படுத்திக் கொடுத்தான்).

பத 1 ராகம்: ஷுத்தவராளி. தாளம்: ரூபக

**ஜீவராது$^{1}$ம தே$^{3}$ஹரூபதி$^{3}$ந்த$^{3}$ க$^{4}$ட்டிதாகி$^{3}$**
**ஜீவ மாயெ க$^{3}$ட$^{3}$ ப்ரக்ருதி**
**தே$^{3}$வன நிஜஷக்தியிந்த$^{3}$ கூடி$^{3}$ தன்னடெ$^{3}$**
**ஸுவந்தி$^{1}$த$^{3}$ நடெ$^{3}$ஸுவ க$^{3}$ட$^{3}$ ||1**

ஜீவராதும - ஜீவர்களின் ஆத்ம (ஸ்வரூபம்). தேஹரூபதிந்த கடிதாகி - தேஹ என்னும் ப்ரக்ருதியினால் (ப்ராக்ருத தேகத்துடன்). சம்பந்தம் பெற்றிருப்பதால். ப்ரக்ருதி - ப்ரக்ருதி. ஜீவமாயெ கட - ஜீவனை மோகம் கொள்ளச் செய்கிறது (வேறு எதுவும் இல்லை). தேவன - ஸ்ரீஹரியின். நிஜஷக்தியிந்த கூடி - ஸ்வதந்த்ர ஷக்தியினால் ப்ரேரணை செய்யப்பட்டு. தன்னடெஸுவந்தெ - தன் ஆணையைப் போல நடக்குமாறு (அவனின் ப்ரேரணைக்கேற்ப). இத - இந்த ஜீவசமூகத்தை. நடெஸுவ கட - நடத்துகிறாள் என்பது உண்மை (அனைத்திற்கும் ஸ்ரீஹரியே லட்சுமியின் மூலம் ஸ்வதந்த்ர காரணன்).

**ஸ்ருஷ்டிஸி நாராயண பொம்மாதி$^{3}$க$^{3}$ள உ**
**த்க்ருஷ்ட ஸத்யாதி$^{3}$ லோகத$^{3}$லி**
**பட்டவ கட்டி ஸகல ஸ்ருஷ்ட்யாதி$^{3}$க$^{3}$ள**
**கொட்டு பாலிஸித$^{3}$ லீலெயலி ||2**

நாராயண - ஸ்ரீநாராயணன். பொம்மாதிகள - பிரம்மாதி ஜீவர்களை. ஸ்ருஷ்டிஸி - படைத்து. உத்க்ருஷ்டஸத்யாதி லோகதலி - சிறந்ததான ஸத்யலோகமே முதலான உலகங்களில். பட்டவ கட்டி - அதிபதிகளாக பட்டாபிஷேகம் செய்து. சகல ஸ்ருஷ்ட்யாதிகள கொட்டு - ஸ்ருஷ்டி செய்யும் அதிகாரங்களை. கொட்டு - அவர்களுக்குக் கொடுத்து. (அந்த அதிகாரங்களை நடத்துவதற்கு தேவையான சாமர்த்தியத்தை). அவரல்லிட்டு - ஒவ்வொரு ரூபத்தினால் தானே அவரில் நின்று. (ஸ்ரீஹரியின் சாமர்த்தியம்

அவனிடமிருந்து மிகவும் அபின்னமானதே ஆகும்). லீலெயலி – லீலையால். பாலிஸித – (அந்த அனைவரையும்) காக்கிறான்.

** 'பந்தகோ பவபாஷேன மோசகஸ்ச ஸ ஏவ ஹி'. அதாவது, ஜனன மரண ரூபத்தின் சம்சார என்னும் பாஷத்தினால் கட்டுபவனும், அதிலிருந்து விடுதலை செய்பவனும் அந்த ஸ்ரீஹரியே ஆகிறான்' என்று ஸ்ருதி சொல்கிறது. ஜீவர்களை கட்டுப்படுத்தும் ஜடப்ரக்ருதியும், அதன் அபிமானி லட்சுமிதேவியும்கூட ஸ்ரீஹரியின் அதீனர்களே. உலகத்தின் ஸ்ருஷ்டி ஸ்திதி லயாதிகள், ப்ரக்ருதியினாலேயே ஆகிறது என்று 'நிரீஷ்வர ஸாங்க்யர்' சொல்கின்றனர். ஈஷ்வரனின் அருளால் ஆன (அவனின் உதவி பெற்ற) ப்ரக்ருதியே காரணம் என்று 'ஸேஷ்வர ஸாங்க்யர்' சொல்கின்றனர். இந்த இரு சாங்க்ய மதங்களும் ஒப்புக் கொள்ளத் தக்கதல்ல.

ஈஷ்வரன் ஸ்வதந்த்ரன் இல்லையெனில், அவன் 'ஈஷ்வரனே' அல்ல. ஈஷ்வரனை ஒப்பும் நிரீஷ்வர ஸாங்க்யர், விருப்பத்துடன் சஞ்சரிக்கும் சக்தியே இல்லாத ஜட ப்ரக்ருதிக்கு ஜகத் கர்த்ருத்வத்தை சொல்வது எப்போதும் பொருந்துவதில்லை. 'ஸேஷ்வரஸாங்க்யர்' ஈஷ்வரனை ஒப்புக் கொண்ட பிறகும், அவனுக்கு ஸ்வாதந்த்ர்யத்தை ஒப்பவில்லையெனில், அதுவும் சரியல்ல. அவன் 'ஈஷ்வரனும்' அல்ல.

ஸ்வதந்த்ரன் என்றால், ப்ரக்ருதி (ஜடப்ரக்ருதி மற்றும் அதன் அபிமானியான லட்சுமிதேவியும்) அவனின் அதீனம் என்று ஆனது. அனாதி காலத்தினால் ஜீவர்களை கட்டுப்படுத்தியிருக்கும் ப்ரக்ருதியின் (இரு ப்ரக்ருதிகளின் ப்ரக்ருத்யபிமானி லட்சுமிதேவியும் ப்ரக்ருதி ஷப்தத்தினால் அழைக்கப்படுபவளே) கட்டுப்படுத்தும் சக்தியும், ஈஷ்வரனின் அதீனம் என்றே அறியப்பட்டது.

கட்டுப்படுத்துபவனே, மோட்சத்தைக் கொடுப்பவன் ஆகவேண்டும் என்பது உலகப்புகழ் பெற்ற விஷயம். கட்டுப்படுத்துபவன் ஒருவன் என்றால், விடுவிப்பவன் இன்னொருவன் ஆகமுடியாது. அப்படியிருந்தால், உலகத்தில் எந்த செயலும் நடக்காமல் வெறும்

குழப்பமே நிகழும். கட்டுப்படுத்துபவனான ஶ்ரீஹரி, ஜீவர்களை பந்தனத்திலிருந்து விடுதலை செய்வதற்கு, அந்த விடுதலைக்குத் தேவையான தகுதியைக் கொடுப்பதற்கு, அவர்களிடமிருந்து யோக்ய சாதனைகளை செய்வித்தே அவர்களுக்கு மோட்சம் கொடுக்கிறான். அப்படியில்லை என்றால், அவனுக்கு வைஷ்ணவாதி தோஷங்கள் வருகின்றன. ஜீவர்களுக்கு ஶ்ரீஹரி பந்தனத்தை ஏன் கொடுத்தான் என்னும் கேள்வியும் சரியல்ல. ப்ரக்ருதியின் இந்த பந்தக சக்தி, அவனின் விருப்பப்படியே என்பது உண்மையானாலும், பந்தனம் அனாதி ஆவதற்கு முதலே என்பது எங்கு வந்தது?
ஆகையால், முதலில் பந்தனம் செய்தது ஏன் என்னும் கேள்விக்கு வாய்ப்பு இல்லை. அனாதி காலத்திருந்து இப்படி இருக்கும் ஜீவர்களை பந்தனத்திலிருந்து மோசனம் செய்து, அவரின் ஸ்வரூப ஸித்தியை கொடுப்பதே ஸ்ருஷ்ட்யாதி பகவத்வியாபாரங்களின் பிரயோஜனம். 'முக்திர்ஹித்வாऽன்யதாரூபம் ஸ்வரூபேண வ்யவஸ்திதி:'. தன் ஸ்வரூபத்தை மூடியிருக்கும் அ-ஸ்வபாவிக தேகங்களை (ரூபங்களை) விட்டு, ஸ்வஸ்வரூபத்தின் பூர்ண ஆவிர்பாவத்தை அடைவதே முக்தி' என்று ஶ்ரீமத் பாகவதம் சொல்கிறது. ஶ்ரீஹரியின் அகண்ட ஸ்வாதந்த்ர்யத்தை வர்ணித்து, கிரந்தகாரர், இந்த பிரமேயத்தை நிரூபிக்கிறார்.

** பிரம்மாதி தேவதைகளுக்கு ஸ்ருஷ்ட்யாதி அதிகாரங்களை கொடுத்தான் என்றால், அந்த அதிகாரங்களை நிர்வகிக்கும் தன் ஸ்வதந்த்ர சக்தியை அவரில் வைத்திருக்கிறான் என்று அர்த்தம். சதுர்முகன் மூலமாக ஆகும் ஸ்ருஷ்டியை அவர் மூலம் ஶ்ரீஹரியே செய்கிறான். சிவனில் இருந்து லய செய்பவனும் அவனே. அவ்வளவு ஏன்? ஸர்வ யோனிகளில் இருக்கும் ஸர்வப்ராணிகளின் உத்பத்யாதிகளுக்கும் அவனே ஸ்வதந்த்ர காரணன். 'பிரம்மணி பிரம்ம ரூபோஸௌ ஷிவரூபி ஷிவே ஸ்தித:' ஆகிய பிரமாண வாக்கியங்கள். பிரம்ம சிவாதிகளில் அந்தந்த நாமகனாக, அந்தந்த ரூபத்தில் இருந்து, செயல்களை செய்யும் ஸ்வதந்த்ர பிரபு என்று பகவந்தனைப் பற்றி சொல்கிறது.
ஸர்வயோனிஷு கௌந்தேய மூர்த்தய: ஸம்பவந்தி யா: |
தாஸாம் பிரம்ம மஹத்யோ நிரஹம் ஜீவபிரத: பிதா || (கீதை)

அனைத்து யோனிகளில் (தேக சம்பந்த ரூபத்தின்) பிறவி எடுக்கும் அனைத்து பிராணிகளின் உற்பத்திக்கும் லட்சுமிதேவியே தாய்; நானே ஜீவபிரதனான தந்தை -- என்று ஸ்ரீகிருஷ்ணனே சொல்லியிருக்கிறான்.

**அவதரிஸி பூ4மிய பா4ரவனிளுஹித3**
**பு4வன பாவன சரித ப4வ்ய**
**தவெயாத3 ஸுக2ங்க3ள தன்னவரிகெ3 கொட்டு**
**ஜவன பா3தெ4க3ள பி3டி3ஸித3 ||3**

அவதரிஸி - (ராம, கிருஷ்ணாதி ரூபங்களால்) தோன்றி. பூமிய பாரவனு - பூமியின் பாரத்தை. இளுஹித - இறக்கிய (பரிகரித்தவன்). புவனபாவன சரித - உலகினை (பிரஜைகளை). பவித்ரமாக்கும் சரித்திரத்தைக் கொண்டவன். பவ்ய - மஹத் ஐஸ்வர்ய பூர்ணன். தன்னவரிகெ - தன் பக்தருக்கு. தவெயாத ஸுகங்கள - கற்பனைக்கும் எட்டாத போகங்களை. கொட்டு - அருளி. ஜவன பாதெகள - யம பாதைகளை. (மரண துக்காதிகளை). பிடிஸித - விலக்கினான்.

** தன் அனைத்து அவதாரங்களின் நோக்கங்களை ஸ்ரீகிருஷ்ணன் கீதையில் இவ்வாறு நிரூபிக்கிறான்.

யதா யதா ஹி தர்மஸ்ய க்லானிர்பவதி பாரத |
அப்யுத்தானம் அதர்மஸ்ய ததாத்மானம் ஸ்ருஜாம்யஹம் ||
பரித்ராணாய ஸாதூனாம் வினாஷாய ச துஷ்க்ருதாம் |
தர்ம ஸம்ஸ்தாபனார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே ||

'தர்மக்லானி (தொந்தரவு, பிரச்னைகள்) மற்றும் அதர்மத்தின் உத்தான (வளர்ந்து தலை தூக்குவது). இந்த இரண்டும் எந்தெந்த காலங்களில் சம்பவிக்கின்றதோ, அப்போதெல்லாம், சஜ்ஜனர்களை அருள்வதற்கும், துஷ்டர்களை அழிப்பதற்கும், நான் அவதரிக்கிறேன்'. இவ்வாறு கூறிய ஸ்ரீஹரியின் அவதார லீலைகளால், அவனின் ஸ்வாதந்த்ர்யாதி மகிமைகளை அறிவது, முக்திக்கு சாதனம் என்று இந்த நுடியிலிருந்து தெரிகிறது.

## 2. லய ஸந்தி

---

**ப$^4$க்த ஜனர பொரெத$^3$ தை$^3$த்யர முரித$^3$ ஸ**
**ர்வத்ர ஸ்ருதிவிதா$^4$னவனொரெத$^3$**
**ஹஸ்தீந்த்$^3$ரவரத$^3$ து$^3$ரிதராஷிக$^3$ள தரித$^3$**
**கீர்த்தியிம் மெரெதி$^3$ஷ்டவ கரெத$^3$ ||4**

முந்தைய ஸ்லோகத்தின் அர்த்தம் இங்கு மேலும் விளக்கப்படுகிறது. பக்தஜனர பொரெத - ஸத்பக்தர்களை அருளினான். ஸர்வத்ர - உலகில் அனைத்து இடங்களிலும். ஸ்ருதிவிதானவனு - வேத மார்க்கத்தை. ஒரெத - போதித்தான் (வேத தர்மத்தை ஸ்தாபித்தான்). தைத்யர முரித - அசுரர்களைக் கொன்றான். ஹஸ்தீந்த்ரவரத - கஜேந்திர வரதன். துரித ராஷிகள - (பக்தரின்) பாப ராஷிகளை. தரித - அழித்தான் (நிர்மூலம் செய்தான்). கீர்த்தியம் - தன் பெருமையை (பிரபாவத்தை). மெரெது - அதனை உலகத்தில் பரப்பி. இஷ்டவ கரெத - (பக்தரின்) அபீஷ்டங்களை நிறைவேற்றினான்.

**கொளகங்கி$^3$க$^3$ள களெது$^3$ செலுவ சின்னாம்ப$^3$ரத$^3$**
**ஹொளெவங்கி$^3$க$^3$ள தொடுவந்தெ**
**ஜலஜாக்ஷ மாடு$^3$வ லயத$^3$ லீலெயு முக்தி**
**ப$^2$லவீவுத$^3$ரிம் ப$^3$ண்ணிபெனு ||5**

கொளகங்கிகள களெது - பழைய வஸ்திரங்களை துறந்து. செலுவ சின்னாம்பரத - அழகான தங்கமயமான. ஹொளவங்கிகள - ஒளிரும் வஸ்திரங்களை. (தங்கமயமான சட்டைகளை). தொடுவந்தெ - அணியுமாறு. ஜலஜாக்ஷ - புண்டரிகாக்ஷன் (ஸ்ரீஹரி). மாடுவ - நடத்துகிறான். லயத லீலெயு - ஜல பிரளயத்தில் அவனது லீலை. முக்தி பலவீவுதரிம் - (சாதனை பரிபூர்ணமான ஜீவருக்கு) மோட்ச ரூபத்தின் பலன்களை கொடுப்பதால். (கொடுப்பதற்காக என்னும் மகிமையை தெரிவிப்பதால்). பண்ணிபெனு - வர்ணிக்கிறேன்.

** 'ஏவமேவாயமாத்மா இதம் ஷரீரம் நிஹத்யாவித்யாம் கமயித்வா அன்யன்னவதரம் கல்யாணதரம் ரூபம் குருதே பித்ர்யம் வா காந்தர்வம் வா தெய்வம் வா ப்ராஜாபத்யம் வா பிராமணம் வா அன்யேஷாம் பூதானாம்' (ரிக்வேத).ஸ்ரீஹரியின் முக்தி

பிரதான மகிமை வர்ணிக்கப்பட்டுள்ளது. இதன் அர்த்தம். ஏவமேவ – இவ்வாறே (பொற்கொல்லன், தங்கத்தை நெருப்பில் போட்டு சுத்தம் செய்து, அதிலிருந்து பல்வேறு ஆபரணங்ளை செய்வதைப் போல). ஆயமாத்மா – இந்த பரமாத்மன். இதம் ஷரீரம் – இந்த சரீரத்தை. நிஹத்ய – நாசம் செய்து (ஜீவனுக்கு ப்ராக்ருத தேக சம்பத்தத்தை விடுவித்து). அவித்யாம் கமயித்வா – அவித்யையை விலக்கி. அன்யத் நவதரம் – வேறு புதியதான. கல்யாணதரம் ரூபம் – மங்களகரமான (ப்ரக்ருதி சம்பந்தம் இல்லாததான) ரூபத்தை. குருதே – செய்கிறேன். பித்ர்யம் வா – பித்ரு ஜீவனுக்கு பித்ரு ஸ்வரூபத்தை. காந்தர்வம் வா தெய்வம் வா, ப்ராஜாபத்யம் வா, பிராம்ஹம் வா, அன்யேஷாம் பூதானாம் – கந்தர்வ, தேவ, பிரஜாபதி, பிரம்ம (சதுர்முக), மற்றும் மனுஷ்யோத்தமரே முதலான மற்ற அனைவருக்கும் அவரவரின் ஸ்வரூப தேகங்களை. குருதே – கொடுத்து முக்தர்களாக செய்கிறான். இந்த ஸ்ருத்யர்த்தத்தையே ஸ்ம்ருதி வாக்கியங்கள் மேலும் இவ்வாறு விளக்குகின்றன.

இதம் ஷரீரம் பூதேஷு விலாபயதி கேஷவ: |
அவித்யாம் சைவ ஜீவஸ்ய கமயேத் ஞானஸர்ஜனாத் |
ஸ்வர்ணகாரோ யதா ஸ்வர்ணமலமக்னௌ நிஹத்ய ச |
ஷுத்தேன தேன ஜாத்மேஷ்டம் குருதே ரூபமஞ்சஸா ||

சர்வகர்த்தனான ஸ்ரீஹரி, ஜீவருக்கு ஸ்வஸ்வரூபங்களைக் கொடுப்பதற்காகவே பிரளயத்திலிருந்து ஸ்ருஷ்டியை நிறுத்தியிருக்கிறான்.

**ஜக$^3$வ பாலிஸி மத்தீ ஜக$^3$தீ$^3$ஷ ஜீவர்க்கெ$^3$**
**ப$^3$கெ$^3$ப$^3$கெ$^3$ய க$^3$திக$^3$ள கொட$^3$லு**
**மக$^3$ன நூரு வருஷ முகி$^3$யலு முன்னிர்த$^3$ந்தெ**
**ப$^4$க$^3$வான் லயகெ மனவித்த ||6**

ஜகவ பாலிஸி – உலகத்தை அருளி (ஜீவர்களிடமிருந்து அவரவர் தகுதிக்கேற்ப சாதனைகளை செய்வித்து). மத்தெ – திரும்ப. ஈ ஜகதீஷ – உலக நாயகனான இந்த ஸ்ரீஹரி. ஜீவர்கெ – ஜீவர்களுக்கு. பகெபகெய கதிகள – பற்பல (ஸ்வயோக்ய) கதிகளை. கொடலு – கொடுப்பதற்காக. மகன – (தன்னிடமிருந்தே

முதலில் பிறந்த) சதுர்முகனின். நூருவர்ஷ - நூறு ஆண்டுகளில் காலம். முகியலு - முடியும்போது. முன்னிர்தந்தெ - ஸ்ருஷ்டிக்கு முன்னர் இருந்ததைப் போல. லயகெ - பிரளய காலத்திற்கு. பகவான் - ஷட்குணைஸ்வர்ய பூர்ணனான ஸ்ரீஹரி. மனவித்த - சங்கல்பம் செய்தான் (மனம் வைத்தான்).

** தேவமானத்தின் 12,000 ஆண்டுகள் என்பது மனித கணக்கில் 43,20,000 ஆண்டுகள் ஆகின்றன. இது, க்ருத, த்ரேத, த்வாபர, கலி என்று நான்கு யுகங்கள் ஒரு முறை ஆவதற்கான காலம். இதுவே மஹாயுகம் எனப்படுகிறது. 1,000 மஹாயுகங்களின் காலம் பிரம்மதேவரின் ஒரு பகல். அது போல இன்னொரு பகுதி - அவரது இரவு. இத்தகைய இரவும், பகலும் சேர்ந்தால் ஒரு நாள். இவ்வாறான 360 நாட்கள் முடிந்தால், அது பிரம்மனின் ஒரு ஆண்டு. இவ்வாறு இருக்கும் 100 ஆண்டுகள் பிரம்மனின் ஆயுட்காலம். இவை முடிந்தால், மஹாபிரளயம் முடிகிறது. மொத்த பிரம்மாண்டமே லயம் அடைகிறது. 'ப்ராக்ருதிக-லய' என்றும் இது அழைக்கப்படுகிறது. பிரம்மதேவனின் ஒவ்வொரு பகல் முடிந்தவுடன், பூ, அந்தரிக்ஷ மற்றும் ஸ்வர்க்க என்னும் மூன்று உலகங்களும் நாசம் அடைகின்றன. இது 'தைனந்தின லய' என்று அழைக்கப்படுகிறது.

பிரம்மதேவனின் ஒவ்வொரு பகலிலும் 14 மனுகள் வந்து போகின்றனர். ஒருவர் ஆனபிறகு இன்னொருவர் என (சமானமான காலத்தில்) அதிகாரத்தில் இருக்கின்றனர். ஒவ்வொரு மன்வந்தர (மனுவின் கால அளவு) ஆனபிறகும், ஜல பிரளயம் ஆகிறது. அனைத்து பிராணிகளும் (பூமியில் இருப்பவை) அழிகின்றன. இது 'மன்வந்தர பிரளய' என்று அழைக்கப்படுகிறது.

லிங்கதேகம் பங்கம் ஆவதை 'ஆத்யந்திக பிரளய' என்றும் சொல்கின்றனர். புற உலகின் சம்பந்தமே இல்லாத அஸம்பிரக்ஞாத சமாதி என்னும் நிலையை அடைவதும்கூட, ஒரு பார்வையில் 'ஆத்யந்திக லய' என்றே சொல்வது உண்டு.

நித்யோ நைமித்திகஸ்சைவ ததா ப்ராக்ருதிகோ லய: |

ஆத்யந்திகஸ்ச கதித: காலஸ்ய கதிரீத்ருஷீ || (பாகவத)

என்று, இந்த பற்பல வித லயங்களைப் பற்றிய விவரங்கள் உள்ளன.

** ப்ராக்ருதிக லயத்தின் பிறகே, முக்தன் ஆகும் அனைத்து ஜீவர்களுக்கு லிங்கதேக பங்கத்தினால் ஸ்வரூப ஸித்தி ரூபத்தின் முக்தி கிடைக்கிறது. இவ்வாறு 'லய' முக்திக்கு காரணம் ஆகியிருப்பதால் (அது இல்லாமல் முக்தி இல்லை என்பதால்), லயத்தை இந்த சந்தியில் வர்ணித்திருக்கிறார்.

ஸ்ரீ நாராயணன், வாசுதேவ, சங்கர்ஷண, பிரத்யும்ன, அனிருத்த என்னும் தன் நான்கு ரூபங்களால் ஜகத் சம்பந்தமான அனைத்து செயல்களையும் தன் லீலையினால் செய்கிறான். வாசுதேவன் மோட்சத்தைக் கொடுப்பவன். சங்கர்ஷணன் லய-கர்தன். பிரத்யும்னன் ஸ்ருஷ்டி-காரன். அனிருத்தன் ஸ்திதி காரன் (உலகத்தை காப்பவன்). இந்த முறையிலேயே மூல ரூபத்தினால், இந்த ரூபங்கள் ஒன்று ஆனபிறகு இன்னொன்று என தோன்றுகிறது. இதே வரிசையிலேயே இந்த காவியத்தின் சந்திகளும் வந்திருக்கின்றன.

இத்தம் விசிந்த்ய பரமஸ்ய து வாஸுதேவ
நாமா பபூவ நிஜமுக்தி பதப்ரதாதா |
தஸ்யாஜ்ஜயைவ நியதாऽத ரமாऽபி ரூபம்
பப்ரே த்விதீயமபி யத்ப்ரவதந்தி மாயாம் ||

சங்கர்ஷணஸ்ச ஸ பபூவ புனஸ்ஸு நித்ய:
ஸம்ஹார காரணவபுஸ்ததனுக்ஞயைவ |
தேவி ஜயேத்யனுபலபூவ ஸ ஸ்ருஷ்டி ஹேதோ:
ப்ரத்யும்ன தாமுபகத:க்ருதிதாம் ச தேவீ ||

ஸ்தித்யை புனஸ்ஸ பகவானனிருத்த நாமா
தேவீ ச ஷாந்திரபவச்சரதாம் ஸஹஸ்ரம் || (தாத்பர்ய நிர்ணய)

என்று வாசுதேவாதி நான்கு அவதாரங்கள் விளக்கப்பட்டிருக்கின்றன. இந்த ஸ்லோகங்களின் அர்த்தம் இவ்வாறு: இவ்வாறு ஸ்ருஷ்டி செய்கிறேன் என்று விரும்பிய ஸ்ரீஹரி, வாசுதேவ ரூபத்தை அடைந்தான். இந்த ரூபத்தினால் ஜீவர்களுக்கு முக்தியைக் கொடுக்கிறான். அவனின் ஆணையினால் ஸ்ரீரமாதேவி 'மாயா' என்னும் இரண்டாம் ரூபத்தை தாங்கினாள். மறுபடி, ஸ்ரீஹரி, பிரளய காரணமான சங்கர்ஷண ரூபத்தை வெளிப்படுத்தினான். ரமாதேவியும் 'ஜயா' நாமக ரூபத்தை ஸ்ரீஹரி ஆணையினால் (ஸ்ரீஹரியைப் போல தன் இஷ்டப்படி ஸ்வதந்த்ரளாக அல்ல) எடுத்தாள். அடுத்து, நாராயணன் ஸ்ருஷ்டி செய்வதற்காக பிரத்யும்ன ரூபத்தையும், தேவி 'க்ருதி' நாமக ரூபத்தையும் ஏற்றார்கள். திரும்ப, ஸ்திதி காரணனான அனிருத்த ரூபத்தை நாராயணன் ஏற்றான். தேவி 'ஷாந்தி' நாமக ரூபம் ஏற்றாள். தாத்பர்ய நிர்ணயத்தில் ஸ்ரீமன் மத்வாசார்யர் இந்த ரூபங்களின் மகிமையை விளக்கியவாறு:

நிர்தேஹகான் ஸ பகவானனிருத்த நாமா
ஜீவான் ஸ்வகர்ம ஸஹிதானுதரே நிவேஷ்ய |
சக்ரேsததேஹ ஸஹிதான்...

என்று, அனிருத்தன் ஸ்வகர்ம சஹிதரான தேகம் இல்லாத ஜீவர்களை தன் வயிற்றில் வைத்துக்கொண்டு, தேக சஹிதராக செய்தான் என்று சொல்கிறார்.
இப்படியிருக்கையில், அனிருத்தனே ஸ்ருஷ்டி கர்தன் என்றும், பிரத்யும்னன் ஸ்ருஷ்டி காரணன் என்று முன்னர் கூறியது எப்படி என்னும் சந்தேகமும் வருகிறது. இதன் பரிகாரத்தை ஸ்ரீவாதிராஜரே தம் பாவபிரகாஷிகையில் தீர்த்திருக்கிறார்.

பிரம்மாண்டாந்த: ஸ்த்ரிபுருஷ ஸாபேக்ஷாஸ்ருஷ்டி: ப்ரத்யும்னாத், காமாந்தர்யாமி ஸ பகவான் மிதோ ராகம் ஜனயித்வா பும்ப்யு: ஸ்த்ரீஷு ஸந்தானபரம்பராம் ஸ்ருஜதி ததா அனிருத்தஸ்து தான் பாலயதி அனிருத்தஸ்து அனந்தானந்த ஜீவானாம் ஸ்வஷக்த்யைவ ஸ்த்ரீனிரபேக்ஷாம் ப்ரக்ருத்யம்ஷனிர்மித லிங்கதேஹ மாத்ராவரக ஸூக்ஷ்ம ஸூக்ஷ்ம தேஹரூபாம்

ஸ்ருஷ்டிம் ஸ்வதேஹாந்தரேவ கரோதி அனிருத்தேன க்ரியமாணா ஸ்ருஷ்டிரதி ஸூக்ஷ்மத்வாத் ப்ராக் ந கணிதா ||

அதாவது, பிரம்மாண்டத்தில் உள் இருக்கும் ஸ்த்ரி புருஷர்களால் ஆகும் ஸ்ருஷ்டி ப்ரத்யும்னனால் ஆகிறது. பிரத்யும்னன் ஸ்த்ரி புருஷர்களில், காமாந்தர்யாமியாக இருந்து, பரஸ்பர அபிமானத்தை தோற்றுவித்து, புருஷர் மூலமாக ஸ்த்ரீயர்களில் ஸந்தான பரம்பரையை படைக்கிறான். அப்போது, பிறந்த பிரஜைகளை அனிருத்தனே காக்கிறான். அனிருத்தன் ஸ்ருஷ்டியில் வரும் ஜீவர்களுக்கு அவரின் கர்மத்திற்கேற்ப, லிங்கதேகத்தின் மேல் உள்ள ஸூக்ஷ்ம தேகத்தை (அவர்களை தன் வயிற்றில் வைத்துக்கொண்டு) காக்கிறான்.

இவ்வாறு, அனிருத்தனால், படைக்கப்படும் அதிஸூக்ஷ்ம ஸ்ருஷ்டி, அடுத்ததான 'நிர்தேஹகான்' என்னும் ஸ்லோக பாகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ஸாதன யோக்யமான ஸ்தூலதேக தான ரூபத்தின் ஸ்ருஷ்டி பிரத்யும்னனாலேயே என்பது நிச்சயம். மரணம் என்பதும் நிச்சயம். மரணம் ஆனபின் ஜன்மம். அதுபோலவே, சங்கர்ஷணனுக்குப் பிறகே பிரத்யும்னின் அவதாரம். இதைப் போலவே, சதுர்வியூகத்தின் அற்புத மகிமைகளை வர்ணிப்பதே இந்த காவியத்தின் குறிக்கோள் என்று அறியவேண்டும். ஆகையாலேயே, மோட்ச சந்தி, லய சந்தி, ஸ்ருஷ்டி சந்தி, ஸ்திதி சந்தி என்னும் வரிசையில் வந்திருக்கிறது இந்த காவியம்.

ஸ்லோக 2

**நஷ்டே லோகே த்4விபரார்த்தா4வஸானே |**
**மஹாபூ4தேஷ்வாதி3பூ4தம் க3தேஷு ||**
**வ்யக்தீ஽வ்யக்தம் காலவேகே3ன நேதே**
**ப4வானேக: சிஷ்யதே஽சேஷ ஸங்க்ய: || (பாகவத)**

த்விபரார்த்தாவஸானே - இரு பரார்த்தங்கள் என்னும் (பரார்த்த - பிரம்மதேவனின் 50 ஆண்டு காலம்) பிரம்மனின் ஆயுள் முடிய. லோகே - உலகம். நஷ்டே (ஸதி) - நாசம் அடையும்போது. மஹாபூதேஷு - ப்ருதிவ்யாதி பஞ்ச மஹாபூதங்கள். ஆதிபூதம் -

---

அஹங்கார தத்வத்தை (பஞ்சபூதங்களின் உற்பத்திக்கு காரணமான அஹங்கார தத்வம் 'ஆதிபூத' என்று அழைக்கப்படுகிறது). கதேஷு – அடையும்போது. வ்யக்தே – (அஹங்கார தத்வம், மஹத் தத்வத்தில் சேரும்போது) அந்த மஹத் தத்வம். காலவேகேன – கால நியாமக ஸ்ரீஹரியின் ஸாமர்த்தியத்தினால். அவ்யக்தம் – பிரதானத்தை (மூல ப்ரக்ருதியை). நீதே (ஸதி) – அடையும் சமயத்தில். அஸேஷ ஸக்ஞ: – ஸர்வ நாமங்களால் ப்ரதிபாத்யனான (நாமானி ஸர்வாணி யமானிஷந்தி). பவான் ஏக: – நீ ஒருவனே (உன் மூல ரூபம் மட்டும்). சிஷ்யதே – இருக்கிறது (எப்போதும் போல நித்ய ஜாக்ரதனாக ஆனந்தபூர்ணமாக இருக்கிறாய்).

பத 2 ராகம்: சௌளி. தாளம்: ரூபக

**பாதாள மொத$^{3}$லாத$^{3}$ லோகங்க$^{3}$ளெல்ல**
**வாதஸக$^{2}$னிந்த$^{3}$லெ ஸுடி$^{3}$ஸி |**
**பூ$^{4}$தபஞ்சக மொத$^{3}$லாத$^{3}$ தத்வங்க$^{3}$ள ஸ்ரீ**
**நாத$^{2}$ ஸம்ஹரிஸிதா$^{3}$ க்ஷணதி$^{3}$ ||1**

பாதாள மொதலாத லோகங்களெல்ல – பாதாளாதி 14 லோகங்களிலும். வாதஸகனிந்தலே – அக்னியினாலேயே. ஸுடிஸி – தகனம் செய்து. பூதபஞ்சக மொதலாத – ப்ருதிவ்யாதி பஞ்சமஹா பூதங்களே முதலான. தத்வகள – தத்வங்களை. ஸ்ரீநாத – லட்சுமிபதி. ஸம்ஹரிஸிதாக்ஷணதி – சம்ஹரித்த பிறகு (அடுத்த நுடியில் தொடர்கிறது).

**மூரு கு$^{3}$ணங்க$^{3}$ள மூலரூபதி$^{3}$ கூடி$^{3}$**
**ஸேரிஸி ஸர்வஜீவரனு**
**காரண புருஷ தன்ன குக்ஷியொளகி$^{3}$ட்டு**
**ஸ்ரீரமணிகெ$^{3}$ ஸுக$^{2}$வித்து ||2**

மூரு குணங்கள – (ஸத்வ, ரஜ, தம என்னும்) மூன்று குணங்களை. மூலரூபதி கூடி ஸேரிஸி – மூல ப்ரக்ருதியில் மொத்தமாக சேர்த்து. ஸர்வஜீவரனு – அனைத்து ஜீவர்களையும். காரணபுருஷ – லயகர்த்தனான ஸ்ரீஹரி. தன்ன குக்ஷியொளகிட்டு

– தன் வயிற்றில் வைத்துக்கொண்டு. ஸ்ரீரமணிகெ – மஹாலட்சுமிதேவிக்கு. ஸுகவித்து – (ஆலிங்கன) சுகத்தைக் கொடுக்கிறான் (படுக்கிறான்).

** உலகங்கள் 14 (பிரம்மாண்டத்தின் 14 பகுதிகள்). பூலோக, அந்தரிக்ஷ, ஸ்வர்க்க, மஹர்லோக, ஜனலோக, தபோலோக, ஸத்யலோக, இவை 7 மற்றும் பூமியின் கீழ் இருக்கும், அதல, விதல, ஸுதல, தலாதல, மஹாதல, ரஸாதல, பாதாள, இவை 7 என மொத்தம் 14 உலகங்கள். இவை அனைத்திற்கும் மேலானது ஸத்யலோகம். அது பிரம்மதேவனின் லோகம்.

** தத்வங்கள் 24 – ப்ருதிவி, ஜல, அக்னி, வாயு, ஆகாஷ என்னும் பஞ்சமஹா பூதங்கள். கந்த, ரஸ, ரூப, ஸ்பர்ஷ, ஷப்த என்னும் பஞ்ச தன்மாத்ரங்கள். ஹஸ்த, பாத, வாக், பாயு, உபஸ்த என்னும் பஞ்ச கர்மேந்திரியங்கள். சக்ஷு, ஸ்ரோத்ர, த்வக், க்ராண, ரஸன என்னும் ஐந்து பஞ்ச ஞானேந்திரியங்கள். மனஸ், அஹங்கார, மஹத், அவ்யக்தங்கள் நான்கு. இவ்வாறு மொத்தம் 24 தத்வங்கள்.

பிரளய காலத்தில் ஒவ்வொரு தத்வமும் தன் உற்பத்திக்கு காரணமான தத்வத்தில் லயம் அடைகிறது. அது தனக்கு காரணமான தத்வத்தில் சேர்கிறது. இவ்வாறு 22 தத்வங்களும் 23ம் மஹத் தத்வத்தில் சேர்கின்றன. இது பிரம்மதேவனின் தேகம் – பிரம்மனே அதற்கு அபிமானி. மற்ற தத்வங்களின் அபிமானி தேவதைகள் அனைவரும், அவர்களுக்கு மேலான தத்வாபிமானிகளின் மூலம் பிரம்மதேவனில் வந்து சேர்கின்றனர். அனைவரையும் தன்னில் வைத்துக் கொண்ட பிரம்மன், லட்சுமி (அவ்யக்த) மூலம் ஸ்ரீஹரியின் உதரத்தை பிரவேசிக்கிறான். ஸ்ரீஹரி, அனைவரையும் தன் உதரத்தில் தரித்து, பூர்ணானந்தனான தான் லட்சுமிதேவியுடன் பிரளய காலத்தில் படுத்திருக்கிறான்.

** ஆஸீதுதார குணவாரிதிரப்ரமேயோ நாரயண: பரதம: பரமாத்ஸஏக: |
ஸம்ஷாந்தஸம்விதகிலம் ஜடரே நிதாய லட்சுமீபுஜாந்தரகத: ஸ்வரதோபி ஜாக்ரே || (தாத்பர்ய நிர்ணய)

-------------------------------------------------------------------------------------------

அக்ரெ - ஸ்ருஷ்டியின் முன்னர் (பிரளய காலத்தில்). ஸம்ஷாந்த ஸம்வித் - அனாதி நித்யமான வேதத்தை தன் ஹ்ருதயத்தில் வைத்துக்கொண்டு. ஸ்வரதோபி - ஸ்வரமணன் ஆனாலும் (ஸ்வ-ஸ்வரூபானந்தத்தையே தினமும் அனுபவிப்பவன் ஆனாலும்). லட்சுமிபுஜாந்தரகத: - (லட்சுமிதேவிக்கு ஆனந்தாதிஷயம் வருவதற்காக) லட்சுமிதேவியை ஆலிங்கனம் செய்துகொண்டு, அகிலம் ஜடரே நிதாய - அனைத்து சேதனாசேதனாத்மக ஜகத்தினை தன் வயிற்றில் வைத்துக்கொண்டு. உதாரகுணவாரிதி: - மிகச்சிறந்த குணக் கடலான. அப்ரமேய: - எந்த பிரமாணங்களாலும் பூர்ணமாக அறியப்படாதவன். பரமாத் - லட்சுமிதேவியைவிட. பரதம: - பல மடங்கு சிறந்தவனும். ஸ ஏக: - ஸ்வதந்த்ரனும் ஆன. நாராயண: - நாராயணன், ஆஸீத் - இருந்தான். 'ஸ்ரீரமணிகெ ஸுகவித்து' என்னும் சொற்களால் இந்த ரகசிய பிரமேயத்தை குறிப்பிடுகிறார்.

**இந்தா[2] மஹாதத்வவாள்த[3] தே[3]ஹவிரலு**
**சித்ர ஜீவர மொத்தக[3]ளனு**
**பொத்திஹ ஸத்யலோகத[3] பொ[3]ம்ம விரஜிய**
**தீர்த்த[2]ஸ்னானகெ ஸல்லனல்ல ||3**

இந்தா - இப்படியான மகிமைகளைக் கொண்ட. மஹாதத்வவாள்த - மஹத் தத்வத்தை ஆளும். தேஹவிரலு - தேகம் இருக்க. சித்ரஜீவர - பற்பல ஜீவர்களின். மொத்தகளனு - அனைத்து சமூகங்களையும். பொத்திஹ - தரித்த (தன்னில் வைத்துக்கொண்ட). ஸத்யலோகத பொம்ம - சதுர்முக பிரம்மன். விரஜெய - விரஜா நதியின். தீர்த்தஸ்னானகெ - பவித்ர ஸ்னானத்திற்கு (அதன் மூலம் லிங்க பங்கத்தை கொடுப்பதற்கு). ஸல்லனல்லா - சமர்த்தன் இல்லை. (தானும், தன்னில் இருக்கும் இதர ஜீவர்களை விரஜா நதி மூலமாக லிங்க தேக பங்கம் செய்ய வைக்க தகுதி கொண்டவன் அல்ல - அந்த ஸ்வதந்த்ரம் அவனுக்கு இல்லை).

** அனைத்து ஜீவர்களையும் தன்னில் வைத்துக்கொண்டு, லட்சுமியின் மூலம் நாராயணனின் உதரத்தை பிரவேசிக்கும்

பிரம்மனும், ஸ-லிங்கியே ஆகிறான். அவனின் லிங்கதேகம், தத்தவஸ்திரத்தைப் போல (எளிதில் தீப்பிடிக்கக்கூடிய) செயல்களை செய்ய சாமர்த்தியம் இல்லையென்றாலும், அவனுக்கும் ஸ்ரீஹரியினாலேயே லிங்கபங்கம் ஆகவேண்டும்.

**இத$^3$ரிந்த$^3$ இப்பத்து மூரு தத்வங்க$^3$ள**
**அதி$^4$பதிக$^3$ள கூடி$^3$கொண்டு$^3$**
**மொத$^3$ல தத்வவன்னு மூலருபதி$^3$ கூடி$^3$**
**மத$^3$னனய்யகெ$^3$ துத்தனித்த ||4**

அதரிந்த - இந்த காரணத்தினால். இப்பத்துமூரு தத்வங்கள - 23 தத்வங்களின். அதிபதிகள - (தன்னுடன் சேர்த்து) நியாமகர்களை, அபிமானி தேவதைகளை). கூடிகொண்டு - சேர்த்துக் கொண்டு. மொதலதத்வ - முதலாம் மஹத் தத்வத்தை. (தன்) மூலரூபதி கூடி - தன் உற்பத்திக்குக் காரணமான தத்வத்தில் லய சிந்தனை செய்து (அனைத்து தத்வாபிமானிகளுடன் சேர்ந்த தன் மூலரூபத்துடன் சேர்ந்து, (லட்சுமியின் மூலம்), மதனனய்யகெ - பிரத்யும்ன நாமக ஹரிக்கு. துத்தனித்த - உண்ணும் கைப்பிடி ஆனான். (கைப்பிடியாக தன்னையே ஆக்கிக் கொண்டான்).

**ஹிந்தெ$^3$ பொ$^3$ம்மன ஸ்ருஜிஸி அவனங்க$^3$வாக$^3$லெ**
**திந்த$^3$ரெ துத்து குந்து$^3$வுது$^3$**
**எந்து$^3$தா$^3$ஸீனவ மாடி$^3$த$^3$ ஸ்ரீகிருஷ்ண**
**இந்து$^3$ பு$^4$ஞ்சிஸி தேகு$^3$திர்த்த$^3$ ||5**

ஹிந்தெ - ஸ்ருஷ்டி காலத்தில் (ஸ்ருஷ்டி காரணனான இந்த பிரத்யும்னன்). பொம்மன - பிரம்மனை. ஸ்ருஜிஸி - படைத்து. அவனங்கவ - அவனின் தேகத்தை. ஆகலே - படைத்த உடன். திந்தரெ - தின்றுவிட்டால். துத்து குந்துவுது எந்து - கைப்பிடி சிறியதாகிறது என்று (பெரிய கைப்பிடி ஆகட்டும் என்று). உதாஸீனமாடித - அதனை தின்னாமல் புறக்கணித்தான். ஸ்ரீகிருஷ்ண - ஸ்ரீஹரி. இந்து - இப்போது (பிரளய காலத்தில்). புஞ்சிஸி - தின்று. தீகுதிர்த்த - திருப்தி அடைகிறான்.

---

**4-5ம் நுடிகளால் பிருஹதாரண்யக உபநிஷத்தில் புகழப்பட்டிருக்கும் ஸ்ரீஹரியின் மகிமையை நிரூபித்திருக்கிறார். பிரளய காலத்தில் அனைத்தையும் உண்டு, தன் உதரத்தில் வைத்துக் கொள்ளும் அசிந்த்யாத்மக மகிமையைக் கொண்டவன். 'ஸ ஐக்ஷத யதி ஹ வாவ இமமபிமன்ஸ்யே கனீயோsன்னம் கரிஷ்யே இதி ஸ தயா வாசா தேனாத்ம நேதம் ஸர்வமஸ்ருஜத யதிதம் கிம் சர்சோ யஜூம்ஷி ஸாமானி சந்தாம்ஸி யக்ஞான் ப்ரஜா: பஷூன் ஸ யத்யதேவாஸ்ருஜத தத்ததத்துமத்ரியத ஸர்வாம்வா அத்தீதி தததிதேரதிதித்வம் || (அஷ்வமேத பிராமண)

ஸ்ரீஹரி, பிரம்மனை படைத்தபிறகு இவ்வாறு சிந்தித்தான். 'இப்போதே இந்த பிரம்மனை தின்று முடித்தால் என் அன்னம் (ஆகாரம்) சிறிதாகவே இருக்கிறது. அதனை அதிகமாக ஆக்கிக் கொள்வதற்கு, இவனை சரஸ்வதியுடன் சேர்க்கிறேன். அவர்கள் இருவர் மூலமாக, ரிக்வேத, யஜுர்வேத, ஸாமவேத, காயத்ர்யாதி சந்தஸ், யக்ஞ, ஆகியவற்றின் அபிமானி தேவதைகளையும், பிரஜைகளையும், பசுக்களையும் அதிகமாக படைத்து, பிரம்மன் படைத்த அனைத்தையும் பிரளய காலத்தில் தின்கிறேன்'. அதைப் போலவே கல்பத்தின் முடிவில் அனைத்தையும் தின்கிறான்.

இவ்வாறு அனைத்தையும் தின்பதால் 'அதிதி' எனப்படுகிறான். பிரம்மனை படைத்த பிறகு, ஸ்ருஷ்டியை அவனின் மூலம் செய்வித்து, ஸ்ருஷ்டியின் நோக்கமான ஜீவர்களின் ஸ்வ-கதிகளை கொடுத்து, பிறகே அனைத்தையும் லயம் செய்ய வேண்டும் என்னும் சங்கல்பமானது, ஸ்ருஷ்டி காலத்திலேயே இருந்தது என்னும் ஸத்ய ஸங்கல்பன் என்னும் மகிமையை, இந்த ஸ்ருதி, ஸ்ரீஹரிக்கு சொல்கிறது. ஸ்ருஷ்ட்யாதி பகவத் செயல்கள் (அந்தந்த காலத்தில்), தன் இஷ்டப்படி செய்பவன் அல்ல என்றும் சொல்கிறது.

**ஸப்த த்[4]வீபக[3]ளல்லி ஸுத்த முத்தலிஹ**
**ப[4]க்தராஷிகெ[3] லெக்கவில்ல**
**அர்த்தி[2]ய ப[4]க்ஷ்யக்கெ தக்க தா[4]ன்யங்க[3]ள**
**மொத்த பர்வதவ தந்தி[3]த்த ||6**

ஸப்தத்வீபகளல்லி - ஜம்பு முதலான ஏழு த்வீபங்களில் (ப்ருத்வியில்). ஸூத்தமுத்தலிஹ - அனைத்து இடங்களிலும் இருக்கும். பக்தராஷிகெ - அன்ன ராஷிக்கு (ஜீவராசிகளுக்கு - அந்த அனைவரும் பிரளய காலத்திற்கு ஸ்ரீஹரிக்கு). யோக்யமான பக்ஷ்யத்திற்கு தகுந்த. தான்யங்கள - (ஜீவரூப) தானியங்களின். மொத்தபர்வதவ - ஒன்றாக்கிய அனைத்து ராஷியையும். தந்தித்த - (பிரம்மதேவன்) கொண்டு வந்து கொடுத்தான். (பிரளய காலத்தில், அனைத்து ஜீவர்களும் பற்பல மார்க்கங்களால் வந்து பிரம்மனையே சேர்கின்றனர்).

** ஜம்பு, ப்லக்ஷ, ஷால்மலி, குஷ, க்ரௌஞ்ச, ஷாக, புஷ்கர - ஆகியவையே ஏழு த்வீபங்கள்.

** மஹாபிரளய காலத்தில், அனைத்து முக்தி யோக்யரும் பிரம்மதேவனை அடைகின்றனர். அப்போது, சாதனை முடிந்த ஜீவர்கள் (பிரதிகாலம்பனர் / அப்ரதிகாலம்பனர் தமக்கு யோக்யமான மஹராதி லோகங்களில் அல்லது அமுக்த வைகுண்டாதிகளில்) ஸ்வயோக்ய ஸ்தானங்களில் ஸுகத்துடன் வசிக்கின்றனர். அந்த ஸ்தானங்களை பல்வேறு வழிகளில் சென்று சேர்கின்றனர். பிறகு, பிரளய காலத்திற்கு அனைவரும் பிரம்மனை வந்து சேரும் மார்க்கம், கருட-சேஷ மார்க்கங்கள் என்று இரு விதங்கள் இருக்கின்றன.

கந்தர்வர், ஸித்தர், சாரணர் ஆகியோர் குபேரனிலும்; அஷ்வினி தேவதைகள், கங்காதி நதி அபிமானி தேவதைகள் ஆகியோர் வருணனிலும்; குபேர வருணர்கள் ஸோமனிலும்; ஸோம மற்றும் விஷ்வக்ஸேன ஆகியோர் அனிருத்தனிலும்; அனிருத்த மற்றும் ஸனகாதிகள் காமனிலும்; காமன் வாருணியிலும்; அவள் சேஷனிலும் வந்து சேர்கின்றனர். இது சேஷ மார்க்கம் ஆகும்.

நிர்ருதி, பித்ரு தேவதைகள் மற்றும் தேகத்தினால் மரணமடைந்த வர்ணாசிரமத்தில் இருந்த மனுஷ்யர்கள் - யமதர்மனிலும்; யமதர்மன், வைவஸ்வதாதி மனுகள் மற்றும் ப்ரியவ்ரதாதி ராஜர்கள் ஸ்வாயம்புவ மனுவிலும்; மற்ற இதர தேவதைகள் அக்னியிலும்; அக்னி - சூரியனிலும்; ரிபுக்கள் - தராதேவியிலும்;

ஸாத்யர் மற்றும் வினாயகர் – கணபதியிலும்; கணபதி, தராதேவி மற்றும் சூர்யர் ப்ருஹஸ்பதியிலும்; ப்ருகு முதலான ரிஷிகள் மற்றும் ப்ரஜாபதிகள் தக்ஷ ப்ரஜேஷ்வரனிலும்; தக்ஷ ப்ருஹஸ்பதி ஸ்வாயம்புவ மனு மற்றும் மருத்கணங்கள் இந்திரனிலும்; இந்திரன் ஸௌபர்ணியிலும்; அவள் கருடனிலும் வந்து சேர்கின்றனர். இது கருட மார்க்கம் ஆகும்.

பிறகு கருட, சேஷர் இருவரும் சரஸ்வதியில், அவள் பிரம்மனிலும், பிரம்மன் லட்சுமியின் மூலம் பரமாத்மனிலும் பிரவேசிக்கின்றனர். அனைத்து ஸ்த்ரியரும் தத்தம் பதிகளில் சேர்ந்தே வருகின்றனர். பாரதி முக்யபிராணருக்கு, சரஸ்வதி பிரம்மரான பிறகும், பார்வதி (உமா) ருத்ரருக்கு வாருணி சேஷ பிறவியிலும் முக்தி. ஆகையால், இந்த கல்பத்தில் முக்தர் ஆகிறவர்களை மட்டும் இங்கும் சொல்லப்பட்டிருக்கிறது. உமா ருத்ரர், பாரதி முக்யபிராணரை அடைந்த பிறகு, லட்சுமியின் மூலம் பரமாத்மனின் உதர பிரவேச செய்கிறார்கள் என்று அறிய வேண்டும்.

**நானா ப$^{2}$லங்க$^{3}$ளு நானா ப$^{4}$க்ஷ்யங்க$^{3}$ளு**
**நானா வித$^{3}$த$^{3}$ ஷாகங்க$^{3}$ளனு**
**நானா கந்த$^{3}$ மூல ப$^{2}$லங்க$^{3}$ளு ஸ்ரீகிருஷ்ணன**
**ஆனந்த$^{3}$கந்தொ$^{3}$த$^{3}$கி$^{3}$த$^{3}$வு ||7**

நானா பலங்களு – (இவ்வாறு ஸ்ரீஹரியின் போஜனத்திற்கு பிரம்மன் கொடுத்த) பற்பல வகையான பழங்கள். நானா பக்ஷ்யங்களு – பலவித பக்ஷ்யங்கள். நானாவிதத ஷாகங்களனு – பலவிதமான ஷாகங்கள் (காய்கறிகள்). நானாகந்தமூல பலங்களு – பற்பல விதமான பழங்கள் (என அனைத்தையும்), ஸ்ரீகிருஷ்ணன – பிரளய காலத்தில் ஸ்ரீஹரி. ஸ்வானந்தகெ – ஸ்வரூபானந்தத்தின் போகத்திற்கு ஒதகிதவு – (நிமித்த ரூபத்தினால்) வந்து சேர்ந்தன (பிரம்மதேவனால் கொடுக்கப்பட்டது).

ஸ்ருதி 1
**யஸ்ய பி$^{3}$ரம்ம ச க்ஷத்ரம் சோபே$^{4}$ ப$^{4}$வத ஓத$^{3}$ன: |**

**ம்ருத்யுர் யஸ்யோபஸேசனம் க இத்தா$^{2}$ வேத$^{3}$ யத்ர ஸ: ||**
**(காடகோபநிஷத்)**

யஸ்ய – எந்த ஸ்ரீஹரிக்கு. பிரம்ம – சதுர்முகன். க்ஷத்ரம் ச – முக்யபிராணன். உபே – இருவரும். ஓதன: – அன்னம். பவத: – ஆகிறார்களோ. யஸ்ய – எந்த ஸ்ரீஹரிக்கு. ம்ருத்யு: – ருத்ரதேவன். உபஸேசனம் – சுவைக்காக சேர்க்கப்படும் காய்கறிகளோ, அல்லது ஊறுகாயோ. ஸ: – அத்தகைய ஸ்ரீஹரி. யத்ர – எங்கு. இத்தா – இந்த பிரகாரத்தினால் (இத்தகைய மகிமை உள்ளவனாக இருக்கிறான் என்று). க: வேத – யார் அறிகிறார்கள்? (அவனது மகிமையை பூரணமாக யாரும் அறியமாட்டார்கள்).

பத 3 ராகம்: ஸௌராஷ்டிர. தாளம்: ஆதி
**ஹெட$^{3}$தலெய ம்ருத்யுவெ அடிக$^{3}$டிகெ$^{3}$ துப்பவாயி**
**தொட$^{3}$லொந்தொ$^{3}$ந்தெ$^{3}$ம்பு$^{3}$தெ$^{3}$ துத்துக$^{3}$ளாத$^{3}$வு**
**ப$^{3}$ட$^{3}$தனவில்லத$^{3}$ ஜக$^{3}$தொ$^{3}$டெ$^{3}$யனித்துமாராடி$^{3}$**
**ப$^{3}$டி$^{3}$ஸிதெ$^{3}$ந்தெ பு$^{4}$ஞ்சிஸுவ க$^{3}$ட$^{3}$ ||1**

ஹெடதலெய – (தின்பதற்கு தயாராக) தலைக்குப் பின்னே நின்றிருக்கும். ம்ருத்யுவே – ம்ருத்யு தேவதையே. அடிகடிகெ – ஒவ்வொரு அடிக்கும் (ஒவ்வொரு கைப்பிடிக்கும்). துப்பவாயிது – (சுவையான) நெய் ஆகிறது. ஒடலொந்தொந்தெம்புதெ – (ஒவ்வொரு ஜீவரின்) ஒவ்வொரு தேகம் என்பதே. துத்துகளாதவு – (ஸ்ரீஹரி, பிரளயகாலத்தின் உண்ணும் அன்னத்தின்) கைப்பிடியாக ஆகிறது. படதனவில்லத – (உணவுக்கு கஷ்டம் இல்லாத) பூர்ண ஐஸ்வர்யத்தைக் கொண்ட. ஜகதொடெயனு – ஜகத்பதியான ஸ்ரீஹரி. இத்து – (தனக்கு) கொடுத்து. மாராடி படிஸிதந்தெ – சஞ்சரித்து (ரம்பிஸி – வணங்கி). உணிஸுவ மகுவினந்தெ (மகிழ்ச்சியுடன் உண்ண வைத்ததைப் போல) புஞ்சிஸுவ கட – விழுங்குகிறான், இதில் என்ன வியப்பு?

**மது$^{4}$ கைடப$^{4}$ரெம்ப$^{3}$ கொப்$^{3}$பி$^{3}$த$^{3}$ தா$^{3}$னவர**
**மையொளகி$^{3}$ப்ப ரூப ரஸவ**
**க$^{3}$ந்த$^{4}$ ப$^{4}$ரித மேத$^{3}$தி$^{3}$ந்த$^{3}$ மாடி$^{3}$த$^{3}$ ஸேவெகெ$^{3}$**
**ஸ்ரீத$^{4}$ரகெ$^{3}$ ஸ்வாது$^{3}$வாத$^{3}$ மாம்ஸவாய்து ||2**

---

மதுகைடபரெம்ப - மது மற்றும் கைடப என்னும் பெயருள்ள. கொப்பின - கொன்ற. தானவர - தைத்யரின். மையொளகிப்ப - தேகத்தில் இருக்கும். ரூபரஸத - ரூப, ரஸங்கள் உள்ள. கந்தபரித - கந்த பூர்ணமான. மேததிந்த - மேதஸ்ஸினால். மாடித ஸேவெகெ - செய்த பூஜையில். ஸ்ரீதரகெ - ஸ்ரீலட்சுமிபதிக்கு. ஸ்வாதுவாத - சுவையான. மாம்ஸவாயிது - மாமிசத்தைப் போல (திவ்ய போஜனம்) ஆயிற்று. ஸ்ரீஹரி சர்வபக்ஷகன். ஆனாலும், பக்ஷணத்தினால் உண்டாகவேண்டிய சுகம் இல்லை. ஸ்வரூப சுக போகத்தினாலேயே நித்யபூர்ண சுகி. பக்ஷண க்ரியையும் மகிழ்ச்சியுடன் உண்பதும், வஸ்துவில் இருக்கும் ஸ்வஸ்வரூபாத்மக ரஸத்தையே.

**ஏளு கோடி யோஜன ப்ரமாணதி$^3$ பெ$^3$ளெது$^3$ த**
**ன்னொளகெ$^3$ நானாவித$^3$ ப்ராணிக$^3$ள தும்பி$^3$ர்த்த$^3$**
**கலி மல களெவ இளெயெ நம்மச்யுதகெ$^3$**
**பொளெவ புண்ய மாம்ஸவாயிது ||3**

ஏளுகோடி யோஜன ப்ரமாணதி பெளெது - ஏழு கோடி யோஜன உயரமுள்ள ரூபத்தை தாங்கி. தன்னொளகெ - தன் உதரத்தில். நானாவித பிராணிகள - பற்பல ஜீவராஷிகளை. தும்பிர்த்த - நிரப்பியிருக்கும். இளெய - உலகத்தின் (ப்ருத்வியில் இருக்கும் அனைவரின்). கலிமலவ - தோஷங்களை (பாப ரூபத்தின் மலத்தை). களெவ - பரிகரித்து சுத்தம் செய்யும். நம்ம அச்யுதகெ - நம் ஸ்ரீஹரிக்கு. பொளெவ புண்ய - ஷுப கர்மமே (அல்லது இருக்கும் ஞானானந்தாதிகளே). மாம்ஸவாயிது - ஆகாரம் ஆயிற்று.

** பிரளய காலத்தில் அனைத்தையும் தன்னில் வைத்துக்கொண்டு, தன்னையே ஸ்ரீஹரிக்கு அன்னமாக அர்ப்பித்த பிரம்மதேவனின் ஷுப கர்மமே, சிறந்த ஆகாரம் ஆகும். அனைவரின் சர்வ ஷுப கர்மங்களை ஸ்ரீஹரி அவர்களிடமிருந்து ஏற்றுக்கொண்டு போகிக்கிறான். வஸ்துகளில் இருக்கும் பகவத் ரூபங்களின், ஸ்வபிம்பத்தின் மற்றும் மூல ரூபத்தின் ஐக்ய சிந்தனையே அர்ப்பணம்.

சகல தோஷதூரனும், அனைத்து இடங்களிலும் இருக்கும் அனைத்து தோஷங்களையும் பரிகரிப்பவனும் ஆன அச்யுதனுக்கு அஷுப போகத்தின் சம்பந்தமே இல்லை. பிராணிகளின் தேகத்தில் இருக்கும் மாம்ஸ மஜ்ஜாதிகளில் இருக்கும் விஷ்ணுரூபங்கள், மாம்ஸாதி நாமக சிதாத்மக ரூபங்கள் ஆகும். ஸ்திதி காலத்தில், ஜீவருக்கு அவரவர்களின் கதியைக் கொடுப்பதற்கு, அத்யாத்மமான பல ரூபங்களில் அவர்களில் நிலைத்திருந்து, பிரளய காலத்தில், அந்த நோக்கம் நிறைவேற வேண்டும் என்பதைப் போல, திருப்தி அடைந்தவனாக காட்டிக் கொண்டு, தன் அனந்த ரூபங்களை, தன் விருப்பத்தினால் மூலரூபத்தில் ஐக்யம் செய்கிறான். இதுவே ஸ்ரீஹரியின் போஜனம். நித்யத்ருப்தனான தான், பிரளய காலத்தில் அனைத்தையும் தின்று தீர்க்கிறான் - இதில் வியப்பு என்ன இருக்கிறது?

மஜ்ஜாஸு ஸ்தித꞉ ஸ மஜ்ஜாக்யோ மதம் ஜனயதீதி ஹ |
ப்ரமாணம் ஸாரயேத்யஸ்மான் மாம்ஸாக்யோ மாம்ஸ ஸம்ஸ்தித꞉ ||

என்னும் (ஐதரேய பாஷ்ய) பாகத்தில், கர்வத்தை உண்டாக்கும், மஜ்ஜையில் இருக்கும் விஷ்ணு 'மஜ்ஜா' என்று அழைக்கப்படுகிறான். பிரமாணங்களை (வேதாதிகளை) ஆள்வதால் 'மாம்ஸ' என்னும் பெயர் உள்ளவன். மாம்ஸத்தில் இருக்கிறான் என்று அதற்கேற்ப புரிந்து கொள்ள வேண்டும். 'ஆத்மன ஏவானுஸவனம் அஞ்சஸா வ்ருதிரேகேண அனுபோபூயமானாசேஷ புருஷார்த்த ஸ்வரூபஸ்ய' ஆகிய பாகவத வாக்கியங்களும் ஸ்ரீஹரியை அசேஷ புருஷார்த்த ஸ்வரூபன் என்று ஸ்வஸ்வரூபானந்தத்தை நிரந்தரமாக அனுபவிக்கிறான் என்று சொல்கிறது.

** கருடசேஷ மார்க்கங்களால் வந்து பிரம்மனை அடைந்த அனைவரையும், அனைத்து உலகத்தையும் தன் உதரத்தில் வைத்து படுக்கும் ஸ்ரீஹரி, ஏழு கோடி யோஜன அளவுள்ள ஒரு குழந்தை ரூபத்தில், ஆலயிலையின் மேல் சயனித்திருக்கிறான். முந்தைய பத்யத்தின் 6ம் நுடியின் குறிப்பினையே,

## 2. லய ஸந்தி

---

ஸ்ரீபுரந்தரதாசரின் மக்களான குருபுரந்தர விட்டலதாசர், இவ்வாறு கூறுகிறார்.

உத்தமரலி நீசர லய தேவதெகளிகெ
தனபவிஷ்வக்ஸேனகெ வருண
வருணகெ சந்த்ர சந்த்ரகெ அனிருத்த
அனிருத்த ஸனகாதிகளிகெ காம
காமகெ வாருணி வாருணிகெ சேஷ
இது சேஷ மார்க்கவு ||

அவஷிஷ்டதேவதெகக்னி அக்னிகெ ஆதித்ய
ஸூர்யகாகாஷ ப்ருதிவிகபிமானிகெ குரு
புருஷோத்தமரு ஸர்வபிதரு
நிர்ருதிகெ யமனு யம கெலவு மனுகளு
ப்ரியவ்ரதனிகெ ஸ்வாயம்புவ ப்ருக்வாதிகெ
தக்ஷ ஸ்வாயம்பு தக்ஷ குருமருதரிகெ இந்திர
இந்திரகெ ஸௌபரணி ஸௌபரணிகெ கருட
கருட மார்க்கவிது ||
கருட சேஷகெ வாணி வாணிகெ சதுர்முகனு
ஆதகெ புன்னாமகபொம்ம ஆதகெ காலபொம்ம
புன்னாமகெ ஸிரிதேவி ஸிரிதேவிகெ அச்யுதன
அதிஸாமீப்யதி லயவு
பொம்மாதிகளனு அவ்யாக்ருதத விரஜெயலி முளுகிஸி
லிங்கஷரீர பங்கவன்னு மாடி
உதரதொளிட்டுகொண்டு ப்ரளயோதகதி
ஸிரியாகெ வடபத்ரவாகெ
ஏளுகோடி யோஜனமிதபாலகனாகி துர்க்கெ
தமவ்யாபிஸெ ஆலதெலய மேலெ
குருபுரந்தரவிட்டல பவடிஸலு ||

பத 4 ராகம்: கௌளிபந்து. தாளம்: ரூபக
**வேத3 பூர்வதே3வ உபதே3ஷ பூ4மி**
**தே3வ தா3னவ விவரவனெல்ல**
**ஜீவர பாவனவில்லத3 தி3வ்யதே3ஹங்க3ள**

**பாவனெய கொட்டு பா³ஹ்யவிஷயவாயிது ||1**

தேவ – தேவதைகள். பூர்வதேவ – தைத்யர்கள். உபதேவ – கந்தர்வர்கள். பூமிதேவ – பிராமணர். தானவ – தானவர்கள். விவரவனெல்ல – (இவ்வாறு பற்பல ஜீவராஷிகளின்) விஷயங்களையெல்லாம். பாவனவில்லத ஜீவர – (ப்ரக்ருதியினால் போர்த்தப்பட்டவர்களான) ஆகையால், அபவித்ரர்களான ஜீவர்களின். திவ்யதேஹங்கள பாவனெய கொட்டு – ஷுத்த ஸ்வரூபங்களை தோற்றுவித்து (ப்ராக்ருத போர்வைகளை விலக்கி, பவித்ரம் ஆக்கி). பாஹ்ய விஷயவாயிது – (ஸ்ரீஹரியின் மூலரூபம்). ஜீவஸ்வரூபங்களால் பின்னமாகி (பாஹ்ய – எதிரே) அமர்ந்தது.

அல்லது, ஜீவர்களுக்கு ஸ்வஸ்வரூபங்களைக் கொடுத்த ஸ்ரீஹரிக்கு, ஜீவ ஸமூகம் தன்னிலிருந்து வேறுபட்டு (தனக்கு வெளியே) ஞான விஷயமாகவே இருந்தது -- ஸர்வக்ஞனான ஸ்ரீஹரி, பிரளய காலத்தில்கூட அந்த அனைத்தையும் பார்த்தவாறே இருந்தான்.

**ஏளு ஸாக³ரதொ³ளு தும்பிர்த³ ஜீவர**
**ஜாலங்க³ளிகெ³ லெக்கவில்ல**
**ஸாலாகி³ வனவனதி³ சஞ்சரிஸுவ ம்ருக³க³ள**
**நோவனாரு ப³ண்ணிபரு ||2**

ஏளு ஸாகரதொளு – ஏழு சமுத்திரங்களில். தும்பிர்த்த – நிரம்பியிருக்கும். ஜீவர ஜாலங்களிகெ – பிராணி சமூகங்களுக்கு. லெக்கவில்ல – எண்ணிக்கையற்ற. ஸாலாகி – வரிசையாக. வனவனதி – அனைத்து வனங்களிலும். ஸஞ்சரிஸுவ – சுற்றி வரும். ம்ருககள – மிருகங்களின். நோடனு – துக்கத்தை. ஆரு பண்ணிபரு – யார் விவரிப்பார்கள்? (சாத்தியம் இல்லை). ப்ராக்ருத தேகம் விலகும் காலத்தில், அனைத்து பிராணிகளும் அனுபவிக்கும் வேதனையை, பண்ணிபரு ஆரு – யாரால் வர்ணிப்பது சாத்தியம்?

**ஆதி³ புருஷனிந்து¹ தன்ன போ⁴ஜனகெ**

## 2. லய ஸந்தி

---

**ஸாத3னவாத3 த்3ரவ்யக3ள**
**ஸ்ரீதே3வியரெ ஸ்வயம் பாகியாகி3ரலு**
**எதெ3கிச்சின ஜ்வாலெயல்லி ||3**

இந்து – இவ்வாறு. ஆதிபுருஷனு – ஸ்ரீஹரி. தன்ன போஜனகெ – தன் உணவிற்கு. ஸாதனவாத த்ரவ்யகள – உபகரண வஸ்துகளை. ஸ்ரீதேவியரெ – மகாலட்சுமி தேவியே. ஸ்வயம்பாகியாகிரலு – சாட்சாத் சமையல் செய்பவராக தயார் செய்து. எதெகிச்சின ஜ்வாலெயல்லி – அத்யந்த ப்ரேம ரூபத்தின் அக்னியில். (இதன் தொடர்ச்சி அடுத்த பத்யத்தில் வருகிறது).

**லவணேக்ஷு மத்4யஸர்ப்பித3தி4க்ஷீர ர**
**ஸவ கூடி3 ஹேமாண்ட3வெம்ப3**
**தவெயாத3 பா4ண்ட3தொ3ளிட்டு பாகவ மாடி3**
**தவகதி3ந்தொ3ந்தெ3 துத்தினலி ||4**

லவணேக்ஷு மத்யஸர்ப்பிததிக்ஷீர ரஸவ கூடி – உப்பு, கரும்பு, சுரா, நெய், தயிர், பால் என்னும் ஆறு த்ரவ்யங்களால் (திரவ) கூடிய. ஹேமாண்டவெம்ப – தங்கமயமான பிரம்மாண்ட என்னும். தவெயத பாண்டதொளிட்டு – (அகலமான) பாத்திரத்தில் போட்டு. பாகவ மாடி – வேக வைத்து (பிரளய காலத்தில். 1ம் நுடியில் கூறிய அனைத்து பிராணிகளையும் சமைத்து). தவகதிந்த – அன்புடன். ஒந்தே துத்தினலி – ஒரு கைப்பிடி ஆக்கி பரிமாறியதை. (அடுத்த பத்யத்தில் இது தொடர்கிறது).

**பு4வனவ்யாப்தவாத3 ஸ்தூ2லதே3ஹத3 பா3ய**
**விவரவ தெரெது3 பு4ஞ்சிஸித3**
**பவன தன்னய்யனும்ப3 ஸம்ப்3ரமகெ3 தே3ஹ**
**பெ3வரத3ந்தெ அடி3க3டி3கெ3 பீ3ஸெ ||5**

புவனவ்யாப்தவாத – பிரம்மாண்டத்தை வியாபித்த. ஸ்தூல தேஹத பாய – பெரிய தேகத்தின் (வியாப்த ரூபத்தின்) வாயை. தெரெது – திறந்து. விவரதி – (அதன்) கூட்டில். புஞ்சிஸித – விழுங்கினான் (அல்லது வாயை. விவரதி தெரெது – அகலமாக திறந்து, உண்டான்). பவன – வாயுதேவன். தன்னய்ய – தன்

தந்தை. உம்ப ஸம்ப்ரமகெ - உண்பதற்காக. தேஹ - அவனின் தேகத்தில். பெவரதந்தெ - வியர்வை வராதவாறு (சோர்வு வராதிருக்குமாறு). அடிகடிகெ - அவ்வப்போது. பீஸெ - காற்று வீசிக் கொண்டிருந்தாள். (அடுத்த நுடியில் விஷயம் தொடர்கிறது).

**நவ ஸித்$^3$தா$^4$ன்ன ஜாலவெம்ப$^3$ பானீ**
**யவனு கொண்டா$^3$சமனவ மாடி$^3$**
**இது$^3$ ஜீர்ணவப்பந்தெ ஸ்வர்ணத$^3$ஜாண்ட$^3$வனெ**
**ப$^4$ஸ்ம மாடி$^3$ மத்தெ ஸேவிஸித$^3$ ||6**

நவஸித்தான்னவ - அப்போதே தயார் செய்த அன்னத்தை. ஜாலவெம்ப பானீயவனு - சுத்தமான தண்ணீரை (அல்லது மாயா / அவித்யை என்னும் தண்ணீரை). கொண்டு ஸ்விகரிஸி - ஏற்றுக் கொண்டு. ஆசமனவ மாடி - ஆசமனம் செய்து. இது - உண்ட அன்னம். ஜீர்ணவப்பதந்தெ - ஜீர்ணம் ஆகுமாறு. ஸ்வர்ணதஜாண்டவனெ - தங்கமயமான பிரம்மாண்டத்தை. பஸ்ம மாடி - சுட்டுப் பொசுக்கி. மத்தெ ஸேவிஸித - (அந்த பஸ்மத்தை) பிறகு விழுங்கினான்.

**குதி$^3$வ பா$^3$ஹ்யோத$^3$கவெம்ப$^3$ கஷாயவ**
**முத$^3$தி$^3$ந்த$^3$ கொண்டு$^3$ தேகு$^3$தலி**
**பது$^3$மெயொட$^3$னெ இன்னு பவடி$^3$ஸ பே$^3$கெந்து$^3$**
**பு$^3$த$^4$ஜனப$^3$ந்து$^4$ ப$^3$யஸித$^3$ ||7**

குதிவ - காய்த்த (கொதித்துக் கொண்டிருக்கும்). பாஹ்யோதகவெம்ப - பிரம்மாண்டத்தின் வெளியே இருக்கும் (ஆவரண ரூபமான) தண்ணீர் என்னும். கஷாயவ - கஷாயத்தை. முததிந்த - மகிழ்ச்சியுடன். கொண்டு - குடித்து. தேகுதலி - திருப்தி அடைந்தவனாக காட்டிக் கொண்டு. பதுமெயொடனெ - லட்சுமி தேவியுடன். இன்னு - பிறகு. பவடிஸபேகெந்து - படுக்க வேண்டும் என்று. புதஜனபந்து - ஞானிகளின் உண்மையான உறவினனான ஸ்ரீஹரி. பயஸித - விரும்பினான்.

** ஸ்ரீஹரியின் போஜனம் அதி அற்புதமானது. அனந்த ஜீவராஷிகளின் ஸமேதனான பிரம்மாண்டத்தையும், அதன்

------------------------------------------------------------------------------------------

ஆவரணங்களையும் உண்டு விழுங்குவதில் என்ன வியப்பு இருக்கிறது? இவையே போஜ்ய வஸ்துகள். ஸ்ரீதேவியே போஜனத்தை தயார் செய்த சமையல் விற்பன்னர். தயார் செய்த கிரமம், அதற்காக பயன்படுத்தப்பட்ட அவளின் அன்பு ரூபமான அக்னி, மிகவும் சிறந்ததான பானீய, பஸ்ம சேவனம், கஷாயாதிகள் என ரமா நாராயணரின் திவ்ய பிரளய லீலையை லௌகிக கிரமத்தில் நிரூபிக்கிறது. அவர்கள் இருவரின் அலௌகிக தாம்பத்யத்தின் ஞானார்த்தமாக இவை இருக்கின்றன.

** பிரளய கால என்பது ஸ்ரீஹரிக்கு இரவு போன்றதாகும். ஆனால் இரவு அல்ல. படுக்க வேண்டும் என்று விரும்புவது, சிரமபரிகாரத்திற்காக அல்ல. ஸ்ருஷ்டி, ஸ்திதி, லயங்களை தன் விருப்பத்திலேயே, லீலைக்காக நடத்திய ஸ்ரீஹரிக்கு சிரமம் எங்கிருந்து வந்தது?. எவ்வித தோஷங்களும் அற்றவனான ஸ்ரீஹரிக்கு, சிரமாதி தோஷங்கள் எப்போதும் இல்லவேயில்லை. ரமாதேவியுடன் சயனிக்க விரும்பி, அவள் மூலமாக சுகத்தை பெறுவதற்கு அல்ல. அவளுக்கு சுகத்தைக் கொடுப்பதற்காக. ஸ்வரமணனான ஸ்ரீஹரிக்கு ரமாதேவியால் சுகமா? ஸ்ரீஹரியின் இந்த விதமான செயல், அடுத்த படைக்கப்போகும் பிரம்மாதி ஜீவர்களுக்கு ஒரு குறிப்பாகும். நியாமக செயல் ஸத்வஸத்வ மஹாஸத்வமயமான தேகம் கொண்ட பிரம்மதேவன், தன் தேகம் கஷ்மலஷூன்யமாக இருந்தாலும், மலத்தை தன் இஷ்டத்திற்கு நிர்மாணித்து காலையில் மல-விசர்ஜனம் ஷௌசாதிகளை செய்து, அடுத்து படைப்பில் வரவிருக்கும் பிரஜைகளுக்கு சம்பிரதாயத்தை விதிக்கிறானாம்.

** 'ஸ்தூலதேஹத பாய விவரதி' என்பதில் ஸ்தூல ஷப்தம், 'மஹான் - பெரியது - அற்புதமானது' என்னும் அர்த்தம் கொண்டது. ப்ராக்ருத தேகத்தின் முகம் என்று அர்த்தம் அல்ல. ஸ்ரீஹரிக்கு, என்றும் எந்த காரணத்தினாலும் ப்ராக்ருத தேகம் என்பது இல்லவேயில்லை. அவனின் அனந்தானந்த ரூபங்கள் அனைத்தும் சச்சிதானந்தாத்மகமானதே.

பத 5 ராகம்: த்வரித. தாளம்: ஆட

**ஒந்தொ$^3$ந்து$^3$ நிமிஷதி$^3$ அந்த$^3$த$^3$லுண்டு$^3$ தேகி$^3$**
**எந்தெ$^3$ந்து$^3$ நந்தி$^3$ப நம்ம முகுந்த$^3$னெத்து**
**வந்தி$^3$ஷ்டு து$^3$க்க$^2$த$^3$லிரெ கால ஸுடி$^3$ஸி ப$^3$லு**
**த$^3$ந்து$^3$கவனும்ப$^3$ ஜீவவ்ருந்த$^3$விதெ$^3$ந்து ||1**

ஒந்தொந்து நிமிஷதலி – ஒவ்வொரு நொடியிலும். அந்ததலி – மகிழ்ச்சியுடன். உண்டு – போஜனம் செய்து. தேகி – திருப்தி அடையும் (ஆனாலும்) எந்தெந்து – எப்போதும். நந்திப – திருப்தனே ஆகியிருக்கும் (ஆனந்த பூர்ணமான). நம்ம – நம் பிரபு. முகுந்தனெத்து – ஸ்ரீஹரியில். வந்திஷ்டுதுக்கதலிரெ – அல்ப துக்கமானாலும். கால ஸுடிஸி – (மஞ்சள், தயிர் ஆகியவற்றை காலில் பூசிக்கொண்டு) காலுக்கு ஆபத்து வந்ததைப் போல. பலுதந்துகவனும்ப – மிகவும் துக்கப்படும். ஜீவவ்ருந்தவிதெந்து – ஜீவ சமூகம் எங்கே? (ஜீவேஷ்வரரில் எவ்வளவு வேறுபாடு இருக்கிறது?!).

**ஒந்தொ$^3$ந்து$^3$ கு$^3$ணக்கெ லெக்கவில்லெம்ப$^3$ மஹிமெ ப$^3$லு**
**சந்த$^3$வாயிது இந்தி$^3$ரெயரஸனல்லி**
**ஹிந்தெ$^3$ இந்து$^3$ முந்த$^3$னந்தகாலதி$^3$ ஸ்ருஷ்டிஸுவ**
**கொ$^3$ந்தி$^3$ஷ்டு ஸ்ரஷ்டுத்வ கு$^3$ணனந்தவல்லவே ||2**

ஒந்தொந்து குணகெ – (ஸ்ரீஹரியின் அனந்த குணங்களில்) ஒவ்வொரு குணத்திற்கும். லெக்கவில்லெம்ப மஹிமெ – எல்லையில்லாத மகிமை. பலு சந்தவாயிது – மிகவும் ஸ்பஷ்டமானது. இந்திரெயரஸனல்லி – ரமாரமணனில். ஹிந்தெ இந்து முந்தெ – கடந்த, நிகழ், எதிர் காலங்களில். அனந்தகாலதி – அபாரமான / ஆத்யந்தம் இல்லாத அனைத்து காலங்களிலும். ஸ்ருஷ்டிஸுவகெ – உலகினை படைப்பவனுக்கு ஸ்ரீஹரிக்கு. ஒந்திஷ்டு ஸ்ரஷ்டுத்வகுண – இந்த ஒரு ஸ்ருஷ்டியை செய்தான் என்னும் ஸ்ருஷ்டித்வ குணம். அனந்தவல்லவெ – (பூர்ண / அபரிமித) நித்யமானது அல்லவா?

**இதே$^3$ ரீதியலி ரக்ஷகத்வ சிக்ஷகத்வ மோக்ஷ**
**பத$^3$வ தா$^3$த்ருத்வாதி$^3$ கு$^3$ணக$^3$ண ஒந்தொ$^3$ந்தெ$^3$**
**பது$^3$மனாப$^4$ன ப$^3$லானந்தவாக$^3$தெ$^3$ பி$^3$ட$^3$தெ$^3$**

---

**அது$^{3}$பு$^{4}$த$^{3}$வல்லவெ நம்மினியன நாடகவ மாடு$^{3}$வ**
**மாட க$^{2}$ளரெதெ$^{3}$ய கா$^{4}$டா ||3**

இதே ரீதியல்லி - இந்த ரீதியிலேயே. ரக்ஷத்வ சிக்ஷகத்வ மோக்ஷ பதத தாத்ருத்வாதி - காப்பது, தண்டிப்பது, மோட்ச சாதனையை கொடுப்பது முதலான. குணகண - குண சமூகத்தின். ஒந்தொந்தெ - ஒவ்வொரு குணமும். பதுமனாபன - ஸ்ரீஹரியின். பல - சாமர்த்தியம். அனந்தவாகதெ பிடதெ - அனந்த என்றே தெரிகிறது (தவறாமல் தெரிகிறது). நம்ம இனய - நம் ஸ்வாமி. நாடகவ மாடுவ மாட - ஸ்ருஷ்ட்யாதி ரூப நாடகத்தை செய்து (பற்பல ரூபங்களால் நாடகம் ஆடி). தோருவ - காட்டும் அழகு. அதுபுதவல்லவெ - ஆச்சரியம் அல்லவா?.

** கர்த்ருத்வாதி எந்த தர்மங்களும் இல்லாத சாதாரண வஸ்து என்று பிரம்மனை அறியும் தமோயோக்யரின் ஹ்ருதயம், குறை கொண்டது அல்லவா?. மற்றும் அற்புதமான ஸ்ருஷ்ட்யாதி லீலைகளை புரிந்து கொள்ள முடியாமல், ஞானிகள்கூட வியப்படைகிறார்கள் அல்லவா? 'முஹ்யந்தி யம் ஸூரய:' என்று கூறியதைப் போல.

** ஸ்ரீஹரியின் தேகம் வேறு. குணங்கள் வேறு. அங்கு, ஞான, ஆனந்த, ஐஸ்வர்ய, ஸ்வாதந்த்ர்ய, ஔதார்யாதி அனந்த குணங்களே அவனின் ஸ்வரூபம். இவ்வாறு இருக்கும் அனந்த குணங்களில் ஒவ்வொரு குணமும் அனந்தமே ஆகியிருக்கிறது. பரஸ்பரம் ஒவ்வொரு குணத்திற்கும், பரமாத்மனின் ஸ்வரூபத்திற்கும் அத்யந்த அ-பின்ன இருக்கிறது. இவ்வாறு இருந்தாலும் விசேஷ பலத்தினால், ஸ்ரீஹரியின் ஆனந்த, ஸ்ரீஹரியின் ஞான ஆகியவை, அவனிடமிருந்து அந்த குணங்கள் வேறுபட்டு இருப்பதைப் போல செய்வதற்கு வாய்ப்பு கொடுக்கும் சாமர்த்தியம் அவனின் ஸ்வரூபத்திலேயே இருக்கிறது. இதையே 'விசேஷ' என்று அழைக்கிறோம்.

ஸ்ரீஹரி, பூர்ணானந்த ஸ்வரூபன் - ஆகையாலேயே நித்ய த்ருப்தனும் ஆகியிருக்கிறான். ஸ்ருஷ்டி கர்த்ருத்வ ரூபத்தின் ஒரு குணத்தை (மகிமையை) நிரூபித்து, ஸ்ரீஹரியின் இதர

சர்வகுணங்களும் அனந்த என்று (ஒவ்வொரு குணமும் அனந்த என்று) நிரூபிக்கும் யுக்தி சாதுர்யத்தை இந்த பதத்தில் பார்க்கிறோம். பிரளய காலத்தில் மட்டும் உலகினை தின்று தீர்த்தாலும், சர்வ காலத்தில் த்ருப்தனாக இருக்கிறான். ஒரு முறை உண்ட எந்த ஜீவனும், சர்வ காலங்களிலும் திருப்தனாக இருப்பதில்லை. 'த்ருப்தி' என்னும் குணம் ஸ்ரீஹரியில் அனந்தமாக இருப்பதைப் போல, மற்ற அனைத்து குணங்களும் அனந்தமாகவே இருக்கிறது. அனந்த குணங்கள் சர்வ காலத்தில் ஸ்ரீஹரியிடம் மிகவும் ஸ்பஷ்டமாக பூர்ணமாகவே இருக்கிறது.

ஆனாலும் கால விசேஷங்களில் மட்டும், (பிரளய காலத்தில் உலகினை உண்பதைப் போல) அந்த குணங்கள் அவனின் விருப்பத்திற்கேற்ப வெளிப்படுகிறது. புத்தி மோகத்தை (முக்தி யோக்யருக்கு மிகவும் ஆச்சரியத்தையும், தமோ யோக்யருக்கு பிரமை ஞானத்தையும்) கொடுத்து, அதன் பலனாக அவரின் ஆனந்தத்திற்கும் சுகத்திற்கும் காரணமாகும், ஸ்ரீஹரியின் குணங்கள் அலௌகிகமும் ஆகியிருக்கின்றன.

ப்ரத்யேகம் து குணா: ஸர்வே ஸதா ஸர்வகுணாத்ம கா: |
குணாந்தரவிசேஷாஸ்ச யதா ரூபாணி தே குணா: ||
பரஸ்பரமபின்னாஸ்ச தர்மா:ஸர்வேபி தத்கதா; |
ஜகத்ஸ்ருஷ்ட்யாதி கர்தார: ஸர்வபோக புஜோடபி ஹி ||
மஹாலக்ஷ்மீ முகாம்போஜ மத்வாஸ்வாதன தத்பரா: |
நித்யவ்யக்தாகுணா: ஸர்வே நிரபேக்ஷ்யாஸ்ச ஸர்வஷ: ||
ஸ்வஸ்வரூபைக விஷயா: ஸ்ரீலட்சுமிவிஷயா அபி ||
(ஸரஸ பாரதி விலாஸ)

என்று ஸ்ரீஹரிகுணங்களின் சிறப்பு வர்ணிக்கப்பட்டுள்ளது. இதன் அர்த்தம் என்னவெனில்: ஸ்ரீஹரியின் ஒவ்வொரு குணமும் எப்போதும் சர்வகுண ஸ்வரூபமே ஆகியிருக்கிறது. மற்ற அனைத்து குணங்களின் விசேஷங்களையும் கொண்டதாகிறது (அனைத்து குணங்களும் அனைத்து குணங்களின் விசேஷங்களையும் கொண்டிருக்கிறது). அனந்தரூபியான ஸ்ரீஹரியின் ஒவ்வொரு ரூபத்திலும் அனந்தரூபங்கள் இருப்பதைப் போல, அனைத்து குணங்களும் ஸ்ருஷ்ட்யாதி ஸர்வகர்த்ருத்வ

ஸாமர்த்தியம் கொண்டதும், சகல ஷுப போகங்கள் கொண்டதாகவும் ஆகியிருக்கிறது. இவ்வாறு ஸ்ரீஹரி, பூர்ணானந்த ஸ்வரூபன் ஆனாலும், ஒவ்வொரு ரூபமும் ஸ்ரீமகாலட்சுமி முக பத்மத்தின் மதுவை ஈர்ப்பதில் ஈடுபட்டிருக்கிறது. ஸ்ரீஹரியின் அனைத்து குணங்களும் நித்யவியக்தமாக இருந்து, அனைத்து விதங்களாலும் நிரபேக்ஷகளாக இருக்கின்றன. ஸ்ரீலட்சுமி, போகவிஷயங்கள் ஆனாலும், விஷய அபேக்ஷை இல்லாமல் போகபூர்ணமாக இருக்கிறான். எந்தவொரு ரூபத்திற்கும் ஸ்வஸ்வரூபத்தினால் பின்னமான பிற விஷயத்தின் அவசியமே இல்லை. இந்த மஹா பிரமேயம், இந்த பத்யத்திலிருந்து தெளிவாக விளக்கப்பட்டுள்ளது.

பத 6

**ஏனே ஹரிணாக்ஷி மோஹனெ க³ஜக³மனெ**
**த்³யானவ்யாதகெ நினகெ³ந்த³**
**ஸ்ரீநாத² ஸதிய மொக³ நோடி³ நஸுநக்கு**
**நானாபரியல்லி நுடி³ஸித³ ||1**

ஏனே ஹரிணாக்ஷி - ஹே மான் கண்களைப் போல கண்களைக் கொண்டவனே. மோஹனெ - ஜகன்மோஹன சுந்தரியே. கஜகமனெ - ஹே யானையைப் போல கம்பீரமானவளே. ஹே ப்ரியளே. நினகெ த்யானவ்யாதகெ - தியானத்தினால் உனக்கு என்ன ஆகவேண்டியிருக்கிறது? (நித்ய முக்தளுக்கு தியானம் எதற்கு?) எந்து - என்று. ஸ்ரீநாத - (அவளை சேர விரும்பிய) நாராயணன். ஸதிய மொகவ நோடி - மனைவியின் முகத்தை பார்த்து. நஸுனக்கு - மந்தஹாஸத்தை வீசி. நானா பரியல்லி - பற்பல வகையால். நுடிஸித - ப்ரேம சல்லாபங்களில் ஈடுபட்டான்.

** பிரளய காலத்தில் ஸ்ரீலட்சுமி தேவிக்கு ஆனந்தத்தை கொடுக்கும், ஸ்வரமணனான ஸ்ரீஹரியின் சாதுர்யத்தை வர்ணிக்கிறார்.

பத 7 ராக: பந்துவராளி. தாளம்: ரூபக

**ஒப்புவ தோள்க³ளோள் தோர்ப ஸுரர ஹிண்டு³**
**தப்பிஸி ரமெ எந்தப்புவளு**

**கர்பூர கரடி[3]கெ[3]யந்திப்ப பா[3]யொளு த**
**ன்னப்பனிரலெந்து[1] சும்பி[3]பளு ||1**

ஒப்புவ – அழகான. தோள்களோள் – தோள்களில். தோர்ப்ப – தெரியும் (தோள்களில் இருக்கும்). ஸுரர ஹிண்டு – தேவதைகளின் சமூகத்தை. தப்பிஸி – மறைத்து (அவர்களுக்கு தெரியாமல்). ரமெயு – லட்சுமிதேவி. எந்தப்புவளு – தன் காந்தனை எப்படி அலங்கரிப்பாள்? கர்பூரகரடிகெயந்திப்ப – கர்பூரத்தின் ஜாடியைப் போல இருக்கும் (சுத்தமும் நறுமணமும் கொண்ட). பாயொளு – தன் முகத்தில். தன்னப்பனிரலு – தன் தந்தை (அவதாரத்தின் தந்தை வருணன்) இருக்கையில். எந்து சும்பிபளு – எப்படி பதியை அரவணைப்பாள்? (ஸ்ரீலட்சுமி, சர்வோத்க்ருஷ்டமான ஸ்த்ரி குணங்களால் நிரம்பியவள்).

**அத[3]ரிந்த[3] தன்ன மையொளிப்ப தே[3]வர**
**உத[3]ரதி[3] கிருஷ்ண பச்சிட[3]லு**
**உத[3]தி[4]கன்னிகெ[3] தன்ன ரதிகெ மனவாத[3] நீ**
**ஹத[3] ப[3]கெ[3]கெ[3] மனத[3]லுப்[3]பி[3]த[3]ளு ||2**

அதரிந்த – இந்த காரணத்தால். தன்ன மையொளிப்ப – தன் தேகத்தில் இருக்கும். தேவர – தேவதைகள் அனைவரையும். கிருஷ்ண – ஸ்ரீஹரி. உதரதி – தன் வயிற்றில். பச்சிடலு – மூடி வைத்துக் கொண்டு. உததிகன்னிகெ – (சமுத்ர ராஜனின் மகளாக அவதரித்த) ஸ்ரீலட்சுமிதேவி. தன்ன ரதிகெ – தன்னுடன் க்ரீடை செய்ய. மனவாத – மனம் விரும்பிய. நேஹத பகெகெ – ப்ரேமத்தைப் பற்றி. மனதலி – தன் மனதில். உப்பிதளு – மகிழ்ந்தாள்.

**ஸரஸிஜாஸனனாக[3] வைகுண்ட[2]தொ[3]ளகி[3]ர்த்த[3]**
**விரஜெயல்லி முக்தியோக்[3]யரனு**
**கரஸிகொண்டு ப[3]ந்து[3] மிந்து[3] முக்தனாகி[3]**
**ஹரியுத[3]ரவ பே[3]க[3] பொக்க ||3**

ஸரஸிஜாஸனனு – பிரம்மதேவன். ஆக – அந்த சமயத்தில் (ஸ்ரீஹரியின் இங்கிதத்தை அறிந்து). வைகுண்டதொளகிர்த்த –

வைகுண்டத்தைச் சுற்றியும் இருக்கும். விரஜெயல்லி - விரஜா நதியில். முக்தியோக்யரனு - (சாதனை முடிந்து மோட்சத்திற்கு தயாராக இருந்த) சுஜீவர்களை. கரெஸிகொண்டு - (விரஜா ஸ்னானத்திற்கு தயாராகுங்கள் என்று சொல்லி) அழைத்துக்கொண்டு. பந்து - (அவர்களுடன்) வந்து. மிந்து - (விரஜா நதியில்) ஸ்னானம் செய்து (அங்கு தம் அனைவரின் லிங்க தேகங்களை விட்டு). முக்தனாகி - ஸ்வரூப மாத்திரத்தால் ஸ்திதனாக. பேக - வேகமாக. ஹரியுதரவ - ஸ்ரீஹரியின் உதரத்தை. பொக்கு - பிரவேசித்தான் (அனைவருடன் பிரவேசித்தான்).

**தரதரதி3 மிஞ்சுவ தம்ம தே3ஹங்க3ள**
**ஷிரிய ஸேரிஸி ஷிரிவரன**
**புர மூரரொளகி3ர்த்த3 முக்தரு ப3ந்து3 ஸ்ரீ**
**ஹரியுத3ரவ பொக்கராக3 ||4**

ஆக - அதே காலத்தில். தரதரதி மிஞ்சுவ - பற்பல வர்ணங்களால் ஒளிரும். தம்ம தேஹங்கள - தம் ஸ்வரூப தேகங்களின். ஷிரிய - காந்தியை. ஷிரிவரனஸேரிஸி - ஸ்ரீஹரியில் நுழைந்து (பிரவேசித்து), அல்லது, ஷிரிய ஸேரிஸி - லட்சுமியின் மூலம். ஷிரிவரன - ஸ்ரீஹரியின். புரமொரரொளகிர்த்த - வைகுண்ட, அனந்தாஸன, நாராயணபுர என்னும் த்ரிதாமங்களில் இருந்து, முக்தரு - அனைத்து முக்தர்களும். பந்து - சேர்ந்து. ஸ்ரீஹரியுதரவ - ஸ்ரீஹரியின் உதரத்தை. பொக்கரு - பிரவேசித்தனர்.

**எல்ல ஜீவர தன்ன குக்ஷியொளகி3ட்டு ஸ்ரீ**
**வல்லப4 நித்3தெ3கொ3ளிஸித3**
**ஸல்லீலெயிந்த3 ஸதியொட3னாடு3வ**
**உல்லாஸக3ள காணத3ந்தெ ||5**

எல்ல ஜீவர - அனைத்து ஜீவர்களையும். ஸ்ரீவல்லப - அந்த லட்சுமிபதி. தன்ன குக்ஷியொளகிட்டு - தன் உதரத்தில் தரித்து. ஸல்லீலெயிந்த - தன் விருப்பத்தின்படி. ஸதியரொடனாடுவ - ஸ்ரீலட்சுமியுடன் செய்யும். உல்லாஸகள - ஸல்லாபாதி

க்ரீடைகளை. காணதந்தெ – அறியாதவாறு. நித்தெகொளிஸித – புற ஞானம் இல்லாதவர்களாக செய்தான்.

**இந்து[1] முக்தாமுக்த ஜீவர திந்தி[2]ணிய**
**னாந்து ஸ்ரீகாந்த பவடி[3]ஸி**
**காந்தெயரொட[3]னெ ஸந்தோஷத[3]ல்லிஹ கதெ[2]**
**ஸந்தத நம்ம ஸலஹலி ||6**

இந்து – இவ்வாறு. முக்தாமுக்தஜீவர திந்திணியனு – முக்தர். அமுக்தர் என்னும் இரு வித ஜீவ சமுதாயத்தை. அந்து – அடைந்து (தனக்குள் வைத்துக்கொண்டு). ஸ்ரீகாந்த – நாராயணன். பவடிஸி – படுத்து. காந்தெயரொடனெ – ஸ்ரீலட்சுமிதேவியுடன். ஸந்தோஷதலிஹ கதெ – மகிழ்ச்சியுடன் இருக்கும் இந்த மகிமை. ஸந்தத – எப்போதும். நம்ம ஸலஹலி – என்னை காப்பாற்றட்டும்.

** ஸ்ரீமகாலட்சுமிதேவி அசிந்த்யாத்புத மகிமள்.

ஸ்ருஷ்டிஸ்திதிஸ்ச ஸம்ஹாரோ நியதிர்ஞான மாவ்ருதி: |
பந்தமோக்ஷாதய: ஸர்வே மஹாபூதிபுரஸ்ஸரா: ||
அனாத்யனந்த காலேடபி யதாயோக்யம் ப்ருதக் ப்ருதக் |
ப்ராப்னுவந்தி மஹாலக்ஷ்ம்யா அபாங்க லவமாத்ரத: ||
ருத்ரைர் வஸுபிராதித்யை: விஷ்வேதேவைஸ்ததாபரை: |
ஸர்வைர் தேவைஸ்ததா சேவ்யா விமுக்தைரப்யனேகதா ||
ஸதா முக்தௌ ச ஸம்ஸாரே பிபர்த்யேதான் ஸதா ரமா ||
(ஸத்தத்வ ரத்ன மாலா)
என்று அவளின் மகிமை வர்ணிக்கப்படுகிறது.

லட்சுமிதேவியின் கடைக்கண் பார்வையினாலேயே, ஜீவர்கள் (பிரம்மாதிகளும்கூட),
ஸ்ருஷ்டி, ஸ்திதி, லய, நியமன, ஞான, அஞ்ஞான, பந்த, மோக்ஷ முதலான மகா-ஐஸ்வர்யங்களை அனாதி அனந்த காலங்களில், யதா-யோக்யத்திற்கேற்ப அடைகின்றனர். ருத்ரர், வசுகள், ஆதித்யர், விஷ்வேதேவதைகள் மற்றும் இதர தேவதைகளாலும் மகாலட்சுமி வணங்கப்படுகிறாள். முக்த தேவதைகளும் அவளை

பற்பல விதத்தில் வணங்குகின்றனர். இந்த அனைவரையும் சம்சார நிலையிலும், முக்தியிலும்கூட, ஸ்ரீலட்சுமிதேவி தரித்து காக்கிறாள்.

நித்யமுக்தளும் சிதானந்த தேஹளும் ஆன ஸ்ரீலட்சுமிதேவியின் புஜாதி அங்கங்களில் இருந்து, முக்த தேவதைகள் அவளை வணங்குகின்றனர். அந்த அனைவரையும் ஸ்ரீஹரி, பிரளய காலத்தில் தன் உதரத்தில் வைக்கிறான். முக்தலோகங்கள்கூட உதர பிரவேசம் செய்கின்றன. அவ்யக்த ஸ்திதியில் வைக்கப்பட்டு, ஸ்ருஷ்டி காலம் வந்த உடனேயே, அவரவர் ஸ்தானங்களில் வெளிப்படுகின்றனர்.

** விரஜா நதியின் விஷயத்தில் 1ம் சந்தியின் பதம் 12-5ம் நுடியின் குறிப்புகளை இங்கு பார்க்கலாம். வைகுண்ட நகரத்தை சுற்றியிருக்கும் விரஜா நதி, பிரளய காலத்தில், புற ஆவரணங்களுடன் பிரம்மாண்டம் லயம் அடையும்போது, பிரதான (ப்ரக்ருதி) மற்றும் பரமாகாஷ (அவ்யாக்ருதாகாஷ)ங்களின் நடுவில் வருகிறது. ஜீவர்கள் அங்கு ஸ்னானம் செய்து, லிங்க தேகங்களை விடுகின்றனர்.

'வைகுண்டதொளகிர்த' என்னும் பதங்களுக்கு, லயத்திற்கு முன்பு, வைகுண்ட நகரியை சுற்றிலும் (ஸ்ரீபாக வைகுண்ட லோகத்தில்) இருந்த -- என்னும் அர்த்தத்தை அறிய வேண்டும். 1ம் ஸந்தியின் அறிமுக பாகத்தில், உதாரணம் கொடுத்த ஸ்லோகங்களின் வியாக்யானங்கள், இந்த அம்சத்தை தெளிவாகக் கூறுகின்றன.

'லயஸமயே வைகுண்டபரிகாத்வேன பூர்வமண்டஸ்தித லக்ஷ்ம்யாத்மக விரஜா நதி, வைகுண்ட:கல்பிதோ யேன லோகோ லோக நமஸ்க்ருத இதி ஸ்ருஷ்டிகாலே வைகுண்ட கல்பனான்யதாsஉபபத்யா நித்யத்வேன ப்ரமிதஸ்யாபி வைகுண்டஸ்ய அவ்யக்தரூப விலயஸத்வாத் தஸ்ய ஷக்த்யாத்ம கதாபத்யானந்தரம் ப்ரதானபரமாகாஷ யோரந்தராகச்சதி' என்பதே அந்த வாக்கியங்கள்.

** 1ம் சந்தியில் 17ம் நுடியில் சொல்லியிருப்பதைப் போல, வைகுண்ட நகரியின் பெயர் 'பரமவ்யோம' என்று இருப்பதால், நித்யமான விரஜா நதியை, எப்போதும் (ஸ்ருஷ்டி, பிரளய காலங்களில்கூட) பிரதான பரமவ்யோமங்களின் நடுவில் இருக்கிறது என்று சொல்வது, சரியானதே ஆகிறது.

** 5ம் நுடியில் 'ஸதியரொடனாடுவ' என்றும், 6ம் நுடியில் 'காந்தெயரொடனெ ஸந்தோஷதலிஹ' என்றும் சொல்லப்பட்டிருக்கும் பன்மையினால், ஸ்ரீலட்சுமிதேவி, ஸ்ரீஹரியுடன் பற்பல ரூபங்களால் க்ரீடை செய்கிறாள் என்பதை, குறிப்பிடுகிறது. இந்த ரமா நாராயணரின் செயல்கள், பிரம்மாதிகளுக்கும் புரிவது இல்லை. இவை அனைத்தும், அவர்களால் நினைத்துப் பார்க்க முடியாத அற்புதங்கள் ஆகும். தங்களின் மனைவிகளுடன் க்ரீடை செய்யும் புருஷர்களும், பெண்களுக்கு உரித்தான வெட்கத்தை அறிந்து, தனிமையிலேயே க்ரீடிக்கின்றனர் என்னும் நீதியும் இங்கு சொல்லப்பட்டிருக்கிறது என்பதை அறிய வேண்டும்.

** 5ம் நுடியில் 'நித்தெகொளிஸித' என்பதற்கு, தூக்க நிலையை அடைந்தான் என்னும் அர்த்தத்தை, அனைத்து ஜீவர்களைப் போன்றதொரு நிலை என்று அறியக்கூடாது. அமுக்தர் மற்றும் அடுத்த கல்பத்தில் ஸ்ருஷ்டிக்கு வரவிருக்கும் ஜீவர்கள் (வாயுதேவரைத் தவிர), பிரளய காலத்தில், நித்ரா-அவஸ்தையில் இருக்கின்றனர். முக்தர் அனைவரும் தியானாவஸ்தையில் இருக்கின்றனர். ரமா நாராயணரின் விஹார ஞானம் இவர்கள் யாருக்கும் இல்லை.

அதிரோஹிதவிக்ஞானாத்வாயுரப்யம்ருத: ஸ்ம்ருத: |
ஏவம் ப்ரளயகாலேபி ப்ரதிபாதபராவர: ||

அதாவது, வாயுதேவரின் விக்ஞானத்திற்கு எல்லையே இல்லாததால், வாயுதேவர், 'அம்ருத' என்றே அழைக்கப்படுகிறார். பிரளய காலத்தில்கூட பராவர- வஸ்து- விஷயக ஞானம் இருந்தே இருக்கிறது. (பராவர என்றால், பர-ரமா நாராயணர் மற்றும் அவரின் கீழான மற்ற தத்வங்கள்). ரமா நாராயணரின்

-----------------------------------------------------------------------------------------------

க்ரீடா ஞானம் இல்லாததைப் போல செய்வதே 'நித்தெகொளிஸித' என்பதன் அர்த்தம் - வாயு பிரம்மரின் விஷயத்திற்கு மட்டும். மற்ற முக்தர்களை தியானத்தில் இருத்தி, புற ஞானம் இல்லாததைப் போல வைப்பது. அமுக்தர்களுக்கு நித்ரா அவஸ்தையை கொடுப்பது, என்னும் அர்த்தங்களை அறிய வேண்டும்.

தாத்பர்ய நிர்ணயத்தின் 'ஸுஷுப்திகான் பிரம்மாதிகான்' என்னும் வாதத்திற்கு 'பிரம்மனே முதலாக இருக்கும், மற்ற நித்ராவஸ்தையில் இருந்த ஜீவர்களை' (பிரம்மனைத் தவிர) என்றே அர்த்தம்.

** முக்த ஜீவஸ்வரூபங்கள் அனைத்தும் பற்பல வர்ணங்கள் உள்ள ஸுந்தர ஆக்ருதிகள்.

அருணாஷ்ம வர்ணதனவஸ்த நவ: ஷுபஹார ஸன்னிபருசோऽத்ர பரா: | ஹரி நீலருசயோऽப்யபரா: .. (மத்வவிஜய)

ஆகிய வாக்கியங்கள் இந்த பிரமேயத்தை நிரூபிக்கிறது. சிலர் பத்மராகத்தைப் போல தங்கமயமான வண்ண தேகத்தைக் கொண்டவர்கள். சிலர் முத்து மாலையைப் போல வெண்மையான ஸ்வரூப தேகம் கொண்டவர்கள். மற்றும் சிலர் இந்திரநீல மணியைப் போல நீல வண்ண காந்தி உள்ளவர்கள் என்று சொல்லப்படுகிறது. இந்த பிரமேயத்தை குறிப்பதற்காகவே, 'தரதரதி மிஞ்சுவ தம்ம தேஹங்கள' என்று கூறுகிறார்.

ஸ்லோக 3

**ஸ்ரீரேவ லோகரூபேண விஷ்ணோஸ்திஷ்டதி ஸர்வதா[3] |**
**அதோ ஹி வைஷ்ணவா லோகா நித்யாஸ்தேऽசேதனா அபி ||**

ஸ்ரீரேவ - லட்சுமிதேவியே. விஷ்ணோ: லோகரூபேண - விஷ்ணு லோகங்களின் (த்ரிதாமங்களின் - முக்த லோகங்களின்) ரூபத்தினால் (ஸ்வரூபத்தினாலும், ஷுத்த ஸத்வ நியாமக ரூபத்தினாலும்). ஸர்வதா திஷ்டதி - நித்யமும் இருக்கிறாள். அத:

– ஆகையால். வைஷ்ணவா லோகா: – விஷ்ணு லோகங்கள். தே அசேதனா அபி – அவை (ஸ்ரீஹரியின் அந்தப்புரங்களைத் தவிர மற்ற ஸ்ரீபாகங்கள்), அசேதன (ஷுத்த ஸத்வாத்மக) ங்கள் ஆனாலும், நித்யா: – நித்யங்கள் (ப்ரளய காலத்திலும் ஸ்வரூபத: நாசம் அடையத் தக்கவை இல்லை).

** 1ம் ஸந்தியின் 10ம் பதத்தின் விசேஷ விவரணையை இங்கு படிக்க வேண்டும். அங்கு இந்த பிரமேயம் பொருந்துவதாக இருந்தாலும், இந்த லய சந்தியில், பிரளய காலத்தில்கூட முக்த லோகங்களுக்கு நாசம் இல்லை என்று சொல்லும், செய்தி அதில் இருக்கிறது என்று அறிய வேண்டும்.

பத 8 ராக : மேசசௌளி. தாளம் : ரூபக

**ஸ்ரீதே$^{3}$வி தானே த்ரிதா$^{4}$மன மனெயாகி$^{3}$**
**ஆத்$^{3}$யந்தக$^{3}$ளில்லத$^{3}$ந்தெ**
**போ$^{3}$த$^{4}$ ஸுக$^{2}$ரூபளாகி$^{3}$ஹளெந்து$^{3}$ பூர்வத$^{3}$**
**வேத$^{3}$க$^{3}$ளே ஓது$^{3}$திஹவு ||1**

ஸ்ரீதேவி தானெ – ஸ்வயம் லட்சுமிதேவியே. த்ரிதாமன – ஸ்ரீஹரியின். மனெயாகி – கிருஹ ரூபத்தினால். ஆத்யந்தகளில்லதந்தெ – உருவாக்கம், அழிவு ஆகியவை இல்லாமல். போதஸுகரூபளாகிஹளு – ஞானானந்த ஸ்வரூபளாகவே இருக்கிறாள். எந்து – இவ்வாறு. பூர்வத வேதகளே – அனாதி நித்யங்களான வேதங்களே. ஓதுதிஹவோ – சொல்கின்றன.

**அத$^{3}$ரிந்த$^{3}$ ஹரிய மூரு லோகங்க$^{3}$ளிகெ$^{3}$ ல**
**யத$^{3}$ கிச்சின கேடி$^{3}$ல்ல**
**மொத$^{3}$லுத$^{3}$கக$^{3}$ளெல்ல போ$^{1}$த$^{3}$ காரண லகுமி**
**உத$^{3}$தி$^{4}$யாத$^{3}$ளாக$^{3}$ச்யுதகெ$^{3}$ ||2**

அதரிந்த – ஸ்ருதி ப்ரமாண பலத்தினால். ஹரிய – ஸ்ரீபரமாத்மனின். மூரு லோகங்களிகெ – வைகுண்ட, அனந்தாஸன, நாராயணபுர (ஷ்வேதத்வீப) என்னும் மூன்று உலகங்களுக்கு. லயத கிச்சின – பிரளய அக்னி. கீடில்ல –

அபாயம் இல்லை (நாச பயம் இல்லை). மொதலுதககளெல்ல - பிரளயத்தில் உலகங்களை வியாபித்த (சங்கர்ஷணனின் முக்யாக்னியினால் எரிக்கப்பட்ட பிறகு, சாம்வர்த்தக மேகங்களால் ஷத வருஷம் வரை பெய்த மழையின்) தண்ணீர் அனைத்தும், போத காரண - நஷ்டம் அடைந்த காரணத்தால். லகுமி - ஸ்ரீலட்சுமிதேவி. அச்யுதகெ - ஸ்ரீஹரிக்கு (சயனம் செய்வதற்காக) உததியாதளு - சமுத்திர ரூபத்தை தாங்கினாள்.

** மூன்று முக்த லோகங்களில் எப்போதும் வெளிப்பட்டு முக்தர்களுக்கு, எந்த சாதனா அபேக்ஷையும் இல்லாமல், தரிசனம் அளித்தவாறு, ஆனந்த பிரதனாக இருப்பதால், ஸ்ரீஹரி 'த்ரிதாம' என்று அழைக்கப்படுகிறான்.

** மூன்று முக்த லோகங்களின் நடுவில் இருக்கும் ஸ்ரீஹரிபுரங்கள் (அரண்மனைகளின் நகரங்கள்) லட்சுமி ஸ்வரூபங்களே ஆகியிருக்கின்றன. மற்ற ஸ்ரீபாகங்களும் ஷுத்த ஸத்வாத்மகங்களாக, நித்யங்களே ஆகியிருக்கின்றன. 1ம் ஸந்தி, 10ம் பதத்தின் குறிப்பினை இங்கு பார்க்கலாம்.

** 'ஸ்ரீதாமன மனெயாகி' என்றதால், ஸ்ரீஹரி க்ருஹங்களுக்கும் (நகரிகளுக்கும்) அவற்றின் சுற்றியிருக்கும் லோகங்களுக்கும் இருக்கும் சிறப்பினை இங்கு குறிப்பிடுகிறார். 'அனந்தானந்தரூபா ச ஞானானந்தாதி ரூபிணீ' ஆகிய பிரமாண வாக்கியங்களும், லட்சுமிதேவிக்கு ப்ராக்ருத தேக ப்ராப்தியானது எந்த காலத்திற்கும் எங்கும் இல்லை என்று சொல்கிறது. ஸீதா, ருக்மிணி, ஸத்யபாமா ஆகிய அவளின் அவதார ரூபங்கள்கூட சிதானந்தாத்மகமானவையே - ஜட தேகங்கள் அல்ல.

** 'யத்ர வாயூதபத்மாதி ரூபேண ப்ரக்ருதி:ஸ்திதா' என்னும் பாகவத வாக்கியம், பிரளய காலத்தில் வாயு, உதக, பத்மாதி ரூபங்களாக ஸ்ரீலட்சுமிதேவியே இருக்கிறாள் என்று சொல்கிறது. 'லட்ச்ம்யைவோதக ரூபேண ஷய்யாரூபேண சாண்டஜ' என்று (பிரம்மகாண்ட புராண) சொல்கிறது. 'ஹே கருடனே.

லட்சுமிதேவியே ஸ்ரீஹரிக்கு உதக, படுக்கை ரூபங்களால் இருக்கிறாள்.

**ஸ்லோக 4-5-6**

**ஸர்வகார்யலயே ஜாதே கார்யமம்ப4: குதோ ப4வேத் |**
**அகார்யமம்ப4: ஸ்ரீரேவேத்1யனு ஸந்தா4ய யோக3ராட் ||4**
**ஸலிலம் ஸ்ரீப்ரக்ருத்யாக்2யம் ததாஸீத்கில கேவலம் |**
**அம்ப4ஸ்த சேதனான்யேதி ஸ்ருத்யர்த்த2முத3த3ர்ஷயத் ||5**
**யதை2காத்ம்யனுபா4வேன விகல்ப ரஹித: ஸ்வயம் |**
**பூ4ஷணாயுத4லிங்கா3த்3யா த4த்தே ஷக்தே: ஸ்வமாயயா ||6**

ஸர்வகார்யலயே ஜாதே – அனைத்து கார்யரூப வஸ்துகளும் (காரணத்தினால் பிறந்தது காரியம்) லயம் அடையும்போது, கார்யம் அம்ப: – கார்யரூபமே ஆன உதகம் (தண்ணீர்), குதோ பவேத் – எங்கு வரவேண்டும் (எங்கிருப்பது சாத்தியம்?). அகார்யம் அம்ப: – கார்யரூப இல்லாத உதகம், ஸ்ரீரேவ – லட்சுமிதேவியே. இதி – என்று, அனுஸந்தாய – அறிந்து, யோகராட் – யோகேஷ்வரனான (அசிந்த்ய ஷக்தியுதனான) ஸ்ரீஹரி (உதக ரூபளான ஸ்ரீதேவியின் ஸேவையை ஏற்றுக் கொண்டான்).

ஸ்ரீப்ரக்ருத்யாக்யம் – ஸ்ரீலட்சுமி என்னும் பெயருள்ள (அல்லது ஸ்ரீ மற்றும் ப்ரக்ருதி என்னும் பெயருள்ள). கேவலம் ஸலிலம் – உதகம் மட்டும். ததா – அந்த பிரளய காலத்தில் இருந்து. அம்பஸ்தசேதனா – ஜலத்தில் இருக்கும் சேதனம். அன்யா – லட்சுமியே (உதகாபிமானிகள் என்னும் மற்ற தேவதைகளைவிட பின்னள் (வேறுபட்டவள்)). இதி – இவ்வாறு. ஷ்ருத்யர்த்தம் – ஸ்ருதியின் அர்த்தத்தை. உததர்ஷயத் – (இந்த பிரளய காலத்தின் ஜலம்) உத்க்ருஷ்டமாகி (தெளிவாக) காணப்பட்டது.

(வெறும் லட்சுமி ஸ்வரூபம் உதக ரூபத்தினால் இருப்பது எப்படி என்னும் சந்தேகம் வேண்டாம் – எப்படி என்றால்) யதா – எப்படி. ஸ்வயம் – தான். ஸ்வமாயயா – தன் விருப்பப்படியே. விகல்பரஹித: – பேதம் இல்லாதவனாக. ஐகாத்ம்யானுபாவேன – (தன்னிடமிருந்து) அத்யந்த அபின்னங்கள் என்னும் ஞானயுக்தனாகவே. பூஷணாயுத லிங்காக்யா: – ஆபரண, ஆயுத

---

முதலான சின்னங்கள் என்னும், ஷக்தே: - (தன்) சக்தி விசேஷங்களை (தன் பற்பல ரூபங்களை). தத்தே - தரித்திருக்கிறானோ (அப்படி ஸ்ரீலட்சுமிதேவியே ஜலரூபஙும் ஆகியிருக்கிறாள் என்பது இதிலிருந்து தெரிய வருகிறது). ஸ்ரீதேவியிடமிருந்து அபின்னள் என்னும் ஞானத்தைக் கொண்டவனாகியே, தன் ஸ்வரூபாத்மக பூஷணாயுதகளின் மேல் லக்ஷ்ம்யாத்மக பூஷணாயுதங்களை ஸ்ரீஹரி தரித்திருக்கிறான்.

பத 9 ராகம்: காம்போதி. தாளம்: ஜம்பெ
**தத்வக$^{3}$ளிலதிதூ$^{3}$ரவாத$^{3}$ தே$^{3}$ஷத$^{3}$லி ஜ**
**க$^{3}$த்தின பிரளய காலத$^{3}$லி**
**ப$^{4}$ர்தெகெ$^{3}$ ரமெ தானெ பூ$^{4}$ஷணாயுத$^{4}$ லிங்க$^{3}$**
**வஸ்த்ர மாலெக$^{3}$ளாகி$^{3}$ஹளு க$^{3}$ட$^{3}$ ||1**

தத்வகளிகெ - மஹதாதி தத்வங்களின் மற்றும் தத்வாபிமானிகளின். அதிதூரவாத தேஷதலி - எந்த காரியங்களும் இல்லாத இடத்தில்கூட மற்றும் (அனைத்து தத்வங்களும் - பிரம்மாண்டத்தின் ஆவரணங்கள் கூட - மூல ப்ரக்ருதியில் லயம் கொண்டு, தத்வாபிமானிகள் ஸ்வோத்தமர்களில் அடங்கி காரியங்கள் இல்லாதவர்களாக இருக்கும்). ஜகத்தின பிரளயகாலதலி - பிரளய காலத்திலும். ரமெ - ஸ்ரீலட்சுமிதேவி. பர்த்தகெ - தன் கணவனான நாராயணனுக்கு. தானெ - ஸ்வயம். பூஷணாயுதலிங்கவஸ்து மாலெகளாகி - ஆபரண, ஆயுத ரூபத்தின், வஸ்து சமூகங்களாகி, இஹளு கட - இருக்கிறாள் என்பது வேத பிரஸித்தம்.

** அனைத்து தேஷ காலங்களிலும், ஸ்ரீதேவி, நாராயணனை ஆபரண ஆயுத முதலான அனைத்து வஸ்துரூபத்தினால் வணங்குகிறாள். பிரம்மாண்ட, மற்றும் அதன் விஸ்தாரமான ஆவரணங்களைக் கொண்ட, அனந்தமான அவ்யாக்ருதாகாஷ பிரதேசங்களிலும், தத்வங்களின் மற்றும் தத்வாபிமானிகளின் செயல்களே இல்லாத பிரளய காலத்திலும், ஸ்ரீஹரிக்கு பல விதங்களில் நித்ய சேவையை செய்கிறாள். ஸ்ருஷ்டி காலத்தில் மற்றும் ஆவரணத்துடனான பிரம்மாண்ட பிரதேசத்திலோ,

தத்வாபிமானிகள் தம்மிடமிருந்து தோன்றிய தத்வங்களால், ஸ்ரீஹரியை தகுதிக்கேற்ப சேவிக்கின்றனர். (காம, அனிருத்தாதி தேவதைகள், சக்ர, ஷங்காதி ரூபங்களால் ஆயுதாதிகள் ஆகின்றனர்).

**அம்பு$^{4}$தி$^{3}$யாத$^{3}$ளெ ஆக$^{3}$ மஹலகுமி**
**அம்ப$^{3}$ராப$^{4}$ரணவாகி$^{3}$ஹளு**
**பொம்ப$^{3}$ண்ணதா$^{3}$லதெ$^{3}$லெயு தானாத$^{3}$ளே**
**னெம்ப$^{3}$னவள ஸாஹஸவனு ||2**

ஆக – அந்த பிரளய காலத்தில். மஹலகுமி – மகாலட்சுமி தேவி. அம்புதியாதளெ – சமுத்திரம் ஆனாள். ஏனாஸ்சர்ய – இதில் என்ன ஆச்சரியம் இருக்கிறது? அம்பராபரணவாகிஹளு – (பீதாம்பராதி) வஸ்த்ர மற்றும் (கிரீட குண்டலாதி) ஆபரண ரூபளும் ஆகியிருக்கிறாள். பொம்பண்ணதாலதெலெயு – தங்கமயமான ஆல இலையும், தானாதளு – தானே ஆனாள். ஏனெம்பெனு – என்னவென்று சொல்வது. அவள ஸாஹஸவனு – அவளின் ஸ்ரீஹரி ஸேவா உற்சாக சாமர்த்திய விசேஷத்தை.

**மந்தா$^{3}$ரகுஸுமத$^{3}$ மாலெ தானாத$^{3}$ளு**
**க$^{3}$ந்த$^{3}$ பரிமளவாகி$^{3}$ஹளு**
**மந்த$^{3}$ மாருதனந்தெ ஸுத்தலு ஸுளிவளு**
**இந்தி$^{3}$ரெயிரவனேனெம்பெ$^{3}$ ||3**

மந்தாரகுஸுமத – மந்தார புஷ்பத்தின். மாலெ தானாதளு – மாலையும் அவளே ஆனாள். கந்த பரிமளவாகிஹளு – நறுமணம் மிக்க சந்தனமும் ஆகியிருக்கிறாள். மந்தமாருதனந்தெ – குளிர்ந்த காற்றினைப் போல. ஸுத்தலு ஸுளிவளு – ஸ்ரீஹரியைச் சுற்றிலும் சஞ்சரிக்கிறாள் (வீசுகிறாள்). இந்திரெய – ரமாதேவியின். இரவனு – (பிரளய காலத்தில் மற்றும் எப்போதும்) பற்பல விதங்களில் ஸ்ரீஹரியை வணங்கும் வழியை. ஏனெம்பெ – எப்படி வர்ணிப்பேன் (வர்ணிப்பது அசாத்தியமே ஆகும்).

**முக$^{2}$வெம்ப$^{3}$ சந்த்ரமன ஸொப$^{3}$க$^{3}$ பீ$^{3}$ருவளாக$^{3}$**
**ஸுக$^{2}$ தன்ன வசனதி$^{3}$ ஷுகோக்திக$^{3}$ள**

**பி[1]கனந்தெ பாடு[3]வளு ப்ராணநாயகனிகெ[3]**
**ஸகல ஸம்ப்[3]ரம தோரித[3]ளு ||4**

முகவெம்ப சந்த்ரமன - தன் முக என்னும் சந்திரனின். ஸொபக - குளிர்ச்சியான சௌந்தர்யத்தினை. ஆக - அந்த சமயத்தில். பீருவளு - (தன் கணவனின் மகிழ்ச்சிக்காக) முழுமையாக ஒளிர்கிறாள். தன்ன வசனதி - தன் சொற்களால் (வேதங்களால்). ஷுகோக்திகள - மதுர நுடிகளை. பிகனந்தெ - குயிலைப் போல (இனிய குரலால்). சுக - மகிழ்ச்சியுடன். பாடுவளு - பாடுகிறாள். பிராண நாயககெ - தன் பிராண நாதனுக்கு. ஸகல - அனைத்து. ஸம்ப்ரமதோரிதளு - சம்பிரமங்களை (வைபவ பூர்ண சேவைகளை உற்சாகத்துடன்) வெளிப்படுத்தினாள்.

**தும்பி[3] ஸுளிவந்தெ கங்க[3]ள நோட[1]தி[3]ந்**
**த[3]ம்பு[3]ஜாக்ஷனிக[3]ர்த்தியித்து**
**பி[3]ம்பா[3]த[4]ரதொ[3]ளிப்ப ஸுதெ[4]ய ரஸவவனிகெ[3]**
**சும்பி[3]ஸி உணிஸித[3]ளா பா[3]லெ ||5**

தும்பி ஸுளிவந்தெ - நிரம்பி வழியும். கங்கள நோடதிந்த - அன்பு நிறைந்த பார்வையால். ஆ பாலே - நித்ய தருணியான ஸ்ரீதேவி. அம்புஜாக்ஷனிகெ - ஸ்ரீஹரிக்கு (புண்டரிகாக்ஷனான தன் ரமணனுக்கு) அர்த்தியித்து - மகிழ்ச்சியைக் கொடுத்தவாறு. பிம்பாதரதொளிப்ப - சிவப்பான, மிருதுவான, உதடுகளால். ஸுதெய ரஸவ - அம்ருத ரசத்தை. அவனிகெ - ஸ்ரீஹரிக்கு. சும்பிஸி உணிஸிதளு - முத்தம் கொடுப்பதன் மூலம் உண்வித்தாள்.

ஸ்ரீதேவி பற்பல ரூபங்களால் தன் ரமணனை வணங்கும் பிரமேய விஷயத்தில் உதாரண பிரமாணங்களை 8ம் பத்யத்தின் விவரணையின் பாகத்தில் பார்க்கலாம்.

ஸ்லோக 7
**அஸாவேகார்ணவீ பூ[4]தே மாயாவடத[3]ளே புமான் |**
**ஜக[3]த்ஸ்வஜடரே பி[3]ப்[4]ரத்தஸ்மின் ஷேதே ஜனார்த்த[3]ன: ||**

அஸௌ புமான் - இந்த பிரளய காலத்தின்ன் புருஷ ரூபனான. ஜனார்த்தன: - ஸ்ரீஹரி. ஏகார்ணவிபூதே - வியாப்தமான பிரளயோதகத்தில் இருக்கும். மாயாவடதளே - லக்ஷ்ம்யாத்மக வட பத்ரத்தில். ஜகத் - உலகத்தை. ஸ்வஜடரே - தன் உதரத்தில். பிப்ரத் - தரித்தவனாக. தஸ்மின் - அந்த மகாலட்சும்யாத்மக ஜலராஷியில். ஷேதே - சயனித்திருக்கிறான்.

பத 10 ராகம்: ஆஹேரி. தாளம்: அட
**பூ$^{4}$ லக்ஷ்மி து$^{3}$ர்கே$^{3}$யரலி ஸ்வாந்ததி$^{3}$ ஹரி**
**ஆலதெ$^{3}$லெய மேலெ மலகி$^{3}$**
**ஆ லயாம்பு$^{3}$தி$^{4}$ கல்லோலத$^{3}$லி உயி**
**யாலெயாடு$^{3}$வன லீலெயலி ||1**

பூலக்ஷ்மீ துர்க்கெயரலி - பூ, ஸ்ரீ, துர்கா நாம ரூபங்கள் உள்ள மகாலட்சுமிதேவியுடன், ஸ்வாந்ததி - மகிழ்ச்சியுடன் (தன் விருப்பப்படி) ஹரி - ஸ்ரீஹரி. ஆலதெலெய மேலெ - வடபத்ர இலையின் மேல். மலகி - படுத்துக்கொண்டு. ஆ - லட்சுமிரூபத்தின். லயாம்புதி - பிரளய சமுத்திரத்தின். கலோலதலி - அலைகளில். உயியாலெயாடுவன லீலெயலி - உய்யாலை (தொட்டில் / படுக்கை) க்ரீடையில் இருக்கிறான் (படுத்துக் கொண்டிருப்பதைப் போல சஞ்சரிக்கிறான்).

**ஒம்மெ து$^{3}$ர்கெ$^{3}$யஹளொம்மெ பூ$^{4}$மியப்ப**
**ளொம்மெ ஸ்ரீதே$^{3}$வியாகி$^{3}$ஹளு**
**இம்மையளொம்மொம்மெ பதியப்புவளு ஸுக$^{2}$**
**சின்மயக$^{3}$ர்த்தியேனெம்பெ$^{3}$ ||2**

ஒம்மெ - ஒரு வேளை. துர்கெயஹளு - (லட்சுமிதேவி). துர்காரூபத்தில் இருக்கிறாள். ஒம்மெ - வேறொரு சமயம். பூமியப்பளு - பூதேவியாக இருக்கிறாள். ஒம்மெ - வேறொரு சமயம். ஸ்ரீதேவியாகிஹளு - ஸ்ரீரூபத்தில் இருக்கிறாள். ஒம்மொம்மெ - வேறொரு சமயம். இம்மெயொளு - இரு ரூபங்களால். பதியப்புவளு - பதியை அலங்கரிக்கிறாள். ஸுகசின்மயகெ - ஞானானந்த ரூபனுக்கு (ஸ்ரீஹரிக்கு). அர்த்திய -

(காட்டும்) பிரேமத்தை (ப்ரீதிவிசேஷத்தை). ஏனேனெம்பெ - எவ்வளவு வகையில் வர்ணிப்பேன்.

**இவளப்பிகொம்ப³ ஹரிய வக்ஷத³ க³ந்த⁴**
**அவளுரோஜதி³ தோருதிஹுது³**
**அவள சும்பிஸிதா³க³ பதிய த³ந்தத³ கா⁴ய**
**அவளத⁴ரத³லொப்புதிஹுது³ ||3**

இவளப்பிகொம்ப - லட்சுமிதேவி, ஸ்ரீஹரியை அலங்கரிக்கும்போது. ஹரிய - ஸ்ரீஹரியின். வக்ஷத கந்த - வக்ஷஸ்தளத்தின் சுகந்தம். அவளுரோஜதி - ஸ்ரீலட்சுமிதேவியின் ஸ்தன பாகத்தில். தோருதிஹுது - பட்டு, ஒளிர்கிறது. அவள - அவளின். அதரதலி - உதட்டில். ஒப்புதிஹுது - (ப்ரேமத்தின் வேகத்தை குறிக்குமாறு) ஒளிர்கிறது.

**அச்யுதனுத³ரதி³ லிங்க³தே³ஹத³ கண்ண**
**முச்சி ஜீவரு நித்³ரெகை³ய்யெ**
**எச்செத்திஹனு க³ட³ முக்²ய ப்ராணனு ஸ்வஸ்த²**
**சித்தத³ முக்தரொட³னெ ||4**

அச்யுதன - ஸ்ரீஹரியின். உதரதி - வயிற்றில். லிங்க தேஹத கண்ண - லிங்கதேகத்தில் இருக்கும் கண்ணினை. முச்சி - மூடிக்கொண்டு. ஜீவரு - (ஸ்ருஜ்யராத - என்றால் அடுத்த கல்பத்தில் ஸ்ருஷ்டியில் வரவிருக்கும்) ஜீவர்கள். நித்ரெகையெ - நித்ராவஸ்தையில் இருக்க. முக்யப்ராணனு - முக்யபிராண தேவர். ஸ்வஸ்வசித்தத - முக்தர்களுடன் - தியானங்கதரான முக்த ஜீவர்களுடன். எச்சத்திஹனு கட - விழிப்புடனே இருக்கிறான்.

**பிரளயேபி ஆவிலுப்த பா³ஹ்யஞுவெந்த³**
**கிலரொளு முக்ய மாருதன**
**நெலெயரிது வாயோர்வன நித்யனெம்ப³ நி**
**ர்மல ஸ்ருதி க³ர்ஜிஸுதிதெ³கோ ||5**

பிரளயேடபி – பிரளய காலத்தில்கூட. அவிலுப்த – லோபமில்லாத (அழியாத). பாஹ்யக்ஞவெந்த – புற அனைத்து வஸ்து விஷயக ஞான உள்ளவன் என்று சொல்லும். வாயோர்வவ நித்யனெம்ப நிர்மலஸ்ருதி – வாயு ஒருவனே நித்யன் என்னும் பவித்ர வேத வாக்கியம், (அல்லது) 'வாயுர்வாவ நித்ய:' என்னும் ஸ்ருதி, 'வாயு ஒருவரே பிரளய காலத்தில் என்றும் இருப்பதைப் போல, நித்யனாக இருக்கிறான்', அகிலரொளு – சமஸ்த ஜீவரின் நடுவில். முக்யமாருதன – முக்ய வாயுதேவனின். நெலெயரிது – ஸ்வரூபத்தை அறிந்து. கர்ஜிஸுதிதெகோ – (முக்யபிராணன் பிரளய காலத்தில்கூட ஜாக்ருதனாகியே இருக்கிறான் என்று) சொல்கிறது பார்.

**தே³ஹி நித்³ரிதனாகி³ அவன தே³ஹதொ³ளிர்த்த³**
**தே³வரு நித்³ரெ கெ³ய்யெ**
**ஹோஹ பா³ஹ ஷ்வாஸவ நடெ³ஸுவ ம**
**த்திஹத³லயத³ காலத³ல்லி ||6**

தேஹி – லிங்கதேஹத்தில் இருக்கும் ஜீவன். நித்ரிதனாகெ – நித்ரா நிலையை அடைய. அவன தேஹதொளிர்த்த – ஸ்ரீஹரியின் உதரத்தில் இருந்த. ஜீவரு – ஜீவர்கள் அனைவரும். நித்ரெகெய்யெ – தூங்கிக் கொண்டிருக்க. ஹோஹபாஹ – போகும் வரும். ஷ்வாஸவ – மூச்சினை. இஹத – உலகத்தின். லயத காலதல்லி – பிரளய காலத்தில். நடெஸுவ – நின்றுவிடாதவாறு நடத்துகிறான்.

** 'அதிஸுந்தரா:ஸுரபய:புருஷா:', 'ஸுகஸம்விதாத்ம கதயா வபுஷாம் ஸுரபித்வமேவ பஹிரந்தரபி' என்னும் (மத்வ விஜய) வாக்கியங்களில், 'வைகுண்டத்தில் இருக்கும் முக்த புருஷர்கள் மிகவும் அழகானவர்கள். ஸுகஞானாத்மகமான அவர்களின் தேகங்களுக்கு, உள்ளே மற்றும் வெளியேகூட நறுமணமே இருக்கிறது' என்று சொல்லப்பட்டிருக்கிறது. இவ்வாறு முக்தரின் தேகங்களே ஸ்வாபாவிக நறுமணமாகவே இருக்க, ஸ்ரீலட்சுமிதேவி ஸுகந்த பரிமளத்துடன் கூடிய தேகத்தைக் கொண்டவள் என்று சொல்லவும் வேண்டுமா? ஆனாலும், ஸ்ரீஹரியின் ஆலிங்கனத்தால், அவனின் வக்ஷஸ்தளத்தின் நறுமணம் அவளின்

ஸ்தன பாகத்தில் தெரிந்தது என்று வர்ணிப்பது, மஹாபிரமேயத்தால் விளக்கப்பட்டுள்ளது.

முக்தஜீவர்கள் மற்றும் ஸ்ரீலட்சுமிதேவியின் அப்ராக்ருத தேகங்கள், அனைத்து பிரகாரங்களால் ஸ்ரீஹரியின் அதீனங்களே ஆகியிருக்கின்றன. இந்த தேகங்களின் நறுமணமும் ஸ்ரீஹரியின் அதீனமே.

ஸத்தேஹ:ஸுககந்தஸ்ச ஞானபா: ஸத்பராக்ரம: |
ஞான ஞான:ஸுகஸுக: ஸ விஷ்ணு: பரமோக்ஷர: ||

என்று ஸ்ருதி, ஸ்ரீஹரியின் தேகமானது, மிகச்சிறந்த ஞான, சக்தி, சுகாதி ஸ்வரூபமே ஆகியிருந்து, சிறந்த மனோகரமான பரிமள கந்தரூபமும் ஆகியிருக்கிறது என்று சொல்கிறது. லக்ஷ்ம்யாதி அனைவரின் சுக, ஞான, ஷக்தி, கந்தங்களின் நித்யத்வத்தை காப்பாற்றுவது, ஸ்ரீஹரியின் ஸ்வரூபமே.

** முத்தத்தால் ஸ்ரீதேவியின் உதடுகளில் காயம் ஆனது என்று வர்ணித்திருப்பது அன்பின் வெளிப்பாடு என்று அறியவேண்டும். ரமா நாராயணரின் தேகங்கள், நித்ய நிர்விகார அப்ராக்ருத தேகங்கள். காயம் (புண்) ஆகிய ரூப விகாரத்திற்கு வாய்ப்பே இல்லை. முத்தத்தில் இருக்கும் அன்பின் தீவிரத்தால், உதடுகளில் காயம் ஏற்படுவது உலகத்தில் நாம் பார்த்ததில்லையா? அன்பின் தீவிரம் குறைந்தபிறகு, உலகத்தில், காயத்தின் வலி வருகிறது. உலகத்தில் இருக்கும் பழக்கத்தை காட்டுவதற்காகவே 'தந்தத காய ஒப்புதிஹுது' - ஒளிர்கிறது என்று சொல்கிறார்.

** பிரளய காலத்தில்கூட வாயுதேவர் 'ப்ரதிபாத பராவர:' என்று சொல்லியிருப்பதால், அந்த காலத்தில், ரமா நாராயணரின் க்ரீடையின் ஞானமும், வாயுதேவருக்கு இருக்கிறது என்று அறியக்கூடாது. வாயுதேவர், பிரளய காலத்தில் ஸ்ரீஹரியின் உதரத்தில் இருக்கும்போதுகூட, ஸ்ரீஹரியின் பிரத்யட்சம் உள்ளவர் என்பதில் சந்தேகம் இல்லை. ஆனால், ஸ்ரீஹரியின் அனைத்து வியாபாரங்களின் ஞானம் இருக்கிறது என்றோ (இவ்வாறான

பரிபூர்ண ஞானம் என்றும் இருப்பதில்லை என்பது திண்ணம்), ஸ்ரீஹரி, ரமாதேவியுடன் க்ரீடிப்பதை பார்க்கிறார் என்றோ அறியக்கூடாது.

ரமா நாராயணரின் ஏகாந்தத்திற்கு தடை ஏற்படுவதான அ-ப்ரிய செயல், வாயுதேவரால் என்றும் நடப்பதில்லை. தனக்கு பிடிக்காததை ஸ்ரீஹரி, வாயுதேவர் மூலமாக என்றும் செய்விப்பதில்லை. 7ம் பதத்தின் குறிப்பில், 'நித்தெகொளிஸித' என்று சொல்லியிருப்பதன் அர்த்தத்தை இங்கு பார்க்க வேண்டும்.

** பிரளய காலத்தில் ஸ்ரீஹரியின் உதரத்தில் இருக்கும் ஜீவர்களில்; அமுக்தர், (அதாவது ஸ்ருஜ்யர் - அடுத்த கல்பத்தில் ஸ்ருஷ்டிக்கு வரத்தக்க ஜீவர்கள்) நித்ர அவஸ்தையில் இருக்கின்றனர். அவர்களுக்கு ஸ்வரூப தேகத்தின் மேல் லிங்கதேகத்தின் கவசம் மட்டும் இருக்கிறது. வாயுதேவரே இவர்களில் இருந்து, ஷ்வாஸ, உஷ்வாஸங்களை நடத்துகிறார். லிங்கபங்கத்தை அடைந்து, ஸ்ரீஹரியின் உதர பிரவேசம் செய்தவர்கள், தியானத்தில் ஈடுபட்டிருக்கின்றனர். அவர்களில் வாயுதேவரின் செயல்கள் இல்லை. ஸ்வரூப, லிங்க, அனிருத்த மற்றும் ஸ்தூலங்கள் என்று அனைத்து ஜீவர்களுக்கும் ஸ்திதி காலத்தில் (சம்சார நிலையில்) இருக்கும் நான்கு தேகங்களில் இருந்து, ஷ்வாஸாதி செயல்களை நடத்துபவர் வாயுதேவரே ஆனாலும், லிங்கதேகம் களைந்து போனபிறகு, ஸ்வரூப தேகம் மட்டும் இருக்கும்போது அதற்குள் அவரின் செயல்கள் இல்லை.

'வாயுர்ஹி ஸர்வஜீவானாமபிமானீ நியாமக:' என்றால், வாயுதேவர், வாயுதேவர் அனைத்து ஜீவர்களின் அபிமானியும் நியாமகனும் ஆகியிருக்கிறான் என்னும் வாக்கியத்தில், சர்வ ஜீவர் என்பதில், முக்த ஜீவர்கள் வருவதில்லை. 'முக்தா ஏவ ஹி முக்தானாம் விசிஷ்டா வினியாமகா:' என்றதில், முக்தர்களுக்கு ஸ்வோத்தம முக்தரே நியாமகர் என்று சொல்லப்பட்டிருக்கிறது. வாயுதேவர் அமுக்த வர்க்கத்தில் இருப்பதால், அமுக்தருக்கு வினியாமகர் என்று புரிகிறது.

## 2. லய ஸந்தி

---

இந்த வாக்கியத்தின் வியாக்யானம் இவ்வாறு உள்ளது. ஸகலலிங்கதேஹானாமபி அஹங்கார பஞ்சபூதை காதஷேந்த்ரியைருபசயஸ்ய உக்தத்வேன யுக்தம் வாயோ: அசேஷஸ்தூலஸூக்ஷ்ம ஷரீரவஜ்ஜே வாபிமானித்வம்'. இதன் அர்த்தம் - அனைவரின் லிங்கதேகங்களும், அஹங்கார, பஞ்ச பூதங்கள், ஏகாதஷ இந்திரியங்கள் என்னும் 16 தத்வாம்சங்களால் (ஷோடஷ கலெகளால்) ஆகியவை. ஸ்ருஷ்டி காலத்தில் இந்த லிங்க தேகங்களுக்கு புஷ்டி (வலிமை) வருகிறது என்று சொல்லப்பட்டிருப்பதால், (இந்த ஷோடஷ தத்வங்களின் அபிமானிகளுக்கும் நியாமகரான) வாயுதேவரே, ஸ்தூல ஸூக்ஷ்ம சரீரங்கள் உள்ள அனைவருக்கும் நியாமகர் என்பது சரியே ஆகும்.

அமுக்தரான அனைத்து (த்ரிவித வர்க்க) ஜீவர்களின், ஸ்வரூப, லிங்க, அனிருத்த மற்றும் ஸ்தூல தேகங்களில் இருந்து ஷ்வாஸ நியாமகர் ஆகி, ஹம்ஸ மந்த்ர ஜபத்தை நிரந்தரமாக செய்யும் அற்புத மகிமையானது, முக்ய பிராணனைத் தவிர வேறு யாருக்கும் இல்லை. ஆகையால், பிரளய காலத்தில்கூட அமுக்த ஜீவர்களில், அப்போது அவர்களுக்கு இருக்கும் தேகங்களில் இருந்து ஷ்வாஸோச்வாஸங்களை நடத்துகிறான் என்பது சரியே ஆகும். ஹரிகதாம்ருதசாரத்தில் ஸ்ரீஜகன்னாத தாசார்யர், இந்த பிரமேயத்தை இவ்வாறு நிரூபிக்கிறார்.

ஜீவ லிங்க3னிருத்த ஸ்தூ2ல க
ளேவரக3ளலி விஷ்வ து1ரக3
க்3ரீவ மூலேஷாச்யுத த்ரய ஹம்ஸ மூர்த்திக3ள |
ஈ வித3 சதுஸ்தா2னத3லி ஷா
ந்தீவரன ஈரெரடு3 ரூபவ
பா4விஸுவுதே3கோன விம்ஷதி மூர்த்தி சர்வத்ர ||3

ஈ ஷரீர சதுஷ்டயக3ளொளு
கோ1ஷதா4து1க3 பா4ரதிப ப்ரா
ணேஷ னிப்பத்தொந்து3 ஸாவிரதா3ரு நூரெனிப |
ஷ்வாஸரூபக ஹம்ஸ பா4ஸ்கர
பே4ஷரொளகி3த்த3வர கைபிடி3

தீ ஸரோஜ ப4வாண்ட3தொ3ளு ஸர்வத்ர தும்பி3ஹனு ||5

சம்சார ஜீவிகளுக்கு - ஸ்வரூப, லிங்க, அனிருத்த, ஸ்தூலங்கள் என்று நான்கு தேகங்கள் உள்ளன. இவற்றில் முறையே, விஷ்வ, ஹயக்ரீவ, நாராயண (மூலேஷ) இந்த மூன்றும், மற்றும், அச்யுத, அனந்த, கோவிந்த என்னும் மூன்றும் மற்றும் ஹம்ஸ என்னும் ஸ்ரீஹரியின் ரூபங்கள் இருக்கின்றன. இவை ஏழு ரூபங்கள் மற்றும் இரண்டிரண்டு ரூபங்கள் உள்ள அனிருத்தனின் 4 ரூபங்கள் (அனிருத்த நாராயண, அனிருத்த வாசுதேவ, அனிருத்த சங்கர்ஷண, அனிருத்த பிரத்யும்ன); மற்றும் விஷ்வ, தைஜஸ, ப்ராக்ஞ, துரிய, ஆத்ம, அந்தராத்ம, ஞானாத்ம, பரமாத்மா என்னும் 8 ரூபங்கள். என மொத்தம் 19 ரூபங்களை சிந்திக்க வேண்டும். இந்த ஜீவஸ்வரூபாதி நான்கு தேகங்களிலும் ஷ்வாஸ ரூபத்தினால் ஹம்ஸ ஜபம் செய்யும் முக்யபிராணர், அன்னமயாதி கோஷங்களிலும், த்வக் முதலான சப்த தாதுகளிலும் இருக்கிறார். இந்த நான்கு தேகங்களில் தனித்தனியாக, ஒரு நாளுக்கு 21,600 ஹம்ஸ மந்திர ஜபங்களை செய்கிறார். மூக்கின் வலது துளையில் சூரியனும், இடது துளையில் சந்திரனும் இருக்கிறார்கள். இவர்களுக்குள் முக்யபிராணனும் இருந்து ஹம்ஸ மந்திரத்தை ஜபிக்கிறார். முக்யபிராணரில்கூட ஹம்ஸ நாமக பரமாத்மனே இருந்து அவர் மூலமாக இந்த மந்திரத்தை ஜெபிக்க வைக்கிறார்.

'ஹம்ஸரூபௌ ச தௌ தேவௌ ஷ்வாஸோச்வாஸ ப்ரவர்த்தகௌ' (ஐதரேய பாஷ்யம்). இவ்விதமான மகிமைகளைக் கொண்ட முக்ய பிராணர் பிரம்மாண்டத்தில் அனைத்து இடங்களிலும் நிரம்பியிருக்கிறார்.

**ஸ்லோக 8**

**லயஸ்ய ஹ்யப்பமே பா4கே3 ஸ்ருஷ்டிகால உதா3ஹ்ருதஃ |**
**தத்ரைவ வேத3ஸஞ்சாரோ யோऽன்யதா2 விஷ்ணுபு3த்3தி3கா3 ||**

லயஸ்ய - பிரளய காலத்தின். அஷ்டமே பாகே - கடைசியான எட்டாம் பாகத்தில். ஸ்ருஷ்டிகாலः - ஸ்ருஷ்டி காலம். உதாஹ்ருதः - (என்று) சொல்லப்படுகிறது. ஹி - என்று வேதம் சொல்கிறது. தத்ரைவ - அந்த காலத்திலேயே. வேதஸஞ்சாரः -

வேதத்தின் இருப்பு. அன்யதா – அந்த எட்டாம் பாகத்தைத் தவிர மற்ற பிரளய காலத்தில். ய: – எந்த (அந்த வேதம்). விஷ்ணு புத்திகா – விஷ்ணுவின் புத்தியில் இருக்கிறது.

ஸ்ரீலட்சுமிதேவியே வேதாபிமானி. வேத ப்ரவ்ருத்தி என்றால், ஸ்ரீலட்சுமிதேவி அப்போது ஸ்ரீஹரியை வணங்கி, ஸ்ருஷ்டியில் ஈடுபடு என்று வேண்டுகிறாள் என்று அர்த்தம்.

பத 11

**பி³ரம்மன நூறுவருஷ ப்ரளயமான**
**தன்மத்³யெம்ப³த்ஹேள்வரெ எம்ப³**
**ஸமரெ ஹோத³ரெ ஆத³ரிம் துதி³யல்லி**
**நம்ம து³ர்க³ம்மகெ³ச்சரிகெ ||**

பிரம்மன – சதுர்முக பிரம்மனின். நூருவருஷ – ஒரு நூறு ஆண்டு காலம். ப்ரளயமான – பிரளய காலத்தின் காலம் ஆகும். தன்மத்யே – அந்த காலத்தில். எம்பத்தரேளெய – 87ம். ஸமரெ – அரை ஆண்டிற்கு சமமான. அதாவது, 87-1/2 ஆண்டுகாலம். ஹொஹரெ – கழிந்தபின். அதரிம் துதியல்லி – அதன் கடைசியில் (அவ்வளவு ஆண்டுகள் முடிந்தபிறகு). நம்ம தர்கம்மகெ – நம் (ஜகன்மாதையான) துர்கா ரூபளான லட்சுமிதேவிக்கு. எச்சரிகெ – விழிப்பு (விழிப்பு வந்ததைப் போல எழுகிறாள்).

** இந்த சந்தியில் பத 1, நுடி 6ன் குறிப்பினை பார்க்கவும். பிரம்மதேவனின் ஆயுட்காலமான 100 ஆண்டு காலம் 'பர' என்று அழைக்கப்படுகிறது. அவ்வளவே காலம் (அவனின் 100 ஆண்டு காலம்) பிரளய காலம் ஆகும். இதன் 1/8 பாகம், அதாவது 12-1/2 ஆண்டுகள். 87-1/2 ஆண்டுகள் கழிந்தபிறகு, ஸ்ருஷ்டி காலத்தின் துவக்கம். அப்போது துர்கா ரூபளான லட்சுமிதேவி, ஸ்ரீஹரியை வணங்கி ஸ்ருஷ்டியில் ஈடுபடுவாயாக – என்று பிரார்த்திக்கிறாள். அப்போது ஸ்ரீஹரி, யோக நித்திரையிலிருந்து விழிப்பு வந்ததைப் போல எழுந்து, ஸ்ருஷ்டி காரியத்தில் ஈடுபடுகிறான். அதாவது, ஜகத் ஸ்ருஷ்டி ரூப க்ரியைகளை வெளிப்படுத்தும் சங்கல்பத்தை வெளிப்படுத்துகிறான்.

**ஸ்லோக 9-10-11**

**ஸ்வஸ்ருஷ்டமித3மாபீய ஷயானம் ஸஹ ஷக்திபி4: |**
**தத3ந்தே போத4யாம் சக்ரு: தல்லிங்கை3: ஷ்ருத3ய: பரம் ||9**

**ஷ்ருதய ஊசு: |**
**ஜய ஜய ஜஹ்யஜாமஜித தோ3ஷக்3ருஹீதகு3ணாம்**
**த்வமபி யதா3த்மனா ஸமவருத்3த4ஸமஸ்த ப4க3: |**
**ஆஜ ஜக3தோ3கஸாமகி2ல ஷக்த்யவபோ3த4க தே**
**க்வசித3 ஜயாऽऽத்மனாऽனுசர தோऽனுசரேன்னிக3ம: ||10**

**ஸ்வகு3ணாச்சாதி3காத்வேகா பரமாச்சாதி3காபரா |**
**ஸ்வகு3ணாச்சாதி3காம் ஹத்வா பரமாச்சாதி3காம் பர: |**
**வ்யாக4ட்ய மோக்ஷபத3வீம் த3தா3தி புருஷோத்தம: ||11**

ஸ்வஸம்ஸ்ருஷ்டம் – தன்னிடமிருந்து படைக்கப்பட்ட. இதம் – இந்த உலகத்தை. ஆபீய – (பிரம்ம பிரளயத்தில்) சம்ஹரித்து (தன் உதரத்தில் வைத்துக் கொண்டு). ஸஹ ஷக்திபி: – ஷக்தி ஷப்த வாச்யளான ஸ்ரீபூ துர்கா ரூபங்களுடன். ஷயானம் – படுத்திருக்கும். பரம் – ஸர்வோத்தமனான ஸ்ரீஹரியை. தந்தந்தே – பிரளய காலத்தின் கடைசி பாகத்தில். ஸ்ருதய: – வேதங்கள் (வேதாபிமானி துர்காதேவி). (விடியற்காலையில் அரசனை பாடி எழுப்புபவர்களைப் போல), தல்லிங்கை: – வேதோக்த ஸ்ரீஹரி குணங்களின் ஸ்தோத்திரத்தினால். போதயாம் சக்ரு: – வணங்கி எழுப்புகின்றன. ||9

ஸ்ருதிகள் சொல்கின்றன. (துர்காதேவி துதிக்கிறாள்).

ஜய ஜய – ஹே ஹரே. உன் சிறப்பினை வெளிப்படுத்து. அஜித – ஹே அஜிதனே, தோஷக்ருஹீதகுணாம் – பிறப்பு, இறப்பு, அஞ்ஞானாதி தோஷங்களால் ஸுஜீவர்களின் ஸ்வரூபத்தை மூடியிருக்கும். அஜாம் – அனாதி ப்ரக்ருதியை (ஸ்வகுணாச்சாதிகாவை மற்றும் பரமாச்சாதிகாவை). ஜஹி – நாசம் செய் (முறையே, கொல் மற்றும் அபஹரணம் செய்). த்வம் – நீ. ஆத்மனா – தானே. ஸமவருத்த ஸமஸ்த பக: – (மூடப்படாத, நன்றாக காப்பாற்றி உன்னில் வைத்துக்

கொண்டிருக்கும்) பூர்ண ஐஸ்வர்யாதி குணங்கள் கொண்டவன். அஸி - ஆகியிருக்கிறாய். அஜ - ஹே விஷ்ணோ. ஜகதோகஸாம் - ஜகதாஸ்ரய பூதனான ஸ்ரீ, பிரம்மாதிகளுக்கு. அகிலஷக்த்ய வபோதக - அவரின் (ஸ்ருஷ்ட்யாதிகளை நிர்வகிக்கும்) சமஸ்த ஷக்தியை அவர்களுக்குக் கொடுக்கும் பிரபுவே. நிகம: - (முக்யவ்ருத்தியினால் உன்னையே புகழும்) வேதங்கள். க்வசித் - சில சமயம் (ஸ்ருஷ்டிக்குப் பிறகு, ஸ்திதி காலத்தில்). அஜயா - ப்ரக்ருதியினால். மற்றும் ஆத்மனா - ஜீவனால். அனுசரத: - சஞ்சரிக்கும் (ப்ரக்ருதி புருஷர்களுடன் நீ சஞ்சரிக்கும் காலத்தில்). தே - உன்னை (உன் சித்தத்தை) அனுசரேத் - அனுசரிக்கிறது.

[வேதம் ஸ்திதி காலத்தில் விதி நிஷேத ரூபத்தினால்கூட சஞ்சரிக்கிறது. ஆனால், பிரளய காலத்தில் இப்படியான சஞ்சரித்தலுக்கு விஷயமே இல்லாததால் - அதாவது, விதி நிஷேதங்களை பின்பற்ற வேண்டிய ஜீவர்கள் க்ரியா-ஷூன்யராக, நித்ராவஸ்தையை அடைந்து, உன் உதரத்தில் இருப்பதால், வேதம் வெறும் உன் ஸ்துதி ரூபமே ஆகியிருக்கிறது. வெறும் முக்ய பிரவ்ருத்தியினால் உன் ப்ரதிபாதகமாக இருக்கிறது] ||10

ஸ்வகுணாச்சாதிகா து (ப்ரக்ருதி என்னும் ஷப்தத்தினால் அழைக்கப்படும்) ஸ்வகுணாச்சாதிகா என்பது, ஏகா - ஒரு. பரமாச்சாதிகா என்பது. அபரா - இன்னொன்று. (இவ்வாறு இரு துஷ்ட ப்ரக்ருதிகள் ப்ரதி ஜீவர்களிலும் இருக்கின்றன). ஸ்வகுணாச்சாத்காவை. ஹத்வா - சம்ஹரித்து. பரமாச்சாதிகாம் - பரமாச்சாதிகாவை. வ்யாகட்ய - தூர விலக்கி. புருஷோத்தம: - சர்வோத்தமனான ஸ்ரீஹரி. மோக்ஷபதவீம் - முக்தி பதவியை (மோட்சத்தை - ஸ்வரூப ஆவிர்பாகத்தை). ததாதி - கொடுக்கிறான் (அடைய வைக்கிறான்).

** அடுத்த 12ம் பதத்தின் விசேஷ குறிப்பில், இந்த ஸ்லோகங்களில் அடங்கியிருக்கும் பிரமேயங்களின் விவரணையை கொடுத்திருக்கிறோம்.

பத 12 ராகம்: ஷுத்தவராளி. தாளம்: ரூபக

**எந்தெ3ந்து3 நாஷவில்லத3 ப்ரக்ருதி தானெ நி**
**ன்னந்த3வ காணலாகி3**
**இந்த்வர்க்க3 கோடிக3ள ப்ரபெ4யு நின்ன தேஜோ**
**வ்ருந்த3க்கெ இன்னொப்3ப4ரித3னே ||1**

எந்தெந்து நாஷவில்லத - நித்யநிர்விகாரளான. ப்ரக்ருதியு - ஸ்ரீலட்சுமிதேவி (துர்காரூபள்). தானெ - தானே (ஸ்வயம்). நின்னந்தவ - உன்னை (யோக நித்ரையில் இருக்கும் உன்னை). காணலாகி - பார்ப்பதற்காக. இந்த்வர்க்ககோடிகள ப்ரபெயு - அனந்த சந்த்ர சூர்யர்களைப் போல இருக்கும் ஒளி உள்ளவனாக இருக்கிறாய். நின்ன தேஜோவ்ருந்தக்கெ - உன் ஒளிக்கூட்டத்திற்கு. இன்னொப்ப - வேறொருவன். அரிதனே - அதிகமே (பூர்ண பிரகாஷனாகி கண்டாள் என்பது சிந்தனை).

ஸூர்யகோடி ப்ரதீகாஷம் சந்திரகோடி ஸுஷீதலம் -- ஆகிய பிரமாண வாக்கியங்கள், ஸ்ரீஹரி, எப்போதும் சூர்யகோடி சமபிரபனும் சந்திர கோடிகளுக்கு சமமான குளிர்ச்சி ஒளியைக் கொண்டிருப்பவனும் ஆகியிருக்கிறான் என்று சொல்கிறது. லௌகிகமாக பரஸ்பர எதிர்மறைகள் என்று அறியப்படும் அனைத்து தர்மங்களும் ஒரே காலத்தில் ஸ்ரீஹரியில் இருக்கின்றன. ஸ்ரீஹரியின் இந்த அசிந்த்ய மகிமையை, ஜகன்னாத தாசார்யர் வர்ணித்தவாறு:

ஷரணு ஷரணர தேவ ஷரணு ஸுரவரமான்ய
ஷரணு ஷஷிகோடி லாவண்ய | லாவண்யமூருதியெ
ஷரணெம்பெ ஸ்வாமி கருணிஸோ

என்று சொல்கிறார்.
**இவள கொல்லபே3ட3 ஜீவர கங்க3ளிம்**
**விவரங்க3ளித3 தொலகி3ஸுத**
**அவளல்லதி3ன்னு ஜீவர கண்ண நின்ன முச்சு**
**வவர்யாரு மூர்ஜக3தொ3ளகெ3 ||2**

இவள - இந்த ப்ரக்ருதியை (பரமாச்சாதிகாவை). கொல்லபேட - கொல்லாதே. ஜீவர கங்களிம் - ஜீவர்களின் கண்களின் முன்னால்.

விவரங்கள - ஆச்சாதனைகளை (திரைகளை). இத தொலகிஸுத - தூர விலக்கி பரிகரிப்பாயாக. அவளல்லதெ - இந்த துஷ்ட ப்ரக்ருதி (பரமாச்சாதிகா இல்லாமல்). ஜீவர கண்ண - (ஸுஜீவரின்) முக்தி யோக்யரின் கண்களை. நின்ன முச்சுவரு - உன்னை தெரியாதவாறு மூடுபவர்கள். மூர்ஜகதொளகெ - உலகில். இன்னு யாரு - வேறு யார் இருக்கிறார்கள்? (யாரும் இல்லை).

**ஹீன ஜீவர துச்சவஞானாதி$^{3}$ கு$^{3}$ணக$^{3}$ள**
**நானெத்தி ப$^{3}$ந்தி$^{4}$ஸபே$^{3}$கோ**
**ஈ நீச கர்மக்கெ$^{3}$ நீசதெ ஸாகெந்து$^{3}$**
**தானெ ஜக$^{3}$த்ரூபளாகி$^{3}$ஹளோ ||3**

ஹீனஜீவர - தமோயோக்ய ஜீவர்களை. துச்சவக்ஞானாதி - ஹீனவாத அஞ்ஞானாதி. குணகளனு அனு எத்தி - துர்குணகளங்களை அனுசரித்து வெளிப்படுத்தி. பந்திஸபேகோ - (அவர்களை) தமஸ்ஸிற்கு அனுப்ப வேண்டும். அல்லது, ஹீனஜீவர - அல்பயோக்யதையின் (அஸ்வதந்த்ர) ஸுஜீவர்களின். துச்சவக்ஞானாதி குணகளனு - துச்சமான (அவர்களின் ஸ்வரூப குணங்களின் ஞானம் ஆகுமாறு மூடி தடுத்திருக்கும்) அவித்யா காம கர்மாதி தோஷங்களை (துர்குணங்களை), அதாவது, இவற்றின் அபிமானியான ஸ்வகுணாச்சாதிகா என்னும் துஷ்ட ப்ரக்ருதியை, எத்தி பந்திஸபேகோ - சம்ஹரித்து தமஸ்ஸிற்கு போட வேண்டும். ஈ நீச கர்மக்கெ - இத்தகைய நீச கர்மத்திற்கு (ஜீவர்களின் ஷுத்த ஸ்வரூபத்தை போர்த்தி அதன் ஞானம் ஆகாதவாறு, கட்டுப்படுத்தும் நீச கர்மத்திற்கு). நீசதெ ஸாகெந்து - (தானோ, அமுக்ய ப்ரக்ருதி அபிமானிகளான சரஸ்வதி முதலான தேவியோ போதாது, ஆனால்) தமோ யோக்ய சேதனமே போதும் என்று, தானே - ஸ்வயம் லட்சுமிதேவி. ஜகத்ரூபளாகிஹளோ - ஜகத்ரூபத்தினால் மாற்றம் அடைந்திருக்கும் ப்ரக்ருதி தத்வத்திற்கு மட்டும் அபிமானியாகியிருக்கிறாள்.

**நிரவதி$^{4}$க மஹிமெய நின்னாக்$^{3}$ஞெயிந்த$^{3}$லி**
**அரியதெ$^{3}$ச்சரிஸுவவள**
**ஹரி நின்ன மாயெயெ கொல்லபே$^{3}$ட$^{3}$ ஜீ**

**வர காமவ கொல்லு கொல்லு ||4**

நிரவதிகமஹிமெய - மிகச் சிறந்த மகிமை உள்ள. நின்னாக்ஞெயிந்தலி - உன் ஆணையினால். அரியதெ - (இந்த காலத்தில் உன் விருப்பம் எப்படி இருக்கும் என்பதை) அறியாமல். எச்சரிஸுவவள - (யோக நித்திரையினால்) விழித்திருக்கும் என் (பிரார்த்தனை இது). ஹரே - ஹே ஶ்ரீஹரியே. நின்ன மாயெயெ - (சுஜீவர்களுக்கு உன்னை மறைக்கும், பரமாச்சாதிகா என்னும் [உன் விருப்பத்திற்கேற்பவே] துஷ்ட ப்ரக்ருதியை. கொல்லபேட - கொல்லாதே. ஜீவர - அந்த ஜீவர்களின். காமவ - அனாதி காம கர்மாதிகளின் அபிமானியான ஸ்வகுணாச்சாதிகையை. கொல்லு கொல்லு - விட்டுவிடாமல் கொன்று தமஸ்ஸிற்கு அனுப்பு.

**ஜீவர க$^{3}$ங்க$^{3}$ளொளெரடு$^{3}$ மாயெக$^{3}$ளிஹவு**
**தே$^{3}$வ நீ மாயதூ$^{3}$ரனல்லெ**
**ஶ்ரீவல்லப$^{4}$ பூர்வஷக்தி ப்ரேரகனெந்து$^{3}$**
**பா$^{4}$மெ க$^{3}$ண்ட$^{3}$ன கொண்டா$^{3}$டி$^{3}$ஹளு ||5**

ஜீவர - ப்ரதிஜீவர்களின். கங்களொளு - பார்வையில் (பார்க்கும் - அறியும் ஷக்தியில்). எரடு மாயெகளு - (இரண்டு ப்ரக்ருதிகள்). இஹவு - (தம் ஸ்வரூபத்தையும், உன்னையும் காணாமல் சிறைப்பட்டு) இருக்கின்றன. தேவ - ஹே க்ரீடாதி குணங்களில் சிறந்தவனே. பிரபோ! நீ - நீ. மாயதூரனல்லெ - ப்ரக்ருதியினால் மூடப்படக்கூடியவனா? (எப்போதும் இல்லை - அந்த ப்ரக்ருதி ஜீவனை மூடி, ஜீவன் உன்னை தெரியாதவாறு செய்கிறது. இது பரமாச்சாதிகம். ஸ்வகுணாச்சாதிக என்று இன்னொரு ப்ரக்ருதி, ஜீவன் ஜீவஸ்வரூபத்தை தெரியாதவாறு மூடியிருக்கிறது. மேலும், இரு ப்ரக்ருதிகளும் ஜீவஞானத்தையே கட்டுப்படுத்துகிறது). ஶ்ரீவல்லப - நாராயணன். பூர்வஷக்தி ப்ரேரகனெந்து - அனாதி சர்வஷக்திகளின் முக்ய பிரேரகன் என்று. பாமெ - ஶ்ரீதுர்காதேவி. கண்டன - தன் கணவனை. கொண்டாடிதளு - துதித்தாள்.

**பாத$^{3}$வனொத்துத ஸகல வேத$^{3}$ங்க$^{3}$ளிந்த$^{3}$**
**ஹாதி$^{3}$க$^{3}$ளாலோசனதி$^{3}$**
**ஓது$^{3}$த்த பாடு$^{3}$த்த பொக$^{3}$ளுதிரலு கண்டு$^{3}$**

---

**மோதி3 ஹயவத3ன கண்ணெரெத3 ||6**

பாதவனு - ஸ்ரீஹரியின் சரணங்களை. ஒத்துத்த - ஒத்தியவாறு. ஸகல வேதகளிந்த - அனைத்து வேதங்களில். ஹாதிகள - துதிக்கும் வழிகளை (பிரகார விசேஷங்களை). ஆலோசனதி - ஆலோசனை செய்தவாறு. ஓதுத்த பாடுத்த - (வேதத்தில் சொல்லப்பட்ட மகிமைகளை) உச்சரித்தவாறு, பாடல்கள் பாடியவாறு, பொகளுதிரலு - துதித்துக் கொண்டிருக்க. கண்டு - அதனை அறிந்து. மோதிஹயவதன - ஆனந்த பூர்ணனான ஸ்ரீஹரி. கந்தெரெத - கண்களைத் திறந்தான் (விழித்துக் கொண்டவனைப் போல, கண்களைத் திறந்தான்).

**இந்து லக்ஷ்மீயொட3னெ ப்ரளயதி3 மலகி3 ஸ்ரீ**
**காந்தனெச்செத்தனெம்ப3ல்லி**
**ஸந்தோஷவனீவ எரட3னெய ஸந்தி4**
**ஸந்தரு மெச்சி முகி3யிது ||7**

இந்து - இவ்வாறு. லக்ஷ்மியொடனெ - லட்சுமியுடன், படுத்துத் தூங்கி, ஸ்ரீகாந்தனு - லட்சுமி வல்லபன். எச்சத்தனெம்பல்லி - விழித்துக் கொண்டான் என்று. ஸந்தோஷவனீவ - மகிழ்ச்சியைக் கொடுக்கும். எரடனெய ஸந்தி - இரண்டாம் சந்தி. ஸந்தரு மெச்சி - ஸஜ்ஜனர்கள் மெச்சுமாறு (ஞானிகளுக்கு சம்மதமாக இருக்கும் 2ம் ஸந்தி). முகியிது - முடிந்தது.

**ஸ்ரீஹயவத3னராயன த3யதி3ந்த3**
**வாதி3ராஜேந்தி3ர**
**விரசிஸித ஈ தி3வ்யகாவ்யதி3 லயவனொரெத3**
**ரம்யவாத3 த்3விதீய ஸந்தி4 பொஸகெ3 ||8**

ஸ்ரீஹயவதனராயன - ஸ்ரீஹயக்ரீவ ஸ்வாமி. தயதிந்த - கருணையுடன். வாதிராஜேந்திர ரசிஸித - வாதிராஜ என்னும் யதிஸ்ரேஷ்டர் இயற்றிய. ஈ திவ்யகாவ்யதி - ஸ்ரீஹரி மகிமைகளை நிரூபிக்கும் இந்த (சஜ்ஜனப்ரிய) காவிய கிரந்தத்தில். லயவனொரெத - பிரளய விஷயமான பிரமேயங்களை

வலியிறுத்தும். ரம்யவாத – அழகான. த்விதீய ஸந்தி – இரண்டாம் சந்தி. பொஸகெ – ஒளிர்ந்தது (முடிந்தது).

** சர்வஷப்த வாச்யனான ஸ்ரீஹரியை விட்டால், லட்சுமிதேவியே ப்ரக்ருதி ஷப்த முக்ய வாச்யள். ஸ்ரீஹரி, பரமமுக்ய வாச்யன். சரஸ்வதி, உமா, ஷசி முதலானவர்கள் ஆகியோரும் ப்ரக்ருதி ஷப்த வாச்யரே. லட்சுமிதேவிக்குப் பிறகு, அவளின் அதீனர்களாகி, ப்ரக்ருதி நியாமகரும் ஆகியிருக்கின்றனர். 'ப்ரக்ருதி' என்றே அழைக்கப்படும் இரு துஷ்ட ப்ரக்ருதிகளும் இருக்கின்றன. இந்த இரண்டும், அனைத்து ஜீவர்களிலும் இருந்தே இருக்கின்றன. இவற்றில் 'ஸ்வகுணாச்சாதிகா' என்று அழைக்கப்படுவது ஜீவஸ்வரூபத்தை மூடிக் கொண்டிருக்கிறது. 'பரமாச்சாதிகா' என்பது ஜீவர்களுக்கு பரமாத்ம ஞானப்ரதிபந்தகமாக இருக்கிறது. ஸ்ரீஹரி, முதலானதை நாசம் செய்து, இரண்டாவதை விலக்கி, ஜீவர்களை முக்தர்களாக ஆக்குகிறான். இந்த பிரமேயங்கள், அடுத்து வரும் இந்த பிரம்மகாண்ட புராண வாக்கியங்களில் விளக்கப்பட்டுள்ளது.

அஜா து ப்ரக்ருதி: ப்ரோக்தா ஸ்ரீ:பரா ப்ரக்ருதி: ஸ்ம்ருதா |
ததோsவரா து பிரம்மாணி பிரம்ம பத்னி வரானனா ||
உமாஷசீ முகாஸ்தஸ்யா ஹ்யவரா: ஸம்ப்ரகீர்த்திதா: |
ஏதாஸாம் ஹனனம் நைவ ப்ரார்த்தயாமி ஸதா ஹரே ||
...
பரமாச்சாதிகாம் துஷ்டாம் விபாட்ய ச மஹாவிபோ |
மோக்ஷம் தேஹி மஹாதேவ தத்பக்தானாம் மஹாப்ரபோ ||

ஜடப்ரக்ருதி அனாதிநித்யமானது. 'அஜா' என்று அழைக்கப்படுகிறது. இந்த ப்ரக்ருதிக்கு முக்ய நியாமகளான லட்சுமிதேவி, ப்ரக்ருதி ஷப்த முக்ய வாச்யள். பிரம்மபத்னியான சரஸ்வதியும், உமா, ஷசி முதலான தேவஸ்த்ரீயர்கள்கூட 'ப்ரக்ருதி' என்றே அழைக்கப்படுகின்றனர். 'அஜாம் ஜஹி' என்று பிரார்த்தித்த துர்கா தேவி, மற்ற யாரின் சம்ஹாரத்தையும் கேட்கவில்லை. 'ஹே ஹரியே. இவர்களின் சம்ஹாரத்தை பிரார்த்திப்பதில்லை. அனைத்து புருஷர்களிலும் 'ப்ரக்ருதி'

ஷப்தத்தினாலேயே அழைக்கப்படும், இரு துஷ்ட ப்ரக்ருதிகள் இருக்கின்றன.
இவர்களும் 'அஜா' என்னும் ஷப்த வாச்யரே. ஒன்றிற்கு நித்ய சம்சாரி சேதனம் அபிமானி. மற்றொன்றிற்கு தமோயோக்ய சேதனம் அபிமானி. இந்த இருவரும் துஷ்ட-அஜ என்று அழைக்கப்படுகின்றனர். முக்தி யோக்யரான ஜீவர்களுக்கு மட்டும் ஞானைஷ்வர்யாதி குணங்களே அவர்களின் ஸ்வரூபமாக இருக்கிறது. இந்த குணங்களை தமோயோக்ய சேதனத்தால் அபிமன்யமான ப்ரக்ருதி, போர்த்தி மூடுகிறது. இதுவே ஸ்வகுணாச்சாதிகா என்பதாகும். மஹாவிஷ்ணுவை ஜீவனால் மூடும் இன்னொரு ப்ரக்ருதி, நித்யஸம்ஸாரி சேதனனால் அபிமன்யமானமான, பரமாச்சாதிக என்னும் ப்ரக்ருதி ஆகும்.

இந்த இரு பிரக்ருதிகளும் மோக்ஷாதிகாரியான ஜீவனை பிஷாசிகளைப் போல பிடித்திருக்கின்றன. இவர்களின் ப்ரேரகர் (சக்திகளைக் கொடுப்பவர்). முன்பு கூறிய தேவியர்கள், நான், மற்றும் ஸர்வப்ரேரகனான ஸ்ரீஹரி. இந்த இரு துஷ்ட ப்ரக்ருதிகளில் ஸ்வகுணாச்சாதிகையை கொல்வாயாக - ஏனெனில், அது தமோ யோக்யம் (ஆகையால் ஹே கருடனே. அந்த ப்ரக்ருதி, நாஷ யோக்யமானது, அதன் அபிமானி தமோயோக்யன்). துஷ்ட பரமாச்சாதிகையை (நித்ய சம்சாரி அதன் அபிமானியானதால்) கிரஹணம் செய்திருக்கும் ஜீவனிடமிருந்து விலக்கி, சுஜீவர்களுக்கு முக்தியைக் கொடு, பிரபோ!! என்றாள் - துர்கா.

ந விஷ்ணும் சாதயத்யேஷா தக்ஞானம் சாதயேத் பரம் |
ஜீவஸ்யைவ ந தத்ராபி பிரம்மாதேரஸ்தி ஸா க்வசித் |
ஸர்வாவரே தே ப்ரக்ருதீ ஸததம் துக்கதேடபி ச |
பிஷாசாவத்ஸமுத்திஷ்டே புருஷஸ்யாதிகாரிண: ||
(பாகவத தாத்பர்ய நிர்ணய).

இப்படியான துஷ்ட ப்ர்கக்ருதி, விஷ்ணுவிற்கு ப்ரதிபந்தகங்கள் அல்ல. விஷ்ணு விஷயக ஞானத்தை, ஜீவர்களுக்கு உண்டாகுமாறு, ஜீவர்களை கட்டுப்படுத்துகின்றன - பரமாச்சாதிகா;

அதிலும் பிரம்மாதி உத்தம ஜீவர்களை அல்ல. இந்த இரண்டும் ப்ரக்ருதி பத வாச்யங்களான வஸ்துகளில் மிகவும் குறைந்ததானவை. எப்போதும் துக்கம் கொண்டவை. பிசாசிகளைப் போல மோக்ஷாதிகாரி ஜீவனில் இருக்கின்றன.

***

## || ஸ்ரீஹயாஸ்யாய நம: ||
## || ஸ்ரீவாதிராஜ குருப்யோ நம: ||

## * தத்வஸார *

# 3. ஸ்ருஷ்டி ஸந்தி

பத 1
**இது புண்யகதெ[2] லோகக்கிது[3] முகுதிய பத[2] |**
**இத[3] கேளுவவனெ க்ருதார்த்த[2] ||பல்லவி**

அர்த்தம்: முந்தைய சந்திகளில் பார்க்கவும்.

ஸ்லோக 1
**ஆஸீதே[3]கோ ஹ வை சாத்ர விஷ்ணுர் நாராயணாஹ்வய: |**
**ந பி[3]ரம்மா ந ச ருத்ரஸ்ச ந தே[3]வா ந மஹர்ஷய: ||**

அத்ர – பிரளய காலத்தில். விஷ்ணு: விஷ்ணு; நாராயணாஹ்வய: – நாராயண என்னும் நாமம் உள்ளவனாக. (மூலரூபத்தினால்). ஏக: – ஒருவனே. ஆஸீத் – இருந்தான். ஹ வை – இது ஸ்ருதியில் சொல்லப்பட்டதாகும். பிரம்மா – பிரம்மதேவன். ந – இருந்திருக்கவில்லை. ருத்ரஷ்ச – ருத்ரனும்கூட. ந ச – இருந்திருக்கவில்லை. தேவா: – தேவதைகள் (யாரும்). ந – இருந்திருக்கவில்லை. மஹர்ஷய: – மகரிஷிகளும் ந – இருந்திருக்கவில்லை.

பத 1
**ஒப்ப[3] நாராயணனு லயத[3]ல்லிஹனு க[3]ட[3]**
**அப்[3]ஜஸம்ப[4]வனாக[3] எல்லிஹனோ**
**அப்[3]ப[3]ரத[3] ருத்[3]ர மத்திர்த[3] தே[3]வர்க[3]ளு**
**ஒப்[3]ப[3] ரிஷிக[3]ளு எல்லிஹரோ ||1**

**ஏகோ நாராயண ஆஸீதெ3ம்ப3 ஸ்ருதி**
**ஸ்ரீகிருஷ்ணனொப்3ப3னெ ப்ரளயத3லி**
**ஆ காலதி ந பி3ரம்மா ந ச ஷங்கர எந்து3**
**முக்2யார்த்த2வ நிர்ணைஸே ||2**

லயதல்லி – பிரளய காலத்தில். ஒப்ப நாராயணனு – நாராயணன் ஒருவனே. இஹனு கட – இருக்கிறான் என்றே வேதம் சொல்கிறதே தவிர; ஆக – அந்த காலத்தில். அப்ஜஸம்பவனு – பிரம்மன். எல்லிஹனோ – எங்கிருக்கிறான்?. அப்ஜரத ருத்ர – உக்ரனான ருத்ரன். மத்திர்த்த – மற்ற (ஸ்திதி காலத்தில் இருப்பவர்களான). தேவர்களு – தேவதைகள். ஒப்ப ரிஷிகளு – ரிஷிகளில் யாரோ ஒருவராவது. எல்லிஹரோ – எங்கு இருந்தனர்? ஏகோ நாராயண ஆஸீத் – 'ஏகோ நாராயண ஆஸீத்' (நாராயணன் ஒருவனே இருந்தான்) என்னும், ஸ்ருதி – வேத வாக்கியம். ஸ்ரீகிருஷ்ணனொப்ப – ஸ்ரீஹரி ஒருவனே. ப்ரளயதல்லி – பிரளய காலத்தில். (இருக்கிறான் என்றும் மற்றவர்கள் யாரும் இருப்பதில்லை என்றும்) சொல்கிறது. ஆ காலதி – அப்போது, ந பிரம்மா ந ச ஷங்கர: – பிரம்மனும் இல்லை; சங்கரனும் இல்லை. எந்து – என்று சொல்லி, முக்யார்த்தவ – முக்ய பிரமேயத்தை. நிர்ணயிஸே – நிச்சயித்து சொல்கையில் (தவறாக புரிந்து கொள்வதற்கு எப்படி முடியும்?).

'ஏகோ நாராயண ஆஸீத் ந பிரம்மா ந ச ஷங்கர:', 'வாஸுதேவோ வா இதமக்ர ஆஸீன்ன பிரம்மா ந ச ஷங்கர:' என்னும் ஸ்ருதிகள், நாராயணனைத் தவிர வேறு யாரும் இருந்திருக்கவில்லை என்று சொல்கிறது. மற்ற அனைத்தும் ஸ்வதந்த்ரனான நாராயணனின் அதீனத்தில், நிச்சயிக்கப்பட்ட அவ்யக்தத்தில் இருந்தது என்று அர்த்தம். சர்வசம்ஹாரகனான நாராயணன், மற்ற சர்வ வஸ்துகளின் ம்ருத்யு ஆகிறான். அந்த ம்ருத்யுவினால் விழுங்கப்பட்ட அனைத்தும் அவனின் உதரத்தில் இருந்தன –
க்ரியாஷூன்யமாக இருந்தன. 'நைவ கிம் ச நாக்ர ஆஸீத் ம்ருத்யு நைவேதமாவ்ருத மாஸீத்' (பிருஹதாரண்ய) – பிரளய காலத்தில் (அக்ரே – ஸ்ருஷ்டிக்கு முன்னர்) வேறு எதுவும் இருந்திருக்கவில்லை. அனைத்தையும் சம்ஹரித்து விழுங்கிய

---

ம்ருத்யு நாமக ஸ்ரீஹரியினால் அனைத்தும் (நித்ய வஸ்துகள் அனைத்தும்) அம்ருதமாக இருந்தன' என்று வேதமே சொல்கிறது. மற்ற அர்த்தங்களை பாஷ்யத்தில் பார்க்கலாம்.

ஸர்வஸம்ஹாரகம் விஷ்ணும் தேவீம் ஜீவாம்ஸ்ததைவ ச |
காலம் த்ரிகுணஸாம்யம் ச கர்மாணி ப்ராணமிந்த்ரியம் |
சம்ஸ்காரம் சைவ வேதாம்ஸ்ச நர்தேகிஞ்சில்லயே த்வபூத் ||
மற்றும்,
ஆஸீதேகோ ஹரி:பூர்வம் தேவீ நாராயணி ததா |
அன்யதவ்யக்ததாம் யாதம் தத்வ்யக்தமகரோத்தரி: ||

அதாவது, 'ஸர்வசம்ஹாரகனான விஷ்ணு, ஸ்ரீதேவி, ஜீவர்கள், அவர்களின் கர்மங்கள், ஸாம்ய நிலையை அடைந்த த்ரிகுணாத்மக ப்ரக்ருதி, ஸூக்ஷ்மதம ரூபத்தில் இருக்கும் பிராண, இந்திரியங்கள், ஸம்ஸ்காரங்கள், வேதங்கள், இவற்றைத் தவிர வேறு எதுவும் இருந்திருக்கவில்லை' மற்றும் 'பிரளய காலத்தில் ஸ்ரீஹரி ஒருவனே இருந்தார் – லட்சுமிதேவியும் இருந்தாள் (நாராயணன் ஸ்த்ரிரூபத்தினால் அவளின் பிம்பனாக இருந்ததால், லட்சுமிதேவியும் நாராயணி); மற்ற அனைத்தும் அவ்யக்த பாவத்தை அடைந்தன – அதனை ஸ்ருஷ்டி காலம் வந்ததும், ஸ்ரீஹரி வெளிப்படுத்தினான்'. ப்ரளய காலத்தில், நித்யவஸ்துகள் அனைத்தும் அதிசூக்ஷ்ம ரூபத்தினால் நிஷ்க்ரியா அவஸ்தையில் பரமாத்மனின் அதீனமாக இருக்கிறதே தவிர, ஸ்வரூபத: நாசம் அடைவதில்லை. ஸ்ரீஹரியோ, நித்ய வஸ்துகளின் நித்யத்வ ரக்ஷணை, ஜீவர்களை தியானம், ஸுஷுப்திகள் என்னும் அவஸ்தைகளில் வைப்பது, ரமா உடன் ரமண, ஆகிய பிரளய கால க்ரியைகளை செய்தவாறு, நித்ய ஜாக்ரதனாக இருந்தாலும் யோக நித்ரையில் இருக்கிறான். துர்காதேவி ஸ்துதித்த பிறகு, விழிப்பு கொள்வதைப் போல எழுகிறான்.

'ஏவம் ஸ்துதே விஷ்ணுரஜ:புராண: உத்புத்தவன்னுத்திதோ நித்ய புத்த:' என்று விஷ்ணு ரஹஸ்ய சொல்கிறது. லட்சுமிதேவியும்கூட ஸ்ருஷ்ட்யாதி செயல்களால் நிவ்ருத்தளாகி, விஷ்ணுவின் வசத்தில் இருக்கிறாளே தவிர, ஸ்வதந்த்ரளாக

அல்ல. யாரும் இருந்திருக்கவில்லை என்பதின் அர்த்தத்தை இவ்வாறு சிந்திக்க வேண்டும். இவ்வாறு நிரூபித்ததைப் போல, நித்யவஸ்துகளுக்கும், லட்சுமிதேவிக்கும்கூட ஒவ்வொரு பிரகாரத்தின் ஸ்ருஷ்டி என்பது உண்டு. இந்த சந்தியில்கூட (அடுத்து வருகிற பத்யங்களில்) பற்பல ஸ்ருஷ்டி பிரகாரங்கள் விளக்கமாக சொல்லப்பட்டிருக்கிறது.

சேஷ்டாதிரூபேண ததா ந கிஞ்சிதாஸீத்வினா விஷ்ணுமத ஸ்ரீயம் ச' என்னும் (பிரம்மகாண்ட புராணம்) ரமா நாராயணர்களைத் தவிர வேறு எந்த வஸ்துவும் சேஷ்டாயுக்தமாக இல்லை என்று சொல்கிறது. ஸ்ருஷ்டிக்குப் பிறகு, பரமாத்மனின் அதீனமாகவே இருந்தாலும், பற்பல வித செயல்களை செய்கின்றன.

**ஸ்லோக 2**

**ஸம்ஹ்ருத்ய நிகி$^{2}$லம் ஷேதே நித்$^{3}$ரயா ப்ரளயாம்பு$^{3}$னி |**
**கதா$^{3}$பி ந விமுஜ்யேவ த்வயா விஷ்வபதி: ஸதா$^{3}$ ||**

நிகிலம் – அனைத்து உலகத்தையும். ஸம்ஹ்ருத்ய – சம்ஹரித்து (தனக்குள் இழுத்துக்கொண்டு) பிரளயாம்புனி – பிரளய ஜலத்தில். நித்ரயா – யோக நித்ரையிலிருந்து (தூக்கம் வந்தவனைப் போல). ஷேதே – படுத்திருக்கிறான். விஷ்வபதி: – உலக நாயகனான ஸ்ரீஹரி. ஸதா – த்ரிகாலங்களில். கதாபி – எந்த நொடியிலும். த்வயா – உன்னால் (ஹே லட்சுமியே). ந விமுஜ்யேத – வியோகத்தை அடைவதில்லை (உன்னை விட்டு இருப்பதில்லை).

** ரமா நாராயணர்கள் நித்ய அவியோகிகள் – சேர்ந்தே இருக்கின்றனர். பிரளய காலத்தில் இருவரும் யோக நித்ரையில் இருக்கின்றனர். ஞானஷூன்ய நித்ரையில் இல்லை. அப்போதும் (யோக நித்திரையிலும்) அனைத்து ஜீவர்களையும், வேத, கால ஆகிய அனைத்து வஸ்துகளின் ஞானத்தைக் கொண்டவர்களாகவே இருக்கின்றனர்.

## 3. ஸ்ருஷ்டி ஸந்தி

---

பத 2 ராகம்: --. தாளம் : ரூபக.

**பிரளயகாலதி$^{3}$ எல்ல ஜக$^{3}$வ லயவ மாடி$^{3}$**
**லலனெ லக்ஷ்மியொட$^{3}$னெ வடத$^{3}$**
**எலெயல்லி மலகி$^{3}$ ஸுக$^{2}$த$^{3}$லிப்பனெந்தெந்து$^{3}$**
**அளிவில்ல ப்ரக்ருதி புருஷரிகெ$^{3}$ ||1**

எல்ல ஜகவ - அனைத்து உலகினை. லயவ மாடி - லயம் செய்து. பிரளயகாலதி - பிரளய காலத்தில். லலனெ லக்ஷ்மியொடனெ - ப்ரியளான தன் மனைவியான லட்சுமிதேவியுடன். வடத எலெயல்லி - ஆல இலையின் மேல். மலகி ஸுகதலிப்பனு - சுகமாக படுத்திருக்கிறான். ப்ரக்ருதிபுருஷரிகெ - லட்சுமி நாராயணருக்கு. எந்து - எந்த காலத்திலும். அளவில்ல - ஸமர் இல்லை (இந்த தாம்பத்யத்தின் சிறப்பே வேறு).

**ஸமனாவெ ஸூத்ரவெம்ப$^{3}$ ப்ரக்ருதிஷப்த$^{3}$**
**ரமெகு$^{3}$ தத்புருஷ ஸ்ரீஹரிகு$^{3}$**
**ஸம தே$^{3}$ஷ காலக$^{3}$ளல்லி பேளிதாகி$^{3}$**
**பி$^{3}$ரமெ ஸல்ல வேதா$^{3}$ர்த்த$^{2}$த$^{3}$லி ||2**

ஸமனாவெ எம்ப ஸூத்ரவு - 'ஸமனா ச' என்னும் ஸூத்ரமே. ப்ரக்ருதிஷப்த - ப்ரக்ருதி என்று அழைக்கப்படும் (ப்ரக்ருதி ஷப்த வாச்யளான). ரமெகு - ரமாதேவிக்கும். தத்புருஷ ஸ்ரீஹரிக்கும் - அவளின் பதியான (புருஷ ஷப்த வாச்யனான) ஸ்ரீஹரிக்கும். தேஷகாலகள வ்யாப்தியல்லி (அனைத்து இடங்களிலும், அனைத்து காலங்களிலும் இருப்பது என்னும் விஷயத்தில்). ஸம - (இருவரும்) சமர் என்று. பேளிதாகி - சொல்லியிருப்பதால். வேதார்த்ததல்லி - வேதங்கள் சொல்லும் அர்த்தத்தில். பிரமெ ஸல்ல - மயக்கம் கொள்வது (வேறு அர்த்தம் இருக்கலாம் என்று நினைப்பது) சரியல்ல.

** ப்ரக்ருதி புருஷ ஷப்த வாச்யனான ரமா நாராயணரின் ஸ்வரூபத்தை நிரூபிக்கும் வேதவாக்கியங்களுக்கு, வேதார்த்தங்களை நிர்ணயிப்பதற்காகவே வெளிவந்த பிரம்மசூத்ரங்களைத் தவிர, பிற அர்த்தங்களை அறிவது சரியல்ல.

சாட்சாத் நாராயணனே ஸ்ரீ பாதராயண ரூபத்தினால், சூத்ரங்களை இயற்றி, நிர்ணயங்களை சொல்லியிருக்கிறார். ஸ்ருதியானது, ப்ரக்ருதி புருஷனை 'த்வெள வா வ ஸ்ருத்யனுப்ரக்ரமௌ ப்ரக்ருதிஸ்ச பரமஸ்ச த்வாவேதௌ நித்யமுக்தௌ நித்யௌ ச ஸர்வகதௌ சைதௌ ஞாத்வா விமுச்யதே' (பிரம்மஸ்ருதி) – என்றும் ஸம்சாரம் இல்லாதவர்கள் இருவரே – ப்ரக்ருதி மற்றும் புருஷ; இருவரும் நித்யமுக்தர்கள். நித்யர் மற்றும் ஸர்வகதர் (அனைத்து இடங்களிலும் இருப்பவர்கள்). இவ்வாறு இவர்களை அறிந்து முக்தன் ஆகிறான்' என்று சொல்கிறது. இவ்வாறு நித்யத்வ – நித்ய முக்தத்வ, ஸர்வகதத்வங்களால் ஸ்ரீலட்சுமிதேவி, ஸ்ரீஹரிக்கு ஸமம் ஆனாலும், அ–ஸமமும் ஆகியிருக்கிறாள்.

' ஸமாவேதௌ ப்ரக்ருதிஸ்ச அஸமாவேதௌ ப்ரக்ருதிஸ்ச பரமஸ்ச விலீனொ ஹி ப்ரக்ருதௌ ஸம்ஸாமேதி விலீன: பரமே ஹ்யம்ருதத்வமேதி' என்னும் ஸௌபர்ண ஸ்ருதி – இந்த ரமா நாராயணர் இருவரும் சமர் மற்றும் அவர்கள் அஸமரும் ஆவர். லட்சுமியில் லயம் அடைபவர்கள் – திரும்ப சம்சாரத்திற்கு வருகிறார்கள்.
பரமாத்மனில் லயம் அடைபவர்கள் முக்தர் ஆகின்றனர். பரமாத்மனில் லயம் அடைந்தவர்கள் என்றால், நித்யஸ்திதி ரூப பிரவேசத்தை அடைந்தவர்கள் என்று அர்த்தம். பிரளய காலத்தில் உதர பிரவேசம் செய்தவர்கள் அனைவரும் – என்று அர்த்தம் அல்ல. முக்தர் ஆகும் பிரம்மாதி ஜீவர்களுக்கு, லட்சுமிதேவி, த்வாரம் மட்டுமே. அவளில் லயம் இல்லை. இப்படியான ஸ்ருதி அர்த்தங்களை நிர்ணயித்து சொல்லும் சூத்திரம் இவ்வாறு உள்ளது.

'ஓம் ஸமனா சா ஸ்ம்ருத்யுபக்ரமாதம்ருதத்வம் ஜனுபோப்ய ஓம்'

ஸமனா – (தேஷகாலங்களில் ஸ்ரீஹரிக்கு ஸமமான வ்யாப்தி உள்ளவன் என்னும் காரணத்தினால்) 'ஸமனா' என்று அழைக்கப்படும் லட்சுமிதேவி, ச – பரமாத்மனில் லயம் அடைவதில்லை. அனுபோஷ்ய – ஸ்ரீஹரியை உபாசிக்காமல். அம்ருதத்வம் (அவளின் முக்தி), (ஸ்ரீலட்சுமிதேவி, நித்யமுக்தள். அவளின் முக்தி, உபாசனா பலரூபம் ஆனது இல்லை. ஆனாலும், நிரந்தரமான உபாஸனை உள்ளவள்). அஸ்ருத்யுபக்ரமாத் – எந்த

காலத்திலும் சம்சாரத்தின் பிரச்னைகளே இல்லாதவள் ஆகையால், ச – ஸ்ருதியும் அப்படியே (அவளுக்கு ஸ்ரீஹரியில் லய இல்லை என்றே) சொல்லியிருப்பதால், தேஷகாலங்களின் வியாப்திகளால் ஸ்ரீஹரிக்கு ஸமள் ஆனாலும், அனந்தகுணங்களால் ஸ்ரீஹரிக்கு ந்யூனள் (குறைவானவள்).

பிரம்மாத்யாஸ்த்வவமா: ப்ரோக்தா: ப்ரக்ருதிஸ்ச ஸமாஸமா -- (வராக புராணம்). பிரம்மாதி ஜீவர்கள் ஸ்ரீஹரிக்கு அனைத்து விதங்களால் அஸமர். லட்சுமிதேவியோ 'ஸமாஸமள்' (ஸமள்-அஸமள்) என்று சொல்லப்படுகிறது.

**பொ[3]ம்மன பிரளயத[3]லி ஸும்மனெமாகி[3]ர்த்த**
**நம்ம தே[3]வகெ[3] ம்ருத்யுவில்ல**
**ஜன்மவிவகெ[3] ஸல்ல ப்ராக[3]பா[4]வவில்ல**
**அம்மம்ம ம்ருண்மயவாகு[3]வுதே[3] ||3**

பொம்மன – பிரம்மனின். பிரளயதலி – பிரளயத்தில் (பிரம்ம தேவனும் லயம் அடைந்தபோது, மஹா பிரளயத்தில்). ஆனந்ததிந்த (அமைதியாக) யோக நித்திரையில் படுத்திருந்த, நம்ம தேவகெ – நம் ஸ்ரீஹரிக்கு. ம்ருத்யுவில்ல – மரணம் என்பது இல்லை (இல்லவேயில்லை). இவகெ – இத்தகைய ஸ்ரீஹரிக்கு. ஜன்மவு ஸல்ல – (மரணம் இல்லாததால்) ஜனனமும் கூட இல்லை. ப்ராகபாவவில்ல – (ஆகையாலேயே பிறக்கும் முன்னர் இருந்திருக்கவில்லை என்னும்) முதலாம் அபாவமும் இல்லை (அதனாலேயே, காலத: வியாப்தனு – என்றால், அனாத்யனந்த காலத்திலும் இருப்பவன்). அம்மம்ம – அப்பப்பா, ம்ருண்மயவாகுவுதே – இத்தகையவனின் தேகம் ப்ராக்ருதமாகுமா? (ஜடப் பொருளா? எப்போதும் அப்படி இல்லை).

நித்யோ நித்யானாம் சேதனஸ்சேதனானாம் – நித்ய வஸ்துகளில் பரம நித்யன். சேதனங்களில் பரம சேதனன். நித்ய வஸ்துகளின் நித்யத்வத்தை ரக்ஷிப்பவனும் ஸ்ரீஹரியே என்று, வேதம் சொல்கிறது.

அவஜானந்தி மாம் மூடா: மானுஷீம் தனுமாஸ்ரிதம் |
பரம் பாவமஜானந்தோ மம பூதமஹேஷ்வரம் ||

அதாவது, மூடா: - மூடர்கள் (தமோ யோக்யர்கள்). பூதமஹேஷ்வரம் - சர்வகால தேஷங்களில் இருக்கும். (பூத - எப்போதும் இருக்கும். மஹத் - சர்வதேசங்களிலும் இருக்கும். ஈஷ்வரம் - அசிந்த்ய ஷக்த்யாதி குணபூர்ணனான). பரம் - சர்வோத்க்ரிஷ்டனான. மம பாவம் - என் ஸ்வரூபத்தை. அஜானந்த: - அறியாதவர்களாக. மானுஷீம் தனும் - மனுஷ்ய தேகத்தை (ஜட தேகத்தை). ஆஸ்ரிதம் - அடைந்திருக்கிறான் என்று; அல்லது, (மனுஷ்ய தேகத்தைப் போல தெரியும் ரூபத்தை தன் இஷ்டப்படி வெளிப்படுத்தியிருக்கும் என்னை). அவஜானந்தி - அதமன் என்று அறிந்து (தவறாக தெரிந்து கொண்டு) நடக்கின்றனர்' என்றும்,

அவ்யக்தம் வ்யக்தி மாபன்னம் மன்யந்தே மானுபுத்தய: |
பரம் பாவமஜானந்தோ மமாவ்யய மனுத்தமம் ||

அதாவது, அபுத்தய: - புத்திஷூன்யர்கள் (மூடர்கள்). மம - என்னுடைய. அவ்யயம் - நிர்விகாரமான. அனுத்தமம் - சர்வோத்க்ருஷ்டமான. பரம் பாவம் - சச்சிதானந்தாத்மகமான திவ்யதேகத்தை. அஜானந்த: - அறியாமல். அவ்யக்தம் - என் விருப்பம் இல்லாமல் பிறருக்குத் தெரியாத (அவ்யக்தனான). மாம் - என்னை. வ்யக்திம் - ஸ்வாபாவிகமாகியே அனைவருக்கும் தெரியும் ப்ராக்ருத தேகத்தை. அபன்னம் - அடைந்திருப்பவனாக. மன்யந்தே - அறிகின்றனர்.என்றும், கீதையில் ஸ்ரீகிருஷ்ணனே தன் ரூபம் (தேகம்) அப்ராக்ருதமானது என்று சொல்லிக் கொண்டிருக்கிறான்.

** 'அபாவ' என்பது மூன்று விதங்கள் - ப்ராக் அபாவ, ப்ரத்வம்ஸ அபாவ மற்றும் அத்யந்த அபாவ. ஒரு பதார்த்தத்தின் உற்பத்திக்கு முன்னர், அது இருப்பதில்லை. அப்போது அதன் இல்லாமை, ப்ராக்-அபாவ எனப்படுகிறது. அந்த பதார்த்தத்தின் அழிவிற்குப் பிறகும் அது இல்லை. அப்போதைய அதன் அபாவம், ப்ரத்வம்ஸ-அபாவம் எங்கும் என்றும் இல்லாத பதார்த்தத்தின் இல்லாமை

அத்யந்த-அபாவ. குருமுகேன தத்வஸங்க்யான முதலான கிரந்தங்களின் அத்யயனத்தினால் மேலும் விசேஷ குறிப்புகளை அறியலாம்.

**ஜனன மரணக$^{3}$ள தொரெத$^{3}$ லயத$^{3}$லி ஹரி**
**வனிதெயர ஒட$^{3}$கூ$^{3}$டு$^{3}$வாக$^{3}$**
**மனெமனெ தை$^{3}$வங்க$^{3}$ளெல்லி போத$^{3}$வோ ஸர்வா**
**க்$^{3}$ரணி பொ$^{3}$ம்மனெ ஹெம்மக$^{3}$னோ ||4**

ஜனனமரணகள தொரெத - ஜனன மரண ரஹிதனான. ஹரி - ஸ்ரீஹரி. லயதலி - பிரளய காலத்தில். வனிதெயர - தன் பத்னியரான ஸ்ரீபூ துர்கையருடன் (லட்சுமிரூபங்களுடன்) ஒடகூடுவாக - அன்புடன் சேர்ந்து படுக்கும்போது. மனெமனெ தெய்வங்களு - தத்வாபிமானிகள் என்னும் பல தேவதைகள் (மனெ - வீடு. அதிஷ்டான - இருக்கும் இடம்). எல்லி போதவோ - எங்கு போயினரோ. (பிரளய காலத்தில் அவர்கள் யாரும் இருப்பதில்லையே!). ஸர்வாக்ரணி - இந்த தேவதா சமூகத்தின் நாயகனான. பொம்மனெ - பிரம்மனே. ஹெம்மகனோ - (ஸ்ரீஹரியின்). ஜ்யேஷ்டபுத்ரனு (ஸ்ருஷ்டி துவங்கிய உடன், முதலில் பிறந்தவன்).

பிரம்மா தேவானாம் ப்ரதம: ஸம்பபூவ - ஆகிய வேத வாக்கியங்கள், பிரம்மாண்டத்திற்குள் ஸ்ருஷ்டி ஆனவர்களில் (புற சூக்ஷ்ம ஸ்ருஷ்டி கிரமம் தாரதம்ய ப்ரயோஜகம் அல்ல) பிரம்மன் முதலானவன் என்று சொல்கிறது.

**அனேக த$^{3}$னுஜரட்டுளி ப$^{3}$ந்த$^{3}$ ப$^{3}$ந்தா$^{3}$க$^{3}$**
**அனுஸரிஸிவன எந்தெ$^{3}$ந்து$^{3}$**
**அனாயாஸதி$^{3}$ பா$^{3}$ளுவ தே$^{3}$வர ஈ**
**ஹரியனுக$^{3}$ யெம்ப$^{3}$ர விவேகிக$^{3}$ளு ||5**

அனேக தனுஜர - எப்போதும் அனேக எண்ணிக்கையில் இருக்கும் தானவர்களின் (அசுரர்களின்). அட்டுளு - தொந்தரவுகள். பந்தபந்தாக - (சஜ்ஜன லோகத்திற்கு) வந்தபோதெல்லாம்.

எந்தெந்து - அனைத்து காலங்களிலும் (தவறாமல்). அனாயாஸதி - லீலையினால். பாளுவ - (அவர்களின் தொந்தரவுகளை பரிகரித்து, தானும் அவரின் செயல்களுக்கு சிறிதும் பாதிப்பு அடையாமல்) சஞ்சரிக்கும், தேவர இவன - ஸ்ரீஹரியை. அனுசரிஸு - அனுசரித்து. ஈ தேவர ஹரிய - சர்வாரிஷ்ட பரிஹாரகனான இந்த க்ரீடாதி குணபூர்ணனை (ஸ்ரீஹரியை). அனுக எம்பரு - (மற்றவர்களை) அனுசரிப்பவன். எந்து ஹேளுவவரு (அடையாதவனை, அடைந்தவன் என்று அறிவது). அவிவேகிகளு - மூர்க்கரே சரி.

ஸ்ரீஹரியின் அனந்த குணங்களின் நடுவே ஸ்வாதந்த்ர்ய குணம் முக்கியமானது. அதாவது, மிகவும் அவசியமாக முதன்முதலில் அறியவேண்டியது என்று அர்த்தம். ஸ்வாதந்த்ர்யத்தை சிறிதும் குறைவு என்று அறிவதுகூட மிகப்பெரிய அனர்த்தத்தை தரக்கூடிய மித்யா ஞானம் ஆகும் - ஸ்ரீராமன் தன் காரிய சித்திக்காக கபிகளின் உதவியை பெற்றுக் கொண்டான் என்று தவறாக புரிந்து கொள்வதைப் போல.

**வைரிஞ்சிலயே முச்யதே ஸர்வவெம்ப[3]**
**நிரவகாஷ வாகி[3]ரலு**
**து[3]ராஷெய பி[3]டு[3] இன்னொந்து[3] லயவெல்லி**
**விரிஞ்சி லயவே மஹாப்ரளய ||6**

வைரிஞ்சிலயே - பிரம்மனின் லயத்தில். ஸர்வவு - அனைத்தும். முச்யதே - தம் காரியங்களிலிருந்து (சர்வ செயல்களிலிருந்து) விடுதலை பெறுகின்றன. எம்ப - என்று சொல்லும். நிரவகாஷவாகிரலு - (தவறாக புரிந்து கொள்வதற்கு இடமில்லாத) பிரமாண வாக்கியங்கள் இருக்கையில். துராஷெய பிடு - கெட்ட ஆசைகளை விடு (ஸ்வயோக்ய சாதனைகளை நிறைவேற்றிக் கொள்). விரிஞ்சி லயவே - பிரம்ம லயமே. மஹாப்ரளய - மஹா பிரளய என்பது. இன்னொந்து லயவெல்லி - வேறு லய என்பது எங்கு இருக்கிறது?

** மனுஷ்யோத்தமரே முதலான சாமான்ய முக்தி யோக்ய ஜீவர்களுக்கு சாதன காலம் என்பது ஒரு பிரம்ம கல்ப மட்டுமே.

---

மகாபிரளயத்திற்குப் பிறகு, அந்த கல்பத்தின் பிரம்மனுடன் அவர்கள் முக்தர்கள் ஆகிறார்கள். பல பிரம்ம கல்பங்களின் சாதனை உள்ள உத்தம தேவாதி அதிகாரிகள், அடுத்த பிரம்ம கல்பங்களில் திரும்பத்திரும்ப பிறவி எடுத்து சாதனைகளை முடித்துக்கொண்டு முக்தர் ஆகின்றனர். 'இன்னொரு பிரம்மலயவெல்லி' என்று சொன்னதால், இந்த கல்பத்தின் பிரம்மனுடன் முக்தன் ஆகும் ஜீவர்களைக் குறித்து உபதேசம் செய்கிறார் என்று அறியவேண்டும்.

**ஈ லயக்களுகத³ ஹரிய காரணகு³ண**
**க³ளிகெ³ லயவு ஸல்லதா³கி³**
**தாளது³ நிர்கு³ண நிராகாரத³ மத¹**
**ஆலோசனெய ப³ல்லவரிகெ³ ||7**

ஈ லயகெ – இந்த மஹா பிரளயத்திற்கு. அளுகத – அலைபாயாத (அல்லாடத – நகராத). ஹரிய – ஸ்ரீஹரியின். காரணகுணகளிகெ – பிரளயாதிகள் அனைத்திற்கும் காரணங்களான (ஸ்வாதந்த்ர்ய, ஸர்வஷக்தி, ஸர்வக்ஞத்வ, ஆனந்தாதி) குணங்களுக்கு. லயவு – நாசம் (குறைவு என்பது). ஸல்லதாகி – இல்லை என்பதால். அலோசனெய பல்லவரிகெ – ஞானிகளுக்கு. நிர்குண நிராகாரத மத – ஸ்ரீஹரி, நிர்குண, நிராகாரன் என்று முன் நின்று வாதிக்கும் மதம். தாளது – பிடிக்காது (சகிக்க முடியாததாக இருக்கிறது).

** பரமாத்ம தத்வத்தை, நிர்குண, நிராகார, நிர்விசேஷ, என நிரூபிக்கும் மாயாவாத மதம், ஜீவ பிரம்மர் ஸ்வரூபத்தினால் மிகவும் அபின்னன் என்று சொல்கிறது. பிரளய காலத்தில் ஸ்ரீஹரி மற்றும் லட்சுமி, பிரம்ம, ஜீவதி மற்ற வஸ்துகளின் ஸ்திதி பிரகாரங்களை, ஸ்ருதி, ஸ்ம்ருதி, பிரம்மஸூத்ராதி பிரமாணங்களால் நிரூபித்து, இந்த நுடிகளில் நிர்குண நிராகாரத்வங்களையும் யுக்திக்கு எதிரானது என்று நிரூபிக்கிறார். ஜகத் காரணங்களான ஸ்வாதந்த்ர்யாதி குணங்கள் நித்யமாக இருக்க, நிர்குணன் எப்படி ஆகிறான்? பிரளய காலத்தில் கூட லக்ஷ்மியின் புஜங்களில் க்ரீடை செய்தவாறு, ஆனந்த பூர்ணனாக

வீற்றிருக்கிறான் என்பதை நிராகார என்று சொல்வது எப்படி முடியும்?

**ஏகவெனிப பொ³ம்மனைக்ய வெந்த³ப்புது³**
**ஐஹிக ஐக்யவல்லவல்லா**
**ஏகஸ்யபா⁴வ ஐக்யவெந்து³வரு பேளுவ**
**வ்யாகரணத மாது கேளு ||8**

ஏகவெனிப - இருப்பது ஒன்றே வஸ்து என்று சொல்லப்படும். பொம்மனைக்யவு - பிரம்மனின் ஐக்யம். எந்தப்புது - எப்படி பொருந்துகிறது? (பிரம்ம என்று ஒரே ஒரு பொருள் இருந்து, பின்ன வஸ்துகளே இல்லாதபோது யாருக்கு யாரில் ஐக்யம்?). ஐஹிக ஐக்யவல்லவல்லா - இஹத்தில் (பிரத்யக்ஷத்தினால் ஜகத்தினில்). ஒன்றிலிருந்து மற்றொரு வஸ்துவிற்கு ஐக்ய என்பது எங்கும் காணப்படுவதில்லை - அல்லவா?. ஏகஸ்வபாவ - ஒன்றின் ஸ்வபாவத்தை. ஐக்யவெந்துவெ அது பேளுவ - அது சொல்லும். 'ஐக்ய' ஷப்தத்தின் அர்த்தம் என்னவென்று. கேளு - ஐக்ய என்பதற்கு பிரமாணங்களால் விளக்கப்பட்ட அர்த்தம் இதுவே என்பதை (வியாகரண அறிஞர்களை) கேட்டுத் தெரிந்துகொள்.

** ஒரேயொரு வஸ்து மட்டுமே இருக்கையில், ஜீவர்கள் பிரம்ம ஐக்யம் அடைவது என்பது சரியல்ல. பின்னமான ஸத்ய வஸ்துகள் ஸ்வரூபத்தினால் ஐக்யம் அடைகிறது என்பது எங்கும் இல்லை. இவ்வாறாக சொல்வது, ஒரு நடக்கமுடியாத கற்பனை மட்டுமே. இந்த கற்பனையை (ஐக்யத்தை) சாதிக்க என்று சொல்லப்படும் யுக்திகள் மற்றும் ஆதாரங்கள், இவற்றிற்கு எதிராக வரும் விமரிசனங்களை எதிர்த்து நிற்கமுடியாது. நாராயண ஸ்ருதியின் நிர்ணயத்தை இங்கு பார்க்கலாம்.

யதா஽பியந்தி தேஜாம்ஸி மஹாதேஜஸி பாஸ்கரே ப்ருதக்ஸ்திதான்யன்ஹி ஸ்வரூபைரபி ஸர்வஷ: | பரே பிரம்மணி ஜீவாக்ய பிரம்மாண்யப்யபி யந்தி ஹி | முக்தௌ ப்ருதக் ஸ்திதான்யேவ ததன்யேஷாம் அதர்ஷனம் | அப்யயோ஽யம் சமுத்திஷ்டோ ந ஸ்வரூபைகதா க்வசித் ||

வெவ்வேறு நட்சத்திரம் ஆகியவற்றின் ஒளிகள், பகலில் சூரியனின் மகா தேஜஸ்ஸில், எப்படி அடங்கி முடிகிறதோ, அப்படியே ஜீவர்கள் என்று அழைக்கப்படும் பிரம்மர்கூட (ஸ்வபூர்ணதையை அடைந்த முக்தர் 'பிரம்மர்' கள்) முக்தியில், வெவ்வேறாக இருப்பவர்களாகவே, பரபிரம்மனில் சேர்கின்றனர்.

அமுக்தர்களுக்கு தெரியாமல் இருப்பதே முக்தஜீவர்களின் 'அப்யய' ம் – ஸ்வரூப-ஐக்ய என்பது இல்லவே இல்லை. இவ்வாறு, முக்தியில்கூட ஸ்வரூப ஐக்யத்தை எதிர்க்கும் நிரவகாஷ ஸ்ருதி வாக்கியங்கள் ஏராளமாக இருக்கின்றன. ஸயுக்திகமான இந்த நிர்ணயத்தை புறக்கணிக்க எந்தவொரு காரணமும் இல்லை. நட்சத்திர ஒளிகள் வெவ்வேறாகவே, வெவ்வேறு லட்சணங்களைக் கொண்டதாகவே எப்போதும் இருக்கின்றன என்பது, அந்த பிரகாஷ ஒளியை ஆராய்ந்து பற்பல ஆராய்ச்சிக்கு உட்படுத்தும் நவீன விஞ்ஞானிகளுக்கும் சம்மதமான விஷயமே என்று தெரிய வருகிறது.

ஆகையால், ஒளியில் ஒளி சேர்ந்து ஒரே ஒளி ஆவதில்லை. பகலில் அனைத்து ஒளிகளும் சூர்யனின் ஒளியில் சேர்ந்து ஒரே ஒளிமயமாக ஆகிறது என்பது அஞ்ஞானிகளின் கற்பனை மட்டுமே. இதைப்போலவே, நதி-கடல் உதாரணத்திலும்கூட, ஐக்யத்தை சொல்வதற்கில்லை. கங்கா நதியின் தண்ணீரினை அஞ்ஞானிகளால் கடலில் கண்டுபிடிக்கமுடியாது. ஆனால், ஞானிகளால் முடியும். 'வாயுஸ்து தத்ப்ருதக் ஞாத்வா மேகே க்ருத்வா ப்ரவர்ஷதி' என்று (அதர்வணபாஷ்ய) – வாயுதேவர் அந்த தண்ணீரை தனித்தனியாக அறிந்து, மேக ரூபத்தினால் மழை பெய்ய வைக்கிறான் என்று சொல்கிறது. வெவ்வேறு நதி தண்ணீர்கள் வெவ்வேறு மேகங்களாகி அந்தந்த நதியின் பிரதேசங்களிலேயே மழையாக பொழிகின்றன.

**த$^{4}$ர்மவெனிப பொ$^{3}$ம்ம ஜீவரைக்யவெ ஷுத்$^{3}$த$^{4}$**
**சின்மய அத்$^{3}$விதீயவெம்ப$^{3}$**
**அம்மம்ம அத்$^{3}$விதீயவெம்ப$^{3}$ ப்$^{4}$ராந்தி நினகெ$^{3}$**
**ஸம்மதைக்யவ கண்டிஸிதெ$^{1}$ல்ல ||9**

தர்மவெனிப - தர்ம என்னும் காரணப் பெயர் கொண்ட. பொம்ம - பரபிரம்மன். மற்றும். ஜீவரு - ஜீவர்களும். ஐக்யவெ - ஒன்றே (ஜீவ ஸ்வரூபத்தினால் பரபிரம்மன் அபின்னனே). ஷுத்தசின்மய அத்விதீய - தோஷ தூரனும், ஞானஸ்வரூபனும், ஸம-அதிக ரஹிதனும், எம்ப - என்று சொல்லும் ஸ்ருதி. அம்மம்ம - என்ன வியப்பு?. அத்விதீயவெம்ப - பரபிரம்மனைத் தவிர இரண்டாம் வஸ்துவே இல்லை என்று (பிரம்ம ஒன்றே ஸத்ய - ஜீவனும் பிரம்மனே - பின்னம் அல்ல என்று). நினகெ ஸம்மதைக்யவ - உனக்கு (மாயாவாதிக்கு) மிகவும் பிடித்தமான. ஐக்யத்தை. கண்டிஸிது எல்ல - அனைத்து பிரகாரத்தினால் கண்டிக்கிறது. நினகெ ப்ராந்தி - ஜீவ பிரம்மர் ஒன்றே என்பது சத்யம் அல்ல.

** 'த்வாரகத்வாத் தர்ம:' - அனைத்து உலகின் தாரண போஷண கர்த்தன் ஆகையால், ஸ்ரீஹரி 'தர்ம' எனப்படுகிறான். தன்னிலிருந்து வேறுபட்ட வஸ்துவே இல்லையென்றால், தாரணபோஷணங்கள் என்பது அர்த்தம் இல்லாத பேச்சுகளே ஆகும். ஆகையால், தர்ம ஷப்த வாச்யனான பிரம்மனும், அவனை அடைந்த ஜீவரும் ஒன்றே, என்னும் வாதம் யுக்தியை எதிர்க்கிறது.

** 'ஸத்யம் ஞானம் அனந்தம் பிரம்ம', 'விக்ஞானமானந்தம் பிரம்ம' மற்றும் 'ஏகமேவாத்விதீயம்' என்னும் ஸ்ருதிகள், பரபிரம்மன் ஞானஸ்வரூபன், ஆனந்த ஸ்வரூபன், அத்விதீயன் என்று சொல்கின்றன. 'ஏகமேவாத்விதீயம்' என்னும் ஸ்ருதியே. இரண்டாம் வஸ்துவே இல்லை என்னும் உன் மதத்தை கண்டிக்கும்போது, ஜீவ பிரம்ம ஐக்யத்தை ஸாதிக்கிறது என்று அறிவது வெறும் மயக்கமே என்கிறார்கள். இந்த 'ஏகமேவாத்விதீயம்' என்னும் வாக்கியம், ஸ்ருதிகளில் வரும் சில சந்தர்ப்பங்களை விமர்சிப்பது அவசியம் எனப்படுகிறது. 'ஸத்வேவ ஸௌம்யேதமக்ர ஆஸீதேகமேவாத்விதீயம்' என்று (சாந்தோக்ய 8ம் அத்தியாயம் 2ம் கண்ட) உத்தாலகர் என்னும் ரிஷி, தம் மகனான ஷ்வேதகேதுவிற்கு உபதேசிக்கிறார். 'பிரளய காலத்தில், ஹே மகனே, 'ஸத்' என்னும் ஒன்றே அத்விதீயமாக இருந்தது' என்று அர்த்தம். இதன் முந்தைய வாக்கியங்கள் இவ்வாறு இருக்கின்றன.

3. ஸ்ருஷ்டி ஸந்தி

-----------------------------------------------------------------------------------------------

ஸதேவ ஸௌம்யேதமக்ர ஆஸீதேகமேவாத்விதீயம் ததைக ஆஹுரஸ தேவேதமக்ர ஆஸீதேகமேவாத்விதீயம் தஸ்மாத ஸத: ஸஜ்ஜாயத இதி | குதஸ்து கலு ஸௌம்யேவம் ஸ்யாதிதி ஹோவாச கதமஸத: ஸஜ்ஜாயேதீதி'

அதாவது, ஹே ஷ்வேதகேதுவே. ஸ்ருஷ்டிக்கு முன்பு (பிரளய காலத்தில்) 'ஸத்' என்னும் நாமம் உள்ள ஸர்வோத்தமனான நாராயணன் என்னும் பரபிரம்மன் மட்டுமே இருந்தான். அவனில் (இரண்டு என்னும்) பேதமே இல்லை மற்றும் அவனுக்கு ஸமனும், அதிகனும் இல்லவே இல்லை. ஜகத்தின் ஸ்ருஷ்டி விஷயத்தில் சிலர் (ஷூன்யவாதிகள்) இவ்வாறு சொல்கின்றனர். 'பிரளய காலத்தில் 'அஸத்' (ஷூன்யவே) இருந்தது. அதாவது, எதுவும் இருந்திருக்கவில்லை. ஷூன்யாத்மகமாக இருந்தது. ஆகையால், பின்னமானது எதுவும் இருந்திருக்கவில்லை – அத்விதீயமாக இருந்தது. அத்தகைய அஸத்' திலிருந்து ஷூன்யத்திலிருந்து 'ஸத்' ஆன ஜகத் பிறந்தது. ஹே மகனே. பிரளய காலத்தில் அஸத் (ஷூன்ய) இருந்தது என்பது எப்படி சொல்வது?' (இருந்திருக்கவில்லை மற்றும் இருந்தது என்னும் வாக்கு, என் தாய்க்கு மக்கள் இல்லை என்பது போல ஆகிறதே); மற்றும், அஸத்திலிருந்து ஸத் எப்படி பிறக்கிறது? – எப்போதும் சாத்தியம் இல்லை'.

இவ்வாறு சொல்லி, 'ஸத்வேவ இதமக்ரே' என்று மேற்கூறியவாறே கூறுகிறான். ஸத்+து+ஏவ= ஸத்வேவ. 'ஸத்' என்னும் வஸ்துவே இருந்தது என்று அர்த்தம். இந்த 'ஸத்' ஷப்த வாச்யன் பிரம்மனே என்பது, இதன் சமமான வாக்கியமே ஆகியிருப்பதால், ப்ருஹதாரண்ய (3ம் அத்தியாயம் 5ம் பிராமணத்தில்) வாக்கியத்திலிருந்து தெளிவாக தெரிகிறது. 'பிரம்ம வா இதமக்ர ஆஸீத்' என்பதே அந்த வாக்கியம்.

அத்விதீய என்பதன் அர்த்தத்தை வேறு ஸ்ருதிகளும் தெளிவாக சொல்கின்றன. 'ஏக ஏவாத்விதீயோ பகவான் ஸ்தத்ஸத்ருஷ: பரோ நாஸ்தீதி', 'ஏகோபகவான் ஸ்தத்ஸ்த்ருஷபரௌ ந ஸ்த:' என்பதே இந்த ஸ்ருதி வாக்கியங்கள். 'ஏமமேவாத்விதீயம் தத்ஸமாப்யதிக

வர்ஜனாத் | ஸ்வகதானாம் ச பேதானாம பாவாத்பிரம்ம ஷாஷ்வதம்' என்னும் (ப்ரவ்ருத்த கிரந்த) வாக்கியம், 'ஷாஷ்வதனான பரபிரம்மன் தன் அவயவ, குணாதிகளால் பின்னன் இல்லை என்பதால் 'ஏகமேவ' என்றும், தனக்கு சமனும் அதிகனும் இல்லை என்பதால் 'அத்விதீய' என்றும் அழைக்கப்படுகிறான்' என்று சொல்கிறது. 'பிரம்ம வா இதமக்ர ஆஸீத்' என்னும் ப்ருஹதாரண்ய வாக்கியம், 'ததாத்மானமேவாவேத் அஹம் பிரம்மாஸ்மீதி' அதாவது, அந்த பிரம்மன், நான் பிரம்மன் (குணபூர்ணன்) ஆகியிருக்கிறேன்', என்று தன்னை தான் அறிந்தவன் - என்று சொல்கிறது.

தேவவாக்கியங்களை பூர்வ-அபர விமரிசனங்கள் இல்லாமல் 'ஏகமேவாத்விதீயம்', 'அஹம் பிரம்மாஸ்மி', 'நேஹ நானாஸ்தி கிஞ்சன', 'அஸதேவ இதமக்ர ஆஸீத்' ஆகியவற்றை சொல்லி, ஜீவ பிரம்ம ஐக்யத்தை சொல்கிறது என்று அறிவது பிரமை இல்லையா? 'மஹாவாக்ய'ங்கள் என்னும் பட்டத்திற்கு ஏற்றி, சர்வ வேதவாக்கியங்கள் ஒரே மாதிரியான பரம பிராமாண்யம் உள்ளதாக இருக்கையில், அவற்றை இவ்வாறு திரிப்பது சரியா?.

நேஹ நானாஸ்தி கிஞ்சன என்னும் ஸ்ருதி, இஹ - இந்த பரபிரம்மனில். கிஞ்சன - எந்தவொரு. நானா - பேதமோ, பேத-அபேதமோ. நாஸ்தி - இல்லவேயில்லை - என்று சொல்லி, அடுத்த வாக்கியத்தில், இருக்கிறது என்று அறிபவர்களுக்கு கிடைக்கும் கதியை சொல்கிறது. 'ஏவம் தர்மான் ப்ருதக் பஷ்யன் தானேவானுவிதாவதி', 'ம்ருத்யோஸ்ஸம்ருத்யுமாப்னோதி ய இஹ நானேவ பஷ்யதி' என்றால், ய: - யார், இஹ - இந்த பிரம்மனில். (மற்றும் அவனின் அனந்த ரூபங்களில்). நானேவ - பேதமோ, பேத-அபேதமோ (ஒவ்வொரு ரூபத்தின் கர சரணாதி அவயவங்களில் அல்லது, அதன் அனந்தகுணங்களில் பரஸ்பரமாக இவ்வாறு பேத, பேத-அபேதங்களை) பஷ்யதி - அறிகிறானோ, ஸ: - அவன், ம்ருத்யோ: - மரணத்திற்குப் பிறகு. ம்ருத்யும் - நரகத்தை. ஆப்னோதி - அடைகிறான். ஏவம் தர்மான் - இவ்வாறே. பரமாத்மனின் தர்மங்களை (குணக்ரியாதிகளை) ப்ருதக் - பரஸ்பர அல்லது பரமாத்மனிடமிருந்து வேறானவை என்று, பஷ்யன் - அறிபவன். தான் அன்வேவ - அவற்றை அப்படி அறிந்த பிறகே

(அந்த விதமான ஞான நிஸ்சயத்தை அடைந்த உடனேயே தவறாமல்), விதாவதி – தமஸ்ஸிற்கு போகிறான் (சீக்கிரமாக நித்ய நரகத்தில் விழ்கிறான்). இவ்வாறு ஜீவ பிரம்ம ஐக்ய ஞானம் துர்கதியைக் கொடுப்பதால் முமுக்ஷுகள், அதனை தூர விலக்க வேண்டும். மித்யா ஞானத்தினால் மிகவும் பயம் உள்ளவராகி, அது சமீபத்திற்கு இழுக்காதவாறு பயம் கொண்டவர்களாக இருக்கவேண்டும்.

**தன்ன பா3யிகெ3 முட்டுதிஹ மூஷகவ பி3ட்டு**
**நின்ன ஸ்ருதியெம்ப3 பு4ஜகீ3**
**அன்யத்ர போக3ளு ஒந்த3ரிந்த3த3ர ஸம்**
**பூர்ணவாக3தெ3 திரக3து3 ||10**

நின்ன – நீ அடைந்திருக்கும் (ஜீவ பிரம்ம ஐக்ய ஸாதனைக்காக பிடித்திருக்கும்). ஸ்ருதியெம்ப – ஸ்ருதி ரூபத்தின். புஜகி – பெண் சர்ப்பம். தன்ன பாயிகெ முட்டுதிஹ – தன் முகத்தின் அருகில் இருக்கும். மூஷகவ – எலியை (தனக்கு இஷ்டமான அர்த்த என்னும் எலியை). பிட்டு – புறக்கணித்து. அன்யத்ர போகளு – வேறு இடத்திற்கு செல்வதில்லை (வேறு அர்த்தம் இருக்கிறதா என்னும் பக்கம் பார்ப்பதே இல்லை). பந்தரிந்த – அந்த ஒரு எலியினால் (அந்த ஒன்று அர்த்தத்தினால்). அதர ஸம்பூர்ணவாகதெ – அந்த ஸ்ருதி (அந்த சர்ப்பத்தின் வயிறு நிரம்பாமல்). பூர்ணார்த்தவல்லெந்து (உண்மையான தாத்பர்யத்தை) அறியாமல். திருகது – வேறு அர்த்தத்தினை பார்ப்பதில்லை.

** சர்ப்பம், தனக்கு இஷ்டமான மூஷகத்தையே பிடிப்பதைப் போல, ஐக்யவாதிகள், 'அஹம் பிரம்மாஸ்மி' 'தத்வமஸி' ஆகிய வாக்கியங்களில் தமக்கு இஷ்டமான ஜீவ பிரம்மா் அபின்னா் என்னும் அர்த்தத்தையே காண்கின்றனா். அதிகம் ருசிகரமான ஆகாரத்தை கண்டவர்கள் கண்டதையும் தின்பார்களா? ஐக்யவாதிகளின், ஸ்ருதிகள் அபேத அர்த்தத்தையே விளக்குவதில் பெண்களைப் போல வலிமை குறைந்தவர்கள் என்பதை காட்டுவதற்காக 'புஜகி' (பெண் சர்ப்பம்) என்று சொல்லியிருப்பர். அவர் சொல்வதைப் போல இந்த வாக்கியங்கள் அபேதார்த்தத்தில்

சொல்லப்படவில்லை. இது மட்டுமல்ல, ஜீவபிரம்மரின் பேதத்தையே சொல்கிறது.

சென்ற நுடியின் குறிப்பில் 'அஹம் பிரம்மாஸ்மி' 'நேஹ நானாஸ்தி கிஞ்சன' என்னும் ஸ்ருதிகளின் தாத்பர்யம் சுருக்கமாக நிரூபிக்கப்பட்டுள்ளது. 'தத்வமஸி' வாக்கிய அர்த்தத்தை சிறிது விளக்கமாகவே இங்கு பார்ப்போம். சாந்தோக்ய உபநிஷத்தின் 6ம் அத்தியாயத்தில், 'தத்வமஸி' என்னும் வாக்கியத்தைக் கொண்ட 'ஸ ய ஏஷோணிமைததாத்ம்யமிதம் சர்வம் தத்ஸத்யம் ஸ ஆத்மா தத்வமஸி ஷ்வேதகேதோ' என்று இருக்கிறது.

குருகுல வாசத்தை முடித்து, தானே மஹாஞானி என்று நினைத்து, கர்வம் கொண்டு திரும்பி வந்த, தம் மகன் ஷ்வேதகேதுவிற்கு உத்தாலக ரிஷிகள் கூறிய ஒன்பது விதமாக உபதேசங்களின் கடைசி வாக்கியமாக இந்த வாக்கியம் வந்திருக்கிறது. 'ஸ ஆத்மா தத்வமஸி' என்பதில், ஸ ஆத்மா அதத்வமஸி என்றே பிரிக்க வேண்டும். 'தத்வ' ஷப்த முக்ய வாச்யனான ஸ்வதந்த்ரனும் குணபூர்ணனுமான 'பரபிரம்மன்' நீ இல்லை என்பதே, அனைத்து உபதேசத்தின் பல்லவி வாக்கியத்தைப் போல இருக்கும், இந்த வாக்கியத்தின் தாத்பர்யம்.

இந்த உபதேசங்களில் சொல்லியிருக்கும் ஒன்பது உதாரணங்களில் எந்த ஒன்றும், ஜீவ பிரம்மரின் அபேதத்தை சொல்வதில்லை. இந்த முழு வாக்கியத்தில் இருக்கும் 'ஸ:' என்றால் ஸாரன் (ஸர்வோத்க்ருஷ்டன்), 'ய:' என்றால் ஸர்வ நியாமகன் (விஷ்ணு), 'அணிமா' என்றால் சூக்ஷ்ம தமன் (அகம்யன்). 'ஐதராத்ம்யம்' என்றால் அனைத்தும் அவனின் வசம் (விஷ்ணு பின்னமான இதர அனைத்தும் அவனையே ஸ்வாமியாகக் கொண்டதாகும்). 'ஸத்ய' என்றால், பூர்ணானந்த ஸ்வரூபன், 'ஆத்மா' என்றால் குணபூர்ணன். இவனே 'தத்வ'ன். உண்மையில் நீ 'தத்வன்' அல்ல. அசுரர்கள் மட்டும் 'நானே பிரம்ம' என்று அறிவார்கள். இதுவே இந்த பூர்ண வாக்கியத்தின் தாத்பர்யம் என்று சொல்லும் பிரமாணம் (ஸாம ஸம்ஹிதா) இவ்வாறு இருக்கிறது.

யோடஸௌ நியமனாத்விஷ்ணு: ஸாரத்வாத்ஸ இதி ஸ்ம்ருத: |

---

அணிமா ஸூக்ஷ்ம தோகம்ய ஐததாத்ம்யம் ச தத்வஷம் ||
பரானந்தத்வத: ஸத்ய ஆத்மா பூர்ணகுணத்வத: |
ஸத்யதோ நாஸ்தி தத்வம் ஹி மா பூத்தே ஸ்தப்ததா தத: ||
அஸுராஸ்தப்ததாம் யாதா பிரம்மா ஹமிதி மானின: |
அதத்வமஸி புத்ரேதி ய உக்தோ கௌதமேன து |
நவக்ருத்வ: ஸத்ருஷ்டாந்தம் ஸர்வபேதேன கேஷவ: ||

மேற்சொன்ன விவரங்களே இதன் அர்த்தம் ஆகும். தத், த்வம், அஸி என்று பதச்சேதம் செய்தாலும், தத் ஷப்த வாச்யனான பிரம்ம வஸ்துவின் ஸத்ருஷனும், அதையே அடைந்திருப்பவனும் ஆகியிருக்கிறாய் போன்ற அர்த்தங்களும் சுலபமாக தெரிகிறது. மேலதிக விவரங்களை, குருகளின் மூலம் படித்து உணர வேண்டும்.

**லோகவில்லெம்ப$^3$ லோகாந்தர்க$^3$தவாதி$^3$**
**காகு மாட$^3$தி$^3$ரு ஸ்ருதிக$^3$ள ||11**

லோகவில்லெம்ப – ஜகத் மித்யை என்று வாதிக்கும். லோகாந்தர்கதவாதி – அந்த ஜகத்திலேயே இருக்கும் (ஜகத்தின் ஏகதேஷனாக இருக்கும்) ஹே மாயாவாதியே! ஸ்ருதிகள – வேதங்களை (ஜகத் ஸத்ய என்று சொல்லும் ஸ்ருதிகளை). காகுமாடதிரு – தூஷிக்காமல் இரு (கெடிஸபேட – வ்யவஹாரிக ஸத்யத்வ முதலான கெட்ட சிந்தனைகளால்).

** ஜகத் மித்யை என்னும் மாயாவாதிகளின் வாதம் அஸத்ய (பொய்) என்றே சொல்வது போல ஆகிறது. 1ம் மோட்ச சந்தியின் 14ம் பத்யத்தின் குறிப்பினை இங்கு பார்க்கலாம். 'ஜகத்தே பொய் என்றால், ஜகத்தில் இருக்கும் நீயும், உன் வாக்கும் என அனைத்துமே பொய் என்றாகிறது. ஜகத் மித்யை என்னும் உன் வாக்கு பொய் என்றால், ஜகத் ஸத்ய என்றே ஆகிறதல்லவா? – என்னும் குறிப்பினை உணரலாம். சாஸ்திரத்திற்கு ஏற்பவான தத்வவாதிகளின் சித்தாந்தங்களை விளக்குவது இந்த கிரந்தத்தின் சிறப்பு. 'ஜகதோபாவே அனுமானஸ்யாப்யபாவ:' என்பது

(மித்யாத்வானுமான கண்டனத்தில்) ஶ்ரீமதாசார்யர் சொல்லியிருக்கிறார்.

**ஸ்ருதவாத³ர்த்த² ஈ ஸ்ருதி யாவ கெடி³ஸுவ**
**பாதக தன்னனெ ஸுட³தெ³**
**யாத³ரிந்தே³னாயிது அத்³வைதகா⁴தக்கெ**
**ஹேதுவாதெ³ம்ப³ரு பு³த⁴ரு ||12**

ஸ்ருதவாத அர்த்த (ஜகத் ஸத்ய என்னும்) புகழ் பெற்ற அர்த்தம் உள்ள, ஈ ஸ்ருதி - இந்த ஸ்ருதியை. யாவ - யார் கெடுப்பார்கள்? - ஜகத்தினை மித்யை என்று விளக்கும் - துரர்த்தத்தினால் கெடுக்கிறானோ அவனின், பாதக - பாவம், தன்னனெ - அவனையே. ஸுடதே - தகிக்காமல் இருக்குமா? யாதரிந்த - எந்த வாதத்தினால். ஏனாயிது - என்ன பலன் ஆயிற்று?. (ஆகையாலேயே) புதரு - தத்வஞானிகள். அத்வைத காதக்கெ - அபேதத்தை சொல்லும் வினாஷகாரக (தமஸ்ஸினை அடையும்) மதத்தை, ஹேதுவாதெம்பரு - 'ஹேதுவாத' என்று சொல்வார்கள்.

** யச்சிகேத தத்ஸத்யமித் தன்ன மோகம் (ரிக்வேத). யத் - எந்த ஜகத்தினை. சிகேத - படைத்தானோ, தத் - அது. ஸத்யமித் - ஸத்யமானது. ந மோகம் - மித்யை அல்ல. 'விஷ்வம் ஸத்யம் மகவானா. மகவானா - ஹே இந்திர ப்ருஹஸ்பதிகளே. விஷ்வம் ஸத்யம் - ஜகத் ஸத்யமானது. ஆகிய வேத வாக்கியங்கள் வேறு தவறான அர்த்தங்களுக்கு இடம் கொடுக்காத சொற்களால் உலகத்தின் ஸத்யத்வத்தை விளக்குகிறது. இத்தகைய ஸ்ருதிகளுக்கும், அதன் அர்த்தத்தையே மிகவும் தெளிவாக சொல்லும் ஸ்ம்ருதி வாக்கியங்களுக்கும், வெறும் யுக்தி (தர்க்க) வாதத்தினால் தவறான அர்த்தங்களை சொல்வது மஹா பாவமானது. பாரதிதேவிக்கு செய்யும் அபசாரம் ஆகும்.

** ஹேதுவாத என்றால், யுக்திக்கு (அனுமான தர்க்க) பிரதான இடத்தைக் கொடுத்து நிர்ணயங்களை விளக்குகிறது. வைசேஷிக, நையாயிக முதலான தர்ஷனங்கள் ஹேதுவாதங்கள் ஆகும். வேதாந்திகளைப் போல (உத்தர மீமாம்ஸகர்களைப் போல) ஆகம பிராமாண்யத்தை, இந்த தர்ஷனகாரர் ஒப்புக் கொள்வதில்லை.

3. ஸ்ருஷ்டி ஸந்தி
--------------------------------------------------------------------------------------------
மாயாவாதிகள் ஆகம பிராமாண்யத்தை அங்கீகரிக்கிறோம் என்று கூறினாலும், அதனை ஒப்புக் கொள்வதில்லை. பரபிரம்மன் அவாச்யன் என்றும் அக்ஞேயன் என்றும் சொல்லும் இவர்கள், வேதங்கள் பரபிரம்ம வாசகங்கள் அல்ல என்றே சொல்வதால் (அதத்வா வேதகங்கள் என்று சொல்வதால்) ஹேதுவாதிகளே சரி. ஸ்வபுத்தியைப் போல வேதார்த்தங்களை சொல்கின்றனர்.

'ஸ்வேனாவிக்ஞேயத்வம் தைருச்யதே', 'கர்த்ருகர்ம விரோத இதி ஹி தே வதந்தி'. பிரம்மன் தன்னை தானும் அறியமாட்டான். ஒரு வஸ்து கர்த்ரு கர்மங்கள் இரண்டும் ஆகமுடியாது. விரோதம் ஆவதால் -- என்றே அத்வைதிகள் சொல்கிறார்கள். ஆகையால், அவாச்யனும், அக்ஞேயனும் என்னும் அவர்களின் பிரம்மன், ஷூன்யனே ஆகிறான். 'அதோ஽வாச்யத்வாச்சோன்யமேவ ததிதி ப்ராப்தம்' என்னும் (விஷ்ணு தத்வ நிர்ணய) வாக்கியமும் இந்த யுக்தியையே சொல்கிறது.

அபரஸ்பர ஸம்பூதம் கிமன்யத் காமஹைதுகம் (கீதை). அதாவது, அபரஸ்பர ஸம்பூதம் - (மஹத், அஹங்கார ஆகிய) பரஸ்பர கார்ய காரண கிரமம் உள்ள தத்வங்களால் ஜகத் உற்பத்தி ஆனதில்லை. கிம் - வேறு என்ன என்றால், அன்யத் - மித்யாபூதமானது (கயிற்றில் தெரியும் சர்ப்பத்தைப் போல ஸதஸத் விலக்ஷணமானதாகும்). காமஹைதுகம் - அஞ்ஞானத்தினால் மட்டும் (ஜகத் இருப்பதைப் போல தெரிகிறது என்று) ஆனது என்று தர்க்கத்தினாலேயே தெரிகிறது. இவ்வாறு, தெரிபவனுக்கு:
மாமப்ராப்யைவ கௌந்தேய ததோ யாந்த்யதமாம் கதிம்

என் ப்ராப்தியே இல்லாமல் அந்தந்தமஸ்ஸே கதி என்று ஸ்ரீகிருஷ்ணன் சொல்லியிருக்கிறான். 'அத்வைதகாத' என்று, ஆத்ம ஹானிக்கு காரணமாகும் இந்த மதத்தை, ஞானிகள் ஹேதுவாத என்று சொல்வர் என்னும் அர்த்தத்தை அறியவேண்டும்.

**சின்மாத்ர ஸ்ருதியெம்ப[3] நிம்ம அஞ்ஞானவு**
**நம்ம நாராயணகி[3]ல்ல**

**ரம்மெயரஸ தன்ன நாபி[4] கமலதி[3]ந்த[3]**
**நிர்மிஸித[3] ஜக[3]து புஸியே ||13**

ஸ்ருதியு - வேதம். சின்மாத்ர - (பிரம்மன்) சேதன மாத்ரன் (ஆனந்தாதிகுணகளு - ஸ்ருஷ்ட்யாதி க்ரியாஷக்தி ஆகிய குண க்ரியைகள் இல்லாதவன்). எம்ப - என்று சொல்கிறது என்னும். நிம்ம அஞ்ஞானவு - உங்கள் (மாயாவாதிகளின்) விபரீத ஞானம். நம்ம நாராயணகில்ல - நம் பிரபுவான நாராயணனுக்கு இல்லை (தன்னை ஸர்வகுண பூர்ண, சர்வக்ஞ, ஸர்வஷக்தன் என்றே தான் அறிந்திருக்கிறான்); ரம்மெயரஸனு - ரமாபதி. தன்ன நாபிகமலதிந்த - தன் நாபி கமலத்தில். நிர்மிஸித ஜகது - ஜகத் (விஷ்வம்). புஸியே - பொய்யே (மித்யையே)?. (எப்போதும் இல்லை).

'ஸாக்ஷி சேதா கேவலோ நிர்குணஸ்ச' ஆகிய ஸ்ருதி வாக்கியங்களுக்கு மாயாவாதிகள் அறியும் அர்த்தம் அஞ்ஞானத்தினால் ஆன தவறான அர்த்தம் என்கிறார்கள். 'ஸ ஆத்மா ஸ நித்ய: ஷுத்த: கேவலோ நிர்குணஸ்ச' என்னும் ஸ்ருதியும் அதே அர்த்தத்தையே சொல்கிறது. 'தத்வமஸி' என்று, தத், த்வம், அஸி என்று பதச்சேதம் செய்து, 'தத்' – பிரம்மன். த்வம் – நீ. அஸி – ஆகிறாய். என்னும் அர்த்தத்தை சொல்லி, தத் என்னும் பிரம்மனின், ஸர்வக்ஞத்வ, ஸர்வகர்த்ருவாதி தர்மங்களையும், த்வம் என்னும் ஜீவனின், அவனின் எதிர்மறையான அல்பக்ஞத்வ, அல்பஷக்தித்வ ஆகிய தர்மங்களையும் விலக்கி, இருவரிலும் இருக்கும் 'சித்' என்பதற்கு ஐக்யத்தை அறிய வேண்டும் என்னும் வாதம் வெறும் நகைச்சுவையாகவே இருக்கிறது. இவ்வாறு அதர்மம் செய்வதற்கு 'ஸாக்ஷி சேதா கேவலோ நிர்குணஸ்ச' என்னும் ஸ்ருதி, ஸஹாயக என்று சிந்திப்பது அஞ்ஞானத்தின் காலம் ஆகும். இந்த ஸ்ருதியின் பூர்ண வாக்கியம் இவ்வாறு உள்ளது.

ஏகோ தேவ: ஸர்வபூதேஷு கூட: ஸர்வவியாபி ஸர்வபூதாந்தராத்ம |
கர்மாத்யக்ஷ: ஸர்வபூதாதிவாஸ: ஸாக்ஷி சேதா கேவலோ நிர்குணஸ்ச ||

3. ஸ்ருஷ்டி ஸந்தி

---

ஏக: - ஸர்வோத்தமன் மற்றும் ஸ்வகதபேத விவர்ஜிதனும். தேவ: - க்ரீடாதி குண விசிஷ்டன். ஸர்வபூதேஷு கூட: - அனைத்து பிராணிகளில் மறைந்திருப்பவன். ஸர்வவியாபி - தேஷ, கால, குணங்களால் வியாப்தன் (பிராணிகளில் மட்டும் இருப்பவன் அல்ல. அனைத்தையும் வியாபித்துக் கொண்டிருப்பவன்). ஸர்வபூதாந்தராத்மா - ஸர்வப்ராணிகளில் உள் இருந்து அவற்றை நன்றாக நியமிப்பவன். (ஸர்வாந்தர்யாமியாக இருந்து அனைத்தையும் அறிந்தவன்). கர்மாத்யக்ஷ: - ஸர்வகர்மாத்பதி (கர்மோபரி அஸ்ய அக்ஷாணி வர்த்தந்த இத்யத்யக்ஷ: - தத்வபிரதீப). அனைவரின் அனைத்து காலங்களின் கர்மங்களை அறிந்து செய்விப்பவன். ஸர்வபூதாதிவாஸ: - அனைவரின் ஆஸ்ரயன். ஸாக்ஷி - ஸ்வரூபத்தினாலேயே அனைத்தையும் சாட்சாத்தாக பார்ப்பவன். சேதா - ஞானரூபன். கேவல: - ஜடா மிஸ்ரன் (ஷுத்தன் - ஸம/அதிக இல்லாதவன்). நிர்குணஸ்ச - ஸத்வாதி ப்ராக்ருத குணங்கள் இல்லாதவன்.

**அனாதி$^3$ மாயாஸுப்தனு க$^3$ட$^3$ ஜீவனு**
**அனித்ர க$^3$ட$^3$ பரபொ$^3$ம்ம**
**அனுப$^4$வகெ தந்து$^3$கோ ஈ ஸ்ருதிமார்க்க$^3$வ**
**மனகெ ப$^3$ந்த$^3$ந்தாட$^3$பே$^3$ட$^3$ ||14**

ஜீவனு - தேஹாபிமானி சேதனன். அனாதிமாயாஸுப்தனு கட - அனாதியான அவித்யை (மாயா). மாயாதீன (இச்சாதீன) - எந்த மாயையினால் சம்சாரத்தில் நுழைந்திருக்கிறானோ. பரபொம்ம - பரபிரம்மன். அனித்ர கட - என்றும் சம்சாரம் இல்லாதவன். ஈ ஸ்ருதிமார்க்கவ - இவ்வாறு சொல்லும் தாத்பர்யத்தை. அனுபவகெ தந்துகோ - நன்றாக அறி. மனகெ பந்தந்தெ - மனம் நினைத்தவாறு (பைத்தியம் போல) மாதாடபேட - பேசாதே.

** இதன் ஸ்ருதி வாக்கியம் இவ்வாறு உள்ளது.

அனாதிமாயயா ஸுப்தோ யதா ஜீவ:ப்ரபுத்யதே |
அஜம நித்ரமஸ்வப்னமத்யைதம் புத்யதே ததா || (மாண்டூக)

விஷ்ணுவின் அதீனனான, அனாதி வித்யையால் சம்சாரத்தில் நுழைந்திருக்கும் (விஷ்ணுவை மறந்து நித்திரையில் இருக்கும்) ஜீவன், எப்போது (ப்ரபுத்யதே – ஸ்ரீஹரியே ஸ்வதந்த்ரன் – எப்போதும் அவனின் அதீனன் என்னும் தத்வஞான ரூபத்தின்) சிந்தனையை அடைகிறானோ, அப்போது, ஜனனாதி தோஷங்கள் இல்லாதவன் (அஜ), சுஷுப்தி ஸ்வப்ன என்னும் (அநித்ரம் அஸ்வப்னம்) நிலைகளை மீறிய (விஷ்வம், தைஜஸ, ப்ராக்ஞ என்னும் ரூபங்களால் ஜீவர்களுக்கு உண்டாகும் ஜாக்ருத, ஸ்வப்ன, ஸுஷுப்தி என்னும் நிலைகளை மீறிய – இவை இல்லாத). அத்வைதம் – ஸர்வோத்தமனான 'துரிய' நாமக ஸ்ரீஹரியை (புத்யதே) ஜீவன் சாட்சாத்தாக பார்க்கிறான். பாஷ்யத்தில் உதாரணம் கொடுக்கப்பட்டுள்ள இந்த ஸ்ம்ருதி வாக்கியம் இந்த அர்த்தத்தையே தெளிவாக நிரூபிக்கிறது.

அனாதிமாயயா விஷ்ணோரிச்சயா ஸ்வாபிதோ யதா |
ப்ரபோதயாமாதி ததா விஷ்ணும் ப்ரபஷ்யதி ||

விஷ்ணுவின் இச்சாதீனமான அனாதி மாயையினால் நித்ரையில் இருக்கும் ஜீவன், எப்போது விழிப்பு கொள்கிறானோ அப்போது விஷ்ணுவை பார்க்கிறான்.

**ம்ருதி இல்லத3வ நித்யாம்ருதவெம்ப3 ப்ரஸித்3த4**
**க்ருதி இல்லத3னுமான ப4வக்கெ**
**அதி தூ3ரவல்லவெ ஆது3து3 நம்ம ஸ்ரீ**
**பதி நித்யமுக்த ப3ல்லவரிகெ3 ||15**

ம்ருதியில்லதவ – மரணம் இல்லாதவன். நித்யாம்ருதவெம்ப – நித்யமும் முக்தனே என்னும். ப்ரஸித்தக்ருதி – பிரசித்த பலன் உள்ளது. இல்லத அனுமான – இந்த அனுமானம் (தர்க்கம்) மரணம் இல்லாதது என்று சொல்வதற்கு, அனைவரும் ஒப்ப வேண்டிய பலன், முக்தன் என்று சாதிப்பதே ஆகும். பதகெ அதிதூர அதுது அல்லவெ – நித்யமுக்தன் (பிரம்மவஸ்து), சம்ஸாரத்திற்கு அதிதூரன், என்றால், என்றும் ஸம்சாரம் இல்லாதவன் என்று ஸாதிப்பது ஆகும். நம்ம ஸ்ரீபதி – நம் லட்சுமிபதி, பல்லவரிகெ –

ஞானிகளுக்கு. நித்யமுக்தனே ஆகிறான். இல்லதெ – இவ்வாறு இல்லாமல் (வேறு என்ன இருக்கும்?).

அனைத்தும் லய அடைந்தபோதுகூட (பிரளய காலத்திலும்கூட) வீற்றிருக்கிறான் என்று அனைத்து பிரமாணங்களால் ஸ்ரீஹரி தேகவியோக இல்லாதவன் – மரணம் இல்லாதவன் என்று தெரிய வருகிறது. மரணராஹித்ய என்று சொல்வது, முக்தத்வத்தைக் கொடுக்கிறது. என்றும், மரணம் இல்லாதவன் நித்யமுக்தனே ஆகிறான். அனைவரும் இதனை ஒப்புக் கொண்டே ஆகவேண்டும். ஆகையால், ஸ்ரீஹரிக்கு ப்ராக்ருத தேக சம்பந்தம் என்றும் இல்லை என்று தெளிவாகிறது. நிஷ்பலமான (எதையும் சாதிக்க முடியாத) அனுமானம், வீண் என்பதை அனைவரும் அறிவர். 'பல்லவரிகெ' என்றால், யுக்தி சாஸ்திரத்தை அறிந்தவர்களுக்கு, என்னும் அர்த்தத்தை அறிய வேண்டும்.

**அவ நித்யமுக்த ஜீவரு மத்[4]ய முக்தரெம்ப[3]**
**விருத்[3]த[4] த[4]ர்ம முக்தியொளு**
**ஸுவிவேகிக[3]ளிகெ[3] ஸம்மதவாத[3] காரண**
**இவனைக்யவல்லியு ஸல்லா ||16**

அவ – அவன் (ஸ்ரீஹரி). நித்யமுக்த – நித்யமுக்தன். ஜீவரு – பிரம்மாதி சகல ஜீவர்கள். மத்யமுக்தரு – மத்ய காலத்தில் முக்தரானவர்கள் (அமமுக்த – முக்த தேசங்களின் மத்ய காலத்தில் மரணஷீலமான தேகங்கள் உள்ளவர்களாக இருந்து பிறகு, ஸ்ரீஹரி பிரஸாதத்தினால் முக்தர் ஆனவர்கள்). எம்ப – இவ்வாறு சொல்லும். மத்து முக்தியொளு – முக்தியில்கூட. விருத்த தர்ம – எதிர்மறை தர்மங்கள் உள்ளவர்கள் (ஸ்ரீஹரி ஸ்வதந்த்ரன், முக்த ஜீவர்கள் அவனின் அதீனர்கள். ஞானானந்தாதி குணங்களால் ஸ்ரீஹரிக்கு, முக்தர்கள் அனந்த குணங்களால் ஹீனர்கள். ஆகிய எதிர்மறை தர்மங்களைக் கொண்டவர்கள்). (என்பது), ஸுவிவேகிகளிகெ – யதார்த்த ஞானிகளுக்கு. (ஆகமானுஸாரிகளான யுக்திகளால் ஆராய்ச்சி செய்து படிப்பவர்களுக்கு). ஸம்மதவாத காரண – ஒப்புக் கொள்வதால் (அங்கீகாரத்திற்கு ஏற்றதாக இருப்பதால்), இவரைக்யவு – ஜீவ

பிரம்மரின் ஐக்யம். அல்லியு - முக்தியிலும் கூட. ஸல்லா - யோக்யமல்ல (கூடுவதில்லை).

** எதிர்மறை தர்மங்கள் உள்ள இரு வஸ்துகள் ஸ்வரூபத: ஒன்றே என்று சொல்வது யுக்திக்கு எதிரானது.

அத பத்தஸ்ய முக்தஸ்ய வைலக்ஷண்யம் வதாமி தே |
விருத்த தர்மிணோஸ்தாத ஸ்திதயோரேக தர்மிணி || (பாகவத)

அனாதி காலீனமான ப்ராக்ருத பந்தம் உள்ள ஜீவருக்கும் நித்யமுக்தனான ஸ்ரீஹரிக்கும் ஸ்வாபாவிகமான எதிர்மறை தர்மங்கள் இருப்பதால், ஒரு தேகத்தில் இருக்கும்போதும்கூட ஐக்யம் இல்லை' என்று ஸ்ரீகிருஷ்ணன் உத்தவனுக்கு உபதேசம் செய்கிறான்.

பத்தா ஜீவா இமே ஸர்வே பூர்வபந்த ஸமன்வயாத் |
நித்யமுக்தத்வதோ விஷ்ணுர்முக்த நாமா ஸதோதித: ||
முக்தஸ்யாபி து பத்தத்மஸ்தி யத்ஸஹரேர்வஷ: |
பத்தத்வம் விஷ்ண்வதீனத்வம் அந்தத்வம் தததர்ஷனம் ||

இந்த பிரம்ம ஸம்ஹிதா மற்றும் முக்த விவேக வாக்கியங்களால், மேற்கண்ட பாகவத ஸ்லோகத்தின் தாத்பர்யத்தை ஸ்ரீமதாசார்யர் நிர்ணயித்திருக்கிறார். 'அனாதி பந்த சம்பந்தம் உள்ளவர்கள் ஆகையால், இந்த அனைத்து ஜீவர்களும் பத்தர் என்றே அழைக்கப்படுகின்றனர். ஸ்ரீவிஷ்ணுவோ, நித்ய முக்தனாகையால், முக்த என்னும் நாமத்தினாலேயே எப்போதும் அழைக்கப்படுகிறான். முக்தஜீவன் கூட, ஸ்ரீஹரியின் வசமாக இருப்பதால், பத்தத்வ உள்ளவனே. பத்தத்வ என்பதே விஷ்ணு அதீனத்வம் - ஸ்ரீஹரியின் தரிசனம் இல்லாதிருப்பதே அந்தத்வம் (மற்ற அனைத்தையும் பார்த்தாலும், ஸ்ரீஹரியை காணாதவன் அந்தனே - குருடனே). முக்தியில்கூட ஜீவபிரம்மரின் ஐக்ய என்பது கிடையாது (சாஸ்திரத்திற்கு எதிரானது) என்பதை விவேகிகள் ஒப்புக் கொண்டே ஆகவேண்டும்.

**எந்தெ[3]ந்து[3] கர்ண ஷூன்ய பன்னங்க[3]**

---

**கேள்த$^{3}$ப கர்ணபோத$^{3}$வகெ$^{3}$**
**மந்த$^{3}$ மானவ மஹத$^{3}$ந்தரவல்லவெ**
**எந்த$^{3}$ மத்$^{4}$யம ஈ முக்தரிகெ$^{3}$ ||17**

எந்தெந்து – எந்த காலத்திற்கும். கர்ணஷூன்ய – காது இல்லாத. பன்னங்க – சர்ப்ப. கேள்தப – கேட்க இயலாது. மந்தமானவ – (காது இல்லாமல் எந்த ஷப்தத்தையும் கேட்க முடியாத) அல்ப மானவனே. மத்யம ஈ முக்தரிகெ – நித்யமுக்தர் இல்லாத (சம்சாரத்தில் உழன்று ஒரு காலத்தில் முக்தரான) ஜீவர்களுக்கு, மத்து கர்ணபோதவகெ – காதுகளே இல்லாத ஸ்ரீஹரிக்கு அதிதூரமில்லையா? ஸமத்வமோ ஐக்யமோ எப்படி பொருந்தும் என்று); எந்த – வேதபுருஷன் கூறினான்.

யத்ததத்ரேஷ்யமக்ராஹ்ய மகோத்ரம வர்ணமசக்ஷு: – ஸ்ரோத்ரம் ததபாணிபாதம் நித்யம் விபும் ஸர்வகதம் ஸுஷூக்ஷ்மம் (அதர்வண) ‘அக்ஷரன் என்று அழைக்கப்படும் பரமாத்மன் காணப்படுவதில்லை. உணரக்கூடியவன். கோத்ர ஜாதிகள் இல்லாதவன். கண் காது இல்லாதவன். கைகால்கள் இல்லாதவன். நிரந்தரன். ஸர்வேஸ்வரன். ஸர்வாந்தர்யாமி. அத்யந்த ஸூக்ஷ்மன்’ என்று ஸ்ருதி சொல்கிறது. இவ்வாறு இருக்கும் பரமாத்மன், ‘ஸர்வேந்த்ரிய குணாபாஸம் ஸர்வேந்த்ரிய விவர்ஜிதம் (கீதை). அனைவரின் சக்ஷுராதி அனைத்து இந்திரியங்களுக்கு, பார்க்கும் முதலான சக்தியைக் கொடுப்பவனும், ஸ்வயம் இந்திரியங்கள் இல்லாதவனும், என்று சொல்லப்படுகிறான். இவ்வாறு இருந்தாலும், ‘பஷ்யத்யசக்ஷு: ஸ ஷ்ருணோதி’ ஆகிய ஸ்ருதிகள் கண் இல்லாமல் பார்க்கிறான். காது இல்லாமலேயே கேட்கிறான் என்று சொல்கிறது. மற்றும்:

ஸர்வத: பாணிபாதம் தத்ஸர்வதோக்ஷி ஷிரோமுகம் |
ஸர்வத: ஸ்ருதிமல்லோகே ஸர்வமாவ்ருத்ய திஷ்டதி || (கீதை)

கண் இல்லாமல் பார்க்கிறான் என்று சொல்வது மட்டுமல்ல. அனைத்து இந்திரியங்களினால் அனைத்து செயல்களையும் செய்யத்தக்கவன். கை, கால்களால் பார்க்கும், கேட்கும்

அனைத்தையும் செய்யத் தக்கவன். உலகில் இருக்கும் அனைத்தையும் பார்க்கிறான், கேட்கிறான். இப்படியான அற்புத மஹிமோபேதன் ஸர்வவியாபியாக இருப்பவன் என்று சொல்லப்படுகிறது. ஜீவர்களைப் போல துர்பல இந்திரியங்கள் உள்ளவன் அல்ல – ப்ராக்ருத இந்திரியங்கள் இல்லாதவன் என்னும் அர்த்தத்தை அறியாவிட்டால், இந்த வாக்கியங்கள் பரஸ்பரம் எதிர்மறையாக ஆகின்றன. இவ்வாறு நித்ய நிர்விகாரங்களான அற்புத இந்திரியங்கள் உள்ள ஸ்ரீஹரியை, 'ததவ்யயம் யத்பூதயோனிம் பரிபஷ்யந்தி தீரா:' என்றால், ஸர்வத – ஜீவர்களின் ஸ்ருஷ்ட்யாதிகளுக்கு ஸ்வதந்த்ர காரணனான, நித்ய நிர்விகார சிதானந்த ஸ்வரூபனான ஸ்ரீஹரியை ஞானிகள் ப்ரத்யக்ஷமாக பார்க்கிறார்கள்' என்று மேற்கண்ட அதர்வண ஸ்ருதி வாக்கியம் சொல்கிறது.

**ஸாயுஜ்ய எம்ப$^{3}$ ஷப்$^{3}$த$^{3}$வு ஷாப்$^{3}$தி$^{3}$கரிகெ$^{3}$**
**ஆ யோஜ்யவெம்ப$^{3}$ தா$^{4}$துவினிந்த$^{3}$**
**ஆயிதெம்பு$^{3}$து$^{3}$ ஸித்$^{3}$த$^{3}$ அத$^{3}$ரிந்த$^{3}$**
**பா$^{3}$யிகெ$^{3}$ பீ$^{3}$க$^{3}$வாயிது க$^{2}$ளர ||18**

ஸாயுஜ்ய எம்ப ஷப்தவு – 'ஸாயுஜ்ய' என்னும் பதம், ஷாப்திகரிகெ – வ்யாகரண பண்டிதர்களுக்கு. ஆ யோஜ்யவெம்ப தாதுவினிந்த – (யுஜிர் – யோகி) என்னும் புகழ்பெற்ற தாதுவினால். ஆயிற்று என்பது நிச்சயம். ஆதரிந்த – இந்த காரணத்தினால். (ஸாயுஜ்ய என்றால் 'சேர்ந்திருப்பது' என்னும் அர்த்தம் ஆனதால்). களர – துஷ்ட மாயாவாதிகளின். பாயிகெ பீகவாயிது – வாய் மூடியது (ஸாயுஜ்ய முக்தி என்றால் பிரம்ம ஐக்ய என்றும் சொல்வதற்கில்லை).

**ஹரிய ஸர்வாங்க$^{3}$தி$^{3}$ தும்பி$^{3}$ர்த்$^{3}$த$^{3}$ தே$^{3}$வர**
**இரவே ஸாயுஜ்யவெனிஸுபுது$^{3}$**
**மருளாக$^{3}$பே$^{3}$ட$^{3}$ மானவா ஸர்வேஷ்வரனெத்த**
**ஹரியனுவ்ரத முக்தரெத்த ||19**

ஹரிய – ஸ்ரீஹரியின். ஸர்வாங்கதி – அனைத்து அவயவங்களில். தும்பிர்த்த – சேர்ந்திருக்கும். தேவர – தேவதைகளின். இரவெ –

அங்கு இருப்பது. ஸாயுஜ்யவெனிபுது - ஸாயுஜ்ய முக்தி எனப்படுகிறது (ஐக்ய அல்ல). மானவா - ஹே மனிதனே. மருளாகபேட - மோசம் போகாதே. ஸர்வேஷ்வரனெத்த - ஸர்வேஷ்வரனான ஸ்ரீஹரி எங்கே?. ஹரியனுவ்ரத - ஸ்ரீஹரியின் அனுசரனான. முக்தரெத்த - முக்த ஜீவர் எங்கே?. (மஹதந்தரவல்லவெ - எப்போதும் அபின்னர் அல்ல - அவர்களில் ஐக்ய என்பது அல்ல).

** பற்பல விதமான முக்திகளில் உத்தமாதிகாரிகளுக்கு கிடைக்கும் ஸாயுஜ்ய முக்தியைக்கூட பிரம்ம ஐக்ய என்று சிந்திக்காதீர்கள், என்று எச்சரிக்கின்றனர். 1ம் மோட்ச சந்தி, 23ம் பதத்தின் விசேஷ விவரணையை படிக்க வேண்டும். ஸ்ரீஹரி, சதுர்முக பிரம்மதேவனின் ஸ்தோத்திரத்தினால் பிரசன்னனாகி, முக்த தாமமான ஸ்வலோகத்தை (வைகுண்டத்தை) அவனுக்கு தரிசனம் அளிக்கிறான். அதன் வர்ணனை ஸ்ரீமத் பாகவதத்தில் இவ்வாறு இருக்கிறது.

தஸ்மைஸ்வலோகம் பகவான் ஸபாஜித꞉ ஸந்தர்ஷயாமாஸ பரம் ந யத்பரம் -- பகவந்தன் மகிழ்ந்து சதுர்முக பிரம்மனுக்கு காட்டிய லோகம் மிகச் சிறந்தது (பரம்). அதைவிட சிறந்தது இல்லவேயில்லை (யத்பரம் ந). முக்தவைகுண்ட தாம என்று சொல்லப்படுகிறது. மற்றும், 'ந யத்ர மாயா கிமுதாபரே ஹரேரனுவ்ரதா யத்ர ஸுராஸுரார்ச்சிதா꞉ || -- எங்கு (மாயா) ப்ரக்ருதியின் ஸ்பர்ஷமே இல்லையோ (அப்ராக்ருதமோ - லட்சுமிதேவியே அனைத்து வஸ்து ரூபத்தினால் இருக்கிறாளோ), ஆகையாலேயே, ப்ரக்ருதி நிமித்தகளான துக்க, அஞ்ஞானாதிகளுக்கு இடம் இல்லையோ, அங்கு, ஸ்வ பரிவாரத்தினால் ஸேவ்யரான தேவதைகளும், தத்வாபிமானி தேவதைகளும் (ஹரேரனுவ்ரதா꞉) ஸ்ரீஹரியின் சேவகராக இருக்கிறார்கள் - என்று சொல்லப்பட்டிருக்கிறது.

**ஸ்லோக 3**

**ஸ்ரக்ஷ்யேஹி சேதனக³ணான் ஸுக² துக்க² மத்⁴ய**
**ஸம்ப்ராப்தயே தனு-ப்⁴ருதாம் விஹ்ருதிம் மமேச்சன் |**

**ஸோऽயம் விஹார இஹ மே தனுப்⁴ருத் ஸ்வபா⁴வ**
**ஸம்பூ⁴தயே ப⁴வதி பூ⁴தக்ருதே³வ பூ⁴த்யா: ||**
(ஸ்ரீமன் மஹாபாரத தாத்பர்ய நிர்ணய)

மம – என். விஹ்ருதிம் – க்ரீடையை. இச்சன் – விரும்பியவனாக. (தனுப்ருதாம் – ஜீவர்களின். ஸ்வபாவஸ்ய – த்ரிவித ஸ்வபாவங்களின். ஸம்பூதயே – நன்றாக வெளிப்பட்டு அவர்களின் அனுபவத்திற்கு வருமாறு. தனுப்ருதாம் – சம்சாரிகளான ஜீவர்களின். ஸுகதுக்க மத்யஸம்ப்ராப்தயே – (கேவல ஸ்வரூப சுக, ஸ்வரூப துக்க மற்றும் துக்க மிஸ்ர சுகரூபங்களான அவர்களின்) ஸ்வரூபங்களை அடைவதற்காக, சேதன கணான் – ஜீவ சமூகங்களை (அனாதி லிங்க தேகங்களால் பந்திதரான ஜீவர்களை). ஸ்ரக்ஷ்யே – ஸ்ருஷ்டியில் தருவிக்கிறேன். ஹி – இந்த வித சங்கல்பத்தை ஸ்ரீஹரி ஒவ்வொரு கல்பத்தின் ஸ்ருஷ்டிக்கு முன்னரும் செய்கிறான் என்பது ஸ்ருதியில் சொல்லப்பட்டுள்ள விஷயம். மே – என். ஸோऽயம் விஹார: – ஸ்ருதியில் சொல்லப்பட்டுள்ள இந்த ஸ்ருஷ்ட்யாதி ரூப க்ரீடையானது. பூத்யா: – ஸ்ரீலட்சுமிதேவிக்கும். பூதிக்ருத் ஏவ – அவளின் ஐஸ்வர்யமயமே. பவதி – ஆகிறது.

** மத்யம வர்க்கத்தின் ஜீவர்கள் நித்ய ஸம்ஸாரிகள் என்றும் அழைக்கப்படுகின்றனர். முக்தியோக்ய ஜீவர்களைப் போல வெறும் சுக ரூபமும், தமோ யோக்யரைப் போல வெறும் துக்க ரூபமும் ஆன ஸ்வரூபம் இல்லாமல், சுகதுக்க மிஸ்ர உள்ளவர்கள், இந்த மத்யம ஜீவர்கள். இவர்களுக்கும் அனாதிலிங்க தேக பந்தம் இருக்கிறது. இவர்களுக்கும், லிங்கபங்கத்தினால் ஸ்வரூபத்தின் ஆவிர்பாவ ரூபத்தின் முக்தி இருக்கிறதா என்றால், ஷாஸ்திரக்ஞர்கள் வெவ்வேறு வித அபிப்பிராயங்களைக் கொண்டிருக்கின்றனர்.

இல்லை என்பவர்கள், அவர்கள் தினமும் ஸம்ஸாரத்திலேயே சுற்றிக் கொண்டிருப்பார்கள் என்று அறிகிறார்கள். 'சோஷ்காயதே விஷ இந்த்ரோ மனுஷ்யான்' ஆகிய ரிக்வேத வாக்கியங்களும், 'ஏவம் த்ரயீதர்ம மனுப்ரபன்னாகதாகதம் காம காமா லபந்தே' (கீதை 6ம் அத்தியாயம்) மற்றும் ஸ்ம்ருதி வாக்கியங்கள்

அவர்களின் அபிப்பிராயத்தின் ஆதாரங்களாக இருக்கின்றன. 'மனுஷ்ய மத்யமர் என்னும் மிஸ்ர ஸ்வபாவத்தின் ஜீவர்களை, திரும்பத்திரும்ப ஸம்ஸாரத்திலேயே சுற்ற வைக்கிறான், அந்த இந்திர நாமகனான ஸ்ரீஹரி' என்று ஸ்ருதி சொல்கிறது. ரிக் யஜுர் ஸாம என்னும் மூன்று வேதங்களின் வித்யையை கற்று, அதன் மூலமாக கிடைக்கும் ஸ்வர்க்காதி பலன்களைக் காட்டி, அன்ய தேவதைகளை ஆராதித்து, கடைசியில் 'கிருஷ்ணார்ப்பணமஸ்து' என்று விஷ்ணுவிற்கு அர்ப்பிப்பவர்கள், 'த்ரைவித்ய' எனப்படுகிறார்கள். இவர்கள், த்ரயீதர்மம் - வேதோக்த தர்மத்தை, அனுப்ரபன்னா: - அனுஷ்டானம் செய்பவர்களாக, காமகாமா: - பல போகத்தின் இச்சை உள்ளவர்களாக, கதாகத: - ஸ்வர்க்கத்திற்கு செல்வது, திரும்ப மனுஷ்ய லோகத்திற்கு வருவது, என்னும் ஸ்திதியையே. லபந்தே - அடைகிறார்கள், என்று சொல்வதும்கூட, தம் அபிப்பிராயத்திற்கு ஆதாரம் என்கிறார்கள்.

ஆனால், இந்த கிரந்தகர்த்தரான ஸ்ரீவாதிராஜரின் அபிப்பிராயமோ, மத்யம ஜீவர்களுக்கும் ஸ்வரூப ஆவிர்பாவரூபத்தின் முக்தி உண்டு - என்று இருக்கிறது. ஸ்வரூபமே மிஸ்ர ஸ்வபாவம் ஆகையினால், முக்தர் ஆனபிறகும், துக்க மிஸ்ர சுகத்தையே அனுபவித்தவாறு, 'ஸாந்தானிக லோக' த்தில் இருக்கிறார்கள் என்று சொல்கிறார். இவரின் இந்த அபிப்பிராயத்திற்கு இந்த ஸ்லோகம் ஆதாரமாக இருக்கிறது. இந்த பிரமேயத்தை அனேக யுக்திகளால், ஸ்ரீராஜர் அடுத்த 4ம் ஸ்திதி ஸந்தியில் பத 6-9 வரையிலான நுடிகளில் விளக்கியிருக்கிறார். அந்த நுடிகளின் விசேஷ விவரணையை பார்க்கலாம்.

** ஸ்ருஷ்டி நான்கு விதங்கள் என்று சொல்லப்படுகிறது. அதன் விவரணையை அடுத்த பத 3ல், 1ம் நுடியின் விவரணையில் பார்க்க வேண்டும்.

பத 3 ராகம்: --. தாளம்: ரூபக

**மத்தொந்து$^3$ தண்ட$^3$த$^3$ ஜீவராஷிக$^3$ளிகெ$^3$**
**முக்தியெ மொத$^3$லாத$^3$ க$^3$திய**
**சித்தஜனய்ய நித்தபனெந்து$^3$ புனரபி**

**சித்ர ஜக³த்த நிர்மிஸித³ ||1**

மத்தொந்து தண்டத – இன்னொரு குழுவின். ஜீவராஷிகளிகெ – ஜீவ சமூகங்களுக்கு. முக்தியே மொதலாத – முக்தி முதலான (அவரவர்களின் ஸ்வரூப யோக்யதைக்கேற்ப) கதிய – கதிகளை. இத்தபெனெந்து – கொடுக்கிறேன் என்று. சித்தஜனய்யனு – மன்மத பிதன் (ஸ்ரீஹரி). புனரபி – திரும்ப (புதிய கல்ப ஆரம்பத்தில்). சித்ரஜகத்த – விசித்ரமான ஜகத்தினை. நிர்மிஸித – ஸ்ருஷ்டித்தான்.

** ஸ்ரீஹரி, ப்ரதி பிரம்ம கல்பத்தில், அபாரமான அஸ்ருஜ்ய ஜீவராசிகளால், ஒவ்வொரு பாகத்தின் ஜீவராசியை ஸ்ருஷ்டியில் கொண்டு வந்து (ஸாதன தேகங்களைக் கொடுத்து) அவரவர்களின் கதியைக் கொடுக்க வல்ல சாதனைகளை செய்விக்கிறான். இந்த ப்ரமேயத்தின் விஷயத்திற்கு அபிப்பிராய பேதம் இருப்பதைப் போல தெரிகிறது. அஸ்ருஜ்ய ஜீவ ராஷிகள் அனந்தமாக இருக்கின்றன. அவற்றில் ஒரு பிடி எடுத்து (ஒரு பாகத்தை) ஸ்ருஷ்டி செய்வது, முஷ்டி ஸ்ருஷ்டி என்றும், சமஸ்த ஜீவராஷிகளையும் ஸ்ருஷ்டிக்கிறான் என்பது ஸமஷ்டி ஸ்ருஷ்டி என்றும் அழைக்கப்படுகிறது.

ஸ்தூல தேகங்களை அடையும் ஜீவர்களை விட்டு, மற்ற சர்வ ஜீவரும், ஸ்தூல தேகங்களை அடைந்து ஸாதனையில் ஈடுபடா விட்டாலும், ஸமானயோக்யதையின் ஸாதக ஜீவர்களின் கர்மங்களை ஸாக்ஷிபூதராக பார்த்தவாறு, அதன் நிமித்தமான லேப-ரஹிதராக இருக்கிறார்கள் என்று சொல்லப்படுகிறது. இதனை கர்மாபிமானிதஷா (தஷா – நிலை) என்கிறார்கள். இந்த ஒரு விசேஷ த்ருஷ்டியில் ஸர்வஜீவராசிகளும் ஸ்ருஷ்டர் ஆகின்றனர் எனலாம். பிரளய காலத்தில் கர்மாபிமானிதெஷெயும் இருப்பதில்லை என்பதால், ஸ்ருஷ்டி பிரளயங்கள் ஸர்வஜீவராசிகளுக்கும் உண்டு என்று அறிவதும் சரியானதாகும்.

ஸாதன தேகங்களை (ஸ்தூல தேகங்களையும்) அடைபவர்கள் மட்டும் ஸ்ருஷ்டர் ஆகின்றனர் என்று அறிந்தால், முஷ்டி ஸ்ருஷ்டி என்பதும் சரியானதே ஆகிறது. இவ்வாறு, வெவ்வேறு

அபிப்பிராயத்தின் பரிகாரமும் ஆகிறது என்று சிலர் சொல்கின்றனர். கர்மாபிமானிதெஷெ என்பது, 'லிங்கதேஹமாத்ரேண ஸ்வாபிமன்யமான கர்மமாத்ர ஷரீராஸ்ச ஸ்வாபிமன்யமான கர்மமாத்ர ஞானயுக்தா: ஸுப்தப்ராயா வர்த்தந்தே' (ஸத்தத்வ ரத்ன மாலா)

அதாவது, லிங்க சரீரம் மட்டும் உள்ளவராகி, தம்மிடமிருந்து செய்யப்பட்ட கர்மமே சரீரமாக உள்ளவராகி, அந்த கர்மத்தின் ஞானமாத்ர உள்ளவரானாலும், ஸுப்தரைப் போல (நித்ரை இல்லாததைப் போல) இருக்கிறார்கள் -- என்று நிரூபிக்கப்படிருக்கிறது. இதே விஷயத்தையே:

ஸ்வேச்சயைவ அனந்த கர்மணாமனந்த ஜீவராஷீனாம் ததேகைக கர்மாபிமானினாம் புனரனந்த கர்மாணீத்யேவம் அனந்தானந்த கர்மஜீவ ஸந்தானானாம் தத்தத்கர்ம ப்ரவர்த்தயதி நிவர்த்தயதி புண்யேன ஞானமுத்பத்ய பாபம் வினாஷ்ய தஸ்ய புண்யபாப ரஹிதஸ்ய ஞானின: ப்ரஸன்ன: ஸ்வயம் பலமனந்தம் ததாதீத்யதோ நாராயணஸ்ய அத்யாஸ்சர்யரூபோ மஹிமேத்யாஷய: -- (தத்வ பிரதீப)

இந்த வாக்கியத்தின் தாத்பர்யம் இதுவே. அனந்தகர்மகளு - அனந்த ஜீவராசிகள். அங்கு அனைத்து கர்மாபிமானி ஜீவனின் அனந்த கர்மங்கள். இவ்வாறு அனந்தானந்த கர்ம - ஜீவ சந்ததிகளின். ப்ரவர்த்தக - நிவர்த்தகனான நாராயணன். தன் இஷ்டப்படியே புண்யத்தினால் ஞானத்தை உருவாக்கி, பாபத்தை நாசம் செய்து, புண்ய பாப ரஹிதனான ஞானி ஜீவனுக்கு பிரஸன்னனாகி, அனந்த பல ரூபனான மோக்ஷானந்தத்தை கருணிக்கிறான் என்பது அவனின் (நாராயணனின்) அதி ஆஸ்சர்ய ரூப மஹாமகிமை ஆகிறது.

'கர்மாபிமானிதெஷெ என்பது இருக்கிறது என்பதை ஒப்புக் கொண்டே ஆகவேண்டும். இல்லையெனில், ஸமான யோக்யதை உள்ள அனைத்து சுஜீவிகளுக்கும் ஏக காலத்தில் ஸாதன பூர்த்தியாகி அனைவரும் முக்தர் ஆகிறார்கள் என்று சொல்ல

வேண்டியதாகிறது. அடுத்த பிரம்ம கல்பத்திற்கு, அந்த பகுதியின் சாதக ஜீவர்களில் அனைத்து தகுதிகளைக் கொண்ட ஜீவர்களும் இருந்தே இருக்கிறார்கள். இருக்கவே வேண்டும். கர்மாபிமானிதெஷெயில் இருக்கும் ருஜுகணத்தின் ஜீவர்கள், பகவந்தனின் ஞான மற்றும் பூர்ண அபரோக்ஷ ஞான (அன்ய வஸ்து விஷயக ஞான) உள்ளவர்களே ஆகின்றனர். இவர்களுக்குக் கீழான உத்தம தேவதைகள் (தத்வாபிமானிகளின் பத யோக்யர்கள்) ஸ்வாபிமான்யமான, ஸாதக ஸமான ஜீவனின் கர்மத்தை மட்டுமல்லாமல், மற்ற விஷயக ஞான உள்ளவரும் ஆகின்றனர். மற்ற ஸமஸ்த கர்மாபிமானிதாதெஷெயில் இருப்பவர்கள், அபிமன்யமானக கர்ம ஸாக்ஷிகள் மட்டுமே ஆகியவாறு ஸுப்த ப்ராயராக இருக்கிறார்கள். ஸத்தத்வ ரத்ன மாலாவின் வாக்கிய அர்த்தம் இவ்வாறு இருக்கிறது.

கர்மாபிமானிதெஷெயில் இருக்கும் ஸமான யோக்யதை உள்ளவர்கள், தமக்கு ஸ்ரீஹரியின் இச்சையினால் ஸாதன தேகங்கள் தொடர்ந்து கிடைப்பதைப் போல, சிலர் அடுத்த கல்பத்தில், வேறு சிலர் பல கல்பங்களுக்குப் பிறகு, மற்ற சிலர் அனந்த பிரம்ம கல்பங்களுக்குப் பிறகு முக்தர் ஆகிறார்கள் என்றும், இந்த விளக்கங்களில் புரிகிறது. இதற்காக பரமாத்மனில் சந்தேகப்படும்படியான வைஷம்ய தோஷத்தை பரிகரிக்கக்கூடிய விசேஷ விளக்கங்கள், பல ரகசிய பிரமேயங்களை உள்ளடக்கிக் கொண்ட, பழம்பெரும் ஞானிகளின் (டீகா டிப்பணிகாரர்களின்) சர்ச்சைக்குறிய வியாக்யான பாகங்களில் தெரிகிறது. குருகள் மூலமாக ஆழமான அத்யயனம் செய்தால் மட்டுமே இது புரிய வருகிறது.

**இது$^{3}$ லீலெ தனகெ$^{3}$ லக்ஷ்மிகெ$^{3}$ மஹைஸ்வர்ய**
**பத$^{3}$ படெ$^{3}$வுது$^{3}$ ஜீவரிகெ$^{3}$**
**ஸதா$^{3}$ ஸம்மிஸ்ர ப$^{2}$லவீவுது$^{3}$ அத$^{3}$ரிந்த$^{3}$**
**அது$^{3}$பு$^{4}$த$^{3}$ ஜக$^{3}$வ மாடி$^{3}$த$^{3}$னு ||2**

இது - இந்த ஜகத்ஸ்ருஷ்டி வியாபாரம். தனகெ - ஸ்வயம் ஸ்ரீஹரிக்கு. லீலெ - வெறும் க்ரீடையாகிறது. லக்ஷ்மிகெ - ஸ்ரீலட்சுமிதேவிக்கு. மஹைஸ்வர்ய - (தன் பதியின் ஆணைப்படி

## 3. ஸ்ருஷ்டி ஸந்தி

---

ஸ்ருஷ்டி காரியத்தில் தன் பாகத்தை நிர்வகித்து மகிழ்ச்சிப்படுத்தும் என்னும்) மஹா செல்வம் (அல்லது தன் ப்ரக்ருதி ஸ்வாமித்வத்தின் அபிவ்யக்தி ரூபத்தின் அசிந்த்ய ஷக்தியின் ஒளி). ஜீவருக்கு – ஜீவர்களுக்கு. பத படெவுது – ஸ்வயோக்ய கதிகளை அடைவது (இந்த ஸ்ருஷ்டியினால் ஆகும் பிரயோஜனம்). ஸதா – நிரந்தரமாக. ஸம்மிஸ்ரபலவீவுது – சுக, துக்க மிஸ்ர பலன்களைக் கொடுக்கிறது (ஸ்ரீஹரியின் ஸ்ருஷ்டி வியாபாரத்தின் நோக்கம்). ஆகையால் – இந்த காரணத்தால், அதுபுத – ஆச்சரியகரமான. ஜகவ – ஜகத்தினை. மாடிதனு – படைத்தான்.

* ஸ்ருஷ்டியினால், யாருக்கு எந்த ரூபத்தின் பலன் உண்டு என்பதை சொல்கிறார். ஸ்ரீஹரிக்கு மட்டும் எந்த பலனும் இல்லாத வெறும் லீலை ஆகிறது.

* ஸ்ரீஹரியின் ஸ்ருஷ்டி, நான்கு வகையானது.

1. ஷுத்த ஸ்ருஷ்டி: ஸ்ருஷ்ட்யாதிகளை நடத்துவதற்கு தன் விருப்பத்தினால் (அனந்த ரூபங்களை தனக்குள் அடக்கிக் கொண்டிருக்கும்) தன் மூலரூபத்தினால், ஸ்ரீஹரி வாசுதேவாதி ரூபங்களை வெளிப்படுத்தினான்.

2. பராதீன விசேஷவியாப்தி ரூபத்தின் ஸ்ருஷ்டி: 'லக்ஷ்ம்யாதீனாம் ஸ்ருஷ்ட்யாதௌ பகவதாக்ஞயா ப்ரக்ருதி ஸ்வாமித்வாதி விசேஷ ப்ராப்தி:' -- பாவ பிரகாசிகா). லட்சுமி முதலான தேவதைகளுக்கு ஸ்ருஷ்டி முதலான காரியங்களில், பகவந்தனின் ஆணையினால் ப்ரக்ருதிஸ்வாமித்வ முதலான விசேஷ நிலைகளை அடைவது. வேலையாள் என்றைக்கும் ஸ்வாமியின் அதீனனே. ஆனாலும், ஸ்வாமியின் சிறப்பான ஒரு ஆணையை நிறைவேற்றும் காரியத்தில் இருக்கும்போது, அந்த பராதீனத்வத்தின் விசேஷம் வெளிப்படுமாறு, லக்ஷ்ம்யாதி தேவதைகள் பகவத் ஸம்பந்தமான பற்பல வியாபாரங்களில் இருக்கும்போது, பராதீனத்வத்தின் விசேஷ ப்ராப்தி ஆகிறது. ஸ்ரீலட்சுமிதேவிக்கோ வெறும் பராதீன விசேஷாவாப்தி மட்டுமே –

மற்ற தேவதைகளைப் போல ப்ராக்ருத தேக சம்பந்தம் இல்லை - அவர்களுக்கு அதுவும் உண்டு.

3. மிஸ்ர ஸ்ருஷ்டி: ஸ்வரூபத: நித்யரான ஜீவசேதனருக்கு, லிங்கதேகத்தின் கலைகளுக்கு வலிமை - மற்றும் புற தேகங்களிலிருந்து முக்தர்களாக ஆக்குவது.

4. கேவல ஸ்ருஷ்டி: ஜட ஜகத்தின் பற்பல வஸ்துகளின் ஸ்ருஷ்டி - பிரளய காலத்தில் அழிந்து போன ஜகத் வஸ்துகளுக்கு ஸ்வரூபத: ஸ்ருஷ்டி செய்வது.

**லோஹித க்ருஷ்ண ஷுக்லக$^{3}$ளெனிப ப்ரக்ருதிய**
**தே$^{3}$ஹத$^{3}$ நிஜ ஷக்தியனித்து**
**ஸ்ரீஹரியத$^{3}$ரிந்த$^{3}$ வர்ணத்ரயத$^{3}$ ரேணு**
**வ்யூஹக்கெ பே$^{3}$ரெ பே$^{3}$ரிட்ட ||3**

ஸ்ரீஹரி - பகவந்தன். லோஹித கிருஷ்ண ஷுக்லகளெம்ப - சிவப்பு, நீல, வெள்ளை என்னும். ப்ரக்ருதிய - மூல ஜட ப்ரக்ருதியின். வர்ணத்ரயத - மூன்று வர்ணங்களைக் கொண்ட. ரேணுவ்யூஹக்கெ - ரஜ, தம, ஸத்வ என்னும் அம்சங்களின் ராசிக்கு. தேஹத நிஜஷக்தியனித்து - தன் ஸ்வரூப சக்தியைக் கொடுத்து (அவற்றில் நுழைந்து). அதரிந்த - மூல ப்ரக்ருதியினால். பேரெ பேரிட்ட - பிரவேசித்து (ஸ்ருஷ்ட்யாதிகளில் பயன்படுத்தும் பாகத்தை) எடுத்து வைத்தான்.

** மூலப்ரக்ருதி, அனந்தமானது. ஸ்ருஷ்ட்யாதிகளில் அதன் சிறிதளவு பாகங்கள் பயன்படுத்தப்படுகிறது. ஸ்ருஷ்டியில் பயன்படுத்தப்படும் ஸத்வ தமோ குணங்கள், மற்றும் உலகங்களில் (முறையே வைகுண்டாதி த்ரி தாமங்கள் மற்றும் தமஸ்களில்) பயன்படுத்தப்படுகின்றன. (வைகுண்டத்தில் ஷுத்த ஸத்வத்தின் உபயோகத்தை 1ம் மோட்ச சந்தியின் விவரணையில் பார்க்கலாம்). ஸ்ரீஹரி, ப்ரக்ருதியை ஸ்ருஷ்டித்து, குணங்களை நிறுவி, அந்த குணங்களில் பிரவேசித்து, அடுத்த மஹதாதி தத்வங்களை நிர்மாணம் செய்கிறான்.

---

** ஸத்வாதி குணங்களின் வர்ணங்கள் (வண்ணங்கள்), 'ரஜோராகாத்மகம்', 'தத்ர ஸத்வம் நிர்மலத்வாத்' ஆகிய வாக்கியங்களில் குறிப்பிடப்பட்டுள்ளன.

**ஸத்வவெம்ப$^3$ கு$^3$ண ஷுக்லாணுக$^3$ள ராஷி**
**ரக்தாணுக$^3$ளெ ரஜோகு$^3$ண**
**மத்தெ நீலாணுக$^3$ளு மொத்தவெத்தவெ தமோ கு$^3$ண**
**ப்ரத்யேக ஷக்திக$^3$ளித$^3$கெ ||4**

ஸத்வவெம்ப – ஸத்வ என்று அழைக்கப்படுவது. ஷுக்லாணுகள ராஷி – வெள்ளை வண்ண சூக்ஷ்மாம்சங்களின் ராசி. ரக்தாணுகளெ – சிவப்பு வண்ண அம்சங்களே. ரஜோகுண – ரஜோ குணம் என்பது. மத்தெ – மேலும். நீலாணுகளு – கிருஷ்ண வண்ண அம்சங்கள். மொத்தவெத்தவெ – சேர்ந்த ராசியே. தமோகுண – தமோ குணம் என்பது. இதகெ – இந்த ஒவ்வொரு ராசிக்கும். ப்ரத்யேக ஷக்திகளு – வெவ்வேறு கார்ய சாமர்த்தியம் (மற்றும் சக்தி சப்தத்தின் முக்கிய வாச்யளான ஸ்ரீ, பூ, துர்கா நாமக ஸ்ரீலட்சுமி ரூபங்களே நியாமகமாக உள்ளன).

த்ரிகுணங்களின் உற்பத்தி மற்றும் அவற்றின் காரியங்களின், 'விஷ்ணுரஹஸ்ய' த்தில் விளக்கமாக நிரூபிக்கப்பட்டுள்ளன. அவற்றின் உற்பத்தி வர்ணனை இவ்வாறு உள்ளது.

ப்ரக்ருதி பூதயாமாஸ தேவானாம் தேஹஸ்ருஷ்டயே |
ஸத்வ ராஷேஸ்தத: ஸத்வம் ஸ்ரீ:ஸமாதாய தஸ்துஷீ ||
தமோராஷேஸ்ததாதாய தமோதுர்கா வ்யவஸ்திதா |
அதிஷ்வேதம் ஷுத்தஸத்வம் அதிஷ்யாமம் தமஸ்ததா ||
ததோ மமேச்சயைவஷா லக்ஷ்மீர் பூரூபமாஸ்திதா |
ததோ பூஸ்தமஸோ ராஷே: கிஞ்சிச்சக்ரே தம: ப்ருதக் ||
ஸத்வராஷேஸ்ததா ஸத்வம் ப்ருதக்சைவ சகார ஹ |
விலோடயாமாஸ தம: ஸத்வே ஸத்வம் தமஸ்யபி ||
ததஸ்தஸ்மாத் ஸமாதாய மிஸ்ரீபூதாத் குணத்வயாத் |
பாகத்வயயுதம் சக்ரே ஷபலம் தத்ரசோபவத் ||
ஏவம் ராஷித்ரயே ஜாதே ஸ்ரீபூ துர்காபிரக்ஷிதே |

தேவதைகளின் தேக ஸ்ருஷ்டியை துவக்க விரும்பி ஸ்ரீஹரி, லட்சுமிதேவியை அதற்காக நியமித்தான். அவள் தன்னிடமிருந்து தோன்றிய மூல ஜடப்ரக்ருதியில் ஸூக்ஷ்மதம ரூபத்தினால் அடங்கியிருக்கும் அம்சங்களை (ஜடப்ரக்ருதியின் மிகக்குறைவான மாற்றங்களுடன் தனிமைப்படுத்தி), தன் ஸ்ரீரூபத்திலிருந்து சிறிது ஸத்வராஷியை, துர்கா ரூபத்திலிருந்து சிறிது தமோ ராஷியை எடுத்துக்கொண்டு, ஸ்ரீஹரியின் ஆணையை ஏற்று அவனின் எதிரில் நின்றாள். ஸத்வகுணம் - சுத்தமான வெள்ளை வண்ணம் கொண்டது. தமோ குணம் - கறுப்பு வண்ணம் கொண்டது.

பிறகு ஸ்ரீஹரியின் விருப்பப்படியே லட்சுமிதேவி பூ-ரூபத்தினால் வெளிப்பட்டு, ஸத்வ தமோ குணங்களின் ஒவ்வொரு பாகத்தை எடுத்துக் கொண்டாள். தமோ குணத்தை சத்வ குணத்திலும், சத்வ குணத்தை தமோ குணத்திலும் நன்றாக கலந்தாள். அதிலிருந்து வந்த சிறிது சிவப்பான வர்ணம், ரஜோ குணமாயிற்று. மூல ப்ரக்ருதியினால் இவ்வாறு த்ரிகுணங்கள் ஆனது. (த்ரிகுணங்களின் இந்த ஸ்ருஷ்டி, ப்ரக்ருதியின், அதி சூக்ஷ்ம விகாரத்தினால் ஆனதால், ப்ரக்ருதியே த்ரிகுணாத்மகம் என்றும் சொல்வதுண்டு). ஸ்ரீ, பூ, துர்கா ரூபங்களால் நியமனமான இந்த குணங்களால், மஹதாதி தத்வங்களின் ஸ்ருஷ்டி ஆகிறது. இந்த குணங்களால் ஆகும் பற்பல காரியங்களை அடுத்த நுடிகளில் விளக்குகிறார்.

**ஈ பரமாணுக³ள ரூபெம்ப³ தமோகு³ண**
**வ்யாபார ப³ஹளவாகி³ரலு**
**ஆ பூரணக³ளீவெ கு³ணவெந்து³ கரெத³ல்லி**
**தாபஸரித³கெ மெச்சுவரு ||5**

பரமாணுகள ரூபெம்ப - அதி சூக்ஷ்மாம்ஷங்களின் ரூபத்தைப் போல இருக்கும். ஈ தமோகுணவ்யாபார - இந்த தமோகுணத்தின் செயல்கள். பஹளவாகிரலு - அனேகமாக இருப்பதால், ஆ பூரணகளேவெ - அந்த காரியங்களை நிர்வகிக்கும் அவற்றின் சமூகத்தையே (அவற்றின் சகஜ சக்தியையே). குணவெந்து - குணம் என்று. கரெதல்லி - கூறினால். இதகெ - இப்படி சொல்வதற்கு (இந்த அர்த்தத்தை). தாபஸரு - ஞானிகள். மெச்சுவரு - சரி என்றே சொல்வார்கள்.

இதைப் போல, ஸத்வ மற்றும் ரஜங்களின் சூக்ஷ்மாம்ஷ சமூகங்களால் ஆகும் கார்யங்களை குறிப்பதான, அவற்றின் சஹஜ தர்மங்களே அந்தந்த குணங்கள் என்று அழைக்கப்படுகின்றன என்றும் அறிய வேண்டும். மற்றும் ஸத்வாதி அவற்றின் நாமங்களும் இந்த காரணத்தினாலேயே காரணப் பெயர்களாக இருக்கின்றன என்றும் அறிய வேண்டும்.

**யாவத்3 த்3ரவ்ய பா4வி கு3ணகெ குணியொளிரெ**
**பா4வவெம்ப3 ரஹஸ்யவன்னு**
**கோவித3ரிகெ3 தோருவுத3க்கெ ஈ கு3ணிக3ளல்லி**
**பா4வக்ஞர் கு3ணக3ளெம்பு3வரு ||6**

யாவத் த்ரவ்யபாவிகுணகெ – வஸ்து இருக்கும் வரைக்கும் இருக்கும் தர்மத்திற்கு, குணியொளிரெ – தர்மியில் இருந்தால். பாவவெம்ப – பாவத்ரவ்ய (பாவரூப பதார்த்த) என்னும். ரஹஸ்யவன்னு – ரகசிய அர்த்தத்தை (சாஸ்திரிய – குறியீட்டினை). கோவிதரிகெ – விவேகிகளுக்கு. தோருவுதகெ – சொல்வதற்கு. பாவக்ஞர் – (தர்க்க) அறிஞர்கள். குணக்ளெம்புவரு – ஸத்வாதிகளையும், குண என்று அழைப்பார்கள்.

பதார்த்தங்களின் தர்மங்கள் 'யாவத்த்ரவ்யபாவே' மற்றும் 'அமாவத்த்ரவ்யபாவி'கள் என்று பொதுவாக இரண்டு விதம். உதாரணத்திற்கு: பானை இருக்கும் வரை அதன் ரூபம், வண்ணம், தண்ணீரை பிடித்துக் கொள்ளும் சக்தி ஆகியவை அதன் தர்மங்கள் ஆகின்றன. பானை உடையும்போது அவையும் போய்விடுகின்றன. மாங்காய்க்கு இருக்கும் பச்சை வண்ணம், புளிப்பு ருசி ஆகிய சில தர்மங்கள், அந்த காய் இருக்கும் வரைக்கும் இருப்பதில்லை – மத்ய காலத்தில், அதாவது வஸ்து நாசத்திற்கு முன்பே போய்விடுகின்றன.

பானையின், மேலே கூறப்பட்ட தர்மங்கள் 'யாவத்த்ரவ்யபாவி'கள் என்றும், மாங்காயின் தர்மங்கள் 'அயாவத்த்ரவ்யபாவி'கள் என்றும் அழைக்கப்படுகின்றன. யாவத்த்ரவ்யபாவி தர்மங்களுக்கும் வஸ்துவிற்கும் அத்யந்த அபேதமே இருக்கின்றன.

அயாவத்த்ரவ்யபாவி தர்மங்களுக்கும் அந்த வஸ்துவிற்கும் பேதாபேத என்று சொல்லப்படுகிறது. பச்சை வண்ணம் இருக்கும்வரைக்கும் அதற்கும் மாங்காய்க்கும் அபேதமே - அந்த வண்ணம் சென்ற பிறகு பேதமே.

யாவத்த்ரவ்யபாவி தர்மங்களுக்கும் (குணங்களுக்கும், அந்த குணங்கள் உள்ள வஸ்துகளுக்கும் அபேத இருப்பதால், குணியையே குண என்றும் அழைக்கலாம். பாவ வஸ்துகளின் சம்பந்தமான நியமம் இவ்வாறு இருந்தால், அபாவ வஸ்துகளின் விஷயமே வேறு. பாவாபாவ வஸ்துஸ்வரூபங்கள், அங்கிருக்கும் பற்பல வகைகள், ஆகிய விவரங்களை சாஸ்திர பயிற்சியினாலேயே தெளிவாக தெரிந்து அறிந்து கொள்ளலாம்.

குணக்ரியாஜாதி பூர்வா: தர்மா: ஸர்வேடபி வஸ்துன: |
ரூபமேவ த்விதா தச்ச யாவத்வஸ்து ச கண்டிதம் ||
(ஸத்தத்வ ரத்ன மாலா)

என்பதன் விவரணையில்:
யாவத்த்ரவ்ய பாவிவிசிஷ்ட ஷுத்தயோரத்யந்தாபேத: |
அயாவத்த்ரவ்யபாவினோஸ்து பேதாபேதெள ||

என்று சொல்லப்பட்டிருக்கிறது. வஸ்துவை ஷுத்தம் என்றும், தர்மங்களைக் கொண்ட வஸ்துவை சிறந்தது என்றும் சொல்லப்படுகிறது. விசேஷ குணத்தினால் கூடியது 'விசிஷ்ட'. எந்த தர்மமும் இல்லாத (நிர்விசேஷ) ஷுத்த என்பது இல்லவேயில்லை - அது ஷூன்யமே ஆகும். ஷுத்த (வஸ்து) விசிஷ்டகளுக்கு அத்யந்த அபேத என்றே அறியவேண்டும் - குணங்கள் யாவத்த்ரவ்யபாவிகள் ஆனபோது - வஸ்து மற்றும் அதன் அஸ்தித்வ (இருப்பு) தர்மத்திற்கேற்பவே ஆகிறது.

**இப்பத்து நால்கு ஈ தத்வஸூக்ஷ்மக³ளிந்த³**
**தப்பத³ ஸ்தெள²ல்ய வப்பந்தெ**
**ஒப்புவ கு³ண த்ரயத³ கு³ணக³ள கூடி³ஸி**
**ஸர்வஷயன ஸ்ருஷ்டிஸுவனு ||7**

3. ஸ்ருஷ்டி ஸந்தி

-------------------------------------------------------------------------------------------

இப்பத்துநால்கு ஈ தத்வஸூக்ஷ்மகளிந்த - (த்ரிகுணங்களால் ஸ்ருஷ்டியான) 24 சூக்ஷ்ம (மஹத் - அஹங்காராதி) தத்வங்களால், தப்பத ஸ்பௌல்யவப்பந்தெ - கெடாத ஸ்தூலபாவம் கிடைப்பதைப் போல. ஒப்புவ - தகுதிக்கேற்ப. குணத்ரயத - ஸத்வாதி மூன்று குணங்களின். குணகள - குணாம்ஷங்களை. கூடிஸி - (சூக்ஷ்ம தத்வங்களின் சேர்க்கைக்காக) அவற்றுடன் சேர்த்து. ஸர்ப்பஷயன - (சேஷசாயி) ஸ்ரீஹரி. ஸ்ருஷ்டிஸுவனு - ஜகத்தினை படைக்கிறான்.

24 தத்வங்கள் எவை என்று - 2ம் சந்தியில் 2ம் பதத்தின் விவரணையை பார்க்கலாம். இவற்றால் நிர்மாணமான தேகங்களில் இருக்கும் ஜீவ பரமாத்மனையும் சேர்த்தால் 26 தத்வங்கள் ஆகின்றன. சில தத்வங்களை பரஸ்பர சமம் என்று கூறினால், சில தத்வங்களை அதிகம் / குறைவு என்று ஞானிகள் நிரூபிப்பதும் நடக்கிறது. த்ரிகுணங்களால் இந்த தத்வங்களின் உற்பத்தி ஆகியிருந்தாலும், முன்னர் கூறியதைப் போல, ப்ரக்ருதியே த்ரிகுணாத்மக என்றும் சொல்லப்படுவதால், அவ்யக்த (அதாவது ப்ரக்ருதி) தத்வத்தை ஒன்றே தத்வமாக சேர்த்து சொல்லப்படுகிறது.

த்ரிகுணங்களிலிருந்து முதலில் மஹத் தத்வம், அதிலிருந்து அஹங்கார தத்வ என ஒன்றிலிருந்து ஒன்று என முறையே ஸ்ருஷ்டி ஆகிறது. முந்தைய தத்வம், அடுத்த தத்வத்திற்கு காரணம் ஆனாலும், அடுத்தடுத்த தத்வங்கள் அதிக ஸ்தூலங்களானதால், அந்த ஸ்தூலபாவத்தை அடைவதற்கு, த்ரிகுணங்களின் அம்சங்கள் உபயோகிக்கப்படுகின்றன. இவ்வாறு சேர்ப்பதற்காக (ஸ்தூலபாவத்தைப் பெறுவதற்காக) பயன்படுத்தப்படும் த்ரிகுண பாவங்கள், பிரளயத்தில் த்ரிகுணங்களில் சேர்கின்றன.

இந்த குணத்ரயங்களில்கூட, ரஜோகுணத்தில் இருக்கும் சத்வ தமோ குணாம்சங்கள் (இவற்றின் கலவையால் ரஜோகுணம் நிர்மாணம் ஆகியிருப்பதால்), ஸத்வ மற்றும் தமோ குணங்களில் சேர்ந்திருக்கின்றன. அப்போது ஸத்வ தமோகுணங்களின்

கலவையானது ‘ப்ரக்ருதி’ என்றே அழைக்கப்படுகிறது. இந்த விவரம் அடுத்த பத்யங்களின் அர்த்தங்களில் வருகிறது.

தத்ர ச ப்ரளயகாலே மஹதாதி தத்வவினாஷே
தத்ஸூக்ஷ்மாண்ய வ்யக்ததாமாபத்யந்தே
ததுபசாயக குணத்ரயாம்ஷபூத மஹதாத்யுபாதான
பாக விசேஷாஸ்து குணத்ரயே ப்ரவிஷந்தி
குணத்ரயேsபி யத்ரஜ: தத்ஸத்வே தமஸி ச
மிஸ்ரிபவதி ந ததா ஸத்வாதி நாம
ப்ரக்ருதிரேவ ஹி ஸோச்யதே || (ஸத்தத்வ ரத்ன மாலா)

**பெ$^{3}$ரஸித$^{3}$ இப்பத்துமூரு தத்வங்க$^{3}$ள**
**பரமஸூக்ஷ்மாணு ராஷிக$^{3}$ள**
**தரதரதி$^{3}$ தெகெ$^{3}$து$^{3}$ தத்வக$^{3}$ள ஸால**
**விரசிஸுவது$^{3}$ ஸாலத$^{3}$லெ ||8**

**எஷ்டு மஹத்தத்வக$^{3}$ள ஸ்ருஷ்டிக$^{3}$ளாக$^{3}$பே$^{3}$**
**கஷ்டஷ்டே த்ரிகு$^{3}$ணத$^{3}$ம்ஷக$^{3}$ள**
**இட்டு மஹத்ததரிந்த$^{3}$ஹங்கார தத்வ**
**ஸ்ருஷ்டிஸுவுத$^{3}$கொந்தி$^{3}$ஷ்டிடு$^{3}$வ ||9**

**காரண தத்வராஷிக$^{3}$ளந்து$^{3}$ தெகெ$^{3}$தெகெ$^{3}$து$^{3}$**
**பே$^{3}$ரெஸித$^{3}$ த்ரிகு$^{3}$ணதம்ஷக$^{3}$ள**
**ஸேரிஸி உத்தரோத்தம தத்வங்க$^{3}$ள**
**ஸிரித$^{4}$ரனு மாடு$^{3}$வ க்ரமதி$^{3}$ந்த$^{3}$ ||10**

பெரஸித – ஒன்று சேர்த்த. இப்பத்துமூரு தத்வங்கள – (மூல அவ்யக்த தத்வத்தைத் தவிர, மற்ற அதிலிருந்து தோன்றிய) 23 மஹதாதி தத்வங்களின், பரம ஸூக்ஷ்மாணு ராசிகளின் – அத்யந்த சூக்ஷ்மமான அம்ஷராசிகளை. தரதரதி – பற்பல விதங்களில். தெகெது – பயன்படுத்தி. தத்வங்கள – மற்ற தத்வங்களின். ஸால – பரம்பரையை (வரிசையை). விரசிஸுவ அது ஸாலதலே – நிர்மாணம் செய்ய அது போதாமல் ||8எவ்வளவு மஹத்தத்வங்களின் ஸ்ருஷ்டிகள் ஆகவேண்டுமோ. அஷ்டஷ்டே – மஹத் தத்வத்தினால் ஆகவேண்டிய காரியங்களான

---

அஹங்காராதி தத்வங்களின் சேர்க்கைக்கு (ஸ்தூலபாவத்திற்கு) எவ்வளவு வேண்டுமோ அவ்வளவு பிரமாணத்தின் (அளவிற்கு). த்ரிகுணதம்ஷகள - ஸத்வாதி குணங்களின் அம்சங்களையும். இட்டு - வேறு வைத்து. மஹத்தத்வ - மஹத் தத்வத்தையும். அதரிந்த - அந்த மஹத் தத்வத்திலிருந்து. அஹங்காரதத்வ - அஹங்கார தத்வத்தையும். ஸ்ருஷ்டிஸுவுதகெ - படைப்பதற்கு. ஒந்திஷ்டு - தேவையான அளவு மஹத் தத்வ பாகத்தையும். இடுவ - வைத்துக் கொள்கிறான். ||9

காரணதத்வ தம்ஷகளந்து - (தம்மிலிருந்து உற்பத்தி ஆகும் தத்வங்களுக்கு காரணமாகும் தத்வங்களின் அம்சங்களை, தெகெதெகெது- வெவ்வேறாக எடுத்து, பெரெஸித த்ரிகுணதம்ஷகள - (தெரிந்த அளவுகளில்) எடுத்துக் கொண்ட ஸத்வாதி த்ரிகுணாம்ஷங்களையும். ஸேரிஸி - சேர்த்து, உத்தரோத்தர தத்வங்கள - அடுத்தடுத்த தத்வங்களயும். க்ரமதிந்த - முறையே (ஒன்று ஆனபிறகு மற்றொன்று என - ஒன்றிலிருந்து ஒன்றினை). ஷிரிதரனு - ஶ்ரீஹரி. மாடுவ - நிர்மாணிக்கிறான். ||10

முந்தைய 7ம் நுடியில் சொல்லப்பட்ட தத்வங்களின் உற்பத்தி பிரகாரத்தை; அடுத்த இந்த நுடிகளில் நிரூபிக்கிறார். அந்த நுடியின் விசேஷாம்ஷ பாகத்தை பார்க்கலாம்.

**மஹத்தத்வத$^{3}$ம்ஷக$^{3}$ளே மஹிமெயனீவவு**
**அஹம்தத்வதி$^{3}$ந்த$^{3}$ஹங்கார**
**ப$^{3}$ஹது$^{3}$ பு$^{3}$த்$^{3}$தி$^{4}$யு நிஸ்சயிஸி கொடு$^{3}$வுது நா**
**னா ஹம்ப$^{3}$லகி$^{1}$ய மனவு ||11**

மஹத்தத்வதம்ஷகளே - மஹத் தத்வத்தின் அம்சங்கள். மஹிமெயனு - பூஜ்யத்வத்தையும். ஈவவு - கொடுக்கிறது (அதாவது, பிறரால் பூஜ்யத்வத்திற்கு காரணமாகிறது). அஹம்தத்வதிந்த - அஹங்கார தத்வாம்ஷங்களிலிருந்து. அஹங்கார - அஹம் பாவம் (நாம் ஸ்வதந்த்ர கர்த, ஆகிய). பஹுது - உண்டாகிறது. புத்திய நிஸ்சயிசிகொடுவுது - (மற்றும்)

புத்தி நிஸ்சயம் உண்டாகிறது. மனவு - மனஸ் தத்வம். நானா ஹம்பலகீய - (சங்கல்ப நிகல்ப ரூபத்தின்). ஹம்பலகள - விருப்பங்களின் ஸ்வபாவ உள்ளவை.

**ஐது$^{3}$ ஞானேந்த்$^{3}$ரியக$^{3}$ளைது$^{3}$ கர்மேந்தி$^{3}$ரியக$^{3}$**
**ளைது$^{3}$ தன்மாத்ரக$^{3}$ள**
**ஐது$^{3}$ பூ$^{4}$தங்க$^{3}$ளிந்திப்பத்து நால்கு**
**ஆதி$^{3}$ காலத$^{3}$ தத்வங்க$^{3}$ளனு ||12**

ஐது ஞானேந்திரியகளு - கண் முதலான இந்திரியங்கள் ஐந்து. ஐது கர்மேந்திரியகளு - கை முதலான கர்மேந்திரியங்கள் ஐந்து. ஐது தன்மாத்ரெகள - ஷப்தாதி தன் மாத்ரங்கள் ஐந்து, ஐது பூதங்களு - ஐந்து ப்ருதிவ்யாதி பூதங்கள். அந்து - மொத்தம் 24. ஆதி காலத தத்வங்களனு - துவக்கத்திலிருந்தே இருக்கும் (அனாதி காலத்திலிருந்தும் அவ்யக்த தத்வத்தில் அடங்கி அதிசூக்ஷ்மத்தினால் அவ்யக்தமாகியே இருந்த) தத்வங்களை ஸ்ருஷ்டித்தான்.

** முன்னர் 7ம் நுடியின் பாகத்தில் சொல்லியிருக்கும் 24 தத்வங்களில், குணத்ரயத்திலிருந்து (ப்ரக்ருதியிலிருந்து) மஹத் தத்வமும், அதிலிருந்து அஹங்கார தத்வமும், மற்ற வகைகளான வைகாரிக, தைஜஸ, தாமஸாஹங்கார பாகங்களிலிருந்து, முறையே வைகாரிகத்திலிருந்து ருத்ராதி தத்வாபிமானிகளின் தேகங்களும், மற்றும் மனஸ்ஸூம், தைஜஸத்திலிருந்து - 10 ஞான கர்மேந்திரியங்களும், தாமஸத்திலிருந்து தன்மாத்ரங்களும் பஞ்சமஹாபூதங்களும், தோன்றுகின்றன.

** இந்த தத்வங்களிலிருந்து நிர்மாணமான தேகங்களில் இருக்கும் தத்வாம்ஷங்களால் ஆகும் காரியங்களில், மஹத்தத்வ மற்றும் அஹங்கார தத்வாம்சங்களின் காரியத்தை இந்த நுடியில் வர்ணிக்கிறார். இந்த காரியங்கள் ஆனபிறகு, அந்தந்த தத்வங்களின் அபிமானி தேவதைகளால் ப்ரேரிதனாகி, நிமித்த காரணங்கள் ஆகின்றன. - ஜட தத்வங்களுக்கு ஸ்வத: (தனக்குத்தானே) உற்பத்தி என்பது இல்லை.

3. ஸ்ருஷ்டி ஸந்தி

---

** வைகாரிக அஹங்காரத்திலிருந்து உற்பத்தியான மனஸ் தத்வத்தின் உற்பத்திகள், மனஸ், அஹங்கார, புத்தி, சித்த, சேதனங்கள் என்று ஐந்து விதமாக இருக்கின்றன. மனஸ்ஸிலிருந்து சங்கல்ப விகல்பங்கள், அஹங்காரத்திலிருந்து ஸ்வதந்த்ர கர்த்ருத்வாதி பாவங்கள், புத்தியிலிருந்து விவேகசக்தி, சித்தத்திலிருந்து ஸ்மரணை, சேதனத்திலிருந்து நினைவு சக்தி (முந்தைய பிறவியின் நினைவுகூட) என்பது இந்த பஞ்ச வ்ருத்திகளின் ஸாமான்ய நிரூபணையாகும்.

மனதின் இன்னொரு வகையான அஹங்காரம் – அஹங்கார தத்வம் அல்ல, மற்றும் புத்தி, புத்திதத்வம் என்று அழைக்கப்படுவது – மஹத் தத்வத்தின் வகையல்ல. பிரம்ம வாயு, சரஸ்வதி பாரதி இவர்கள் சிறப்பான விஞ்ஞான தத்வ, புத்தி தத்வ என்றும் சொல்லப்படுகிறது. இதற்கு சரஸ்வதி பாரதியர் நியாமகர்களாக இருக்கின்றனர். இந்த நால்வரின் தேகங்களும் மஹத் தத்வாத்மகமானவையே. மஹத் தத்வ மற்றும் அதன் வகைகளுக்கு அபிமானிகளான (ஸ்ரீஹரியின் அதீனராகி நியாமகரான) இவர்கள், ஒவ்வொரு புருஷ தேகத்திலும் இருக்கின்றனர். இவ்வாறே மற்ற தத்வங்களின் அபிமானி தேவதைகள் அனைவரும் தம்மால் அபிமான்யமான தத்வாம்ஷங்களில் இருக்கும் அம்சங்களில் இருந்து கொண்டு, அந்த தத்வங்களை நியமிக்கிறார்கள்.

முந்தைய தத்வங்களின் அபிமானிகள் அனைவரும், அடுத்து வரும் அனைத்து தத்வங்களின் அபிமானிகளின் நியாமகரும் ஆகியிருக்கின்றனர். வஸ்துகளில்கூட உத்தமாபிமானிகள், தங்களது அம்சத்தினால் வியாப்தராக இருக்கின்றனர் என்று அறியவேண்டும். தத்வாபிமானி தேவதைகள் யார் என்றால் – ப்ருதிவ்யாதி பஞ்சபூதங்களுக்கு, முறையே தராதெவி, வருண, அக்னி, ப்ரவஹவாயு, கணபதி, இவர்கள்; ஷப்தாதி பஞ்ச தன்மாத்ரங்களுக்கு, ஸௌபர்ணி (கருடபத்னி), வாருணி (சேஷ பத்னி), மற்றும் உமா (ருத்ர பத்னி) இவர்கள்; பற்பல பதார்த்தங்களில் இருக்கும் தன்மாத்ர அம்சங்களின் பற்பல சிறந்த

பிரமாண மிஸ்ரித சமூகங்களுக்கு, விசேஷாதிகார ரூபங்களால் நியாமகர்கள் ஆகின்றனர்.

வாகாதி பஞ்ச கர்மேந்திரியங்களுக்கு, முறையே, அக்னி, இந்த்ர, ஜயந்த, யம, தக்ஷ இவர்கள் அபிமானிகள். பஞ்ச ஞானேந்திரியங்களுக்கு முறையே சூர்ய, சந்த்ர, குபேர, வருண, அஷ்வினி தேவதைகள் அபிமானிகள். மனஸ் மற்றும் அஹங்கார தத்வங்களுக்கு, கருட, சேஷ, ருத்ரரும், மஹத் தத்வத்திற்கு சதுர்முக பிரம்மனும், அபிமானிகள். முக்யாபிமானிகளுடன், அவரின் அதீனராகி, செயல்களை செய்யும் அவாந்தர அபிமானிகள் என்று அழைக்கப்படும் மற்ற தேவதைகளும் தத்வங்களுக்கு அபிமானிகளாக இருக்கின்றனர். இந்த சம்பந்தமான விவரங்களை சாஸ்திரங்களை படித்து கவனித்து அறிய வேண்டும்.

இந்திரியங்களின் அபிமானிகள் உத்தம தேவதைகள். இவர்களைவிட அர்த்தாபிமானிகளான (தன்மாத்ரங்கள் உள்ள, இந்திரிய சம்பந்தப்பட்ட விஷயங்களுக்கு அபிமானிகளான) தேவதைகள் சிறந்தவர்கள். இவர்களைவிட அஹங்கார தத்வத்திற்கு அபிமானிகளான கருட சேஷ ருத்ரர் உத்தமர்கள். இவர்களைவிட சரஸ்வதி பாரதியர், அவர்களைவிட பிரம்ம வாயுகள் (மஹத் தத்வாபிமானிகள்) சிறந்தவர்கள்.
இவர்களைவிட ஸ்ரீலட்சுமிதேவியே சிறந்தவள். அவளைவிட ஸ்ரீஹரி அனந்தகுண அதிகன். அவனின் சமர் யாரும் இல்லை. அதிகமோ இல்லவேயில்லை. அவனே சர்வோத்தமோத்தமன்.

** 'ஆதிகால தத்வங்களனு' என்றதால், மஹதாதி தத்வங்களை, முதலில் இருந்தவற்றையே மறுபடி ஸ்ருஷ்டித்தான் என்னும் அர்த்தம் வருகிறது. பிரளய காலத்தில் மஹதாதி தத்வங்களும் நாசம் அடைகின்றன என்று சொல்வதை, அதிசூக்ஷ்ம ரூபத்தினால் அவ்யக்த நிலையை அடைந்து, ப்ரக்ருதியில் கலக்கிறது என்று அறியவேண்டும். தத்வங்களுக்கு ஸ்வரூபத: நாசம் இல்லை. அவ்யக்த தத்வ என்று அழைக்கப்படும் மூலப்ரக்ருதி, இந்த காரணத்தினாலேயே அசேதன விபாகங்களில் 'நித்யாநித்யவர்க்க' த்திற்கு சேர்கின்றன.

## 3. ஸ்ருஷ்டி ஸந்தி

---

அசேதனம் த்ரிதா ப்ரோக்தம் நித்யம் ஜானித்யமேவ ச |
நித்யாநித்யம் சேதி நித்யம் ஸர்வம் வ்யாப்தமுதாஹ்ருதம் ||
நித்யாஸ்து வேதவர்ணாஸ்ச பரமாகாஷ ஏவ ச |
அதாவது, நித்ய அனித்ய நித்யானித்ய என்று அசேதனம் மூன்று விதங்கள்.

அனைத்து இடங்களிலும் வியாப்தமானது – நித்யம். இங்கு நித்ய ஷப்தத்தினால் சொல்லப்படும் நித்யத்வம், நிர்விகாரமாகி ஆத்யந்த ஷூன்யமாக இருப்பதாகும். வேத வர்ணங்கள் அவ்யாக்ருதாகாஷங்கள் ஆகியவை நித்யமானவை.
ஸத்வம் ரஜஸ்தம இதி த்ரிவிதா ப்ரக்ருதிர்மதா |
ஸூக்ஷ்ம ரூபேண நித்யாபி விகாரித்வாதநித்யகா ||

ஸத்வரஜஸ் தமோகுணங்கள் என்று ப்ரக்ருதியே மூன்று விதங்களாக இருக்கின்றன. ஸூக்ஷ்ம ரூபத்தினால் நித்யமானாலும், இவை விகாரம் உள்ளவை ஆகையால், அனித்யமும் ஆகியிருக்கின்றன. இந்த காரணத்தினாலேயே ப்ரக்ருதி, 'ப்ரக்ருதி-ப்ரக்ருத்ய:' என்று ஏகவசன- பஹுவசன ஷப்தங்களால் சொல்லப்படுகிறது. நித்யமான பரமாகாஷம், 'அய:பிண்டாதி நிபிடபதார்த்த வதப்ரதீதாந்த
பேதவதேகத்வம்' – இரும்பு குண்டு முதலான கடினமான பதார்த்தங்கள், உட்பிரிவுகள் இல்லாத ஏகத்வத்தைக் கொண்டது. ஆனால், ப்ரக்ருதியின் ஏகத்வமோ:வாலுகபிண்டஸ்யைகத்வேபி தான்யஸமுதாயாதிவைலக்ஷண்யேன கடாதிவதேக சம்ஸ்தானத்வேபி வாலுகானாம் அவாந்தரபின்னானாம் ஸம்ஷ்லேஷ விஸ்லேஷவத்வேனைக ஏக விவாயம் வாலுகாபிண்ட இதி ஸமுதாயி வைலக்ஷண்யேன ப்ரத்யக்ஷஸித்த ஏகத்வாதி கரணத்வேபி ஸ்தூலஸூக்ஷ்மாதிதயா அவஸ்தித வாலுகானாம் பேத: ப்ரதீயதே ஏவமந்தர் பேதகடிதமேவ

சிறிய மண் உருண்டையானது, தானியம் முதலான கூட்டத்தைப் போல இருக்காமல், பானையைப் போல ஏகத்வ உள்ளதாகி, உள்ளிருக்கும் மண்ணின் வெவ்வேறு அம்சங்கள் ஒன்றாக சேர்ந்து கொண்டிருப்பதால், எவ்வாறு ஒரு மண் உருண்டை என்று

தெளிவாக தெரிகிறதோ, மற்றும் ஒன்றேயான மண் உருண்டையில், வெவ்வேறு அளவான மண் துகள்கள் சேர்ந்திருப்பது எப்படி தெரிகிறதோ, அப்படியே அதிசூக்ஷ்மரூபத்தினால் (அவ்யக்த நிலையை அடைந்த) இருக்கும் பின்ன தத்வங்கள் உள்ளதாகி அந்தர்கடித (உள்ளிருக்கும்) பேதம் உள்ளதே மூல ப்ரக்ருதி. இப்படியான சூக்ஷ்ம விஷயங்கள், மேலே உதாரணம் கொடுக்கபட்டுள்ள சத்தத்வ ரத்னமாலா வாக்கியங்களில் தெரிய வருகிறது. 'ஆதிகாலதத்வங்களனு' என்பதால் இந்த சூக்ஷ்ம ப்ரமேயம் குறிப்பிடப்படுகிறது.

**ஹத்து கரணக$^{3}$ள நித்யதி$^{3}$ விஷயக$^{3}$**
**ளர்த்தி$^{2}$ய தோரி ஈ மனவ**
**அத்தலெ எளெயலுண்டு$^{3}$ண்ட$^{3}$ஹங்கார**
**மர்த்யகெ$^{3}$ பே$^{3}$கு மஹத்தத்வ ||13**

ஹத்து காரணகள (கரணகள) - பத்து இந்திரியங்களுக்கு (அல்லது பல காரணங்களால்). நித்யதி - எப்போதும். விஷயகளர்த்திய தோரி - விஷயங்களில் ஈடுபாட்டினை உண்டாக்கி. ஈ மனவ - இந்திரியங்களின் மூலம் புற செயல்களைக் கொண்ட இந்த மனஸ்ஸினை. அத்தலெ - அந்த விஷயங்களின் பக்கம். எளெயலு - ஈர்ப்பதற்கு. உண்டுண்டு - விஷயங்களை மேலோட்டமாக போகித்து. அஹங்காரமர்த்யகெ - (அஹங்கார தத்வ பிரபாவத்தினால்) அதே சுகம். என்னும் மோகத்தினால் அதையே அனுபவிக்கிறேன் என்னும் அபிப்பிராயத்திற்கு உள்ளான மனிதனுக்கு. மஹத்தத்வ - மஹத் தத்வம். பேகு - (அந்த மோகம் - அபிமானங்கள் பரிஹாரத்திற்கு) அவசியம்.

** 11ம் நுடியில் சொல்லியதைப் போல பூஜ்யத்திற்கு (வணங்கத்தக்க) காரணமான மஹத் தத்வம், அந்த பூஜயத்திற்கு காரணமான ஞான லாபத்திற்கும், மோகாதிகளின் பரிகாரத்திற்கும் காரணம் ஆகிறது என்கிறார்கள்.

**நித்ய நைமித்திக ஸத்கர்மக$^{3}$ள**
**மரெது$^{3}$த்தமரொளு மத்ஸரிஸுவ**
**வித்த ஸம்பத்திகு$^{3}$ன்மத்தனாகி$^{3}$ ப$^{4}$வத$^{3}$ல்லி**

**ஸுத்தி ஸுத்தி அர்த்தியனும்ப3 ||14**

நித்ய நைமித்திக ஸத்கர்மங்கள - நித்ய (ஸந்த்யா முதலான) நைமித்திக (ஷுத்த, பர்வ, கிரஹண காலங்களின்) நியமிக்கப்பட்ட கர்மங்களை, (மரெவ - மறந்துவிடும்). உத்தமரொளு - தன்னைவிட உத்தமர்களில். மத்ஸரிஸுவ - மாத்ஸர்ய உள்ளவனும் ஆகிறான். வித்தஸம்பத்திகுன்மத்தனாகி - தனாதி ஐஸ்வர்யத்தினால் துரஹங்காரியாகி. பவதல்லி - சம்சாரத்தில். ஸுத்திஸுத்தி - திரும்பத்திரும்ப சுற்றியவாறு. அர்த்திய - துக்கத்தை. உம்ப - அனுபவிக்கிறான்.

** விஷயத்தில் ஈடுபடும் மனஸ்ஸினால் ஆகும் அனர்த்தங்களை இங்கு விவரிக்கிறார்.

**அங்க3னேயாஷெகெ3 சரண நடெஸுவுவு**
**கங்க3ளவரங்க3 தோருவுவு**
**ப4ங்கா3ர கொடுவவர எஞ்சலுணிஸுவுவு க**
**ர்ணங்க3ளு நுடி3 கேளிஸுவுவு ||15**

அங்கனெய - ஸ்த்ரீயினை. ஆஷெகெ - அடையவேண்டும் என்னும் ஆசைக்காக. சரண - கால்கள். நடெஸுவுது - சஞ்சாரத்தில் ஈடுபட்டிருக்கிறது. கங்களு - கண்கள். அவரங்க - ஸ்த்ரீயரின் தேகங்களை. தோருவுவு - காட்டுகிறது (கொண்டு வந்து மனதில் காட்டுகிறது). பங்கார கொடிஸுவவர - தங்கத்தை (விலையுயர்ந்த பொருட்களை) அடைபவரின். எஞ்சல - எச்சிலை. உணிஸுவுவு - தின்ன வைப்பது (அவரின் தாசராக ஆக்குகிறது). கர்ணங்களு - காதுகள். நுடி - (இத்தகையவரின் / விஷயங்களின் ஈடுபடுவோரின்) பேச்சுகளை. கேளிஸுவுவு - (மெச்சி) கேட்குமாறு (புகழுமாறு) செய்கிறது.

**துஷ்டன்னவுண்டு3 பொட்டெய பொரெவுவு**
**ஈ ப்4ரஷ்டர கூட்3யாடி3ஸுவுவு**
**கொட்டரெ போ1க3ளிஸுவுவை கொட3தி3ரெ பை4ஸுவுவை**
**கஷ்டக3தி கடெ3கெ3ளெஸுவவு ||16**

துஷ்டன்னவுண்டு - நிஷித்தமான ஆகாரங்களை உண்டு. பொட்டெய பொரெவுவு - (விஷயங்களிடம் இழுக்கும் இந்திரியங்கள்) வயிற்றினை திருப்திப்படுத்துகிறது. ஈ ப்ரஷ்டர கூடி - இந்த பதிதர்களுடன் சேர்ந்து. (விஷயங்களில் ஈடுபட்டு). ஆடிஸுவுவு - ஆடவைக்கிறது. கொட்டரெ - இந்திரியங்களின் விருப்பத்தை அடைந்தால். பொகளிஸுவுவை - (துர்மார்க்கிகளை) புகழ்கிறது. கொடதிரெ - அவற்றை அடையாவிட்டால். பைஸுவுவை - திட்டுமாறு செய்கிறது. கஷ்டகதிகடெகெ - துர்கதிக்கு (துக்கத்தின் பால்). எளெஸுவுவு - (ஜீவனை) இழுத்துக் கொண்டு போகிறது.

** விஷயங்களைக் குறித்து ஓடுவது, இந்திரியங்களின் ஸ்வபாவம். அவற்றை தடுத்து, மனஸ்ஸின் வசத்தில் வைக்காவிட்டால், ஆகும் அனர்த்தங்களை விவரமாக வர்ணிக்கிறார்.

இந்திரியஸ்யேந்த்ரியஸ்யார்த்தே ராகத்வேஷௌ வ்யவஸ்திதௌ
தயோர்னவஷமாகச்சேத்தௌ ஹ்யஸ்ய பரிபந்தினௌ || (கீதை)

இந்திரியஸ்த - கண்கள் முதலான இந்திரியங்களுக்கு. இந்திரியஸ்ய அர்த்தே - (ரூபாதி) இந்திரியார்த்தங்களில். ராகத்வேஷௌ - கோபமும் (ப்ரதிகூல வஸ்துகளில்) த்வேஷமும் (அதன் காரணமாக லோப, மோஹ, மத, மத்ஸரங்களும்). வ்யவஸ்திதௌ - தவறாமல் கிடைக்கிறது. தயோ: - இந்த ராக த்வேஷங்களின். வஷம் - அதீனதையை. ந கச்சேத் - அடையக்கூடாது. ஹி - ஏனெனில். தௌ - அவை. அஸ்ய - ஜீவர்களுக்கு. பரிபந்தினௌ - புகழைக் கெடுக்கக்கூடியவை.

மற்றும்

இந்திரியாணாம் ஹி சரதாம் யஸ்ய நோடனுவிதீயதே |
ததஸ்ய ஹரதி ப்ரஞ்ஞாம் வாயுர் நாவமிவாம்பஸி || (கீதை)

விஷயங்களை பின் தொடர்ந்து செல்லும் இந்திரியங்களின் பின்னேயே மனஸ் (ஸ்ரீஹரி ப்ரேரிதமாகவே) செல்கிறது. மனஸ்,

## 3. ஸ்ருஷ்டி ஸந்தி

---

இந்திரியங்களை அனுசரித்தால், புயலில் சிக்கிய தோணியைப் போல, வழி தவறி, இதுவரை பெற்றிருந்த ஞானத்தையும் (சாஸ்திரத்தினால் கற்ற விதி நிஷேதங்களைப் பற்றிய விவேக ஞானத்தையும்) இழக்கிறது என்றும் ஶ்ரீகிருஷ்ணன் உபதேசிக்கிறான். ஞானியும் தனது பூர்வ சம்ஸ்கார பலத்தினால், ராகத்வேஷங்களுடனேயே பிறந்து, இருக்கிறான். இவ்வாறு இருக்கையில் அஞ்ஞானியின் விஷயங்களில் சொல்வதற்கு என்ன இருக்கிறது.

இச்சாத்வேஷ ஸமுத்தேன த்வந்த்வ மோஹேன பாரத |
ஸர்வபூதானி ஸம்மோஹம் ஸர்கே யாந்தி பரந்தப || (கீதை)

அனைத்து பிராணிகளும், ஸ்ருஷ்டி காலத்தில், ராகத்வேஷங்களாலும், அவை கொடுக்கும் மோகாதிகளாலும் சேர்ந்து பிறந்து, ஸ்தூல தேகத்தில் இருக்கும்போது விசேஷ மோகத்தினாலேயே நடமாடுகின்றன – என்றும் சொல்லியிருக்கிறான். இப்படி இருந்தால், இந்திரிய நிக்ரஹ என்பது சாத்தியம் இல்லை என்றே சொல்லவேண்டும் அல்லவா என்னும் சந்தேகத்திற்கு பரிகாரம் வேண்டுமே?

ப்ரக்ருதிம் யாந்தி பூதானி நிக்ரஹ: கிம் கரிஷ்யதி
பிராணிகள் தம் ஸ்வபாவத்திற்கேற்ப இருக்கின்றன. எதை நிக்ரஹம் செய்தன? என்பதும், நிக்ரஹ முயற்சி வீண் என்றே குறிக்கிறது அல்லவா? இதன் பரிகாரத்தை, கீதா விவ்ருத்தியில் ஶ்ரீராகவேந்திர ஸ்வாமிகள் இவ்வாறு சொல்லியிருக்கிறார்.

நிக்ரஹாத்ஸத்ய: ப்ரயோஜனாபாவே஽பி பவத்யேவாதி ப்ரயத்னத:
இந்திரிய நிக்ரஹ முயற்சிக்கு, தற்காலத்தில் பிரயோஜனம் தெரியாவிட்டாலும், அதி-பிரயத்தினத்தால் காலாந்தரத்தில் பலன் உண்டு. முயற்சி வெற்றி அடைவதில் ஜீவஸ்வபாவம் பிரதான காரணம் என்று மட்டும் அறிய வேண்டும் என்று சொல்லியிருக்கிறார்.

**இந்த$^{2}$ தத்வங்க$^{3}$ளிகெ$^{3}$ ஒடெ$^{3}$யனாத$^{3}$ தே$^{3}$வ**

**ப்⁴ராந்தியனீவ கெடி³ஸுவ**
**பூ⁴தளதொ³ளக³ரஸின மனெ ஸங்கோலெ**
**ஆதன கால கட்டுவுதெ³ ||17**

இந்த - இவ்வாறு இருக்கும். தத்வங்களிகெ - இந்திரியாதி தத்வங்களுக்கு. ஒடெயனாத - ஸ்வதந்த்ர ப்ரேரிதனாகி அவற்றை ஆளும். தேவ - ஸ்ரீஹரி. ப்ராந்தியனீவ - (இந்திரியங்களை திருப்திப்படுத்துவதே குறிக்கோள் - அதுவுமே சுகம் என்னும்) மயக்கத்தைக் கொடுக்கிறான். கெடிஸுவ - மோட்ச மார்க்கத்தை விட்டு விலக வைக்கிறான். பூதளதொளகெ - இந்த உலகத்தில். அரஸினமனெ - அரண்மனைகூட (பரிபூர்ண போகப் பொருட்கள் கூட). ஸங்கோலெ - தடைகளே ஆகும். ஆனால், ஆதன காலகட்டுவுதே - உலக நாயகனான (அனைத்து இந்திரிய போகங்களைக் கொடுக்கும்) ஸ்ரீஹரிக்கு தடை வருமா? (வராது).

** பந்தகோ பவபாஷேன மோசகஸ்ச ஸ ஏவ ஹி -- என்னும் ஸ்ருதி, ஸ்ரீஹரியே சம்சார என்னும் பாஷத்தினால் கட்டுகிறான் என்றும், அந்த கட்டினை விடுவிப்பவனும் அவனே ஆகியிருக்கிறான் என்று சொல்கிறது. ஜீவன் இந்திரியங்களின் வசனாகி விஷய போகாசக்தன் ஆவது ஸ்ரீஹரியின் விருப்பப்படியே, ஜீவர்களின் யோக்யதைக்கேற்ப ஸ்ரீஹரி தீர்மானிக்கிறான்.

யோக்யதை என்றால், ஸ்வரூப யோக்யதை மற்றும் பூர்வகர்ம, சம்ஸ்கார மற்றும் ஸாதன முயற்சிகள். சம்ஸாரத்திற்கு காரணமான அனாத்ய வித்யாகாம கர்மங்கள் ஆகும். (ப்ரக்ருதி மற்றும் அதன் குணங்களும்) ஜடமானதால், ஸ்வதந்த்ர பிரபுவான ஸ்ரீஹரியின் சக்தியை விட்டு, ஸ்வத: ஜீவனை கட்டுப்படுத்தாது. (ஜட) ப்ராக்ருத இந்திரியங்களும் அவனின் ப்ரேரக சக்தி இல்லாமல், விஷயங்களிடம் மனஸ்ஸினை இழுப்பதற்கு அஸமர்த்தன் என்பதே சரி.

** விஷயிக சுகங்கள் அல்பமானவை மற்றும் தற்காலிகமானவை. அனைவரும் விரும்பவேண்டியது, துக்கமில்லாத நித்ய சுகமே.

## 3. ஸ்ருஷ்டி ஸந்தி

---

யே ஹி ஸம்ஸ்பர்ஷஜா போகா:துக்க யோனய ஏவ தே |
ஆத்யந்த வந்த:கௌந்தேய ந தேஷு ரமதே புத: || (கீதை)

விஷயேந்திரிய சம்பந்தத்தினால் கிடைக்கும் சுகமானது, துக்கத்திற்கு காரணம் ஆகிறது. இந்த விஷயிக போகங்களும், உற்பத்தி / நாசம் ஆகியவற்றைக் கொண்டவை. அழியக்கூடியவை. விவேகி இவற்றில் ஈடுபடுவதில்லை (ஈடுபடக்கூடாது) என்பதே ஸ்ரீகிருஷ்ணனின் உபதேசம். விஷயிக சுகமும்கூட துக்கத்திற்கு காரணமாகிறது. இந்த சுகத்தில் ஈடுபட்டவன், அதனை அடைவதற்காக திரும்பத்திரும்ப தேகங்களை அடைந்தவாறு சம்சாரத்திலேயே சிக்கிக் கொள்கிறான். ஆகையாலேயே சுகரூபமானாலும், அவை (தங்க கைவிலங்குகளைப் போல) பந்தனங்களே ஆகும். அவை இரும்பினால் செய்யப்படவில்லை என்றும், தங்கமே ஆனதால் அதில் போய் சிக்கிக் கொள்ள விவேகி விரும்புவானா? (இல்லை).

**ஜீவராஷிக3ளிகெ3 ஈ தரங்க3க3ளிந்த3**
**நோவ நெனெவ ப4வதொ3ளகெ3**
**தாவித3கொளகா3க3தி3ஹரு ஸ்ரீஹரிய க்ரு**
**பாவலோகன த3யதி3ந்த3 ||18**

ஜீவராஷிகளிகெ - ஜீவசமூகங்களுக்கு (அனைவருக்கும்). ஈ தரங்ககளு - சுக துக்க ரூபத்தின் சம்சார ஸாகரத்தின் அலைகள் (இருக்கின்றன - வேறு எந்த வஸ்துவிற்கும் இல்லை). இத நோவ நெனெவ பாவதொளகெ - இந்த துக்கத்தினைப் போலவே (துக்கம் எப்படி கஷ்டமானதோ / முயற்சி செய்து அவற்றை அடைவதற்கு தகுதி இல்லாதவையோ அப்படி) என்று அறிந்து, தாமும் (சில) ஜீவர்களும், இதகெ - இந்த விஷயிக சுகத்திற்கு (இந்த அலைகளுக்கு). ஒளகாகதெ - சிக்காமல். ஸ்ரீஹரியின் க்ருபாவலோகனதயதிந்த - ஸ்ரீஹரியின் க்ருபாகடாக்ஷத்தின் அருளால். இஹரு - இருக்கின்றனர்.

** சுகஸ்யானந்தரம் துக்கம் துக்கஸ்யானந்தரம் சுகம் - என்பது, சுக துக்கங்கள் ஒன்றன்பின் ஒன்றாக வருவது (கடல்

அலைகளைப் போல) சம்சாரத்தின் ஸ்வரூபம் ஆகும். ஸ்ரீஹரியின் க்ருபாபாத்திரரான சிலர் மட்டும் இந்த அலைகளில் சிக்காமல் இருப்பார்கள்.

**இந்த[2] ப்[4]ராந்தியீவ தத்வங்க[3]ளிவெ ம**
**ஹாந்தரஞான தொ[3]ரகொளலு**
**ஸந்தத ஸ்ரவணாதி[3] ஸன்மார்க்க[3]க்கெரகி[3]ஸி**
**கந்துபிதன தோரிஸுவுவோ ||19**

இந்த - இந்த பிரகாரத்தின். ப்ராந்தியீவ - சம்சார பிரமைக்கு காரணங்களான. தத்வங்களு - தத்வங்கள். இவெ - இவையே. (இந்த தத்வங்களே) மஹாந்தரஞான - சிறந்த ஞானத்தை. ஹொரகூளலு - அடைவதற்கு. ஸந்தத - எப்போதும். ஸ்ரவணாதி - சிரவண முதலான ஸன்மார்க்கக்கெ - நல்வழியில். எரகிஸி - சேர்ந்து. கந்துபிதன - மாரஜனகனை (ஸ்ரீஹரியை). தோரிஸுவுவோ - காட்டுகிறது பார்.

** மஹாந்தரஞான - சர்வோத்தமனான அந்தர்யாமி (பிம்பனின்) ஞானம்.

** ஆத்மா வாடரே த்ருஷ்டவ்ய: ஸ்ரோதவ்யோ மந்தவ்யோ நிதித்யாஸி தவ்ய: -- பரமாத்மனை காணவேண்டுமெனில், ஹே அல்பமானவனே, ஸ்ரவண, மனன, தியானங்களை செய்ய வேண்டும். என்னும் ஸ்ருதிக்கான சாதனைகள், ஸ்ரீஹரியின் க்ருபா பாத்திரங்களான இந்திரியங்களாலேயே சாத்தியம்.

**ஹரியுத்த நடெ[3]ஸுவுவு ஹரிநாம நுடி[3]ஸுவுவு**
**ஹரிபூஜெக[3]ள மாடி[3]ஸுவுவு**
**ஹரிமூர்த்தி நோடி[3]ஸி ஹரிகீர்த்தி பாடி[3]ஸி**
**நரரஹங்க்ருதி கெடி[3]ஸுவுவு ||20**

ஸன்மார்க்கத்தில் இருக்கும் தத்வங்கள் ஜீவனை மேம்படுத்தும் விதத்தை விளக்குகிறார். ஹரியத்த - ஸ்ரீஹரியிடம். நடெஸுவுவு - சஞ்சாரம் செய்விக்கிறது (பாதங்கள் ஸ்ரீஹரியின் சன்னிதானம் உள்ள புண்ய க்ஷேத்திர யாத்திரையை செய்விக்கிறது). ஹரி நாம - ஸ்ரீஹரியின் நாமங்களை. நுடிஸுவுவு - (வாக் இந்திரியங்கள்)

உச்சரிக்குமாறு செய்கிறது. ஹரிபூஜெகள – ஸ்ரீஹரியின் அர்ச்சனை ஆகியவற்றை. மாடிஸுவுவு – (கைகள்) செய்விக்கின்றன. ஹரிமூர்த்தி – ஸ்ரீஹரியின் சலாசல பிரதிமைகளை. நோடிஸி – (கண்கள்) பார்க்குமாறு செய்து. ஹரிகீர்த்தி – ஸ்ரீஹரி மகிமைகளை. பாடிஸி – (நாக்கு) பாட வைத்து. நரர – மானவர்களின். அஹங்க்ருதி – அஹங்காரத்தை (கர்த்ருத்வாதிகளை – அஹம் மமகாரங்களை. கெடிஸுவுவு – விடுவிக்கிறது (தெளிவுபடுத்துகிறது). இந்திரியங்களின் ஸாமர்த்தியங்களை நிரூபித்து, அதற்காக ஸ்ரீஹரியின் அருளை பிரார்த்திக்க வேண்டும் என்கிறார். ஸ்ரீமன் பாகவதத்தின் உபதேசம் சொல்வதை அறியவேண்டும்.

வாணி குணானுகதனே ஸ்ரவணௌ கதாயாம்
ஹஸ்தௌ ச கர்மஸு மனஸ்தவ பாதயோர்னௌ |
ஸ்ம்ருதம் ஷிரஸ்தவ சுரப்ரவர ப்ரணாமே
த்ருஷ்டி:ஸ்தாம் தர்ஷனேடஸ்து பவத்தனூனாம் || (பாகவத)

உன் குணகீர்த்தனையில் என் வாணியும், உன் சரித்திரங்களை கேட்பதில், என் காதுகளும். உன் க்ருஹ மார்ஜன, அர்ச்சனாதி கர்மங்களில் என் கைகளும். உன் பாத ஸ்மரணையில் என் மனதும், உன் நமஸ்காரத்தில் என் தலையும், உன் ரூபங்களையும் உன் பக்தர்களையும் (உன் பிரதிமைகளான பக்தரையும்) பார்ப்பதில் என் கண்களும், ஈடுபடுமாறு அருள்வாயாக. இந்திரியங்களை இவ்வாறு பயன்படுத்தி சாமர்த்தியம் அடையச் செய்வதற்கு ஸ்ரீஹரியின் அருளால் மட்டுமே சாத்தியம் என்று சொல்லப்படுகிறது.

**உக்கு தக்3கி3ஸுவுவு ஸொக்கு நில்லிஸுவுவு**
**ஸத் கர்மக்கொரகி3ஸுவுவு**
**துக்க2வனீவ பஞ்சபூ4தாத்மக தே3ஹ**
**த3க்கர பி3டி3ஸி ரக்ஷிஸுவுவு ||21**

நல்வழியில் ஈடுபடும் மன முதலான இந்திரியங்கள் எதை சாதிக்க முடியும் என்பதை விளக்குகிறார். உக்கு – ஆசைகளை (நான் என்

அபீஷ்டங்களை சாதித்துக் கொள்ள முடியும் என்னும் ஸ்வாபிமானாதிகளை) தக்குஸுவுவு - குறைக்கிறது. ஸொக்கு - துரஹங்காரத்தினை (என்னைப் போன்ற ஞானி வேறு யாரும் இல்லை என்பது போன்ற). நில்லிஸுவுவு - தடுத்து நிறுத்துகிறது. ஸத்கர்மக்கெ - புண்ய கர்மங்களில். ஒரகிஸுவுவு - அதிக ஈடுபாட்டினை உண்டு பண்ணுகிறது. துக்கவனீவ - (பற்பல விதமான) துக்கங்களை உருவாக்கும். பஞ்சபூதாத்மக தேஹத - ப்ருதிவ்யாதி பூதங்களினால் ஆன தேக சம்பந்தமான. அக்கர பிடிஸி - மோகத்தை (தேகமே நான் - தேகம் என்னுடையது என்னும் அஞ்ஞானத்தை) விடுத்து. ரக்ஷிஸுவுவு - காப்பாற்றுகிறது. (வாழ்க்கையை துர்பாவனைக்கு அடிபணியாமல் காப்பாற்றுகிறது - ஸ்ரீஹரிகிருபையினால் சன்மார்க்கத்தில் இருக்கும் மன முதலான இந்திரியங்கள்).

**ஈஸு புண்ய மாடி³ தி³னதி³னதி³ தே⁴னிஸலு**
**ஸ்ரீஷ ஸந்தோஷிஸி தன்ன**
**பா⁴ஸுர மூர்த்திய கண்ணிகெ³ கா**
**ணிஸிகொடு³வ தோ³ஷங்க³ளனு தூ³ரோடி³ஸுவ ||22**

ஈஸு புண்யவ மாடி - இவ்வளவு (இவ்வகையான) ஸத்கர்மங்களையும் (பற்பல இந்திரியங்களால்) செய்தவாறு. தினதின - தினம்தோறும். தேனிஸலு - (ஸ்ரீஹரியின்) தியானத்தில் ஈடுபட. ஸ்ரீஷ - ரமாபதி. ஸந்தோஷிஸி - மகிழ்ந்து. தன்ன ஆ பாஸுரமூர்த்திய - தன்னதான (ஸ்ரீஹரியின் ஜீவாந்தர்யாமி பிம்பமான) திவ்யரூபத்தினை. கண்ணிகெ காணிஸிகொடுவ - ப்ரத்யக்ஷ தர்ஷனம் செய்விக்கிறான். தோஷங்களனு - அனைத்து பாவங்களையும் (தரிசனத்திற்குப் பிறகு துக்க, அஞ்ஞானாதிகளை). தூரோடிஸுவ - விலக்குகிறான்.

** ஸ்ரீஹரியின் தரிசனத்தினால், மேரு பர்வததைப் போல இருக்கும் பாபராஷிகள், பஞ்சுப் பொதியில் நெருப்புத்துண்டு புகுந்ததைப் போல, சுட்டுப் பொசுக்கப்படுகின்றன. ஆனால், தரிசன காலத்திற்கு பலன்களைக் கொடுக்கத் துவங்கியிருக்கும் (பிராரப்த) கர்ம மட்டும் பல (பலன்) பூர்த்திக்குப் பிறகே நஷ்டமாகின்றன. இந்த பிராரப்த கர்மத்தின் பல போகத்தின் காலத்தில்

சம்பவிக்கக்கூடிய பாப புண்யங்கள் குறைவதில்லை. ஜன்மாந்தரங்களை அடைந்து, துக்காதி போகத்திற்கு காரணங்கள் ஆவதில்லை. 'ஓம் தததிகம உத்தர பூர்வாக யோரஷ்லேஷ வினாஷெள தத்வ்யபதேஷாத் ஓம்' என்னும் பிரம்மஸூத்ர நிர்ணயம் இந்த பிரமேயத்தை நிரூபிக்கிறது.

** தததிகமே – பிரம்ம தர்ஷனம் ஆகையில், உத்தர பூர்வாகயோ: – அதன் பிறகான மற்றும் முதலாம் பாவங்களுக்கு. அஷ்லேஷவினாஷெள – சம்பந்தப்படாத அழிவுகள். (doubt) தத்வ்யபதேஷாத் – ஸ்ருதியே அப்படி சொல்வதால், 'தத்யபைஷிகா தூலமக்னௌ ப்ரோதம் ப்ரதூயதே' ஏவம் ஹைவாஸ்ய ஸர்வே பாப்மான: ப்ரதூயந்தே' என்றால், அக்னியுக்தமான ஒரு த்ருண (பற்குச்சி), பஞ்சுப் பொதியில் நுழைந்தால், எப்படி அதனை (அந்த பெரிய பஞ்சுக் குவியலை) சுட்டுப் பொசுக்குகின்றதோ, அப்படியே பிரம்மஞானியின் (பிரம்மசாட்சாத்காரத்தைப் பெற்றவனின்) அனைத்து பாவங்களையும் (பாப ராஷிகளையும்) நாசப்படுத்துகிறான் என்று சாந்தோக்ய ஸ்ருதி சொல்கிறது.

** மனதிற்கு ராக, த்வேஷங்களே மலம். புண்யத்தினால் இந்த மலம் நஷ்டமாகின்றன. ஸத்கர்மானுஷ்டானத்தினால் புண்ணியத்தின் உதயம் ஆகிறது. மல ரஹிதமான ஷுத்த மனஸ்ஸானது, தியான சித்திக்கு அவசியம். எப்போதும் ஸத்கர்மங்களில் ஈடுபட்டிருப்பவனின் மனதில் ராக த்வேஷங்கள் அபிவ்ருத்தி அடைவதற்கு இடமே இருப்பதில்லை. பூர்வ ஸம்ஸ்காரத்தினால் வந்திருப்பவை, கால கிரமத்தில் புண்யாதிக்யத்தினால் அழிந்துவிடுகின்றன.

**அந்தரவில்லத³ ஸ்வரூப ஸுக²த³னுப⁴வகெ**
**அந்தராயவ மாள்பவெந்து³**
**சிந்திஸி துதி³யொளீ ஸந்தயிஸுவந்தெ ஶ்ரீ**
**காந்தன ஸந்தர் பே³டு³வரு ||23**

அந்தவில்லத - நித்யமான (நாஷரஹிதனும் நிரந்தரமும் ஆன). ஸ்வரூப ஸுகத - ஸ்வரூபானந்தத்தை. அனுபவகெ - அனுபவிப்பதற்கு. அந்தராயவ - விக்னத்தை. மாள்பதெந்து - (இந்திரியங்களின் வசமான அஷுத்த மனஸ்) செய்கிறது என்று. சிந்திஸி - அறிந்தே. ஈ துதியொளு - முதலில். ஸந்தெய்ஸுவந்தெ - (இந்திரியங்களின் செயல்பாட்டினால்) இந்த மனஸ்ஸினை காப்பாற்றுமாறு (சர்வேந்திரியங்கள் ஸத்கர்மங்களில் ஈடுபடுமாறு அருளி காப்பாற்ற வேண்டுமென்று). ஸந்தர் - ஸுஜீவிகள் (முக்தி யோக்யர்கள், சுகஞானாதி ஸ்வரூபம் உள்ளவர்கள்). ஸ்ரீகாந்தன - லட்சுமிபதியை. பேடுவரு - வேண்டிக் கொள்கிறார்கள்.

**கண்ணாஷெ காணுவுது$^{3}$ கர்ணாம்ஷெ கேளுவுது$^{3}$**
**ரஸனதா$^{3}$ஷெ ஸ்வாதி$^{3}$புது$^{3}$**
**பி$^{4}$ன்ன தத்வக$^{3}$ளிகெ$^{3}$ பி$^{4}$ன்ன கார்யவன்னு**
**மாடு$^{3}$வ ஷக்தி காணிரோ ||24**

காணுவுது - பார்க்க வேண்டும் என்பது. கண்ணாஷெ - கண்ணின் ஆசை. கேளுவுது - கேட்க வேண்டும் என்பது. கர்ணாஷெ - காதுகளின் ஆசை. ஸ்வாதிபுது - ருசி பார்க்க வேண்டும் என்பது. ரஸனதாஷெ - நாக்கின் ஆசை. பின்னதத்வகளிகெ - வெவ்வேறு தத்வங்களுக்கு. பின்னகார்ய - வெவ்வேறு காரியங்களையே. மாடுவ ஷக்தி காணிரோ - சக்தி இருக்கிறது என்பதை ஸ்வானுபவம் என்று சொல்கிறது அல்லவா? (ஒன்றின் காரியத்தை இன்னொன்று செய்யாது).

** இந்திரியங்களே முதலான தத்வங்கள் தமக்கு சகஜமான வ்யாபாரங்களில் மட்டும் சமர்த்தர்கள். ஸ்ரீஹரியின் இந்திரியாதிகள், ஒவ்வொன்றும் அனைத்தின் காரியங்களை செய்யத்தக்கவை. அனைத்து காரியங்களையும் நிர்வகிக்கும் அசிந்த்ய ஸாமர்த்தியம் கொண்டவை. பதம் 2-17ம் நுடியின் விசேஷ குறிப்பினை இங்கு பார்க்கலாம்.

** இந்திரியங்களின் இந்த செயல்களை குறிப்பிட்டு, அவற்றை ஜீவர்கள் தன் வசத்திற்கு கொண்டு வராவிட்டால், அனர்த்தத்திற்கு

வழி ஆகிறான் என்று சொல்வதும் இந்த நுடியின் தத்வார்த்தமாக இருக்கிறது.

ஜிஹ்வைகதோச்யுத விகர்ஷதி மா஽வித்ருப்தா |
ஷிஷ்னோ஽ன்யதஸ்த்வகுதரம் ஸ்ரவணம் குதஸ்சித் ||
ப்ராணோ஽ன்யதஸ்சபலத்ருக் க்வ ச கர்மஷக்திः |
பஹ்வ்யःஸபத்ன்ய இவகீஹபதிம் லுனந்தி || (பாகவத)

என்று இந்திரியங்கள் ஜீவனை பீடிக்கும் விதம் வர்ணிக்கப்பட்டிருக்கிறது. இதன் அர்த்தம்: ஹே அச்யுதனே. பல மனைவிகளைக் கொண்ட மனிதனை, எப்படி ஒவ்வொருவளும் ஒவ்வொரு விதத்தில் இழுத்து துன்புறுத்துவாரோ, அப்படி இந்த தேகம் என்னும் வீட்டின் யஜமானனான ஜீவனை நாக்கு, காது, மூக்கு, கண், மற்றும் மற்ற கர்மேந்திரியங்கள், ஒவ்வொன்றும் தத்தம் விரும்பும் விஷயங்களின்பால் இழுத்து துன்புறுத்துகின்றன.

**அன்யோன்ய கார்யவ மாட$^{3}$லரியவு சரண**
**நடெ$^{3}$வுத$^{3}$கெ கை தடெ$^{3}$வுவு**
**க்$^{4}$ராண க$^{3}$ந்த$^{4}$ வாக்$^{4}$ராணிஸுவந்தெ த்வக்கி நானா**
**க்$^{4}$ராணிஸுவுது$^{3}$ ப$^{3}$ல்லுதெ$^{3}$ ||25**

அன்யோன்யகார்யதி – ஒரு இந்திரியம் இன்னொன்றின் காரியத்தில். மாடலரியவு – அஸமர்த்தம் ஆகியிருக்கிறது (இந்திரியங்கள் பரஸ்பரம் ஒன்றின் காரியங்களை இன்னொன்று செய்யாது). சரண – கால்கள். நடெவுதகெ – நடப்பதற்காக (இருக்கின்றன). கை – கைகள். தடெவுவு – பிடிக்க, தடுக்க இருக்கின்றன. க்ராண – மூக்கு. கந்தவ – கந்தத்தை (வாசனையை). ஆக்ராணிஸுவந்தெ – முகர்ந்து தெரிவதற்காக. த்வக்கினாஷா – ஸ்பர்ஷத்தின் திசையாவது. (ஸ்பர்ஷ என்றால் என்ன என்பதையாவது). க்ராணிஸுவுது – மூக்கு. பல்லுதே – அறியுமா? (அல்லது நாக்கினைப் போல, ஆஷா – அதன் சகஜ சக்தியினால். ஸ்பர்ஷத்தை அறியுமாறு, முக்கு ஸ்பர்ஷத்தை அறிய முடியுமா?).

**இம்பு$^3$கொடு$^3$வடெ$^3$ அம்ப$^3$ரவெ பே$^3$கு பா$^3$யிம்**
**து$^3$ம்பு$^3$வுத$^3$கெ வாயு பே$^3$கு**
**உப்$^3$ப$^3$டி$^3$கெ$^3$கெ$^3$ கிச்சு பே$^3$கு க்ஷுதெய களெவரெ**
**அம்பு$^3$ பே$^3$குணலன்ன பே$^3$கு ||26**

பஞ்ச பூதங்களால் ஆகும் காரியங்களை சொல்கிறார். இம்புகொடுவடெ – (வஸ்துகளிரலு – இந்த தேகம் இருக்கையில்) சந்தர்ப்பம் கிடைக்கவேண்டுமெனில். அம்பரவெ பேகு – ஆகாசமே அவசியம். (தேஹ – அதன் பற்பல அவயவங்களின் நிலைக்கு சந்தர்ப்பம் அளிப்பது 'ஆகாஷ'). பாயிந்தும்புவுதகெ – உண்பது (ஆகாரத்தை விழுங்குதல்). வாயு பேகு – காற்று அவசியம். உப்படிகெகெ – பெருமைப்பட்டு செய்து உண்ணும் சமையல் தயார் செய்வதற்கு. கெச்சு பேகு – அக்னி வேண்டும். க்ஷுதெய – பசியை. களெவரெ – பரிகரிக்க. அம்பு பேகு – தண்ணீர் வேண்டும். உணலன்ன பேகு – உண்பதற்கு அன்னம் வேண்டும்.

** பசியுடன் தாகமும் ஏற்படுகிறது. தண்ணீரினால் இந்த இரண்டும் பரிகாரம் ஆகிறது. 'ப்ருதிவி வா வ அன்னம்' ஆகிய ஸ்ருதிகள் அன்னமே ப்ருதிவி என்று சொல்கிறது. ஆகையாலேயே, இந்த நுடியில் ப்ருதிவ்யாதி அனைத்து பஞ்சபூதங்களால் ஆகும் காரியங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன.

**அத$^3$ரிந்த$^3$ இப்பத்து நால்கு தத்வங்க$^3$ளிகெ$^3$**
**அதி$^4$க ந்யூன ஷங்கெ ஸல்ல**
**இத$^3$னு விவேகிஸி ஹரி கண்டு$^3$ அவரவர**
**மொத$^3$லெ ராஷிக$^3$ளனு ஸ்ருஜிஸுவ ||27**

அதரிந்த – தத்வங்களால் ஆகும் காரியங்கள் இவ்வாறு இருப்பதால், இப்பத்து நால்கு தத்வங்களிகெ – முன்னர் கூறிய 24 தத்வங்களுக்கு. அதிக ந்யூனஷங்கெ – அதிகம் / குறைவு என்னும் சந்தேகத்திற்கு. ஸல்ல – இடமே இல்லை (சந்தேகம் தேவையில்லை). இதனு விவேகிஸி – (சாதன தேகங்களுக்கு இவ்வளவு தத்வங்கள் இருக்க வேண்டும் என்பதை) இதனை அறிந்து. ஹரி கண்டு (ஸர்வக்ஞான) ஸ்ரீஹரி அறிந்து. அவரவர – அந்தந்த தத்வங்களை அல்லது ஜீவர்களை. மொதலெ –

படைக்கும்போதே. ராஷிகளனு – தத்வங்களின் ராஷிகளையே ஸ்ருஜிஸுவ – படைக்கிறான்.

** தத்வங்களின் ஸ்ருஷ்டிக்குப் பிறகே ஜீவர்கள் ஸ்தூல தேக யோகத்தினால் படைக்கப்படுகின்றனர். முதலில் ஸ்ருஷ்டியாகும் தத்வாம்ஷங்கள் அதிகமாகுமோ அல்லது குறைவு ஆகுமோ என்னும் சந்தேகத்திற்கு வாய்ப்பே இல்லை. ஏனெனில், ஒவ்வொரு தத்வத்தின் ராஷிகளை படைக்கும் ஸ்ரீஹரி சர்வக்ஞன்.

**இந்த[2] தத்வஸூக்ஷ்மவஷ ப்ரக்ருதியொளக[3]**
**ணந்தவு ஆகி[3]ப்பவு அ**
**ணந்த ராஷிக[3]ள நானா தா[4]ன்யக[3]ள**
**ராஷியந்தெ மாடி[3]ஸி ஸ்ருஜிஸுவ ||28**

இந்த தத்வசூக்ஷ்ம – இவ்வாறு படைக்கப்பட்டு பயன்படுத்தப்படும் சூக்ஷ்ம தத்வங்கள். அனந்தவு – நாசம் இல்லாதவை, ஏராளமாக இருந்து. ப்ரக்ருதியொளகெ – ப்ரக்ருதியில். (ப்ரக்ருதி அபிமானியான ப்ரக்ருதி ஷப்த வாச்யளான ஸ்ரீலட்சுமிதேயிடம்). வஷ ஆகிப்பவு – அதீனமாக இருப்பவை (மூல ஜட ப்ரக்ருதியில் இருப்பவை). நானா தான்யகள ராஷியந்தெ – பற்பல தான்யங்களின் ராஷிகளைப் போல இருப்பவை. அனந்த ராஷிகள மாடிஸி – இந்த அனந்த ராஷிகளை, ஸ்ரீலட்சுமிதேவியால் செய்வித்து (தயார் செய்வித்து). ஸ்ருஜிஸுவ – ஸ்ரீஹரி, ஸ்ருஷ்டி காரியத்தை செய்கிறான்.

**இத[3]ர மொத[3]லெ மஹத்தத்வத[3]ம்ஷத[3] ஸ்ருஷ்டி**
**அத[3]ரிந்த[3] மேலெ க்ரமக்ரமதி[3]**
**துதி[3]யப்புதெ[3] தத்வ கொனெபரியந்தவரிகெ[3]**
**ஒத[3]கி[3]ஸி கொடு[3]வ ஹரிகெ[3] ப்ரதியே ||29**

இதர மொதலெ – இந்த தத்வ சமூகத்திற்கு முன்பே. மஹத்தத்வம்ஷத ஸ்ருஷ்டி – மஹத் தத்வாம்ஷத்தின் ஸ்ருஷ்டி ஆகிறது. அதரிந்த மேலெ – அதன் ஸ்ருஷ்டிக்குப் பிறகு. க்ரமக்ரமதி – ஒவ்வொன்றாக. (அஹங்கார, மனஸ் ஆகிய

கிரமத்தில்). துதியப்புதெ - துவக்கத்திலிருந்து. தத்வகொனெபரியந்த - தத்வங்களின் கடைசி வரை (ப்ருத்வி வரைக்குமான அனைத்து தத்வங்களையும்). அவரிகெ - (சாதக) ஜீவர்களுக்கு. ஒதகிஸி கொடுவ - கிடைக்க வைக்கும். ஹரிகெ - ஸ்ரீஹரிக்கு. ப்ரதியே - சமர் யாராவது இருக்கிறார்களா? (இல்லவே இல்லை).

** மஹதாதி ப்ருதிவி வரைக்குமான தத்வங்கள் ப்ரக்ருதியில் அதிசூக்ஷ்ம ரூபத்தினால் இருந்தே இருக்கின்றன. இவ்வாறு இருந்தாலும், ப்ரக்ருதி ஒரே மாதிரியாகவே இருக்கிறது. அதன் ஏகத்வத்திற்கு பங்கம் இல்லை. இதே பதத்தின் 12ம் நுடியின் குறிப்புகளை இங்கு பார்க்கலாம்.

காரண கார்ய ரூபங்களான ப்ரக்ருதி மற்றும் மஹதாதி தத்வங்கள் அன்யோன்ய ப்ரவேஷ உள்ளதாக இருக்கின்றன (சேர்ந்து இருக்கின்றன). அதாவது, காரண வஸ்துவில் கார்ய இருக்கிறது. கார்யத்தில் காரணமும் இருக்கிறது. ப்ரக்ருதியில் மஹத் தத்வ இருக்கிறது. மஹத் தத்வத்தில் ப்ரக்ருதி இருக்கிறது. 'காரணேஷு ஸ்திதம் கார்யம் வ்யாப்தம் கார்யேஷு காரணம்' என்னும் (கீதா தாத்பர்ய) வாக்கியத்தில் இந்த பிரமேயம் சொல்லப்பட்டிருக்கிறது.

அதஷ்சோர்த்வம் ப்ரஸுதாஸ்தஸ்ய ஷாகா: |
அதஸ்ச மூலான்யனுஸந்ததானி

என்னும் கீதா வாக்கியங்கள் இதையே சொல்கின்றன. இங்கு ஒரு சூக்ஷ்ம விஷயத்தை மட்டும் கவனிக்க வேண்டும். மஹதாதி தத்வங்கள் ப்ரக்ருதியைப் போல, சர்வத்ர வியாப்தங்கள் அல்ல. ப்ரக்ருதியில் அனைத்து இடங்களிலும் இருப்பதில்லை. குணத்ரயங்களைப் போல ஏகதேஷத்தில் இருந்தாலும், ஸ்ருஷ்டிக்காக, ஸ்ருஷ்டிக்குத் தேவையான ஏகதேஷத்தில் மட்டும், த்ரிகுணங்களை படைக்கிறான். அதுவே த்ரிகுணங்களின் ஸ்ருஷ்டி என்பதாகும். இந்த த்ரிகுணங்களிலிருந்து மஹத் தத்வம் பிறந்தது. ஒன்றாகக் கலக்கப்பட்ட கலவையான த்ரிகுணங்களிலிருந்து அல்ல. கலப்பதற்காக எடுத்து வைக்கப்பட்ட

பாகத்தை விட்டு, மற்ற பாகங்களிலிருந்து மட்டுமே. 7ம் நுடியின் குறிப்புகளை இங்கு பார்க்கலாம்.

ஏவம் ப்ரக்ருதீரேகதேஷதோ குணத்ரயாத்மனா விக்ருதத்வேன ஸமக்ர ப்ரக்ருதே: க்ஷோபவிசேஷஸத்பாவேன ச, ப்ரக்ருதி ஜனிவ்யவஹார: | வஸதோவ்யாப்த மூலப்ரக்ருதீரபி குணத்ரயஸூக்ஷ்ம பாகரூபதயா ஜன்ய ஸத்வ ரஜஸ்தமஸாம் ஸகாஷாத் ப்ருதக் ப்ரதானஸ்யாபி த்ரிகுணாத்மகத்வோக்திஸ்ச உபபத்யதே || (ஸத்தத்வ ரத்ன மாலா).

ஸ்ரீநாராயணனின் விருப்பத்தினால் உருவான ப்ரக்ருதியின் ஒரு பாகம் (ஏகதேஷ) மட்டும் சிறிது விகாரத்தை அடைந்து, ஸத்வாதி குணத்ரய ரூபத்தினால் வெளிப்படுகிறது. இதே ப்ரக்ருதிக்கு ஜன்ம என்பதாகும். இவ்வாறு வெளிப்பட்ட ப்ரக்ருதிக்கும் த்ரிகுணாத்மத்வம் இருந்தே இருக்கிறது. இன்னும் தனியாக ஆக்கப்படாத த்ரிகுணங்களும் வியாப்தமான ப்ரக்ருதியில் இருந்தே இருக்கிறது. இவ்வாறு சொல்வது – எந்த விதிகளுக்கும் எதிரானதாக இல்லை.

இந்த விஷயங்களை இவ்வாறாக சிந்தித்தால், சிறிதான பரிமாணம் உள்ள தத்வங்களுக்கு, தமக்கு காரணமான மூலப்ரக்ருதியிலும், தம் கார்யங்களான (தம்மால் பிறந்த) அஹங்காராதி தத்வங்களிலும் வியாபித்திருப்பதும் எப்படி பொருந்துகிறது என்னும் சந்தேகம் பொதுவாக வருகிறது. ‘ஹரேரசிந்த்ய ஷக்த்யைவ கடதே ஸர்வமேவ ச’ என்று சொல்வதைப் போல, ஸ்ரீஹரியின் எண்ணிக்கையற்ற சாமர்த்தியத்தினால் அனைத்தும் நடக்கிறது. இவ்வாறு ஜகத் ஸ்ருஷ்டி காரியம் அதி விசித்திரமும், விசித்திரமான எண்ணிக்கையற்ற சக்தியினாலேயே சாத்தியம் ஆகியிருக்கிறது. ஸ்ரீஹரியின் சர்வஷக்தித்வம், சர்வக்ஞத்வம், சர்வோத்தமாதிகளை இது நிரூபிக்கிறது.

**மஹத் தத்வம்ஷக$^3$ளே ஷுக்லவாகி$^3$ப்பவு க$^3$ட$^3$**
**அஹம்தத்வ மூரு ப$^3$ண்ணத$^3$லி**
**அஹுத$^3$த$^3$ர ஷுக்லாணுக$^3$ளிந்த$^3$ பு$^3$த்$^3$தி$^3$**

**லோஹிதாம்ஷத³லி த³ஷேந்த்³ரியக³ளு ||30**

மஹத் தத்வத்திலிருந்து அடுத்த ஸ்ருஷ்டியை விளக்குகிறார். மஹத்தத்வதம்ஷகளெ - மஹத் தத்வத்தின் அம்சங்கள். ஷுக்லவாகிப்பவு கட - வெள்ளை வண்ணம் கொண்டவையே ஆகும். (வெள்ளை வண்ண ஸத்வ குணமே அதிகமாக இருப்பதால்). அஹம்தத்வ - (அதிலிருந்து பிறந்த) அஹங்கார தத்வம். மூரு பண்ணதலி - மூன்று வர்ணங்களைக் கொண்டது. அஹது - ஆகிறது. அதர - அந்த மஹத் தத்வத்தின். ஷுக்லாணுகளிந்த - வெள்ளை வண்ணங்களால். புத்தி - மனஸ். லோஹிதாம்ஷதி - சிவப்பு வண்ணங்களால். தஷேந்திரியகளு - 10 இந்திரியங்களும் (பிறந்தன).

** ஸத்வ குணத்தைப் போல வெள்ளை வண்ணம் கொண்டது மஹத் தத்வம். ஏனெனில்:

தமஸோ ரஜஸ்து த்விகுணம் ரஜஸ்ஸத்வமேவ ச
பரிமாணத ஏவம் ஸ்துஸ்த்ர்ய: ப்ரக்ருதிஜா குணா: ||
தத்ர ஸத்வம் கேவலம் ஸ்யாத்ரஜஸ்யபி ஷதாதிகம்
ஸத்வம் ரஜ: ஷதாம்ஷம் து தமஸ்தத்ர ப்ரகீர்த்தித:
தமஸ்யபி ததா ஸத்வம் தமஸஸ்து தஷோத்தரம்
தத்தஷாம்ஷேன ரஜோ மூலஜம் யத்ரஜஸ்து தத் ||
(பாக. தாத்பர்ய)

மூலப்ரக்ருதியிலிருந்து ஸ்ருஷ்டிக்காக வேறுபடுத்திய தமோகுண ராஷியைவிட (ஸ்ருஷ்டியில் பயன்படுத்தாத) ரஜோ குணம் இரு மடங்காகவும், ரஜோ குணத்தைவிட இரண்டு மடங்கு சத்வ குணமும் இருந்தது. ஸத்வ ராஷி அ-மிஸ்ரித ஸத்வ குணம் கொண்டது. ரஜோ ராஷியில், ரஜோ குணாம்ஷத்தைவிட ஸத்வ குணாம்ஷம் 100 மடங்கு அதிகமானது. ரஜோ குணத்தில் 100 பாகத்தில் 1 மட்டும் (1/100) தமோ குணம் இருக்கிறது. தமோ ராஷியில் தமோ குணத்தைவிட 10 மடங்கு அதிகம் ஸத்வ குணமும், தமோ குணத்தின் 1/10 அம்ஷ ரஜோ குணமும் இருக்கிறது.

அதாவது, ஸத்வ ராஷி, அ-மிஸ்ரித, ரஜஸ்தமோ ராஷிகள் சரியான அளவில் மற்ற குணங்களைவிட விசித்ரமானது. இந்த மூன்று குணங்களிலிருந்து பிறக்கும் மஹத் தத்வம்:

தஷாம்ஷாஸ்தத்ர ஸத்வம் ஸ்யாதேகாம்ஷோ ரஜ ஏவ து தத்தஷாம்ஷம் தமோக்ஞேயம் -- ஆகிய பிரமாண வாக்கியங்கள் சொல்வதைப் போல, ஸத்வ குணத்தின் 1/10ம் பாகம் ரஜோ குணத்தையும், ரஜோ குணத்தின் 1/10ம் பாகம், தமோ குணத்தையும் கொண்டது. இவ்வாறு 1 தமோ குணம், 10 ரஜோ குணம், 100 ஸத்வ குண பாகங்கள் உள்ள மஹத் தத்வம் ஸத்வ பாகங்களைக் கொண்டது.

** அடுத்த அஹங்கார தத்வம், அதன் த்ரிவித வகைகளைப் பற்றி, விஷ்ணு ரஹஸ்யத்தில் இவ்வாறு சொல்லப்பட்டுள்ளது.

மஹத்தத்வம் து தத்ப்ரோக்தம் ததோப்யர்த்தம் ஸமாததே |
கிஞ்சித்தத்ர தம:க்ஷிப்த்வாsஹங்காரம் க்ருதமானஹம் ||
அஹங்காரம் விபஜ்யாத த்ரீன் ராஷீன் க்ருதவானஹம் |
ராஷித்ரயம் க்ரமேணைவ தத்தத்ராஷிம் ஸமம் புன: ||
குணத்ரயம் வினிக்ஷிப்தம் ஏகஸ்மின்னேக ஏவ ஹி |
யத்ர ஸத்வம் வினிக்ஷிப்தம் ஜாதோ வைகாரிகோ ஹி ஸ: |
ரஜஸா தைஜஸ: ப்ரோக்த: தமஸா சைவ தாமஸ: ||

இதன் அர்த்தம்: ஸ்ருஷ்டியான மஹத் தத்வத்தில் அர்த்த பாகத்தை எடுத்துக் கொண்டு, சிறிது தமோ குணத்தை சேர்த்து, அஹங்கார தத்வத்தை செய்தேன். அஹங்கார தத்வத்தை மூன்று ராஷிகளாக பிரித்தேன். அந்த மூன்று ராஷிகளில் முறையே ஸத்வாதி மூன்று குணங்களை சேர்த்தேன். ஸத்வ குணத்தை சேர்த்த பாகம் 'வைகாரிக' என்றும், ரஜோ குணத்தை சேர்த்த ராஷி 'தைஜஸ' என்றும், தமோ குண மிஸ்ரித ராஷி, 'தாமஸ' என்றும் அழைக்கப்படுகிறது. இந்த மூன்று விதமான அஹங்கார தத்வங்களால் பிறந்த அடுத்த தத்வங்களை நிரூபித்தவாறு, இந்த நுடியில் வைகாரிகத்திலிருந்து மனஸ் தத்வமும், தைஜஸத்திலிருந்து தஷேந்த்ரியங்களும் பிறந்தன என்பதை

சொல்கிறார். வைகாரிகத்திலிருந்து தத்வாபிமானிகளின் தேகங்களும் படைக்கப்பட்டன என்று அறிய வேண்டும்.

**கண்ணினம்ஷக[3]ளிந்த[3] பஞ்சபூ[4]தக[3]ளு**
**கல்பனெயெந்து[3] பிரியரு |**
**ஒப்பி பேளுவரிந்து[1] பு[3]த்[3]தி[3]யொட[3]னெ மன**
**கொ[3]ப்ப ஷோடஷ கலெக[3]ள ||31**

கண்ணினம்ஷகளிந்த - தாமஸ அஹங்காரத்தின் அம்சங்களிலிருந்து (கண்ணின் கருப்பு பாகத்தினைப் போல, கருப்பு வண்ணம் கொண்டது தாமஸ அஹங்காரமானதால்). பஞ்சபூதகளு - ப்ருதிவ்யாதி பஞ்ச பூதங்கள். கல்ப - நிர்மாணம் ஆனது. எந்தெந்து - எந்த காலத்திற்கும். பிரியரு - ஞானிகள். ஒப்பி - ஒப்புக் கொண்டு. பேளுவரு - சொல்கின்றனர். இந்து - இவ்வாறு. புத்தியொடனெ - புத்தி தத்வத்திலிருந்து (மனஸ் தத்வ) கூடிய. மனகொப்ப - ஸம்மதமான. ஷோடஷ கலெகள - 16 தத்வங்களை (நிர்மாணிக்கிறான்).

**தாமஸவெம்ப[3] கண்ணினம்ஷதி[3]ந்த[3] பஞ்ச**
**மாத்ரங்க[3]ள ஸ்ருஷ்டி க[3]ட[3]**
**ஆமேலெ வ்யோமாதி[3] பஞ்ச பூ[4]தக[3]ள**
**ஜன்ம வாஹோதெ[3]ந்து[3] ஸித்[3]தா[4]ந்த ||32**

தாமஸவெம்ப கண்ணினம்ஷகளிந்த - தாமஸ என்னும் அஹங்கார தத்வாம்ஷங்களிலிருந்து. பஞ்சமாத்ரங்கள - பஞ்ச தன்மாத்ரங்களின் (ஷப்த, ஸ்பர்ஷ, ரூப, ரஸ, கந்தங்களின்) ஸ்ருஷ்டி கட - ஸ்ருஷ்டி ஆகிறது. ஆமேலெ - தன்மாத்ரங்களின் ஸ்ருஷ்டிக்குப் பிறகு. வ்யோமாதி பஞ்சபூதகள - ஆகாஷாதி பஞ்சபூதங்களின். நாமவு - பெயர். ஆஹோதெந்து - ஆகிறது என்பது. ஸித்தாந்த - நிர்ணயம் (நிச்சயம்).

** வர்ணாத்மக மற்றும் த்வன்யாத்மக என்று ஷப்த - இரு விதம். வர்ணாத்மக ஷப்த - நித்ய. ஸூக்ஷ்ம ரூபத்திலிருந்து இருக்கும் த்வனியே, ஆகாஷ ரூபத்திலிருந்து பிரிந்து வந்திருக்கிறது. இதையே ஷப்த தன்மாத்ர என்று அழைக்கிறோம். நித்யமான

ஷப்தத்தை அல்ல. அதே சூக்ஷ்மரூபத்தின் த்வன்யாத்மக ஷப்தமே தாமஸ அஹங்காரத்திலிருந்து பிறப்பதாகும்.

ஷப்தோவர்ணாத்மகோ நித்யோ த்வனிராகாஷ ஸம்பவ: |
ஆகாஷ ஏவ சூக்ஷ்மஸ்து த்வனிரித்யேவ ஷப்த்யதே ||

என்று பாகவத தாத்பர்யத்தில் சொல்லியிருப்பதன் அர்த்தமே இது. இந்த ஷப்தாதி பஞ்சதன்மாத்ரங்கள் தாமஸ அஹங்கார ஜன்யகள் என்பதை, ஷப்தத்திலிருந்து ஆகாஷ, ஆகாஷத்திலிருந்து ஸ்பர்ஷ; ஸ்பர்ஷத்திலிருந்து வாயு; வாயுவிலிருந்து ரூப; ரூபத்திலிருந்து தேஜஸ்; தேஜஸ்ஸிலிருந்து ரஸ; ரஸத்திலிருந்து ஜல; ஜலத்திலிருந்து கந்த; கந்தத்திலிருந்து ப்ருதிவி; என்று முறையே உற்பத்தி என்று அறிய வேண்டும்.

நபஸ: ஷப்த தன்மாத்ரான் காலகத்யா விகுர்வத: |
ஸ்பர்ஷோsபவத்ததோ வாயுஸ்த்வக் ஸ்பர்ஷஸ்ய ச ஸங்க்ரஹ: ||
(பாகவத- த்ரு)

என்னும் ஸ்லோகத்தில் இந்த கிரமம் தெளிவாக சொல்லப்பட்டிருக்கிறது. காலகத்யா – காலநாமக ஞீஹரி ப்ரேரணையினால். விகுர்வத: – விகாரம் அடையும். ஷப்ததன்மாத்ராத் – ஷப்தமே தன்மாத்ரமாக உள்ள. நபஸ: – ஆகாஷத்திலிருந்து. ஸ்பர்ஷ: – ஸ்பர்ஷ தன்மாத்ரை. தத: – அதிலிருந்து. வாயு: – வாயு. ஸ்பர்ஷஸ்ய ஸங்க்ரஹ: த்வக் ச – ஸ்பர்ஷ ஞானத்தை பிறப்பிக்கும் (ஸ்பர்சத்தை க்ரஹிக்கும்) த்வக் (த்வக் இந்திரியம்). அபவத் – உண்டானது. 'ஸ்பர்ஷாதயோsபி வாய்வாதே: ஸூக்ஷ்மாவஸ்தா ப்ரகீர்த்திதா' (பாக.த்ரு.தா) மற்றும் அங்கேயே 'ஸூக்ஷேந்த்ரியாணி ஸந்த்யேவ ஸ்யு: ஸ்தூலான்யப்யஹங்க்ருதே:' என்னும் விவரணைகளால், ஸ்பர்ஷாதி குணங்கள் வாயு முதலான பூதங்களின் ஸூக்ஷ்மாவஸ்தையிலும், இந்திரியங்கள் சூக்ஷ்மரூபத்தினால் நித்யங்களே ஆகியிருந்து, தைஜஸ அஹங்காரத்தினால் ஸ்தூல பாவத்தையும் அடைகின்றன என்றும் அறிய வேண்டும். ஆகையால், ஸ்பர்ஷத்தினால், வாயு மற்றும் தைஜஸ

அஹங்காரத்தினால், த்வக் இந்திரியமும் உற்பத்தி ஆயிற்று என்பதையும் அறிய வேண்டும். 'பஞ்சபூதகள நாமவாஹோது' என்பதற்கு தன்மாத்ரங்களின் உற்பத்திக்குப் பிறகே, பூதங்களின் பெயர், அதாவது அவற்றின் உற்பத்தி. அதற்கு முன்னர், பூதங்களின் பெயரே இல்லை என்று அர்த்தம்.

**துதி3யொளு ஸ்ருஷ்டிஸி இப்பத்த மூரனெய**
**உதகவெம்ப3 தத்வதொ3ளகெ3**
**கத3ட3த3ந்தெ பூ4ரஜவ மாடி3 ஸாலிந்**
**துதி3ஸி தே3வகி2ல தத்வங்க3ள ||33**

துதியொளு - கொனெயல்லி. ஸ்ருஷ்டிஸி - ஸ்ருஷ்டித்து. இப்பத்த மூரனெய - 23ம். உதகவெம்ப தத்வதொளகெ - அந்த ஜல என்னும் தத்வத்திற்குள் (24ம் பூ தத்வ). கதடதந்தெ - கரையாதவாறு. பூரஜவ மாடி - ப்ருதிவி துகள்களை நியமித்து. இந்து - இவ்வாறு. தேவ - ஸ்ரீஹரி. அகில தத்வங்கள - அனைத்து (24) தத்வங்களின். ஸால - வரிசையை. உதிஸி - படித்து (அடுத்த பத்யத்தில் வரும் 'பொரெவ' என்பதுடன் சேர்த்து படிக்க வேண்டும்).

**இந்த2 மஹதாதி3 தத்வக3ள ஸ்ருஷ்டிஸி**
**தத்தத் ஸ்தா2னதொ3ளிட்டு பொரெவ**
**உத்தம புருஷரத3ரொளு போகு3திரலாகி3**
**ஸுத்த ஸுரர நிர்மிஸித3 ||34**

இந்த - இவ்வாறு இருக்கும். மஹதாதி தத்வகள - மஹத்தே முதலான தத்வங்களை. ஸ்ருஷ்டிஸி - நிர்மாணம் செய்து. தத்தத் - அந்தந்த. ஸ்தானதொளிட்டு - ஸ்தானங்களில் அவற்றை வைத்து. பொரெவ - அருள்கிறான். உத்தம புருஷரு - தத்வாபிமானி தேவதைகள். அதரொளு - அந்த தத்வங்களில். போகுதிரலாகி - நுழைய. ஸுத்த - அதனை சுற்றியும். ஸுரர - தேவதைகளை (அவாந்தர அபிமானிகளான தேவ, ரிஷ்யாதிகளை). நிர்மிஸித - நிர்மாணித்தான்.

---

(உத்தம புருஷர் என்னும்) முக்தியோக்ய ஜீவர்களை இந்த தத்வங்களிலிருந்து நிர்மாணிக்கப்பட்ட தேகங்களில் நுழைத்து, அவரைச் சுற்றியும் (சர்வ சேஷ்டா ப்ரேரகரான) தத்வாபிமானிகளை நிர்மாணித்தான் என்னும் அர்த்தத்தையும் இந்த நுடியிலிருந்து அறிந்து கொள்ள வேண்டும்.

**ஷுத்$^{3}$த$^{4}$ ஸத்வகு$^{3}$ணதி$^{3}$ந்த$^{3}$ தத்வக$^{3}$ள**
**னாள்த$^{3}$ தே$^{3}$வர தே$^{3}$ஹங்க$^{3}$ளனு**
**மாள்த$^{3}$னவரவர யோக்$^{3}$யதெ தக்கஷ்டு**
**கொட்$^{3}$த$^{3}$ மிக்க கு$^{3}$ணாம்ஷக$^{3}$ள ||35**

தத்வாபிமானிகளான ருத்ராதி தேவதைகளின் தேகஸ்ருஷ்டி பிரகாரத்தை வர்ணிக்கிறார். (ஸ்ரீஹரி), ஷுத்த தத்வகுணதிந்த - ஸத்வ குணாதிக்யம் உள்ள வைகாரிக அஹங்கார தத்வத்தினால். தத்வகளனாள்த தேவர - தத்வ நியாமக தேவதைகளின். தேஹங்களனு - தேகங்களை. மாள்தனு - நிர்மாணித்தான். அவரவர - அந்தந்த தேவதைகளின். யோக்யதெ தக்கஷ்டு - தாரதம்யத்திற்கேற்ப. மிக்க குணாம்ஷகள - (சேர்ப்பதற்காக) தனியாக வைக்கப்பட்ட ஸத்வாதி குணாம்சங்களை. கூட்த - சேர்த்தான் (வைகாரிக அஹங்காரத்துடன், அந்த தேகங்களின் நிர்மாணத்தில், சேர்த்தே நிர்மாணித்தான்).

**மத்து தன்னரஸியொளு நீரொளு கலகித$^{3}$ந்தெ**
**தத்வதொ$^{3}$ந்தொ$^{3}$ந்த$^{3}$ம்ஷக$^{3}$ளனு**
**சித்ரரேதவ மாடி$^{3}$ சின்னத$^{3}$ஜாண்ட$^{3}$வ**
**ஸத்ய ஸங்கல்ப நிர்மிஸித$^{3}$ ||36**

மத்து - (தத்வாபிமானி தேவதைகள் பிரம்மாண்ட நிர்மாணத்தில் ஸ்வயம் சேர்ந்து, ஸ்ரீஹரியையே சரணடைந்து பிரார்த்தித்த) பிறகு, புனः - மறுபடி. தானே, நீரொளு கலகிதந்தெ - தண்ணீரில் கலக்கியதைப் போல. தத்வதொந்தொந்தம்ஷகளனு - ஒவ்வொரு தத்வங்களின் ஒவ்வொரு பாகங்களையும். சித்ரரேதவ மாடி - விசித்திரமான (திவ்ய ரேதஸ்ஸினை) செய்து. தன்னரஸியொளு - தன் மனைவியான லட்சுமிதேவியின் கர்ப்பத்தில். ஸத்யஸங்கல்ப

– என்றும் வீணாகாத ஸங்கல்பம் உள்ள ஸ்ரீஹரி. சின்னதஜாண்டவ – தங்கமயமான பிரம்மாண்டத்தை. நிர்மிஸித – படைத்தான்.

** ததோ வயம் ஸத்ப்ரமுகா யதர்த்தே பபூவி மாத்தன் கரவாம கிம் தே |
த்வம் ந: ஸசக்ஷு: பரிதேஹி ஷக்தாதேவ க்ரியார்த்தே யதனுக்ரஹேண || (பாகவத 3-6-29)

எந்த (பிரம்மாண்ட நிர்மாண) பிரயோஜனத்திற்காக, நாம் தத்வங்களுக்கு நியாமகராகி படைக்கப்பட்டிருக்கிறோமோ, அந்த – நம்மால் (அந்த காரியம் அசாத்தியம் ஆகையால்), அந்த காரியம் நிறைவேறுவதற்கு தேவையான ஞானசக்தியை அருள்வாயாக – என்று தத்வாபிமானிகள் ஸ்ரீஹரியை பிரார்த்திக்கின்றனர்.

இதி தாஸாம் ஸ்வஷக்தீனாமஸதீனாம் ஸமேத்ய ஸ: |
ப்ரஸுப்தலோக தந்த்ராணாம் நிஷம்ய கிரமீஷ்வர: ||
காலஸஞ்ஞாம் ததா தேவீம் பிப்ரப்ரக்திமருக்ரம: |
த்ரயோவிம்ஷதி தத்வானாம் கணம் யுகபதாவிஷத் ||
(பாகவத 3-7-1,2)

ஆவிர்பாவம் ஆகாத, லோக ஸ்ருஷ்டிஷக்தி உள்ள (ப்ரஸுப்த லோக தந்த்ராணாம்) தனியாக இருந்த (ஸம்யேத அஸதீனாம்) தன் அதீனரான தத்வாபிமானி தேவதைகளின் (ஸ்வஷக்தீனாம்) பிரார்த்தனையை ஏற்று, ஸர்வஷக்தனான ஸ்ரீஹரி, கால நாமகளான ரமாதேவியை தரித்து, 23 தத்வங்களின் சமூகத்தில், ஒரே காலத்தில் நுழைந்தான் -- பாகவதத்தில் சொல்லப்பட்ட இந்த வாக்கியங்களை இந்த நுடி தொகுத்து நிரூபிக்கிறது.

'தேவீம் பிப்ரத்' என்பதன் விவரணையை விஷ்ணு ரஹஸ்யத்தில் காண்கிறோம்.
ஸ்வபௌருஷேண ரூபேண விஷ்ணுராதத்த வீர்யம் பகவான் வீர்யவான்ஸ்ச -- தன் புருஷ ரூபத்தினால் (த்ருகுணங்களால் மஹத் தத்வத்தை நிர்மாணித்த தன் புருஷ ரூபத்தினால்),

---------------------------------------------------------------------------------------------

விஷ்ணு ஸ்ரீதேவியில் வீர்யதானம் அளித்தான்' என்று கூறியவுடன், கருடன் விஷ்ணுவை இவ்வாறு கேட்டான்.

வீர்யம் கிமீஷஸ்ய ஸ்வரூபபூதம் கிம் வா விபின்னம் வத -- விஷ்ணுவீர்யம் ஸ்வரூப பூதமா அல்லது வேறானதா -- என்று கருடன் கேட்க, ஸ்ரீகிருஷ்ணன் இவ்வாறு பதில் அளிக்கிறான். 'தத்வீர்யமாஹுர்ன ஹரே: ஸ்வரூபம் – பின்னம் சாஹு: ப்ராக்ருதமேவ' -- அந்த வீர்யம் ஸ்ரீஹரியின் ஸ்வரூபபூதமானதல்ல. பின்னமும் ப்ராக்ருதமும் ஆனது என்று (வேதஞானிகள்) சொல்கின்றனர், என்று சொல்லி,'வீர்யாதானம் தத்ர தாஸாம் ச மேலனம் கார்யோன்ம கம் மேலனம் சாஹுரார்யா ரேதோ ரூபம் நாஹுரார்யாஸ்ச விஷ்ணோ:' -- ஆகிய வாக்கியங்களால், லட்சுமிதேவியில் (தத்ர) தத்வாம்ஷங்களின் சேர்க்கையே வீர்ய தானம். மேளன (சேர்க்கை) என்றால், செயல்களை செய்ய வைக்குமாறு செய்வதேயாகும். விஷ்ணு (ஸ்வரூபபூத) ரேதஸ் அல்ல என்றே ஞானிகள் சொல்வார்கள் என்று கூறி வீர்யதானம் என்றால், தத்வங்களில் தானும் நுழைந்து அவற்றிற்கு கார்ய ஷக்தியைக் கொடுத்து, லட்சுமியின் உதர பிரவேசம் செய்வதே ஆகும் – என்னும் அர்த்தத்தை தெளிவுபடுத்துகிறான்.

** 'புருஷேணாத்ம பூதேன வீர்யமாதத்த வீர்யவான்'. 'ததோபவன்ய ஹத்தத்வம்' என்னும் பாகவத ஸ்லோகத்தின் வியாக்யானத்தில் விஜயத்வஜ டீகா வாக்கியமும், 'ரேத ஆக்யம் பரிணாமகரஸாமர்த்யம்' -- ரேதஸ் என்று அழைக்கப்படும் 'மாற்றத்தை உண்டு பண்ணும் சக்தியைக் கொண்டது' என்னும் அர்த்தத்தை சொல்கிறது. ஸ்ரீவாதிராஜரே தம் ஸரஸ பாரதி விலாஸ என்னும் கிரந்தத்தில், வீர்யதானத்தின் அர்த்தத்தை தெளிவுபடுத்தியிருக்கிறார்.

குக்ஷௌ நிக்ஷிப்ததத்வானாம் அம்ஷான் வீர்யாத்மனா ப்ரபு: |
பரிணாம்ய புனர்லக்ஷ்ம்யா: குக்ஷௌ நிக்ஷிப்ய லீலயா |
அஜாண்டம் நிர்மமே ஹைமம் ந து விஷ்ணு:ஸ்வரேதஸா ||
என்று சொல்லியிருக்கிறார்.

படைக்கப்பட்ட தத்வாம்சங்களை வீர்யரூபத்தினால், லட்சுமிதேவியின் கர்ப்பத்தில் வைத்து லீலையினால் விஷ்ணு தங்கமயமான பிரம்மாண்டத்தை படைத்தான் – தன் ரேதஸ்ஸினால் அல்ல.

**நீரொளகி$^3$ர்த்த$^3$ பூ$^4$ரேணுக$^3$ளெல்லவ**
**ஸேரிஸி தன்னுத$^3$ரதொ$^3$ளு**
**ஆரனெய க$^3$ர்ப்ப$^4$தி யோனித்$^3$வார தெகெ$^3$து$^3$**
**விரிஞ்சாண்ட$^3$வனு நிர்மிஸித$^3$ ||37**

பிரம்மாண்ட நிர்மாண வகையினை வர்ணிக்கிறார். நீரொளகிர்த்த – தண்ணீரில் வைத்த. பூரேணுகளெல்லவ – ப்ருதிவி அம்சங்கள் அனைத்தையும். தன்னதுரதொளு – தன் உதரத்தில். ஸேரிஸி – சேர்த்து. ஆரனெய கர்ப்பதி – ஆறாம் ஸ்ருஷ்டியில் (ஆறாம் கர்ப்பத்தில்). யோனித்வாரதி – லட்சுமித்வாரா (லட்சுமிதேவி பிரசவம் ஆனதைப் போல). தெகெது – வெளியே எடுத்து. விரிஞ்சாண்டவனு – பிரம்மாண்டத்தை. நிர்மிஸித – படைத்தான்.

** 1ம் ஸ்ருஷ்டி – ஷுத்த ஸ்ருஷ்டி (வாசுதேவாதி வியூகத்தின் படைப்பு).
2ம் ஸ்ருஷ்டி – லட்சுமி ஸ்ருஷ்டி (பராதீன விசேஷ வியாப்தி ரூபமானது.
3ம் ஸ்ருஷ்டி – குண த்ரயத்தின் ஸ்ருஷ்டி
4ம் ஸ்ருஷ்டி – மஹத் தத்வத்தின் ஸ்ருஷ்டி (பிரதம புருஷரூபத்தினால் ஆனது).
5ம் ஸ்ருஷ்டி – மற்ற தத்வங்கள் மற்றும் தத்வாபிமானிகளின் ஸ்ருஷ்டி.
என ஐந்து வித ஸ்ருஷ்டியான பிறகு,
6ம் ஸ்ருஷ்டியே பிரம்மாண்டத்தின் ஸ்ருஷ்டி ஆனது.

இவ்வாறு படைக்கப்பட்ட பிரம்மாண்டத்தில், இரண்டாம் புருஷரூபத்தினால் ஸ்ரீஹரி பிரவேசித்தான்.

** இந்த புருஷ ரூபத்தின் நாபி கமலத்தில், பிரம்மதேவரின் உற்பத்தி, லோக விபாகாதிகள் முறையே அடுத்து நடக்கின்றன.

---

**நூறுகோடி யோஜன ப்ரமாணதி[3] ஸுத்த**
**பரியந்தென்ன ஷோபி[4]ஸுவ**
**ஆ ரம்ய பொ[3]ம்மாண்ட[3] பொக்கு புனரபி**
**நீரொளரஸு கிருஷ்ணனு பவடி[3]ஸித[3] ||38**

பிரம்மாண்டத்தின் புற பாகத்தை வர்ணிக்கிறார். நூறுகோடி யோஜன பிரமாணதி – 100 கோடி யோஜன அளவிற்கு தடிமனான. ஸுத்தபரி எந்தென்னெ – பிரம்மாண்டத்தின் சுற்றிலும். ஷோபிஸுவ – (ப்ருதிவி ஆவரணத்தினால்) வீற்றிருக்கும். ஆ ரம்யபொம்மாண்ட பொக்கு – (தன் க்ரீடாஸ்தானமான) அந்த பிரம்மாண்டத்தை (புருஷரூபத்தினால்) நுழைந்து. புனரபி – திரும்ப (மறுபடி) அல்லது புனரபி பொக்கு – இரண்டாம் புருஷரூபத்தினால் நுழைந்து. அரஸு க்ருஷ்ணனு – உலக நாயகனான ஸ்ரீஹரி. நீரொளு – அண்டத்தில் இருக்கும் தண்ணீரில் பவடிஸித – படுத்தான்.

** ஸ்ருஷ்டி பிரகரணம் மிகவும் சூக்ஷ்மமான பல பிரமேயங்களைக் கொண்டது. தெளிவாக புரிந்து கொள்வது மிகவும் கடினம். 'ஸ்ருஷ்டிப்ரகரண கிருஷ்ணனே பல்ல' என்பது ஸ்ரீவிஜயதாசரைப் போன்ற ஞானிகள் கூறிய வாக்கு. இவ்வாறு இருந்தாலும், ஸ்ரீவாதிராஜர் முடிந்த வரையில் தெளிவாக அதனை நிரூபித்திருக்கிறார். படிப்பவர்கள் கவனத்துடன் இதனை புரிந்து கொள்ள வேண்டும்.

** பிரம்மாண்டம் – கிழக்கு மேற்கு, வடக்கு தெற்கு மற்றும் அனைத்து இடங்களிலும் நேராக, நடுவில் இருக்கும் மேரு பர்வதத்தின் மூலம் 50 கோடி யோஜன அகலம் கொண்டதாகும். இதற்கு 10 ஆவரணங்கள் (சுற்றுப்புற பாதுகாப்பு) உள்ளன. முதலாவது ப்ருத்வி ஆவரண. இது 100 கோடி யோஜன அகலம் (தடிமன்) கொண்டது. அடுத்த (அதன் மேலின) ஜல முதலான ஒவ்வொரு ஆவரணமும் ஒன்றைவிட ஒன்று 10 மடங்கு விஸ்தாரமானது.

* 50 கோடி யோஜன வலயாகார நிரீக்ஷிஸு

ஈ பிரகாரதளவன்னு திளிது முந்தரிது நோள்பது
இதகெ நோருகோடி தரணி ஆவரணவு
அல்லிந்த மேலுபாக இருதிப்புவு கேளி
உதகாக்னிமருதாகாஷ
ஹிரிதாகி ஒந்தொந்தக்கெ தஷமடி குணிததிந்த
தரணிய பிட்டு மேலிந்தத்த எணிஸுவுது
-- என்கிறது ஸ்ரீவிஜயதாசார்யரின் சுளாதி.

பாகவத, பிரம்மகாண்ட, விஷ்ணுரஹஸ்ய ஆகிய கிரந்தத்தில் சொல்லப்பட்டுள்ள பிரமேயங்களையே இங்கு நிரூபித்திருக்கிறார்.

**பொ³ம்மண்ட³தொ³ளு இப்பத்தனால்கு தத்வ**
**ஸம்மதவாகி³ பெ³ரெஸிஹவு**
**ஆமேலெ பொ³ம்யாதி³ ஹத்தாவரணக³ளு**
**க்ரமதி³ந்த³ ஸுத்து ஸுத்திஹவு ||39**

பொம்மண்டதொளு - பிரம்மாண்டத்திற்குள். இப்பத்து நால்கு தத்வ - 24 தத்வங்கள். ஸம்மதவாகி - யதாயோக்யமாக. பெரசிஹவு - கலந்திருக்கின்றன (நிரம்பியிருக்கின்றன). ஆமேலெ - அந்த பிரம்மாண்டத்தின் மேல் பாகத்தில். பூம்யாதி - பூ தத்வமே முதலான. ஹத்தாவரணகளு - 10 ஆவரணங்கள். க்ரமதிந்த - ப்ருத்வி, ஜல, அக்னி ஆகிய கிரமத்தினால். ஸுத்து - சுற்றிலும். ஸுத்திஹவு - சூழ்ந்திருக்கின்றன.

பூ, ஜல, அக்னி, வாயு, ஆகாஷ, அஹங்கார, மஹத், ஸத்வ, ஜர, தம என 10 ஆவரணங்கள் உள்ளன. த்ரிகுணங்களை தனித்தனியாக பிரிக்காமல், த்ரிகுணாத்மக அவ்யக்த தத்வ என்று ஒன்றினையே எடுத்துக் கொண்டால் 8 ஆவரணங்கள். இவற்றிற்கு அந்தப் பக்கம், அனந்த விஸ்தாரமான அவ்யாக்ருதாகாஷ. இவ்வாறு 9 நவ ஆவரணங்கள். பிரம்மாண்டத்தின் கூரை ப்ருத்வ்யாத்மக மற்றும் சுற்றிலும் 100 கோடி யோஜன விஸ்தாரம் உள்ளது. அதன் வெளியே ஒவ்வொரு ஆவரணமும் அதன் 10 மடங்கு, அதாவது ஜல ஆவரணம் 1,000 கோடி. அக்னி ஆவரணம் 10,000 கோடி ஜோயன என அறிய வேண்டும்.

---

**ப்ருத்வி ரூபவாத$^{3}$ அண்ட$^{3}$வெம்பா$^{3}$வரணவ**
**ஸுத்தலு ஸுத்திகொண்டி$^{3}$ஹுது$^{3}$**
**மத்தெ ஆபா$^{3}$தி$^{3}$ தத்வங்க$^{3}$ள ஆவரண**
**ஹத்து ஹத்தாகி$^{3}$ பெ$^{3}$ளெதி$^{3}$ஹவு ||40**

ப்ருத்வி ரூபவாத - பூ தத்வ ரூபத்தின். அண்டவெம்ப ஆவரணவ - அண்டாகாரத்தின் ஆவரணத்தை. மத்தெ - திரும்ப. ஆபாதி தத்வங்களின் ஆவரண - தண்ணீரே முதலான தத்வங்களின் ஆவரணங்கள். ஸுத்தலு ஸுத்திகொண்டிஹது - பிரம்மாண்டத்தை சுற்றிலும் சூழ்ந்திருக்கின்றன. ஹத்து ஹத்தாகி பெளெதிஹவு - ஒன்றினைவிட ஒன்று 10 மடங்கு அதிகமாக வளர்ந்திருக்கின்றன.

**பெ$^{3}$ளெதா$^{3}$னவினல்லி மேலுமேலாவரண**
**உளித$^{3}$ தத்வவனொளகொளகு$^{3}$**
**ஒளஹொரகெ$^{3}$ல்ல ஸுத்திகொண்டீ$^{3}$பரியல்லி**
**ஸேரித$^{3}$ மஹிமெயித$^{3}$கோ ||41**

பெளெத - இவ்வாறு வளர்ந்த. ஆ நவினல்லி - அந்த ஆவரணங்களில். மேலுமேலாவரண - ஒவ்வொரு அடுத்த ஆவரணமும். உளித தத்வவனு - அதன் கீழான மற்ற தத்வ ஆவரணங்களை. ஒளகொளகு - சூழ்ந்துகொண்டு. ஒளஹொரகெல்ல - உள்ளே மற்றும் வெளியேயும். ஸுத்திகொண்டு - வியாபித்து. ஈ பரியல்லி - இப்படியாக. ஸேரித - சேர்ந்து பிரம்மாண்டத்தை சுற்றி இருக்கும். மஹிமெ - மகிமை (அற்புதம்). இதகோ - (இந்த ஆவரணங்கள் உடனான பிரம்மாண்டத்திற்கு) இருக்கிறது. பார்.

அதஷ்சோர்த்வம் ப்ரஸ்ருதாஸ்தஸ்ய ஷாகா: |
அதஸ்ச மூலான்யனு ஸந்ததானி ||
ஆகிய கீதா வாக்கியங்களில் வர்ணித்திருப்பதைப் போல, தத்வங்களின் சூக்ஷ்ம ஸ்தூல ரூபங்களிலிருந்து பரஸ்பர வ்யாப்தியை, மேலே விளக்கியதைப் போல அறிய வேண்டும்.

**உத்தரோத்தர தத்வக்கதி³ வியாப்தி பே³கு**
**ஸுத்து ஸுத்திஹ தெ³ஷெயெனலு**
**தத்வமயவாத³ தே³ஹக³ளெந்தி³ப்பவு**
**ஜீவ த்ரிகு³ணங்க³ளெந்து³ கட்டிஹவு ||42**

தத்வங்களின் வ்யாப்தி ப்ரகாரத்தை தெளிவுபடுத்துகிறார். உத்தரோத்தர தத்வக்கெ - மேன்மேலாக இருக்கும் தத்வத்திற்கு. ஸுத்து ஸுத்திஹ தெஷெயெனலு - பிரம்மாண்டத்தை சுற்றிக் கொண்டிருக்கிறது என்னும் நிலையை சொல்வதற்கு, அதி வியாப்தி பேகு - அதிகமான வியாப்தி இருக்க வேண்டும். த்ரிகுணகளு - ஸத்வாதி குணங்கள் பரஸ்பர வியாப்தங்களாகி. (புற கவச ரூபத்தில்). ஜீவ - ஜீவனை. எந்துகட்டிஹவு - எவ்வாறு சுற்றியிருக்கின்றனவோ (கட்டியிருக்கின்றதோ) அவ்வாறு, தத்வமயவாத - தத்வ ரூபத்தின் (சொல்லபட்டிருக்கும் 10 தத்வங்களின் ரூபத்தின்). தேஹகளு - தேகங்கள் (ஜீவஸ்வரூபம் ஒன்றன் மேல் ஒன்றாக புற கவசங்களைப் போல இருக்கும் தேகங்களை சேர்ந்திருப்பதைப் போல). இந்திப்பவு - (பிரம்மாண்டத்திற்கு ஆவரணங்கள் கவசங்களைப் போல) இவ்வாறு இருக்கின்றன.

**ஔஹொரகெ³ வ்யாப்தவாத³ மேலணதத்வ**
**கெளகெ³ கேளு தத்வக³ளிஹவு**
**ஜலஜனாப³னிந்து ஹத்தாவரணங்க³ள**
**ஔகெ³ ஜக³வ நிர்மிஸித³ ||43**

ஔஹொரகெ வ்யாப்தவாத - மேலே மற்றும் கீழான தத்வங்களில் வியாப்தமான. மேலணதத்வ - மேல் இருக்கும் (உத்தம) ஒவ்வொரு தத்வமும். கெளகெ - அதன் கீழே. கீளுதத்வகளு - (மேலே இருக்கும் தத்வத்தைவிட அதிக ஸ்தூலமானாலும் மற்றும் அதம தேவதாபிமான்யமானதும் ஆன) கீழான (அதன்) தத்வங்களும். இஹவு - இருக்கின்றன. இந்து - இவ்வாறு. ஜலஜனாபனு - பத்மனாபன். (அல்லது ஜலஜனாப - ஸ்ரீஹரி. ஹத்தாவரணகள ஔகெ நிந்து - 10 ஆவரணங்களில் தானே நியாமகனாக இருந்து). ஹத்தாவரணகள ஔகெ - 10

ஆவரணங்களின் அடுத்த உள் பாகத்தில். ஜகவ – உலகை. நிர்மிஸித – படைத்தான்.

**நூறுகோடி யோஜன மொத³லண்டா³வரணக்கெ**
**நீர மேலிரேளாகி³யிப்ப**
**தோரோ லோகங்க³ளெம்பை³வத்து கோடி மேலாரு**
**மூரு த³ஷோத்தரத³ ||44**

மொதல – முதலாம். அண்டாவரணக்கெ – பிரம்மாண்டத்தின் ஆவரணத்திற்கு (ப்ருதிவ்யாத்மக ஆவரணத்திற்கு). நூருகோடி யோஜன – நூறு கோடி யோஜன அளவிற்கு. நீரமேலெ – (அதன் மேலின) ஜலாவரணத்தின் மேல். ஏளாகியிப்ப – (தண்ணீரும் சேர்ந்து) ஏழு எண்ணிக்கையில் இருக்கும் ஆவரணங்கள். இரெ – இருக்கையில். தோரோ – (உள்ளே) வெளிப்படும். லோகங்களளெம்ப – உலகங்கள் என்று அழைக்கப்படும். ஐவத்து கோடி – 50 கோடி யோஜன (சுற்றளவு) உள்ளது. மேலெ – (அண்டத்திற்குள் நிரம்பியிருக்கும்). உதக – கர்ப்போதகத்தின்) மேல் பாகத்தில். ஆருமூருதஷோத்தரத – 19 கோடி யோஜன அகலம் உள்ள (அண்டோதகத்தில் என்னும் அடுத்த நுடியின் பதங்களால் அறிய வேண்டும்) அல்லது, மேலாருமூரு தஷோத்தரத – ப்ருதிவி ஆவரணத்தின் மேல் ஒன்றினைவிட ஒன்று அருகில் இருக்கும் 9 ஆவரணங்கள்.

**அண்டோ³த³கத³ல்லி ஸாஸிர வருஷ பரியந்த**
**புண்டரீகாக்ஷ பவடி³ஸி**
**சண்டாம்ஷு ஸஹஸ்ர ஸன்னிப⁴ நாபி⁴யிந்த³ உ**
**த்³த³ண்ட மண்ட³லவ நிர்மிஸித³ ||45**

அண்டோதகதல்லி – கர்ப்போதகத்தில். ஸாஸிர வருஷ – (தேவமானத்தின்படி) 1000 ஆண்டுகளின். பரியந்த – வரைக்கும். புண்டரீகாக்ஷ – ஸ்ரீஹரி. பவடிஸி – படுத்திருந்து. சண்டாம்ஷு ஸஹஸ்ர நிப – 1,000 சூரியர்களின் ஒளியைப் போல ஒளி கொண்ட. உத்தண்ட மண்டலவ – அற்புத கமலத்தை. நாபியிந்த – தன் நாபியிலிருந்து. நிர்மிஸித – படைத்தான்.

** 19 கோடி யோஜன அளவு அகலம் உள்ள தண்ணீரில் படுத்த அந்த ஸ்ரீஹரி, அசிந்த்ய அற்புதாகாரன் அல்லவா? 7 கோடி யோஜன உயரம் உள்ள பாலகனாக பிரளய ஜலத்தில் வடபத்ர ஷாயியான ஸ்ரீஹரியின் பால ரூபத்தைப் போலவே, இதுவும் அற்புதமே ஆகும் (2ம் லய ஸந்தியில் 3ம் பத, 3ம் குறிப்பினை இங்கு பார்க்கலாம்).

** ஸாஸிரபுருஷ என்பதற்கு தேவமானத்தின்படி 1,000 ஆண்டுகள் என்று ஸ்ரீவிஜயதாசார்யரும் 'ஸிரிகூட பொம்மண்டவ ப்ரவேஷிஸி ஸூரர ஸாவிர வருஷ மலகித்த பரமாத்ம' என்று கூறியிருக்கிறார். மனுஷ்ய மானத்தின் ஒரு ஆண்டு தேவமானத்தின் ஒரு நாள் ஆகும்.

** உத்தண்டமண்டல – என்பதற்கு, தண்டத்தினால் (கமலத் தண்டு) தூக்கிப் பிடிக்கப்பட்ட, மண்டல – ஒரு ஆக்ருதி என்று அர்த்தம். 'தத்பத்மதல்லி' என்று அடுத்த நுடிகளில் சொல்லப்படுவதற்கும் இதுவே அர்த்தம்.

**இந்தீ$^3$யெல்லவு கூடி$^3$ வ்யாப்தவாகி$^3$ லட்சுமி**
**காந்தன தி$^3$வ்ய ஸ்ரீமூர்த்தி**
**அந்து$^3$கொண்டி$^3$ப்பவு ரோமகூபவு தும்பு**
**வந்தெ ஆ ஹரி இனிதிரே ||46**

இந்து – இவ்வாறு. ஈ எல்லவு கூடி – ஆவரணங்களுடனான பிரம்மாண்டம். வ்யாப்தவாகி – மிகவும் விஸ்தாரமாக இருந்து. லக்ஷ்மிகாந்தன திவ்ய ஸ்ரீமூர்த்தி – ஸ்ரீஹரியின் அற்புதமான மங்கள தேகத்தின். ரோமகூபவு – ஒரு முடியின் நுனி. தும்புவந்தெ – மூடுமாறு. ஆந்துகொண்டிப்பவு – சேர்ந்திருக்கிறது. ஆ ஹரி – பிரம்மாண்ட மற்றும் ஆவரணங்களை படைத்த – அந்த ஸ்ரீஹரி. இனிதிரே – இவ்வாறு அனந்தனாகிருப்பவன் (அற்புத வியாப்தி உள்ளவன்).

** எண்ணிக்கையற்ற கோடி யோஜன விஸ்தாரத்தின் பிரம்மாண்டம், ஸ்ரீஹரியின் ஒரு முடியின் நுனியின்

---

அளவிலானது. இதுவும்கூட அவனின் விருப்பத்தினாலேயே, ஸ்ரீஹரியின் அனந்த்யமும் எண்ணிக்கையற்றதே ஆகும்.

** ஸ்ரீஹரியின் ஒரே முடியின் நுனியில் அடங்கும் பிரம்மாண்டத்தை, ஸ்ரீஹரி, தன் அனந்த முடி நுனிகளில், ஒன்றினையே அனந்தகோடி பிரம்மாண்டங்கள் ஆக்கி, தன் அசிந்த்ய சக்தியினால் தரிக்கிறான். இருப்பது ஒரே ஒரு பிரம்மாண்டம். அதையே கோடியாக ஆக்கி ஸ்ரீஹரி தரித்திருக்கிறான்.

ஷரீராணாம் பஹுத்வேன அதீதானாகதைஸ்ததா |
அஸ்யைவ தேவகாயேஷு ப்ரதி ப்ரதி ச தர்ஷனாத் |
விஷ்ணு ஸாமர்த்யதோsண்டானாம் பஹுத்வம் நான்யதா பவேத் || (பிரம்மதர்க்க)

ஏகமண்டம் பஹுத்வேன ப்ரத்யேகம் ரோமகூபகம் |
பிரம்மாபஷ்யத்ததாsத்மானம் ஹரேஸ்தேஷு ப்ருதக் ப்ருதக் ||
(பிரம்மாண்ட புராணம்)

ப்ருஹதண்டமபூதேகம் (பாரத)
இத்தகைய பிரமாணங்களை ஸ்ரீமத் பாகவத தாத்பர்யத்தில் உதாரணம் கொடுத்து, நிர்ணயம் செய்திருக்கிறார் - ஸ்ரீமதாசார்யர்.

** ஸ்ரீஹரி பஹுரூபி. (அனந்த சச்சிதானந்தாத்மக தேகங்களைக் கொண்டவன்) மற்றும் பூதபவிஷ்யத் காலங்களில் படைக்கப்படும் பிரம்மாண்டங்களும் எண்ணிக்கையற்றவை. இப்போது இருக்கும் ஒன்றே பிரம்மாண்டம், ஸ்ரீஹரியின் அனேக ரூபங்களில், அனேக எண்ணிக்கையில் தரிக்கப்பட்டிருக்கிறது. ஸ்ரீவிஷ்ணுவின் எல்லையற்ற சாமர்த்தியத்தினால் பிரம்மாண்டங்களின் படைத்தல் ஆகியிருக்கிறதே தவிர, வேறு வகையில் அல்ல (பிரம்மதர்க்க).

சதுர்முகனும், ஸ்ரீஹரியின் ரூபங்களில், ஒவ்வொரு ரூபத்தின் ஒவ்வொரு முடி நுனியில், பிரம்மாண்டத்தையும், தன்னையும்,

தனித்தனியாக பஹுத்வேன (பலவாக) கண்டான் (பிரம்மாண்ட புராண).

ஒன்றே பிரம்மாண்டம் (ஸ்ரீஹரியின் சாமர்த்தியத்தினால்) அனேக பிரம்மாண்டமாயிற்று (பாரத).

இந்த பிரமாணங்களால், ஒரு காலத்தில் ஒன்றே பிரம்மாண்டம் இருந்தாலும், ஸ்ரீஹரியை 'அனந்த கோடி பிரம்மாண்ட நாயக' என்று ஆகமங்கள் சொல்வது சரியாக பொருந்துகிறது.

**இப்பத்தைது[3] கோடி யோஜனதொ[3]ளு ஜக[3]வ**
**தத்வத்மத[3]ல்லி பத்[4]மஜன**
**கல்பிஸி ஆ பத்[4]மத[3]ளதி[3]ந்த[3] ஈரேளா**
**கி[3]ப்ப லோகக[3]ள மாடி[3]த[3]னு ||47**

இப்பத்தைது கோடி யோஜனதொளு - 25 கோடி யோஜனத்தில். ஜகவ - பூமி சகிதமான மேல் 7 சப்த உலகங்களையும் (அதைப் போல பூமியின் கீழே 24 கோடி யோஜனத்திற்குள் பாதாளாதி ஸப்த உலகங்களயும்). தத்பத்மதலி - (தன் நாபியில் படைத்த) கமலத்தில். பத்மஜன - பிரம்மதேவனை. கல்பிஸி - பிறக்க வைத்து. ஆ பத்மதளதிந்த - அந்த பத்ம தளத்தில். ஈரேளாகிப்ப - 14 எண்ணிக்கையில். லோககள - உலகங்களையும். மாடிதனு - படைத்தான்.

** பூலோக சகிதமான மேலே 7 உலகங்கள். பூ: (பூலோக); புவ (அந்தரிக்ஷ லோகம்); ஸ்வ: (ஸ்வர்க்க லோகம்); மஹர்லோக, ஜனோலோக, தபோலோக, ஸத்யலோகம். பூமியிலிருந்து கீழே உள்ள சப்த உலகங்கள்: அதல, விதல, ஸுதல, தலாதல, மஹாதல, ரஸாதல, பாதால.

** லோகரூபத்தின் அந்த மஹாபத்மத்தில், முந்தைய கல்பத்தைப் போலவே, சதுர்முகன் உலகங்களை படைத்திருக்கிறான் - 'தாதா யதா பூர்வமகல்பயத்' என்னும் ஸ்ருதி சொல்வதைப் போல, பிரம்ம நாமக விஷ்ணு, பிரம்மனில் இருந்து ஸ்வதந்த்ர லோக கர்த்தன் என்று அழைத்துக் கொள்கிறான் என்பதை மறக்கக்கூடாது.

## 3. ஸ்ருஷ்டி ஸந்தி

---

** நாபி கமலத்திலிருந்து பிறந்த பிரம்மன் 10,000 திவ்ய ஆண்டுகள் காலம், 'தப தப' என்னும் ஸ்ரீஹரியின் ஆணைப்படி, தவம் செய்தான். ஸ்ரீஹரி மகிழ்ந்து, பிரத்யட்சனாகி, வேதாதி அனைத்து சாஸ்திரங்களையும் உபதேசம் செய்து, அந்தர்தானம் அடைந்தான். பிரம்மதேவன் 1,000 திவ்ய ஆண்டுகள் வரை அத்யயன செய்து,

மத்வாத ஷக்தமாத்மானாம் விஷ்வஸ்ருஷ்டௌ மனோ ததே |
அவர்த்தயத்தத: பத்ம மதோமூலம் ஸுவிஸ்த்ருதம் ||
அண்டகர்ப்பரமாரப்ய யாவத்வைகுண்ட மூலகம் |
வவ்ருதே ககுபோ வ்யாப்ய விஷ்வஸ்திதை சதுர்தஷ ||
புவனான்யஸ்ருஜத்தத்ர ..

ஆகிய (விஷ்ணு ரஹஸ்ய) வாக்கியங்களைப் போல, 'உலகினைப் படைக்கும் சாமர்த்தியத்தை பெற்றான். அப்போது தன் உற்பத்தி ஸ்தானமான பத்மம், கீழான பிரம்மாண்ட கூரையிலிருந்து மேலே வைகுண்டத்தின் அடி வரைக்கும், விஸ்தாரமாகி வளர்ந்தது - அனைத்து திசைகளிலும் வியாபித்தது. அப்போது பிரம்மதேவன், உலகின் ஸ்திதிக்காக, 14 உலகங்களையும் படைத்தான்.

**மொத$^3$லெ பி$^3$ரம்மனிகெ$^3$ முகுதிய**
**பத$^3$வனித்து உளித$^3$த$^3$ முக$^2$யப்ராணனிகெ$^3$**
**பது$^3$ம ஸம்ப$^4$வனெம்ப$^3$ பட்டவனெ கட்டி**
**ஹதினால்கு லோக காவெம்ப$^3$ ||48**

மொதலெ - பிரம்மனை பத்மத்திலிருந்து படைக்கும் முன்னரே. பிரம்மனிகெ - சென்ற கல்பத்தின் பிரம்மனுக்கு. முகுதிய பதவனித்து - மோட்ச பதவியைக் கொடுத்து. உளிதத - காலியான அந்த இடத்திற்கு. முக்யப்ராணனிகெ - வாயுதேவனை. பதும ஸம்பவனெம்ப - பத்மஜ (பிரம்ம) என்னும். பதவனெ கட்டி - அதிகார ஸ்தானத்தில் அமர்த்தி. ஹதினால்கு லோக - 14 உலகங்களையும். காவெம்ப - நானே ரட்சிக்கிறேன் என்கிறான் (இவ்வாறு சங்கல்பம் செய்து ஸ்ருஷ்டி காரியத்தில் ஈடுபடுகிறான் என்று அர்த்தம்).

** பூர்வகல்பத்தின் வாயுதேவனே, நாபி கமலத்தில் பிறந்த இந்த கல்பத்தின் பிரம்மன். சென்ற பிரம்மனை மோட்சத்தில் வைத்து முக்ய பிராணனை பிரம்ம பதவிக்குக் கொண்டு வர சங்கல்பம் செய்து, நாபி கமலத்திலிருந்து படைத்தான்.

ஸ்லோக:

**முக்$^{2}$யபிராணாய நமோ மந்த்ரத்ரயஜப: ஸதா$^{3}$ |**
**அனுக்$^{3}$ரஹாய மே விஷ்ணோ: ப்ரீதயே க்ரியதே ஹி ஸ: ||**
**ஏகவிம்ஷத் ஸஹஸ்ராத்மா ஷட்மதம் தமஹர்னிஷம் ||**

முக்யபிராணாய - முக்யபிராணனுக்கு. நம: - நமஸ்காரம். ஹி - ஏனெனில். ஸ: - அவன். ஸதா - நிரந்தரமாக. மந்த்ரத்ரயஜப: - மூன்று மந்திரங்களின் ஜபம் உள்ளவன். விஷ்ணோ: - ஸ்ரீவிஷ்ணுவின். ப்ரீதயே - ப்ரீத்யர்த்தமாகி. மே அனுக்ரஹாய - என்னை அருள்வதற்காகவும். ஏகவிம்ஷத் ஸஹஸ்ராத்மாஷட்மதம் - 21,600 முறை. தம் - அந்த மந்திர ஜபத்தை. அஹர்னிஷம் - இரவும் பகலும் விடாமல். க்ரியதே - செய்கிறான்.

ஒரு நிமிடத்திற்கு 14 முறை உச்வாஸ, நிஷ்வாஸகங்கள் ஆகின்றன. ஒரு நாளுக்கு 21,600 ஆகின்றன. இவை பிராணி தேகங்களில் இருந்து, முக்ய பிராணதேவன் செய்யும், ஹம்ஸ மந்திர ஜபங்கள் ஆகும். ஷ்வாஸ உஷ்வாஸங்களாலேயே பிராணிகள் வாழ்கின்றன. ஆகையால், முக்யபிராணனே ஜீவதாரகன். அவனின் மந்த்ரஜபம் நின்றால், நாம் இறக்கிறோம். நம் தேகம் பிணம். அவனின் ஜபத்தினால் நாம் பிழைத்திருக்கிறோம் என்றாலும், அதற்காகவே அவனின் ஜபம் அல்ல. விஷ்ணு ப்ரீதியே அவனின் முக்கிய குறிக்கோள் ஆகும். எண்ணிக்கையற்ற ஜீவர்களின் பிராண தாரகனான முக்ய பிராணனின் மகிமை, ருத்ராதி ஜீவர்களுக்கும்கூட, எல்லையற்றதும், அற்புதமும் ஆகும். ஜீவனைக் கொடுப்பவனான முக்யபிராணன் ஜபிக்கும் மந்திரம் மூன்று பாகங்களைக் கொண்டது. ஆகமங்களில் இது ஹம்ஸ மந்திரம் என்று சொல்லப்படுகிறது.

---

‘ஹம்ஸ: ஸோऽஹம் ஸ்வாஹா’ என்பதே அந்த மந்திரம். ஹம்ஸ – என்பது நடுவிலும்; ஸோஹம் என்பது உச்வாஸ காலத்திலும்; ஸ்வாஹா – நிஷ்வாஸ காலத்திலும் உச்சரிக்கப்படுகிறது. அனைத்து தோஷதூரனும், பக்தர்களின் துக்க அஞ்ஞானாதி தோஷ பரிகாரகனுமான ஸ்ரீஹரி ‘ஹம்ஸன்’. ஸோஹம் என்றால் அந்த ஸ்ரீஹரியே என் அந்தர்யாமி என்று அர்த்தம். ஸ்வாஹா என்றால் ஸமர்ப்பண சகிதமான நமஸ்காரம்.

அந்தர்யாமிணமீசேஷம் அபேக்ஷ்யாஹம் த்வமித்யபி |
இமே ஷப்தா: ப்ரயுஜ்யந்தே ஸதி பேதேऽபி வஸ்துஷு ||
(பாஷ்ய)

அதாவது, அஹம், த்வம், முதலான சொற்கள் பின்ன வஸ்து வாச்யங்கள் ஆனாலும், ஸர்வ நியாமகனான அந்தர்யாமியை குறிப்பதற்கு பயன்படுத்தப்படுகிறது. ஆகையால், ‘ஸோஹம்’ என்பதில் அஹம் என்றால், என் அந்தர்யாமி என்றே அர்த்தம். நானே ஹம்ஸ என்னும் தவறான அர்த்தத்தை சொல்பவர்கள் அசுரர்கள்.

பத 4 ராகம்: -- தாளம்: ரூபக
**ஆருனூரு கூடி$^{3}$ இப்பத்தொந்து$^{3}$ ஸாவிர**
**மந்த்ரைக ஷ்வாஸஜப**
**மாருத ஈரேளு லோகத$^{3}$ ஜீவரெல்லரந்தெ**
**மாடி$^{3}$ மெச்சிருவ ||1**

**இந்தா ப$^{4}$க்தனிகெ$^{3}$ பி$^{3}$ரம்மபட்டவனு ஸ்ரீ**
**காந்த கட்டுவதொ$^{3}$ந்த$^{3}$ரிதே$^{3}$**
**எந்தெ$^{3}$ந்து$^{3}$ ஸேவிபரந்தந்தவர த$^{3}$யவந்த ஆ**
**னந்த$^{3}$ ரக்ஷிஸுவனு ||2**

ஆருநூரு கூடி இப்பத்தொந்துஸாவிர – 21,600 எண்ணிக்கையின். மந்த்ரைகஷ்வாஸ ஜபவ – (முக்ய பிராண தேவனுக்கு) முன்ய மந்த்ரமான ஷ்வாஸ ஜபத்தினை (நமக்கு மூச்சு விடுதல், அவருக்கு ஸ்ரீஹரி ப்ரீதமான மந்திரம்). மாருத – வாயுதேவன். ஈரேளுலோகத ஜீவரெல்லரந்தெ – 14 உலகத்தின் அனைத்து

ஜீவர்களின் ஷ்வாஸகங்களை உச்சரித்து. மாடி - அவரின் தேகங்களில் இருந்து ஜெபித்து. மெச்சிருவ - இதனால் மகிழும். ஸ்ரீகாந்த - லட்சுமிபதி. இந்தா பக்தனிகெ - இத்தகைய மகிமை உள்ள தன் பக்தனுக்கு. பிரம்மபதவியை. கட்டுவுதொந்தரிதெ - கொடுப்பது அதிகமா? (ஆச்சரியம் எதுவும் இல்லை). எந்தெந்து - எப்படியெப்படி. ஸேவிபர - வணங்குவரோ. அந்தந்து - அப்படி அப்படி அவர - அவர்களை. தயவந்த - க்ருபா மூர்த்தியான. அனந்த - ஸ்ரீஹரி. ரக்ஷிபனு - அருள்கிறான்.

** ஸர்வஸமனான ஸ்ரீஹரி, அனைவருக்கும் சேவானுரூபமான பலன்களைக் கொடுத்து அருள்கிறான். பிரம்மபதவியும், முக்யபிராண தேவனின் அற்புதமான, வேறு யாராலும் சாத்தியம் இல்லாத சேவைக்கு தக்கதேயாகும் என்பதை ஹம்ஸ மந்திர ஜப பிரகாரத்தின் வர்ணனையினால் குறிக்கப்படுகிறது என்று அறியவேண்டும். இவ்வாறே, அவரின் அனைத்து க்ரியைகளும் விஷ்ணுப்ரீதியை மட்டுமே உத்தேசித்து, செய்யப்படும் விஷ்ணு பூஜாரூபம் ஆனவைகளே ஆகும்.

யே யதா மாம் ப்ரபத்யந்தே தான்ஸ்ததைவ பஜாம்யஹம் ||
(கீதை) மற்றும்

நைஷா பராவரமதிர் பவதோ நனு ஸ்யா
ஜ்ஜந்தோர்யதாத்ம ஸஹ்ருதோ ஜகதஸ்ததாபி |
ஸம்ஸேவயா ஸுரதரோரிவ தே ப்ரஸாத:
ஸேவானுரூப உதயோ ந பராவரத்வம் || (பாகவத)

என்னும் வாக்கியங்களும், ஸ்ரீஹரியினால் கிடைக்கும் பலன் சேவானு ரூபம் என்னும் பிரமேயத்தையே விளக்குகிறது. இந்த பிரமாண வாக்கியங்களின் அர்த்தம். யே - யார். யதா - இவ்வாறு. மாம் - என்னை. ப்ரபத்யந்தே - பஜிக்கின்றனரோ. தான் - அந்த மக்களை. ததைவ - அவரின் சேவானுசாரமாகவே. அஹம் - நான். பஜாமி - (வரங்களைக் கொடுப்பதற்காக) அருள்கிறேன். (கீதை).

யதாஜந்தோ: - பிராணிகளின் யோக்யதை (உச்ச நீச பாவனைகள்) எப்படியோ, ததா - அப்படி (அதற்கேற்ப) ஆத்மஸுஹ்ருத: - சர்வ

---

ஜீவர்களை ப்ரீதிக்கும் (உபகாரனான). பவத: - உனக்கு. ஏஷா - இந்த (லோகத்தின் மக்களின் காணும்). பராவரமதி: - உச்ச நீச என்னும் விஷய புத்தி. ந ஸ்யாத்னனு - இல்லை என்பது (கிடைக்காது என்பது) தெளிவான விஷயமாகும். ஜகத: அபி - ஜகத்திற்கோ (பிராணிகளுக்கு). தே ப்ரஸாத: - உன் மகிழ்ச்சியின் பலன். ஸுரதரோ: - கல்பவ்ருக்ஷத்தின். ஸம்ஸேவயா - சேவையினால். ஸேவானுரூப உதய: இவ - ஸேவானுகுணமான பலோதயம் ஆகுமாறு. ந பராவரத்வம் - உச்ச நீசர் என்னும் பாரபட்சத்தினால் அல்ல.

**ஆரு திங்க$^3$ளு ஜபமாடி$^3$த$^3$ த்$^4$ருவனிகெ$^3$**
**ஸோரிஸித$^3$னு த்$^4$ருவ பத$^3$வ**
**நூரு பி$^3$ரம்மன வர்ஷ பரியந்த ஈ வித$^3$தி$^3$**
**ஆராதி$^3$ஸுவ ப$^4$க்தகெ$^3$ ||3**

**பூரைஸிகொடு$^3$வுத$^3$கெ ஸுப$^4$க$^3$வில்ல**
**தொ$^3$ரகொந்து$^3$ கொட்டு திருகு$^3$வந்தெ**
**மாருதகெ$^3$ பொ$^3$ம்ம பட்டவனித்து த**
**ன்னாரோக$^3$ணெயொளர்த்$^3$த$^4$வனித்த ||4**

ஆறு திங்களு - ஆறு மாத காலங்கள். ஜப மாடித த்ருவனிகெ - தவம் செய்த த்ருவ ராஜனுக்கு. த்ருவபதவ - த்ருவ பதவியைக் கொடுத்து. ஸோரிஸிதனு - அருளினான். நூரு பிரம்மன வர்ஷபரியந்த - பிரம்ம தேவனின் ஒரு நூறாண்டு காலம். ஈ விததி - இந்த அற்புத பிரகாரத்தினால். ஆராதிஸுவ பக்தகெ - வணங்கும் பக்தனுக்கு வேறு எந்த பதவியை கொடுக்க வேண்டும்? (அறிஞர்கள் யோசிக்கட்டும்). பூரைஸிகொடுவுதகெ - (முக்ய பிராணனின் சேவைக்கு ஏற்ப) பூர்ண பலன்களைக் கொடுப்பதற்கு. ஸுபகவில்ல - செல்வமே இல்லை. (யோக்ய வஸ்துவே இல்ல - சரியான இடமும் இல்லை). தொரகொந்து கொட்டு - கிடைத்த ஏதோ ஒன்றினைக் கொடுத்து. திருகுவந்தெ - சும்மா இருப்பதைப் போல. மாருதகெ - வாயுதேவனுக்கு. பொம்மபட்டவனித்து - பிரம்ம பதவியைக் கொடுத்து. தன்னாரோகணெயொளு - தன் போகத்தில். அர்த்தவனித்த - சம பாகத்தைக் கொடுத்தான் (ஸஹபோகத்தை கொடுத்தான்).

(நாம் நைவேத்தியத்திற்கு வைத்த பதார்த்தங்களில் இருக்கும் ஸ்வாக்ய ரஸத்தினை ஸ்ரீஹரி ஏற்றுக் கொள்ளும்போது தன் துடையின் மேல் ஸ்ரீவாயுதேவனை அமர்த்திக் கொண்டு, தன்னுடன் அவனுக்கு அர்ஹமான ரஸத்தை, அன்புடன் குழந்தைக்கு தாய் உண்ண வைப்பதைப் போல உண்ண வைக்கிறானாம். ஆகையால், ஸ்ரீவாதிராஜர் தன்னாரோகணெ என்றிருக்கிறார். இந்த பாக்கியம் வேறு யாருக்கு வரும்? அரோகணை என்பதற்கு போஜன என்றும் ஒரு அர்த்தம் உண்டு).

** இத்தகைய அற்புத மகிமோபேதனான முக்யபிராணனும் எப்போதும் அனைத்து விதங்களிலும் ஸ்ரீஹரியின் வசம் ஆகிறான். ஹம்ஸ மந்திர ஜபத்தைக்கூட ஸ்ரீஹரியின் அருளால் செய்கிறான். ஸ்ரீஹரியைத் தவிர வேறு யாரும் எந்த செயல்களையும் ஸ்வதந்த்ரமாக செய்ய மாட்டார்கள் என்னும் முக்ய பிரமேயத்தை கவனத்தில் வைத்துக் கொண்டு, ஸ்வயோக்யமான ஸாதனைகளை செய்வித்து, அதற்கேற்ப பலன்களை கொடுப்பவன் ஸ்ரீஹரியே என்று அறிய வேண்டும்.

ஷ்வாஸாதி அனைத்தும் முக்யபிராணனின் வசமானாலும் அவன் விஷ்ணுவின் வசம் என்று சொல்லும் – லய சந்தி பத 10, நுடி 6ன் குறிப்புகளுக்கான பிரமாணங்கள் இவ்வாறு உள்ளன.

முக்யபிராணவஷே ஸர்வம் ஸ விஷ்ணோர்வஷக: ஸதா ||
(அணுபாஷ்ய)
அனைத்தும் முக்யபிராணனின் வசம். அவன் எப்போதும் ஸ்ரீவிஷ்ணுவசம்.

'ஹம்ஸரூபௌ' ஹி தௌ தேவௌ ஷ்வாஸோச்வாஸப்ரவர்த்தகௌ
(ப்ருஹதாரண்ய பாஷ்ய)
நிர்தோஷிகளான (ஆகையாலேயே ஹம்ஸ ஷப்த வாச்யரான) விஷ்ணு வாயுகள் இருவரும் ஷ்வாஸோச்வாஸ பிரவர்த்தகர் ஆவர்.

3. ஸ்ருஷ்டி ஸந்தி

---

** வெறும் ஸத்யலோகாதிபத்ய ரூபத்தின் பிரம்மபதவியும்கூட முக்யபிராணனின் சேவைக்கு சரியான பலன் அல்ல என்றே ஸ்ரீஹரி அவனுக்கு 'ஸஹபோக'த்தைக் கொடுத்தான் என்று சொல்வது, இந்த நுடியின் பாவத்தை தெளிவுபடுத்துகிறது.

முக்திப்ரதானாத் ப்ரதிகர்த்ருதா மே ஸர்வஸ்ய ஜாதோ பவதாம் பவேத |
ஹனூமதோ ந ப்ரதிகர்த்ருதா ஸ்யாத் ஸ்வபாவபக்தஸ்ய நிரௌபதம் மே |
போகாஷ்சயே யானி ச கர்ம ஜாதான்யனாத்யனந்தானி மமேஹ ஸந்தி |
மதாக்ஞயா தான்யகிலானி ஸந்தி தாது: பதே தத்ஸஹபோக நாமா |
ஏதாத்ருஷம் மே ஸஹ போஜனம் தே மயா ப்ரதத்தாம் ஹனுமன் ஸதெய்வ || (பாரத தாத்பர்ய நிர்ணய)

இந்த ஸ்லோகங்களின் அர்த்தம் இவ்வாறு:
பவதாம் ஸர்வஸ்ய - உங்கள் அனைவரின் என் சேவாரூபமான நன்றிக்கு. முக்தி ப்ரதானாத் - உங்களுக்கு மோட்சத்தைக் கொடுப்பதால். மே - என் ப்ரதி கர்த்ருதா - என் பிரதி உபகாரம். பவேத - ஆகிறது (ஆனால்). நிரௌபதம் - உபாதி ரஹிதனாகி (பலன்களின் விருப்பம் ஆகிய எந்த காரணமும் இல்லாமல்) வணங்கும். ஸ்வபாவபக்தஸ்ய - ஸ்வாபவத்தினாலேயே சிறந்த பக்தனான. ஹனூமத: - ஹனுமந்தனுக்கு. ப்ரதிகர்த்ருதா ந ஸ்யாத் - (மோட்ச பிரதானமும்) தக்க பிரதி உபகாரம் (சம்பாவனை) ஆவதில்லை. இந்த உலகில், அனாத்யனந்தானி யானி கர்மஜாதானி - அனாதி அனந்தங்களான எந்த கர்ம சமூகங்கள் இருக்கின்றனவோ. தானி - அந்த அனைத்தும். தாது:பதே - பிரம்ம பதவியில் (பிரம்மனின் வசத்தில்). ஸந்தி - இருக்கின்றன. (அதாவது, அனைத்து பிராணிகளால் நடக்கும் அனைத்து சுப கர்மங்களின் முக்ய காரணத்வம், விஷ்ணு பிரம்மருக்கு இருப்பதால், அந்த அனைத்தின் பல ரூபமான சுகானுபவம், இந்த இருவருக்கும் உண்டு.

பிரம்மனுடன் (பிரம்மாந்தர்யாமியாக இருந்துகொண்டே). சர்வ ஷுப பல போக்தனு - ஸ்ரீவிஷ்ணு. இந்த காரணத்தினால் இந்த விசேஷமான பிரம்ம பதவிக்கு சஹபோக என்று பெயர். ஏதாத்ருஷம் - இவ்விதமான சுகபோகங்களைக் கொண்ட. மே ஸஹபோஜனம் - என் சஹபோகம். மயா - என்னால். ஹனுமன் - ஹே ஹனுமந்தனே. ஸதெய்வ - நிரந்தரமாக. ப்ரதத்தம் - (உனக்கு) கொடுக்கப்பட்டிருக்கிறது.

**லெக்கவில்லத3 நானா ஜீவரு மாடு3வ**
**ஸத்கர்மக3ள ப2லவாத3**
**ஸௌக்2யவ பொ3ம்ம பட்டவனாள்வ தே3வன**
**லக்ஷ்மீரமண கூடி3கொண்ட3 ||5**

**அத3ரிந்த3 ஸஹபோ4க3 பத3வெம்பு3த3ரிந்த3 ஸம்**
**பதவ முக்2ய ப்ராணனிகெ3**
**மத3னய்யகெ3 இந்து மாடி3த3 ஸேவெகெ3**
**ஸத3மலப2லவித்து கொடி3 கொடு3வ ||6**

**நம்பி3த நாலிகெ3 ப3ந்து3 பே3ட3லாகி3**
**உம்ப3கெ3 கூடி3கொண்டு3ம்ப3**
**நம்பி3ஸுவந்தெ பொ3ம்மனிக3ர்த்த4வனுணிஸி ஹரி**
**உம்ப3 ஸம்ப்4ரமவேனெம்பெ3 ||7**

**பொ3ம்மன நூரு வர்ஷ பரியந்த**
**ஸமீர மாடி3த3 ஜபகெ**
**ஸம்மத ப2ல பொ3ம்ம கல்பதி3 உணிஸி**
**ரமேஷ தானெந்தி3ரதெ3 ||8**

**அந்து3 ஹனுமனிகி3த்த சந்த3த3 கரவனு**
**இந்து3 ஸார்த்தக மாடி3த3னு**
**இந்தி3ரெயொட3கூடி3 தன்ன புரங்க3ள**
**ஹொந்தி3 ஆனந்த3தொ3ளிர்த்த3 ||9**

லெக்கவில்லத - எண்ணிக்கையில்லாத. நானா ஜீவரு - மக்கள். மாடுவ ஸத்கர்மகள பலவாத - செய்யும் சுப கர்மங்களின் பலரூபமான. ஸௌக்யவ - சுகத்தை. லட்சுமிரமண -

---

ஸ்ரீநாராயணன். பிரம்மபட்டவனாள்வ - பிரம்ம பதவியில் இருந்து அதிகாரம் செய்யும். தேவன - சதுர்முக பிரம்மனின். கூடி - (அந்தர்யாமியாகி) அவனில் இருந்து. கொண்ட - போகித்தான் (ஏற்றுக் கொள்கிறான்). ||5

அதரிந்த - இந்த காரணத்தினால். ஸஹபோகபதவெம்புது - (பிரம்ம பதவிக்கு) ஸஹபோக என்னும் நாமம்; அதரிந்த - ஆகையால். மதனனய்யகெ - ஸ்ரீஹரிக்கு. இந்து மாடித ஸேவெகெ - இவ்வாறு நிரந்தரமாக செய்த சேவைக்கு. ஸதமல - பவித்ர ஸ்வரூபனான (சச்சிதானந்த ஸ்வரூபனான) நாராயணன். பலவித்து - (பூர்ண ப்ரதிபலமாக இல்லாவிட்டாலும்) பல ரூபமாகக் கொடுத்து (ஏற்றுக்கொள் என்று ஆணையிட்டு). முக்யபிராணனிகெ - வாயுதேவனுக்கு (வேறு யாருக்கும் அல்ல). ஸம்பதவ - இந்த பாக்கியத்தை. கொடிகொடுவ - (அவனுடன் தானும் போகித்து) அருள்கிறான் ||6

நம்பித ஸாலிகெ - விஸ்வாசிகளின் வரிசைக்கு. பந்து பேடலாகி - வந்து கேட்க. உம்பகெ - உண்பவனுக்கு. கூடிகொண்டும்ப - (உலக மக்களும்கூட) அவனுடன் உண்கிறான். நம்பிஸுவந்தெ - (அப்படி உண்டு தனக்கு அவனில் இருக்கும் ப்ரீதி விஷயத்தில்) நம்பிக்கை வருமாறு. பொம்மனிகெ - பிரம்மதேவனுக்கு. அர்த்தவனுணிஸி - (அவனுடன்) அனைத்து போகங்களை உண்டு (கூட போகத்தைக் கொடுத்து). ஹரி - ஸ்ரீஹரி. உம்ப ஸம்ப்ரமவ - போகிக்கும் சம்பிரமத்தை (உற்சாகத்தை அல்லது தன்னுடன் இருப்பவனின் சமன் தான் என்னும் மோகத்தை அஞ்ஞானிகளுக்குக் கொடுக்கும் விதத்தை). ஏனெம்பெ - என்னவென்று வர்ணிப்பேன்? ||7

பொம்மன நூறு வர்ஷ பரியந்த - (சென்ற கல்பத்தின்) பிரம்மனின் நூறு ஆண்டு காலம். ஸமீர - வாயுதேவன் (வாயுபதவியில்). மாடித ஜபகெ - செய்த ஹம்ஸ மந்திர ஜபத்திற்கு. ஸம்மதபல - தனக்கு பிடித்த பலன்களை. பொம்மகல்பதி - இந்த பிரம்ம கல்பத்தில். எந்து - (கொடுப்பேன் என்று) சங்கல்பம் செய்து. இரதே உணிஸி - (அந்த பலன்களை) தவறாமல் போகிக்குமாறு செய்து.

ரமேஷ - ரமாபதி. தானே - ஸ்வயம். (அடுத்த நுடியில் வாக்கியம் பூர்த்தியாகிறது). ||8

அந்து - ஸீதையிடமிருந்து சூடாமணியைக் கொண்டு வந்து கொடுத்த நாளே. ஹனுமனிகெ - ஹனுமத் அவதாரனான வாயுதேவனுக்கு. இத்த - கொடுத்த. சந்தத கரவன்னு - சிறந்த பரிசினை. இந்து - இப்போது (அந்த வாயுதேவனையே நாபி கமலத்தில் பிரம்மனாக பிறக்க வைத்து). ஸார்த்தக மாடிதனு - உண்மையாக்கினான். இந்திரெயொடகூடி - லட்சுமி சகிதனாகி. தன்ன புரங்கள - (வைகுண்டாதி முக்த ஸ்தானங்களை). ஹொந்தி - சேர்ந்து (அங்கு இருந்தவாறு). ஆனந்ததொளு - ஸ்வரூபானந்த பூர்ணனாகி. இர்த்த - இருந்தான். ||9

பிரம்மாண்டம் ஸ்ருஷ்டி ஆன உடனேயே, வைகுண்டாதி லோகங்களும் பிரம்மாண்டத்தில் வ்யக்தமாகி முக்தரின் க்ரீடையும் ஆரம்பமாகிறது. இங்கு சந்தி-1, பத-17, நுடி-5ன் குறிப்பினையும் மற்றும் சந்தி-2, பத-7, நுடி-5ன் குறிப்பினையும் பார்க்கவும். அதுவரை முக்தர்கள் த்யானானந்தத்தில் மூழ்கி இருக்கின்றனர். பிரம்மாண்டத்தில் வியக்தமான வைகுண்டம்:

பிரம்மாண்டே ஜலபூர்ணேபி ஜலலேஷோபி யத்ர ந |
தாத்ருஷம் ரமணீயம் தத்வைகுண்டாக்யம் பரம் பதம் ||

பிரம்மாண்டம் ஜலபூர்ணமானாலும், எங்கு அந்த ஜல பிரவேசமே இல்லையோ, அந்த ரமணீயமான இடமே வைகுண்ட என்னும் பரமபத என்று வர்ணிக்கப்படுகிறது. நாபி கமலத்தில் பிரம்மனை படைத்து, அத்ருஷ்யனாகவே 'தப தப' என்று ஆணையிட்டு, தேவமானத்தினால் 10,000 ஆண்டுகளின் கால அளவில் அவனின் தவம் முடியும்வரைக்கும், ஸ்ரீஹரி, வைகுண்டாதிகளில் க்ரீடித்து, பிறகு பிரசன்னனாகி, ப்ரத்யக்ஷ தரிசனத்தைக் கொடுத்து:

உபாதிஷத்ததோ வேதான் ஸாங்கான் ஸூத்ராணி ஜாகமான் |
பஞ்சராத்ரமுகான் தஸ்ம்யை ததோந்தர்த்தான மாப்தவான் ||

3. ஸ்ருஷ்டி ஸந்தி

---

வேத, வேதாங்கங்களையும், மீமாம்ஸா பஞ்சராத்ர முதலான ஆகமங்களையும் உபதேசம் செய்து, அந்தர்தானம் அடைந்து, திரும்ப வைகுண்டத்தில் எப்போதும் போல வெளிப்பட்டு ஸ்வானந்த பூர்ணனாகி சஞ்சரிக்கிறான். விஷ்ணு ரஹஸ்யத்தில் சொல்லப்பட்டுள்ள விளக்கத்தை 'இந்திரெயொடகூடி தன்ன புரங்கள ஹொந்தி' என்னும் இந்த நுடி பாகத்தினால் விளக்கப்பட்டுள்ளது.

**கர்து ஹயவத$^3$ன பொம்மாண்ட$^3$தொ$^3$ளகெ$^3$ ஸ**
**ர்வத்ர ஜீவர நிர்மிஸித$^3$னு**
**முக்தவர்க்க$^3$வ தன்ன மூல ஸ்தா$^2$னதொ$^3$ளிட்டு**
**விஸ்தரிஸித$^3$ ஸ்ருதி பத$^2$வ ||10**

கர்து - ஸர்வ கர்த்தனான. ஹயவதன - ஸ்ரீஹயக்ரீவ ஸ்வாமி (ஸ்ரீஹரி). பொம்மாண்டதொளகெ - பிரம்மாண்டத்தில். ஸர்வத்ர - அனைத்து இடங்களிலும். ஜீவர - ஜீவர்களை. நிர்மிஸிதனு - படைத்தான். முக்த வர்க்கவ - முக்த ஜீவரின் சமுதாயத்தை. தன்ன மூலஸ்தானதொளிட்ட - த்ரிதாமங்கள் என்னும் வைகுண்டாதிகளில் சஞ்சரிக்க வைத்தான். ஸ்ருதிபதவ - வேத மார்க்கத்தை. விஸ்தரிஸித - விளக்கினான் (அல்லது ஸ்ருதியில் சொல்லப்பட்டுள்ள விதத்தில் ஸ்ருஷ்டி காரியங்களை செய்யத் துவங்கினான்).

**இந்தி$^3$ரேஷனெ ஈ ஜக$^3$வனு எல்லவ**
**சந்த$^3$தி$^3$ந்த$^3$லெ நிர்மிஸித$^3$னு**
**எந்து$^3$ பேளுவல்லி மூரனெய ஸந்தி$^3$**
**இந்து$^3$ முகியிது கேளி பு$^3$த$^4$ரு ||11**

இந்திரேஷனெ - நாராயணனே. ஈ ஜகவனு எல்லவ - இந்த ஜகத்தில் அனைத்தையும். சந்ததிந்தலெ - லீலையினால் (அல்லது எப்படி இருக்க வேண்டுமோ அப்படி). நிர்மிஸிதனு - படைத்தான். எந்து பேளுவல்லி - இவ்வளவு விஷயங்களை சொல்வதுடன். மூரனெய ஸந்தி - 3ம் இந்த ஸ்ருஷ்டி ஸந்தி. இந்து - இன்று. முகியிது - முடிந்தது. கேளி புதரு - விவேகிகள் கேட்டு

நிஷ்டையை அடையுங்கள் (ஞானிகள் இந்த பகவந்தனின் மகிமையைக் கேட்டு மகிழ்ச்சியடையுங்கள்).

ஸ்வதந்த்ர ஸ்ருஷ்டிகர்த்தன் ஸ்ரீஹரியே. பிரம்மனில், பிரம்ம நாமகனாக இருந்து, தானே ஸ்ருஷ்டிக்கிறான். சதுர்முக பிரம்மன் ஒரு அதிஷ்டானம் மட்டுமே. அவனை ஸ்ருஷ்டி கர்த்தன் என்று சொல்லி, லோகபூஜ்யனாக வைத்து, மகா போகங்களைக் கொடுத்து அருள்கிறான்.

**ஸ்ரீத[4]ர ஹயவத[3]ன ராயன த[3]யதி[3]ந்த[3]**
**வாதி[3]ராஜேந்தி[3]ர ரசிஸித[3]**
**ஈ தி[3]வ்ய காவ்யத[3] ஸ்ருஷ்டியனொரெத[3] ரம்ய**
**வாத[3] த்ருதீய ஸந்தி[4] பொஸகெ[3] ||12**

ஸ்ரீதர - லட்சுமிபதியான. ஹயவதனராயன - ஸ்ரீஹயக்ரீவ ஸ்வாமியின். தயதிந்த - அருளால். வாதிராஜேந்திர ரசிஸித - வாதிராஜர் என்னும் யதிஸ்ரேஷ்டர் நிர்மாணித்த. ஈ திவ்ய காவ்யதி - இந்த சிறந்த காவியத்தில். ஸ்ருஷ்டியனொரெத - ஸ்ரீஹரியின் ஸ்ருஷ்டி ரூப மகிமையை நிரூபித்த. ரம்யவாத - மனோகரமான (பக்தருக்கு ஆனந்தபிரதனான). த்ருதீய ஸந்தி - மூன்றாம் ஸந்தி. பொஸகெ - ஒளிரட்டும்.

***

## || ஸ்ரீஹயமுகாய நம: ||
## || ஸ்ரீவாதிராஜகுருப்யோ நம: ||

## ⁕ தத்வஸார ⁕

# 4. ஸ்திதி ஸந்தி

ராகம்: நாடெ. தாளம்: ரூபக

**இது புண்யகதெ[2] லோகக்கிது[3] முகுதிய பத[2]**
**இத[3] கேளுவவனெ க்ருதார்த்த[2] || பல்லவி**

அர்த்தம்: சென்ற சந்திகளின் பல்லவியைப் போலவே.

ஸ்லோக 1
**நாராயணாய பரிபூர்ண கு[3]ணார்ணவாய**
**விஷ்வோத[3]யஸ்திதி[2] லயோன் நியதிபிரதா[3]ய |**
**ஞானப்ரதா[3]ய விபு[4]தாஸுர ஸௌக்[2]யது[3]க்க[2]**
**ஸத்காரணாய விததாய நமோ நமஸ்தே ||**

பரிபூர்ண குணார்ணவாய - அனைத்து இடங்களிலும் பல ஞானானந்தாதி குணங்களால் பூர்ணனான. விஷ்வோதய ஸ்திதிலயோ நியதி ப்ரதாய - அனைத்து ஜகத்தின் உற்பத்தி, ஸ்திதி, லய, நியமனாதிகளை செய்யும் (உலகிற்கு உற்பத்தி முதலானவற்றை கொடுக்கும் / உருவாக்கும்). ஞானப்ரதாய - ஞானத்தைக் கொடுக்கும். விபுதாசுர ஸௌக்ய துக்க ஸத்காரணாய - தேவ மற்றும் அசுர ஸ்வபாவத்தின் ஜீவர்களுக்கு முறையே மோட்ச மற்றும் தமஸ்ஸினை (நித்யசுக துக்கங்களையும்) கொடுக்கும். விததாய - வியாப்தமான. நாராயணாய -

நாராயணனுக்காக. (குணபூர்ணனும் நிர்தோஷனுமான நாராயணன் என்னும்). தே - உனக்கு. நமோநம: - திரும்பத்திரும்ப நமஸ்காரம்.
* நாராயண என்னும் சொல் ஸ்ரீஹரியின் பல மகிமைகளை நிரூபிக்கும் அனேக அர்த்தங்களைக் கொண்டது. அவற்றில் குணபூர்ணத்வ, நிர்தோஷத்வ, ஸர்வாஸ்ரயத்வ ஆகியவை முக்கியமானவை.

* ஸர்வதேஷ - ஸர்வகாலத்தில் இருப்பவனும். ஸர்வக்ஞத்வ - சர்வஷக்தி ஸ்வாதந்த்ர்யாதி குணங்கள் உள்ளவனும். அதாவது, தேஷ, கால, குணங்களால் வ்யாப்தனானவன் - இத்தகையவன் மட்டுமே ஜகத் கர்த்தன் ஆவதற்கு வல்லவன். ஸ்ரீஹரி, இவ்வாறு வியாப்தன் என்று தெரிவிப்பதற்காக 'விததாய' என்று இருக்கிறது.

* ஸ்ருஷ்ட்யாதிகளை செய்கிறார் என்பதில் ஞானப்ரதத்வமும் சேர்கிறது. ஆனாலும் வஸ்து ஸ்வபாவங்களை மீறாமல் காக்கிறான் ஆகையால், ஜட வஸ்துகளுக்கு ஞானபிரதன் அல்ல. ஆனால், அனைத்து சேதன வர்க்கத்திற்கு, ஸம்யக், மிஸ்ர மற்றும் மித்யா பேதத்தினால் த்ரிவித ஞானத்தைக் கொடுப்பவன் என்று (அவரவர் தகுதிக்கேற்ப) தெரிவிப்பதற்காக 'ஞானப்ரதாய' என்று குறிப்பிட்டு சொல்லப்பட்டிருக்கிறது.

** நாராயண என்னும் சொல், 'ஏகோ நாராயண ஆஸீத்' ஆகிய ஸ்ருதிகள் சொல்வதைப் போல, ஸ்ருஷ்டிக்கு முன்னர், பிரளய காலத்தில்கூட இருப்பவன் என்னும் அர்த்தத்தையும், ஆகையால், ஆத்யந்த ரஹித நித்ய ஸ்வரூபம் உள்ளவன் என்றும் சொல்கிறது.

ஆபோ நாரா இதி ப்ரோக்தா ஆபோ வை நரஸூனவ: |
அயனஸ்தஸ்ய தா: பூர்வம் தேன நாராயண ஸ்ம்ருத: ||

பிரளய உதக ரூபத்தினால் இருந்து, அனைத்து ஜகத்தின் உற்பத்திக்குக் காரணமான லட்சுமிதேவியுடன் மட்டும் பிரளய காலத்தில் இருந்த காரணத்தினாலும், ஸ்ரீஹரி நாராயணன் எனப்படுகிறான் என்னும் அர்த்தத்தை குறிப்பிடப்படுகிறது என்பதை அறிய வேண்டும். இவ்வாறு ஸம அதிக இல்லாதவன் ஆகையால், நாராயணனே சர்வவந்த்யன் ஆகிறான்.

## 4. ஸ்திதி ஸந்தி

---

பத 1 ராகம்: -- தாளம்: ரூபக

**நீலநிர்மலகா[3]த்ர நிருபம சரித்ர**
**மூலகாரண முக்தரொடெ[3]ய**
**பாலஸாக[3]ர ஷயன பங்கஜனாப[4]னே**
**பாலிஸோ பரம பாவனனெ ||1**

நீலநிர்மலகாத்ர - நீலகாந்தியின் மங்கள தேகத்தைக் கொண்ட (அப்ராக்ருத தேகனான) ஹே நாராயணனே. நிருபமசரித்ர - எல்லையற்ற மகிமைகளைக் கொண்டவனே. மூலகாரண - (வேறு காரணங்கள் இல்லாதவனாக, தானே அனைத்திற்கும் ஸ்வதந்த்ர) மூல காரணனான. முக்தரொடெய - முக்தாதிபனே. பாலஸாகரஷயன - பாற்கடலில் படுத்திருக்கும். பங்கஜநாபனே - ஹே பத்மனாபனே. பரமபாவனனே - (அனைவரையும் பவித்ரமாக்கும்) ஸர்வோத்க்ருஷ்ட பரிசுத்த ஸ்வரூபனே. பாலிஸோ - அருள்வாயாக, பிரபோ.

* நீல, ஷ்யாம சொற்கள் கருப்பு வண்ணத்தையும் குறிக்கிறது. ஆனால், ஸ்ரீஹரியின் தேகத்தின் நீல வர்ணம் மிகவும் அற்புதமான அப்ராக்ருத வண்ணம் ஆகும். அந்த வண்ணத்தின் கற்பனையைக் கொடுப்பதற்கு, ஸ்ருதி, லௌகிக உதாரணங்களுடன் இவ்வாறு சொல்கிறது.

நீலதோயத மத்யஸ்த வித்யுல்லேகேவ பாஸ்வராட் |
மேகத்தின் நடுவில் (மழை பொழிவதற்குத் தயாராக நீல வண்ணமாக உள்ள மேகத்தில்) மின்னல் ஒளியைப் போல (மின்னல் ஒளிரும்போது தெரியும் நீல வண்ணம்) என்று ஸ்ரீஹரியின் தேக காந்தியை நிரூபிக்கிறார்.

** நீலநிர்மலகாத்ர என்றதால் ஸ்ரீஹரியின் தேகஒளி அனைவரிலும் சிறந்தது / வேறுபட்டது என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது என்பதை அறிய வேண்டும். நீல (கருப்பு), நிர்மல (சுத்த) வண்ணங்கள் இரண்டும் ஒன்றுக்கொன்று எதிரானவை. உலக விதிகளில் எதிர்மறையான தர்மங்களும் ஸ்ரீஹரியிடம் தோஷங்கள் அற்றதாகவே இருக்கின்றன என்னும்

'திவ்யத்வ' த்தை சொல்வதாக ஆயிற்று - ஸூர்யகோடி ஸமப்ரபம் - சந்திர கோடி ஸுஷீதலம்' என்று சொல்வதைப் போல.

**ஹாரகௌஸ்துப4த4ர ஹாவினல்லொரகி3ப்ப**
**நாராயண நளினாக்ஷ**
**சாருகுண்ட3ல செலுவ சந்தி3ரவத3னனெ நீ**
**மாரஜனக மன்னிஸென்ன ||2**

ஹாரகௌஸ்துபதர - (முத்து ரத்ன) மாலைகளையும், கௌஸ்துப மணிகளையும் தரித்திருக்கும். ஹாவினல்லி - சேஷதேவனின் தேகத்தில். ஒரகிப்ப - படுத்திருக்கும். நாராயண - ஹே பத்மனாபனே. நளினாக்ஷ - ஹே புண்டரீகாக்ஷனே. சாருகுண்டல - மனோகரமான கர்ணாபரணங்களையும் தரித்த. செலுவ - அழகான. சந்த்ரவதனனெ - சந்திரனைப் போல (ஒளிரும்) முகம் கொண்ட. மாரஜனக - மன்மதனின் பிதனான (ஸௌந்தர்யநிதி). என்ன - என்னை. மன்னிஸு - மன்னித்து அருள்வாயாக (கருணையுடன் பார்).

**பொன்ன பெண்டெ3ய காஞ்சி பொளெவ பீதாம்ப3ரவ**
**ரன்னத3 கடக ராஜிஸலு**
**அனர்க்4யாப4ரணத3ர்த்திய ஹரிய நம்ம**
**உன்னத ஸுக2வனுணிஸுவனு ||3**

பொன்னபெண்டெய காஞ்சி - தங்கமயமான ஒட்டியாணம். மத்து பொளெவ பீதாம்பரத - ஒளிர்ந்து கொண்டிருக்கும் பீதாம்பரமும். ரன்னத கடக - ரத்ன நிர்மித கை வளையல்களும். ராஜிஸலு - ஒளிர்ந்து கொண்டிருக்க. அனர்க்யா பரணத - விலைமதிக்க முடியாத பூஷணங்கள் உள்ள. அர்த்திய ஹரியெ - ப்ரியதமனான ஸ்ரீஹரியே. நம்ம உன்னத ஸுகவனு - நம் ஸ்வரூபத்தின் பூர்ண சுகத்தை. உணிஸுவனு - அனுபவிக்குமாறு செய்கிறான்.

**கஞ்ச கம்பு3 கண்ட2 கௌமோத3கி ஹஸ்த**
**மஞ்சுள மூர்த்தி மாரமண**
**குஞ்சர ப4யஹாரி குஜன ஸம்ஹாரி நி**
**ரஞ்சன ரக்ஷிஸோ ஜனர ||4**

4. ஸ்திதி ஸந்தி

---

கஞ்சகம்புகண்ட – பத்ம வர்ணத்தின் ஷங்கத்தினைப் போல இருக்கும் கழுத்தினைக் கொண்ட (அல்லது கஞ்ச – பிரம்ம கௌஸ்துப ரூபத்தைப் போல இருக்கும் பிரம்மனையே கம்புகண்டத்தில் கொண்ட). கௌமோதகீஹஸ்த – 'கௌமோதகி' என்னும் கதையை கையில் பிடித்துள்ள. மஞ்சுளமூர்த்தி – அழகானவனான. மாரமண – ஹே லட்சுமிபதியே. குஞ்சரபயஹாரி – கஜேந்திரனின் பயத்தினை பரிகரித்த. (முதலையின் முகத்திலிருந்து விடுவித்த). குஜனஸம்ஹாரி – தைத்ய சம்ஹாரக. நிரஞ்சன – ஹே தோஷதூர ஹரியே. ஜனர – பக்த ஜனர்களை. ரக்ஷிஸோ – அருள்வாயாக. ஸ்வாமியே.

தேஹேந்திரியாதி அனைத்து சாதன சாமக்ரிகளைக் கொடுத்து ஜீவர்களை படைத்த ஸ்ரீஹரி. ஸ்திதி காலத்தில் (ஸ்ருஷ்டி, பிரளயங்களின் மத்ய காலம்) ஜீவரிலும் தேஹேந்திரியாதிகளிலும் ப்ரேரகனாக நின்று. அவரவர்களின் கதிகளைக் கொடுப்பவனாக, அனைத்து விதங்களினால் அவர்களை அருளும் ஸ்ரீஹரியின் நிரந்தர ஸ்மரணைக்குத் தேவையான திவ்ய ரூபத்தை வர்ணித்து, அருள்வாயாக என்று சர்வரக்ஷகனை பிரார்த்திப்பது மட்டும் ஜீவர்களின் கடமை என்று சொல்கிறார்.

பிரஸன்னவக்த்ரம் நளினாயதீக்ஷணம்
கதம்ப கிஞ்சல்கபிஷங்க மாஸஸம் |
லஸன்ம ஹாஹாரஹிரண்ம யாங்கத
ஸ்புரன்ம ஹாரத்ன கிரீட குண்டலம் ||
விபூஷிதம் மேகலயாங்கலீயகை:
மஹாதனைர் நூபுர கங்கணாதிபி: |
ஸ்னிக்தாமலை: குஞ்சித நீலகுந்தலை:
விரோசமானானனஹாஸ பேஷலம் ||

ஆகிய பாகவத ஸ்லோகங்களில் வர்ணிக்கப்படும் ஸ்ரீஹரியின் திவ்ய ரூபங்களையே வர்ணித்திருக்கிறார் என்று தெளிவாகிறது. ஸ்ரீஹரி, நிராகாரன் என்னும் (எந்த ரூபமும் இல்லாதவன் என்னும்) துஷ்டவாதம் ஆகமங்களுக்கும் யுக்திக்கும் எதிரானது

என்பதில், இங்கு பல சந்தர்ப்பங்களில் சொல்லப்பட்டுள்ள விவரணைகளை பார்த்து அறிந்து கொள்ளலாம்.

**து³ஷ்ட தா³னவரனெ மெட்டி ஸஜ்ஜனர ப்ர**
**திஷ்டெய மாடி³ ரக்ஷிஸித³**
**பட்டவ ஷக்ரங்கெ³ கட்டி ப³லியனு கெள**
**கி³ட்டு தன்னிஷ்டர பொரெத³ ||5**

துஷ்ட தானவர - சஜ்ஜனர்களை பீடிப்பவர்களான, அசுர ஸ்வபாவத்தின் தானவர் முதலானவர்களை. மெட்டி - கொன்று. ஸஜ்ஜனர - சுஜீவர்களை. ப்ரதிஷ்டெய மாடி - ஸ்திரமாக நிறுத்தி (தர்ம மார்க்கத்தில் வைத்து). பாலிஸித - அருளினான். ஷக்ரங்கெ - இந்திரனை. பட்டவ கட்டி - ஸ்வர்க்க ஸிம்மாஸனத்தில் அமர்த்தி. பலியனு - தைத்ய சக்ரவர்த்தியான பலியை. கெளகிட்ட - கீழான லோகத்தை (ஸுதல லோகத்திற்கு). தள்ளினான். தன்னிஷ்டர - தனக்கு ப்ரியமான பக்தர்களையும். பொரெத - அருளினான்.

** ரக்ஷணை என்பது, தேக போஷணாதிகளுக்கு அவசியமான தனாதி ஸாமக்ரிகளைக் கொடுப்பது மற்றும் ரோகாதி உபத்திரங்களை பரிகரிப்பது மட்டுமல்ல - ஜீவர்கள், அவரவர்களின் அத்யந்திக கதிகளைக் கொடுப்பதைப் போல, அவர்களை யோக்ய ஸாதன மார்க்கத்தில் வைத்து, நடத்துவதே ஆகும். ஸுஜீவர்களை தர்ம மார்க்கத்தில் வைத்து, அவர்களை ஸம்சார பந்தனத்திலிருந்து விடுதலை செய்து, நித்யானந்த ஸ்திதியைக் கொடுப்பது அவரின் முக்கிய ரக்ஷணை. இந்த ரூபத்தின் ரக்ஷணையை அனைவரின் அந்த:ப்ரேரகனாகி நின்று செய்வது மட்டுமல்லாமல் ஸ்ரீஹரி, தன் பற்பல அவதாரங்களாலும், இதையே சாதிக்கிறான்.

பரித்ராணாய ஸாதூனாம் வினாஷாய ச துஷ்க்ருதாம் |
தர்ம சம்ஸ்தாபனார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே || (கீதை)

துஷ்டர்களைக் கொன்று, சஜ்ஜனர்களுக்கு அருளி, தர்ம ஸம்ஸ்தாபனம் செய்வதற்காகவே அந்தந்த யுகங்களில் அவதரிக்கிறேன் என்று சொல்லியிருக்கிறான்.

** பலி சக்ரவர்த்தி, ஒரு புகழ்பெற்ற பகவத் பக்தன். இவனை கீழே தள்ளியது, பக்த ரக்ஷணையா என்னும் சந்தேகம் வந்தால், அதற்கு தக்க விளக்கம் கொடுக்க வேண்டும். ஸ்ரீஹரி, தன் பக்தர்களை எப்போதும் காக்கிறான் என்னும் மஹா பிரமேயத்தில் திட நம்பிக்கை இருக்க வேண்டியது மிகவும் அவசியம். அது மோட்சத்தைக் கொடுக்கக்கூடிய சரணாகதியின் முக்கிய லட்சணமும் ஆகியிருக்கிறது.

ரக்ஷத்யேவேதி விஷ்வாஸ: ததீயோஹமிதி ஸ்ம்ருதி: |
ஷரணாகதிரேஷா ஸ்யாத்விஷ்ணௌ மோக்ஷ ப்ரதாயினி ||
(விஷ்ணு ரஹஸ்ய)

என்று விஷ்ணு ஷரணாகதி நிரூபிக்கப்பட்டிருக்கிறது. இங்கு, பலி ஸ்வயம் பகவத் பக்தன். ஆனால் அவனில் அசுர ஆவேசம் இருந்தது. ஜீவ த்வய ஆவேஷம் உள்ளவர்களில் இரு விதம். அந்த சம்பந்தத்தின் சூக்ஷ்ம விசேஷணங்களையும் அறிய வேண்டும். பக்தர்களில் அசுராவேஷ மற்றும் அசுரர்களில் பக்தர்களின் ஆவேசம் என்னும் இரண்டிற்கும் வித்தியாசம் இருக்கிறது. ஒரே தேகத்தில் மன முதலான இந்திரியங்கள் மூலமாக நடமாடும் ஜீவர்கள் இருவர் இருந்தாலும், ஆவிஷ்ட ஜீவத்வயர்களின் ஸ்வபாவத்தில் கண்டு வரும், பிராபல்ய - தௌர்பல்ய மற்றும் ப்ராசுர்ய - அப்ராசுர்ய லட்சணங்களால், யாரில் எந்த ஆவேசம் என்பதை முடிவு செய்து கொள்ள வேண்டும். இவ்வாறு ஆவேசத்தில் இரு விதங்கள் உள்ளன என்பதை இந்த அடுத்த பிரமாண வாக்கியங்களால் அறிய வேண்டும்.

பௌண்ட்ரே நரகே சைவ ஸ்வால்வே கம்ஸே ச ருக்மிணி |
ஆவிஷ்டாஸ்து ஹரேர்பக்தா: தத்பக்த்யா ஹரிமாபிரே ||
அஸுராஸ்து ஸ்வயம் தே து மஹாதமஸி பாதிதா: |
பலிரப்யஸுராவேஷாத் ஸ்துவன்னபி ஜனார்த்தனம் |

ஆக்ஷிபத்யந்தரா க்வாபி ப்ரஹ்லாதோ நித்யபக்திமான் ||
(பாக. தாத். நிர்.)

பௌண்ட்ரக, நரகாசுர, ஸால்வ, கம்ஸ மற்றும் ருக்மி இவர்களில் விஷ்ணு பக்தர்கள் நிரம்பியிருக்கின்றனர். அவர் பக்தியுடன் ஸ்வரூப முக்தியையே அடைந்தனர். ஆனால், ஸ்வயம் அசுரரான அவர்கள் அனைவரும் மஹாதமஸ்ஸையே அடைந்தனர். பலியில், பலி என்னும் அசுரனின் ஆவேசம் இருந்தது. ஆகையால், ஸ்ரீஹரிஸ்துதியில் ஈடுபட்டாலும் நடுவில் சில சமயங்களில் அவனை புறக்கணிக்கும் வார்த்தைகளையும் பேசுகிறான். பிரகலாதனோ நிரந்தர பக்தி உள்ளவன். ஒரு தேகத்தில் இரு ஜீவர்கள் இருக்கையில் 'ஜீவத்வய ஆவேஷ' என்று அழைத்தாலும், இருவர் இருப்பதற்கும், ஆவேசம் மட்டுமே இருப்பதற்கும் சூக்ஷ்ம விசேஷத்தை கவனிக்க வேண்டும். பிரகலாதனில் வாயுதேவனின் ஆவேசம், ப்ருது ராஜனில் விஷ்ணுவின் ஆவேசம், என்று கூறினால், அங்கு (அந்த தேகம்) இரு சேதனர்களின் இருப்பிடம் என்று அறியக்கூடாது.

இரு ஜீவர்களைப் போல, அங்கு இருவரும் வசிக்கின்றனர் என்று அல்ல. அதிக சக்தி வெளிப்பட்டபோது மட்டும், அது ஆவேஷத்தின் காரணத்தால் என்று அறிய வேண்டும். ருத்ராதிகளில்கூட அசுர ஆவேசம் உண்டு. ஆனால், அவர்களை ஜீவ த்வய ஆவேசம் உள்ளவர்கள் என்று சொல்வதற்கில்லை. அசுராவேசம், ஏதோ ஒரு காலத்தில், சிறிது நேரத்தில் மட்டுமே இருக்கிறது. அப்போது மட்டும் எதிர்மறை நடவடிக்கைகளை கொண்டவர்கள் ஆகின்றனர். இவ்வாறு தேவதைகள் அசுர ஆவேசத்திற்கு வசம் ஆகும் ஸ்வபாவத்தைக் கொண்டிருந்தாலும், நித்ய பக்தர் என்றே அழைக்கப்படுகின்றனர்.

பூதனாகம்ஸ நரகஷிஷுபாலாதிஷு த்விதா
ஜீவா꞉ஸந்தஸ்த்வ ஸந்தஸ்ச | (பாக. தா. நிர்.)

பூதனை, கம்ஸ, நரக, ஷிஷுபாலர்களில், ஸந்தர் மற்றும் அசுரர்கள் (சுஜீவ – துர்ஜீவிகள்) என்னும் இரு வித ஜீவர்கள் இருக்கிறார்கள் என்று சொல்வதால், இந்த விசேஷம்

குறிப்பிடப்படுகிறது. அசுர ஆவேசம் இல்லையென்றாலும், சுஜீவிகள் கால விசேஷணங்களில், பூர்வ கர்மானுசாரமாக இவ்வாறு நடவடிக்கைகளை செய்வது உண்டு என்பதையும் கவனிக்க வேண்டும். தைத்ய பிரேரணைகளுக்கும், தைத்ய ஆவேசத்திற்கும் இருக்கும் ஸூக்ஷ்ம வித்தியாசத்தை கவனிக்க வேண்டும்.

பலி ஹரிபக்தன். அவனில் அசுரனின் ஆவேசம். அசுரனில் பக்தனின் ஆவேசம் என்று அல்ல. அசுர ஆவேச நிமித்தத்தினால் இந்திராதி தேவதைகளிடம் ஷத்ரு பாவத்தினால் நடக்கிறான். இதற்காக ஸ்ரீஹரி பலியைக் கொன்றாலும், பக்தனாகையால் ஸுதல லோகத்தின் அகண்ட ஐஸ்வர்யத்தையும், அடுத்த மன்வந்தரத்தின் ஸ்வர்க்காதிபத்யத்தையும் (இந்திர பதவியையும்) அருள்கிறான்.

இவ்வாறு, தன் பக்தர்கள் காரணாந்தரங்களால் வழி தவறும்போது, அவர்களை திருத்தி, நல்மார்க்கத்திற்கு கொண்டு வந்து அருள்வதும், பக்தர்களின் ரக்ஷணையே ஆகிறது. அசுரஜீவனால் கூடிய பக்தனைக்கூட ஸ்ரீவிஷ்ணு காப்பாற்றி, தன்னை அடையுமாறு அருள்கிறான். இவனின் பக்த வாத்ஸல்யம் ஆச்சரியமானது.

த்வேஷிஜீவயுதம் சாபி பக்தம் விஷ்ணுர் விமோசயேத் |
அஹோ஽திகருணா விஷ்ணோ:

என்று பாகவத தாத்பர்யத்தில், ஸ்ரீமதாசார்யர் கூறுகிறார்.

**க்$^3$ரந்தா$^2$தி$^3$யலி மாள்ப மங்க$^3$ளகெ ஸலிஸு**
**வந்த வேதோ$^3$க்தி ஸல்லதி$^3$ரெ**
**வ்யர்த்த$^2$ சிஷ்டாசார ப$^3$லதி$^3$ந்த$^3$ வொந்து$^3$ மூல**
**ஸ்ருதியிந்த$^3$ தந்து$^3$ கொம்பு$^3$வுது$^3$ ||6**

கிரந்த ஆரம்பத்தில் சொல்லக்கூடிய மங்களம், தோஷாதி விக்ன பரிஹாரக சுப சின்னங்களாக இருப்பதைப் போல, ஸ்ரீஹரியின்

மகிழ்ச்சிக்காக செய்யப்படும் அனைத்து கர்மங்களுக்கும், சக்ராதி விஷ்ணு சின்னங்களை தேகத்தில் தரிப்பது ஷுப பல பிராப்திக்கு காரணமான நல்ல லட்சணங்கள் என்னும் பிரமேயத்தை இந்த அடுத்த நுடிகளில் உதாரணங்களுடன் சொல்கிறார்.

கிரந்தாதியலி – கிரந்தத்தின் துவக்கத்தில். மாள்ப – செய்யும் (ரசிசுவ – செய்யப்படும்). மங்களகெ – மங்களத்திற்கு. ஸலிஸுவந்த – சொல்லப்படும். (மங்களத்தை செய்ய வேண்டும் என்று சொல்லப்படும்). வேதோக்தி – வேதவாக்கியம். ஸல்லதிரெ – கிடைக்கவில்லை எனில். வ்யர்த்த – மங்களத்தை செய்வது வீண் ஆகிறதா? (அல்லது நீ வீண் என்று நினைக்கும்). சிஷ்டாசார பலதிந்த – சிஷ்டாசாரத்தை விரும்பி (ஞானி சம்பிரதாய பலத்தினால்). வொந்து மூலஸ்ருதியிந்த – (சிஷ்டாசாரத்தின் மூலத்தில், அதற்கு ஆதாரமான) எந்தவொரு வேதவாக்கியம் இருக்க வேண்டும் என்று சொல்லி. தந்துகொம்புவுது – சமாதானத்தை அடைந்து மங்களத்தை சொல்ல வேண்டும் அல்லவா?

ஸ்ரீவாதிராஜர் தமது சக்ரஸ்துதியில் தெளிவாக விளக்கியிருக்கும் யுக்தியையே இந்த நுடியில் தொகுத்து சொல்லியிருக்கிறார்.

தோஷௌகவாரணம் யஸ்ய தாரணம் மோக்ஷ காரணம் |
ந வைதிகம் தப்தசக்ரதாரணம் யதி மன்யஸே ||
க்ரந்தாதௌ மங்கலம் தர்ஹி கஸ்மான்னாவைதிகம் தவ |
சிஷ்டாசாராத் ஸ்ம்ருதி: கல்ப்யா ஸ்ம்ருதேஸ்ச ஸ்ருதிகல்பனா ||
யதி தத்ர ததைதஸ்மின் கின்ன கல்பயஸி ஸ்ருதிம் |
நிம்பாதித்யானுகை: ப்ராக்ஞைர் மாயாவாத்யேக தேஷிபி: |
விஷ்ணுஸ்வாமிமதஸ்த்யைஸ்ச ராமானுஜ மதாஸ்ரயை: ||
தத்வவாதிஜனாசார்யை: சிஷ்ட ஸ்ரேஷ்ட்யைரனுஷ்டிதே |
பஹுதிஷ்ட ஜனாசார: ப்ரமாண முபயத்ர ச ||

தேகத்தில் தப்த சக்ர தாரண செய்வது அனைத்து தோஷ பரிகாரகம் மற்றும் மோட்ச சாதனம் ஆகும். இது வேதோக்த விதி அல்ல என்று (நீ கூறியது இது. ஆனால், இது வேதோக்த விஷயமே ஆகும்) அறிந்தால், கிரந்த ஆரம்பத்தில் மங்கலத்தை

சொல்ல வேண்டும் என்னும் பத்ததியை அவைதிகம் என்று ஏன் நினைத்து, விடுவதில்லை? சிஷ்டாசாரமாக வந்ததால் மங்கலத்தை சொல்ல வேண்டும் என்றால், அந்த சிஷ்டாசாரத்திற்கு ஒரு ஸ்ம்ருதியையும், அந்த ஸ்ம்ருதிக்கு ஆதாரபூதமான ஒரு ஸ்ருதியையும் சொல்ல வேண்டும் அல்லவா? (இருந்தே ஆகவேண்டும் என்று தெரிந்து கொள்ள வேண்டும் அல்லவா?). இந்த அர்த்தத்தை சொல்வதைப் போல இருக்கும் ஒரு ஸ்ருதிக்கு அதற்கேற்பமான அர்த்தத்தை சிந்திக்க வேண்டும் அல்லவா?

நிம்ப, ஆதித்யாதிகளின் மதத்தைப் பின்பற்றுபவர்களாலும், மாயாவாதிகளின் ஒரு பகுதியினராலும், விஷ்ணு ஸ்வாமி மற்றும் ராமானுஜ மதத்தவராலும், தத்வவாதி மக்களின் ஆசார்யராலும், சிஷ்யர் என்று சொல்லபடும் மற்றவர்களாலும் பின்பற்றப்படுவதான, இரண்டும் (தப்த முத்ரா தாரண மற்றும் மங்கலாசரணங்களின் விஷயத்தில்) பிரமாணங்கள் இல்லையா? (கண்டிப்பாக இருக்கிறது).

**நிம்பா3தி3த்ய விஷ்ணுஸ்வாமி மததே3வ**
**ரெம்ப3 நிம்மவரே த4ரிஸுவரு**
**தும்பி3த3 தத்வவாதி3க3ளு ராமானுஜரு**
**ஸம்ப்4ரமதி3 சக்ர த4ரிஸித3ரு ||7**

நிம்பாதித்ய விஷ்ணுஸ்வாமி மததேவரேம்ப – நிம்ப, ஆதித்ய, விஷ்ணுஸ்வாமி, மததேவ ஆகிய மதானுயாயிகளான, நிம்மவரெ – உங்களின் மக்களே (மாத்வர் அல்லாத பிறர்). தரிஸுவரு – விஷ்ணு சின்னங்களை தரிக்கின்றனர். தும்பித தத்வவாதிகள் – (தாமே) பூர்ண தத்வவாதிகள் என்று (வைஷ்ணவர் என்று) சொல்லிக் கொள்ளும் (அல்லது தத்வவாதிகள் என்னும் காரணப் பெயர் உள்ள மத்வ மதானுகர்கள்). ஸம்ப்ரமதி – உற்சாகத்துடன். சக்ர – சக்ர சின்னங்களை. தரிஸிதரு – (அவசியம் என்பதை வலியுறுத்தி) தரித்திருக்கின்றனர்.

**நிம்ம மதத3 ஸன்யாஸிக3ளெல்லரு**

**நிர்மலஷ்வேதோர்த்4வ த4ரிஸி**
**தம்ம கரதி3ந்த3லி சக்ர முத்3ரிகெ ஸத்**
**கர்ம மாடு3வல்லி த4ரிஸுவரு ||8**

நிம்ம மதத - அத்வைத மதத்தின். ஸன்யாஸிகளெல்லரு - அனைத்து யதிகளும். நிர்மலஷ்வேதோர்த்வ - பவித்ரமான ஷுப்ர வர்ணத்தின் ஊர்த்வ புண்ட்ரத்தை. தரிஸி - தாமும் தரித்து. தம்ம கரதிந்த - தம் கையினாலேயே. சக்ரமுத்ரிகெ - சக்ர முத்திரையை. ஸத்கர்ம மாடுதலி - ஸத்கர்ம ஆசரணைக்கு முதலில். தரிஸிருவரு - (தவறாமல்) தரிக்கின்றனர். (தம் சிஷ்யர்களும் தரிக்குமாறு செய்கின்றனர்).

** அத்வைத மதத்தின் யதிகளும் ஸத்கர்மானுஷ்டான காலத்தில், ஸ்வயம் சக்ர சின்னங்களையும் தேகத்தில் தரிக்கின்றனர் என்னும், அனைவராலும் ஒப்புக் கொள்ளப்பட்ட சிந்தனையை (சிலரின் ஒப்புதலை) வளர்த்துக் கொண்டு, விஷ்ணு சின்னங்களின் தாரணையின் முக்கியத்துவத்தை, சாதனையான முக்தியைக் குறிப்பிடுகிறார்.

** குருகளிடமிருந்து முத்ரா தாரணம் செய்து கொள்ள வேண்டும் என்னும் நியமம் இருக்கிறது. எப்படியிருந்தாலும் தமக்குத்தாமே சக்ரத்தை தரிப்பதிலும்கூட அந்த நியமத்தின் ஏகதேஷ அங்கீகாரத்தை பார்க்கலாம் என்கிறார்.

** விஷ்ணுதீக்ஷை, புற, அக என்னும் இரு வகைகள் இருக்கின்றன. முத்ரா தாரணம் புற தீக்ஷை. குருகள் மூலமாகவே தீக்ஷை ஸ்வீகாரம் ஆகவேண்டும்.

**ஸ்வதப்த சக்ர ஸுபவித்ர முத்3ரிகெயெந்து3**
**ஷ்வேதோர்த்4வ புண்ட்3ர ஜ்வாலெந்து3**
**மத நிம்ம யதிக3ளே மாடி3த3 ஸ்ருதி**
**மாதகின்னு பரி3தெ3 கலஹ ||9**

ஸ்வதப்த - விஷ்ணு நாமக (விஷ்ணு வீர்யாத்மக) நெருப்பில் காய்ச்சப்பட்ட. சக்ர - சக்ரமே. ஸுபவித்ர - மிகவும் பவித்ரமான

---

(தேகத்தை பவித்ரமாக்கும்). முத்ரிகெயெந்து – சின்னம் என்று. ஷ்வேதோர்த்வ புண்ட்ரஜ்வாலெந்து – வெண்மையான ஊர்த்வ புண்ட்ரம் அக்னி ஜ்வாலை என்றும். நிம்ம யதிகளே – உங்கள் மத யதிகளே (ஞானி ஸ்ரேஷ்டர்களே). மாடித – பின்பற்றிய. ஸ்ருதிமத – ஸ்ருதி ஸம்மதமான கர்மம் ஆகும். இன்னு – இவ்வாறு இருக்கையில். பரிதெ கலஹ – வீண் கலகத்தை (தப்த முத்ரா தாரணையின் அவசியமே ஏன் என்னும் விஷயத்தில் விவாதம்). யாதகின்னு – ஏன்? இந்த விவாதம் தேவையேயில்லை.

**இஷ்டு சிஷ்டாசாரக்கெ மூலவாத[3]**
**ஸ்வஷ்ட த்[4]ருவவேத[3]விருவரெ**
**நிட்டனே ருத்[3]ர பத்[3]மஜ ஸ்ருதியனொட[3]ம்**
**பி[3]ட்டு சக்ரவ த[4]ரிஸித[3]ரு ||10**

தேவ ஸ்ரேஷ்டரான பிரம்மருத்ராதிகளும் தரிக்கின்றனர் என்று சொல்லி, விஷ்ணு சின்னங்களின் தாரணை மிகவும் அவசியம் என்பதை விளக்குகிறார். இஷ்டு சிஷ்டாசாரக்கெ – இவ்வளவு பற்பல உத்தமர்களின் ஆசரணைக்கு. மூலவாத – ஆதாரமான. ஸ்பஷ்ட த்ருவவேதவு – தெளிவான அனாதிநித்ய ஸ்ருதி வாக்கியம். இருவரெ – இருக்கையில் (வேறு என்ன வேண்டும்? தப்த சக்ர தாரணை அவசியம் என்று தெரிகிறதல்லவா?). ருத்ர – ருத்ரதேவர். பத்மஜ – பிரம்மதேவனும் கூட. ஸ்ருதியனொடம்பட்டு – (தப்த முத்திரைகளின் தாரணையை விதிக்கும் ஸ்ருதியை ஒப்புக் கொண்டு). நிட்டனே – தெளிவாக. சக்ரவ – சக்ரத்தை. (மற்றும் மற்ற சின்னங்களையும்). தரிஸிதரு – தரிக்கின்றனர்.

விஷ்ணு தீக்ஷையின் மஹத்வத்தை நிரூபிக்கும் விஷ்ணு ரஹஸ்ய வாக்கியங்கள் இவ்வாறு உள்ளன.

தீக்ஷா ஹி த்விவிதா ப்ரோக்தா பாஹ்யாப்யந்தர பேதத: |
ஞானினாம் உபயம் தத்ர பாஹ்யோவாऽஞானினாம் பவேத் ||
விதினாக்னிம் ப்ரதிஷ்டாப்ய திலாஜ்யேன க்ருதேன வா |
ஸஹஸ்ரம் வ்யாஹ்ருதீர் ஹுத்வா வஷட் தே விஷ்ணுமந்த்ரத: |

அஷ்டோத்தரஷதம் ஹூத்வா ப்ரத்யேகம் ச தத:பரம் |
ஹோமசேஷம் ஸமாப்யாக்னௌ சக்டஷங்கௌ ப்ரதாபயேத் ||
பிதா வாபி குருர்வாபி ய: கோபி ஹி மஹான் பவேத் |
ஸதஹேத்தக்ஷிணே பாஹௌ சக்ரம் ஷங்கம் ச வாமத: ||
ஸ்தனயோரூர்த்வஸ்சாபி ஷ்வேச்சயா ச ததோதரே |
ஏவம் முத்ராபஞ்சகம் வா முத்ராத்வயமதாபி வா ||
க்ருண்ஹீயாத்து ப்ரயத்னேன பாஹ்யதீக்ஷா து ஸா பவேத் |
விஷ்ணுதீக்ஷாயுதோ யோபி விஷ்ணு பக்தி விவர்ஜித: ||
தீக்ஷாபலம் ந தஸ்யாஸ்தி தீக்ஷயா நரகம் வ்ரஜேத் ||
ஆயம் ஸர்வேஷ்டதாதா மே ஸர்வா நிஷ்ட நிவாரக: |
ஸர்வோத்க்ருஷ்டோ யமேவைகஸ்ததீயோஹம் ஸ மே பதி: ||
இதி ஞானம் நிஸ்சிதம் யத்ஸா தீக்ஷாப்யந்தரா மதா |
ஸாமசின்ஹாதினா தேஹே வன்ஹினா வா ம்ருதாங்கனம் ||
ஸா பாஹ்யா ப்ரோச்யதே தீக்ஷா ஹ்யக்ஞானாம் ஞானினாமபி |

புற-அக என்று தீக்ஷைகள் இரு விதம். அஞ்ஞானிகளில் புற தீக்ஷை மட்டும் இருக்கிறது. ஞானிகளிடம் இரு வித தீக்ஷைகளும் இருக்கின்றன. விதி பூர்வகமாக அக்னி பிரதிஷ்டாபனையை செய்து, எள் அல்லது நெய்யினால், வியாஹ்ருதி மந்திரத்தால் 1,000 முறை அக்ன்யந்தர்கத விஷ்ணு ப்ரீத்யர்த்தமாக ஹோமம் செய்து, வஷட்கார மந்திரத்தினால் 108 முறை ஹோமம் செய்து, ஹோம சேஷத்தை முடித்து, அந்த அக்னியில் சக்ர சங்குகளை காய்ச்ச வேண்டும். பிறகு, தந்தையோ, குருவோ அல்லது மஹாத்மரான ஒருவரிடம், வலது தோளில் சக்ரத்தையும், இடது தோளில் சங்கினையும் (அந்த தப்த சக்ர ஷங்கங்களை ஒத்தி எடுக்க வேண்டும்) தரிக்க வேண்டும் அல்லது தீக்ஷையைக் கொடுப்பவரின் விருப்பத்திற்கேற்ப (தீக்ஷையைப் பெறுபவனின் தேகத்தின்) ஸ்தனங்களின் மேல் பாகத்தில் மற்றும் வயிற்றின் மேலும், (இவ்வாறு இரு அல்லது ஐந்து முத்திரைகளை) தாரணம் செய்ய வேண்டும். முயற்சி செய்து, இந்த ரூபத்தின் புற தீக்ஷையை பெற வேண்டும். புற தீக்ஷையைப் பெற்ற ஒருவன், விஷ்ணு பக்தி இல்லாதவன் ஆனால், அவனுக்கு தீக்ஷையின் பலன் இல்லை என்பது மட்டுமல்ல. அவன் நரகத்தையும் அடைகிறான். ‘இந்த விஷ்ணுவே எனக்கு சர்வத்தையும் கொடுப்பவன். நான் அவனின் சேவகன்.

அவனே என் ஸ்வாமி. என் அனைத்து விருப்பங்களையும் பரிகரிப்பவன். அவனே சர்வோத்தமன் என்னும் நிஸ்சய ஞானமே அந்தர்தீக்ஷை. தேகத்தில் தப்த முத்திரைகளையும் (நித்யத்தில் கோபிசந்தனாதிகளால் முத்திரைகளை) தரிப்பது, என்னும் புற தீக்ஷை, அஞ்ஞானிகளுக்கும் ஞானிகளுக்கும் சமமாக இருக்கிறது’ .

ஸ்ருதி 1
தப்த முத்ரா தாரணத்திற்கு மூலமாக இந்த ஸ்ருதியை உதாரணமாக கொடுக்கிறார்.

**பவித்ரம் தே விததம் பி$^3$ரம்மணஸ்பதே$^3$ ப்ரபு$^3$ர்கா$^3$த்ராணி பர்யேஷி விஷ்வத: |**
**அதப்த தனூர்னத தா$^3$மோ அஷ்னுதே ஸ்ருதாஸ இத்$^3$வஹந்தஸ்தத் ஸமாஷத ||** (ரிக்வேத)

இந்த ஸ்ருதி அர்த்தத்தின் விவரணையே அடுத்த பதமாக இருக்கிறது. இந்த ஸ்ருதியின் பொருள் இவ்வாறு உள்ளது. சதுர்முகனுக்கும் ஸ்வாமியான ஹே விஷ்ணுவே. அனைத்து இடங்களிலும் வியாப்தனான பவித்ர தேஜஸ்ஸினால் வீற்றிருக்கும் உன் சுதர்சன சக்கரத்தினால் அடையாளம் காணப்படுபவனையே சம்சாரத்திலிருந்து விடுவிக்கிறாய். அத்தகைய (உன் சக்ர சின்னத்தை தேகத்தில் தரித்த) நாம் ஷுத்தராகி (பாவங்களிலிருந்து விடுபட்டு) எதிரிகள் இல்லாதவர்களாக, உன் பரமபதத்தை அடைகிறோம். அதப்த தனுகள் (தப்த சக்ரத்தை தரிக்காதவன்) உத்தம உலகத்தை அடைவதில்லை.

பத 2 ராகம்: நாடி. தாளம் : ரூபக
**எம்ப$^3$ ஸ்ருத்யர்த்த$^2$வ தும்பி$^3$ பேளித$^3$ பத$^3$வ**
**நம்பி$^3$ரோ நாவெந்த$^3$ தத்வ**
**உன்னத பி$^3$ரம்மனிகெ$^3$ பதியெனிப பிரபு$^3$**
**ஜக$^3$த்தினொளகெ$^3$ எணெயெல்லி பூர்ண ||1**

எம்ப ஸ்ருத்யர்த்தவ - இவ்வாறு சொல்லும் (பவித்ரம் தே என்னும்) ஸ்ருதி அர்த்தத்தை. தும்பி - அடக்கி. பேளித - சொல்லியிருக்கும். பதவ - பதத்தை (இந்த பதத்தில் நாம் சொல்லும் ஹிதோக்தியை). நம்பிரோ - நம்பிக்கை வைத்து ஏற்றுக் கொள்ளுங்கள். நாவெந்த தத்வ - நாம் சொல்லும் முக்ய சத்வ பிரமேயம் (எது என்றால்). உன்னதபிரம்மனிகெ - சர்வோத்தமனான பரபிரம்மனுக்கு (விஷ்ணுவிற்கு). ப்ரதியெனிப - சமம் எனப்படும். பிரபு - ஸ்வதந்த்ர தலைவனான. ஜகத்தினொளகெ உலகில். எணெயெல்லி - (சமமான) இன்னொருவன் எங்கு இருக்கிறான்? (இல்லவே இல்லை). பூர்ண - அவனே பூர்ணன் (மற்ற அனைவரின் அபூர்ணரே).

**நின்ன கரகஞ்சதி$^{3}$ நிலிஸிர்த$^{3}$ ஸுத$^{3}$ர்ஷன**
**நின்னந்தெ ஜக$^{3}$தொ$^{3}$ளு பூர்ண**
**தன்னவரீ பரியெம்பு$^{3}$வ ஜாதித்ரயவ**
**மான்ய பொக$^{3}$ளெ போக$^{3}$ப$^{3}$ல்ல ||2**

நின்ன கரகஞ்சதி - உன் கரகமலத்தில். நிலிஸிர்த்த - தரித்திருக்கும். ஸுதர்ஷன - சக்ரம். ஜகதொளு - உலகில். நின்னந்தெ - நீ எப்படியோ அப்படி. பூர்ண - பூர்ணமானது (குணாதிகளால் வியாப்தமானது). ஈபரியெம்புவ - இவ்வாறு சொல்லும் (தெரிவிக்கும்). தன்னவர - தன் பக்தரான. ஜாதித்ரயவ - த்ரிவர்ணத்தவகளையும் (த்விஜர்களை). பொகளெ - வணங்கினால். மான்ய - அவன் கௌரவத்திற்கு தக்கவன். (அல்லது மான்ய பொகளெ - விவேகிகள் புகழ்ந்தால், ஹரிபக்தர்களின் ஸ்துதியினால்). போகபல்ல - சம்சாரத்தைத் தாண்டி மோட்ச பதவியையும் அடைய மாட்டான்.

ஸம்ஸ்காரனாம் ச ஸர்வேஷாமாத்யம் சக்ராதி தாரணம் |
தத்கர்தவ்யம் ஹி ஸர்வேஷாம் விதினா வை த்விஜன்மனாம் ||

இந்த ஸ்ருதி வாக்கியம், சக்ராதி விஷ்ணு சின்னங்களின் தாரணம், சம்ஸ்காரங்களின் நடுவில் முக்கியமானதாகும். அனைவருக்கும் இந்த சம்ஸ்காரம் ஒரு முக்கிய கடமையானதாகும். த்விஜர்களுக்கு (பிராமண, க்ஷத்ரிய, வைஷ்ய என்னும் த்ரி

வர்ணத்தவர்களுக்கும்), விதிபூர்வகமாகி இந்த சம்ஸ்காரம் கண்டிப்பாக ஆகவேண்டும் என்கிறது.

**த4ன்யரீ ஹரிசக்ரவனெ பவித்ரவெம்ப3**
**புண்யநாமதி3 கரெயுதிஹரு**
**இன்னு சக்ரதி3ந்த3ளவ கெடு3வுதெ3ந்து3 த்ரிலோச**
**னனெ ஸ்ருதிக3ள பேள்த3 ||3**

ஈ ஹரிசக்ரவன்னெ - இப்படிப்பட்ட மகிமை உள்ள ஸ்ரீஹரியின் சக்ரத்தை, தன்யரு - (க்ருதக்ருத்யர்) பாக்யசாலிகள் மட்டும். பவித்ரவெம்ப புன் நாமதி - சுதர்ஷன புருஷ என்று. கரெயுதிஹரு - அழைக்கின்றனர். இன்னு - மற்றும். சக்ரதிந்தளவ கெடுவுதெந்து - சக்ரதாரணையினால் க்ஷுத்ர பாதகங்கள் அனைத்தும் நாசம் அடைகின்றன என்று. த்ரிலோசனனெ - ஸ்வயம் முக்கண்ணனே (ருத்ரதேவரே). ஸ்ருதிகள பேள்த - ஸ்ருதி பிரமாணங்களை கூறினான்.

**ஸ்ரு-பா1கேயெம்ப3 தா4துவினிந்த3லி சக்ர**
**தா3பக பு4ஜயுக3த3ல்லி**
**கோ3பிசந்த3னதி3ந்த3லனுதி3னவு புஸவர**
**க்ருபாளு ஹரியவரிகொ3லிவ ||4**

ஸ்ரு-பாகே - ஸ்ரு பாகே என்னும் தாதுவின் அர்த்ததினால். (பாக - பாகம் செய். கொதிக்க வை என்று அர்த்தம்). சக்ரதாபக - சக்ர முத்திரையை கொடுப்பவன் (குரு). புஜயுகதல்லி - இரு தோள்களில் (தப்த சக்ரத்தினாலேயே முத்ரிக்க வேண்டும்). அனுதினவு - தினமும். கோபிசந்தனதிந்தலி - கோபிசந்தனத்தினால் (சக்ரத்தை). புஸவர - பூசிக் கொள்பவரின் (தேகத்தில் இட்டுக் கொள்பவரின்). அவரிகெ - தவறாமல் இப்படி செய்பவர்களுக்கு. க்ருபாளு ஹரியு - க்ருபா ஸமுத்திரனான ஸ்ரீஹரி. ஒலிவ - பிரசன்னன் ஆகிறான்.

**உத3ரவ்யாதி4யனெ பி3டு3வரு ஹொட்டெய மேலெ**
**முத3தி3ந்த3 சக்ரவன்னெ பு3த3ரு**

**த⁴ரிஸுவுத³னு விதி⁴ஸுதிரபே³கெந்து³ தன்ன**
**பத³வ ஹேளிது நம்ம வேத³ ||5**

முததிந்த - ஆதர பூர்வகமாகி. ஹொட்டெய மேலெ - உதர பாகத்தில். சக்ரவன்னெ - சக்ரத்தை. (புஸவர - தடவிக் கொண்டு அடையாளம் காணப்படுபவரின்). உதர வ்யாதியனெ பிடுவரு - பற்பல வித உதர ரோகங்களை பரிகரித்துக் கொள்கிறார். புதரு - ஞானிகள். தரிஸுவுதனு - (விஷ்ணு சின்னங்களை தவறாமல்) தரிக்க வேண்டும் என்பதை. விதிஸுதிரபேகெந்து - (அஞ்ஞானி ஜனருக்கு) உபதேசம் செய்ய வேண்டும் என்று. நம்ம வேத - (தத்வவாதிகளான நமக்கு) பரமபிரமாணமான வேதம். பதவ - தெளிவாக. ஹேளிது - சொல்லியிருக்கிறது.

**தப்த சக்ரவ த⁴ரிஸபே³கெந்து³ தொட³கி³த³ ஸ**
**தப்த்ரத்ரயத³ல்லி ஸ்ருதிய**
**அர்த்த⁴பூர்வக விஸ்தரிஸி பேளித³**
**மத்தொந்த³ர்த்த²வனித³கெ மெச்ச ||6**

தப்தசக்ரவ - (ஹோமாக்னியல்லி) எரிக்கப்பட்ட சக்ரத்தை. தரிஸபேகெந்து - (தேகத்தில்) இட்டுக் கொள்ள வேண்டும் என்று. தொடகித - (சொல்ல) துவங்கிய. ஸதப்தத்ரயதல்லி - தப்த முத்ரெய விஷயத்தில் முக்கியமான (ரிக், யஜுர், சாமங்கள் என்னும்) மூன்று வேதங்களில் இருக்கும். ஸ்ருதிய - வேத வாக்கியங்களை. அர்த்தபூர்வக விஸ்தரிஸி - அர்த்தத்துடன் விளக்கி. பேளித - கூறிய. ஷிவ - சிவன். இதகெ - இந்த வேத வாக்கியங்களுக்கு. மத்தொந்தர்த்தவனு - வேறு ஒரு அர்த்தத்தை. மெச்ச - ஒப்புக் கொள்வதில்லை.

** ஸ்ரீஹரியின் சக்ராதி ஆயுதங்கள் முக்கியமாக ஸ்வரூபாத்மகமே (சச்சிதானந்த ஸ்வரூபங்களே ஆகியிருந்து, ஸ்ரீஹரியின் ஸ்வரூபத்திற்கு அபின்னங்களே). லட்சுமி ஸ்வரூபங்களே ஆகியிருப்பதை தரித்திருக்கிறான். அன்ய தேவதாஸ்வரூபங்களையும் அவர்களிடமிருந்து அபிமன்யமான ப்ராக்ருத சக்ராதி ஆயுதங்களையும் தரித்திருக்கிறான். ஸ்ரீஹரியின் ஸ்வரூபாத்மக சக்ரம் (ஸ்ரீஹரியைப் போலவே) வ்யாப்தனும்

---

அசிந்த்ய அற்புத மகிமோபேதமும் ஆனது என்று சொல்வதற்கு 2ம் நுடியில் 'ஸுதர்ஷன நின்னந்தெ ஜகதொளு பூர்ண' என்று சொல்லியிருக்கிறார்.

** தத்வவித்ரமிதம் வ்யாப்தம் யத்வம் பர்யேஷி விஷ்வத: |
இதி ஸ்ருத்யுதிதம் விஷ்ணுவ்யாப்த்யா வ்யாப்தத்வமேவ ச ||
என்று, நீ (விஷ்ணு) வ்யாப்தனாகையால் பவித்ரமும் வ்யாப்தமும் ஆனது என்று சொல்லப்பட்டிருக்கிறது.

பவித்ரம் சரணம் சக்ரம் லோகத்வாரம் ஸுதர்சனம் |
பர்யாய வாசகாஹ்யேதே சக்ரஸ்ய பரமாத்மன: ||
என்று, பவித்ர, சரண, சக்ர, சுதர்சன முதலான சொற்கள் ஏக-வஸ்து-வாசகங்கள் என்று சொல்லப்படுகின்றன. 'பவிவத் த்ராயதே லோகாநிதி பவித்ரம்' - வஜ்ராயுதத்தைப் போல (அதைப் போல மட்டுமல்ல - அதற்கும் அனேக மடங்கு) ஷத்ரு சம்ஹாரக சாமர்த்யத்தினால் சகல லோகங்களையும் காப்பதால் 'பவித்ர' என்று விஷ்ணு சக்ரம் அழைக்கப்படுகிறது.

** ஸ்ருதி 1ல், 'ஸ்ருதாஸ இத்வஹம்' என்று இருக்கும் ஸ்ருதாஸ ஷப்தார்த்தத்தை, தாதுவின் அர்த்தத்தினால் 4ம் நுடியில் விவரித்திருக்கிறார். 'ஷ்ரு' என்றால் கொதிக்க வைப்பது என்று அர்த்தம். 'அக்னிதூர ஸமீபஸ்த மஸ்துன்யாத்மத்வ ஸாம்யத: | ஸ்ருதாஸ இதி ஷப்தார்த்த தாஹவந்தோ ந தாபஸா:'. 'கொதிக்க வைக்கப்பட்டவை' என்னும் அர்த்தம் 'ஸ்ருதாஸ:' என்பதற்கு சரியாகப் பொருந்துகிறது.

** பவித்ரம் தே.. - ரிக்வேத வாக்கியம். 'தப்தசக்ரம் த்விபுஜே தார்யமிதி | அக்னினா வை ஹோத்ரா விஷ்ணோ: ஸாயுஜ்யம் ஸலோகதாமாப்னோதி' என்பது சுக்ல யஜுர்வேதத்தின் ஷதபத பிராமண வாக்கியம் ஆகும்.

** அக்னிர்வை ஸஹஸ்ரார: ஸஹஸ்ராரோ நேமி: நேமினா தப்ததனு: ஸாயுஜ்யம் ஸாயுஜ்யம் ப்ராப்னுயாத்' என்பது ஸாமவேதத்தின் வாக்கியம். இவ்வாறு மூன்று வேதங்களிலும்

தப்த சக்ர தாரண விதி (இதைப் போல விளக்கும் வெவ்வேறு வாக்கியங்களிலும் கூட) நிரூபிக்கப்பட்டுள்ளது. இதைப் போன்ற ஸ்ருதி அர்த்தங்களின் விவரண பூர்வக தப்த சக்ர தாரணையின் அவசியம், சிவ-பார்வதி பேச்சுவார்த்தை ரூபத்தினால் புராணங்களில் நிரூபிக்கப்பட்டிருப்பதை காண்கிறோம். 6ம் நுடி, இவ்வாறான விஷயத்தை சொல்லி, இந்த ஸ்ருத்யார்த்தங்களை புறக்கணித்து, தவறான அர்த்தங்களைக் கற்பித்து, தப்த முத்ரா தாரணை, அவைதிக என்று வாதிப்பது, சிவனுக்கும் சம்மதம் அற்றது என்பதால், அது சரியல்ல என்னும் யுக்தியை சொல்கிறது.

ஸ்லோக 2

**பவித்ரம் பி$^{3}$ரம்மணஸ்பத்யம் ஜக$^{3}$த்$^{3}$வ்யாப்தம் ஹரிம் ஸதா$^{3}$ |**
**தேன தப்ததனோர்ஹ்யஷாம் தேன யாதி பராம் க$^{3}$திம் ||**

சதுர்முக பிரம்மனால் பூஜ்யனும், ஸர்வத்ர வியாப்தனும், ஸ்ரீவிஷ்ணு ஸ்வரூபாத்மகனும் ஆனது பவித்ர என்று அழைக்கப்படும் சக்ரம். அதன் மூலம் தப்தமான தேகம் உள்ளவர்களுக்கு, அந்த தப்த சக்ர தாரணையின் பிரபாவத்தினால் உத்தம கதி கிடைக்கிறது.

பத 3 ராகம்: நாடெ. தாளம்: ரூபக

**ஸோமரஸவ ஷோபி$^{4}$ஸுவ ஜாதிகவ்யாப்த**
**காம ஹ சக்ரஸன்னிதி$^{4}$ய**
**தீ$^{4}$மந்தரெல்ல மதி$^{2}$ஸி பவித்ர**
**நாம ஸ்ருதியிந்த$^{3}$ மதி$^{2}$ஸுவரு ||1**

ஷோபிஸுவ – வீற்றிருக்கும் (ஷுப பிரதமான). ஸோமரஸவ – சோமரஸத்தை. ஜாதிக – சேரும் (பவித்ர வஸ்துகளின் குழுவைச் சேர்ந்த). வ்யாப்த – வியாப்தனான. காம ஹ – காமனே ஆகியிருக்கும். (காமனே அபிமானியாக உள்ள). சக்ரஸன்னிதிய – (ஸ்வரூபாத்மக சக்ரத்தின் ஸன்னிதானம் உள்ள) சக்ரத்தின் சம்பர்க்கத்தினால் (தேகத்தில் தரிப்பதன்) பிரபாவத்தை. தீமந்தரெல்ல – அனைத்து ஞானிகளும். மதிஸி – சிந்தித்து. பவித்ர நாம ஸ்ருதியிந்த – 'பவித்ரம் தே' என்னும் ஸ்ருதியினால். மதிஸுவரு – நிர்ணயத்தை செய்கிறார்.

---

**பாவனவ மாடி$^3$ஸுவ ஷக்தி நம்ம ஶ்ரீ**
**தே$^3$வியரஸன சக்ரவெம்பு$^3$த$^3$னு**
**பா$^4$வக்ஞரிகெ$^3$ தோரிஸலு வலிய சக்ரவனெ**
**பவித்ரவெம்ப$^3$ நாம ஸ்ருதி கரெயிது ||2**

பாவனவ மாடிஸுவ – (ஸத்கர்மங்கள் ஸபலமாகுமாறு) தேகத்தை பவித்ரமாக்கும். ஷக்தி – சாமர்த்தியம். நம்ம ஶ்ரீதேவியரஸன சக்ரவு – நம் பிரபு லட்சுமிபதியின் சக்கரத்துடையதாகும். எம்புதனு – என்பதை. பாவக்ஞரிகெ – யோக்ய அர்த்தத்தை புரிந்து கொள்ளக்கூடிய ஞானிகளுக்கு. தோரிஸலு – தெரிவிப்பதற்காகவே. வலிய சக்ரவனெ – சுற்றிக் கொண்டிருக்கும் சக்கரத்தையே (வளையலைப் போல வட்டமாக இருக்கும் சுதர்சனத்தையே). பவித்ரவெம்ப நாம – பவித்ர என்னும் பெயரால். ஸ்ருதி கரெயிது – வேதம் அழைத்தது. பவித்ரம் ஆக்கும் சாமர்த்தியம், ஶ்ரீஹரி சக்ரத்துடையதே ஆகும் என்பதை தெரிவிப்பதற்காகவே, சக்ரத்தை 'பவித்ர' என்றே ஸ்ருதி சொல்கிறது.

**ஷோதி$^4$ஸுவுத$^3$க்கெ ஸஹஸ்ரசி$^2$த்$^3$ரவுள்ள**
**மாத$^4$வன பாவனத$^3$ சக்ர பே$^3$கெந்து$^3$ |**
**ஈ தி$^3$வ்யசக்ரமந்த்ரவ ந்யாய கோ**
**வித$^3$ராத$^3$ முனிக$^3$ளு மூலநாம யோகி$^3$ஸுவரு ||3**

ஷோதிஸுவுதக்கெ – தேடி எடுப்பதற்கு (தோஷங்களை எரித்து, சுத்தமாக்குவதற்கு). ஸஹஸ்ர சித்ரவுள்ள – 1,000 பற்களைக் கொண்ட. மாதவன – ஶ்ரீஹரியின். பாவனத சக்ரபேகெம்ப – பவித்ரமான சக்ரமே வேண்டும் என்னும். ந்யாயகோவிதராத முனிகளு – யுக்திகளைக் கொண்ட ஞானிகள். ஈ திவ்யசக்ர மந்த்ரவ – இந்த சிறந்த சக்ர மந்திரத்தை. மூலநாம யோகிஸுவரு – (தோஷங்களைத் தேடி நாசம் செய்வதில் காரணமான ஆக்ருதி உள்ள சக்ரத்தை) 'ஸஹஸ்ரார' என்னும் காரணப் பெயராலேயே அழைக்கின்றனர் (சக்ரத்தை குறிப்பதற்கு 'ஸஹஸ்ரார' என்னும் பெயரையே பயன்படுத்துகிறார்).

சஹஸ்ரார என்னும் சக்ரத்தின் பெயர் – காரணப் பெயர் என்று நிரூபிக்கப்படுகிறது. ஆழமான தண்ணீரில் அமிழ்ந்திருக்கும் பாத்திரத்தைத் தேடி எடுப்பதற்கு, 'பாதாளக் கரண்டி' என்னும் கருவியை பயன்படுத்துவதைப் போல, ஜீவ ஸ்வரூபத்தை சுத்தப்படுத்தி (அஸ்வரூபங்களான அவித்யா காம கர்மாதி தோஷங்கள் இல்லாதவாறு பரிகரித்து), ஒளி கொடுப்பதற்கு 'ஸஹஸ்ரதார' மே சரியானது என்னும் யுக்தி, அதன் பெயரிலிருந்தே தெரிய வருகிறது.

* யஸ்த்வஸ்தப்தஸுதனு: ஸோऽத்தி யுக்திபலம் கில
* நேமேதவாக்ரே காமாத்யா நேமே ஜீவந்த்யஹோ த்விஷ:

ஆகிய (ஸ்ரீவாதிராஜக்ருத ஸஹஸ்ராரஸ்துதியின் வாக்கியங்களில் இந்த அர்த்த விசேஷங்களே காணப்படுகிறது.

**கங்கெ$^3$யுத$^3$கதி$^3$ந்த$^3$ தொளெத$^3$ வஸ்துவன்னு அ**
**க$^3$ங்கா$^3$ஷப்த$^3$தி$^3$ந்த$^3$ ஸ்ரீகரவாத$^3$**
**துங்க$^3$ சக்ரமந்த்ரதி$^3$ந்த$^3$ மந்த்ரிஸெ**
**மங்க$^3$ளத்$^4$ரவ்யவப்புதெ$^3$ ஸோऽஹம் மந்த்ரார்த்த$^2$வாக$^3$து$^3$ || 4**

கங்கெய – பாகிரதியின். உதகதிந்த தொளெத – தண்ணீரால் கழுவிய. வஸ்துவன்னு – பதார்த்தத்தை. ஆ கங்காஷப்ததிந்த – அதே கங்கா என்னும் சொல்லினாலும். ஸ்ரீகரவாத – மங்களகரமான. துங்க சக்ரமந்த்ரதிந்த – சிறந்ததான சுதர்சன மந்திரத்தினாலும். மந்த்ரிஸி – அபிமந்திரித்தால் (அந்த வஸ்துவைத் தொட்டு மந்திரத்தை உச்சரித்தால்). மங்களத்ரவ்யவு – ஷுப கர்ம ப்ரயோஜக வஸ்து. அப்புதெ – ஆகிறது. ஸோऽஹம் மந்த்ரார்த்தவு – (நானே அந்த பரபிரம்ம என்னும் அர்த்தத்தினால்) 'ஸோऽஹம் பிரம்ம' என்னும் மந்த்ரோச்சாரணையால் இந்த பலன் (அப்புதே – ஆகிறதா?) ஆகது – எப்போதும் அப்படி ஆவதில்லை.

**லௌகிகான்னவ ஷப்த$^4$வ மாடு$^3$வுத$^3$கெ வி**
**வேகிக$^3$ளு வ்யாஹ்ருதியிந்த$^3$ ப்ரோக்ஷிஸி**
**பே$^3$காத$^3$ காயத்ரியிந்த$^3$ மந்த்ரிஸலது$^3$**
**லௌகிகான்னவு யத்யார்த்த$^2$வப்புவுது$^3$ ||5**

லௌகிகான்னவ – ப்ராக்ருத அன்னம் (வேகவைத்து, தயார் செய்த அன்னத்தை). ஷுத்தவ மாடுவுதகெ – (ஸ்ரீஹரிக்கு அர்ப்பிப்பதற்கும், பிறகு அனைவரும் உண்பதற்கும்) தக்கவாறு செய்வதற்கு. விவேகிகளு – ஞானிகள் (சாஸ்திர விதிகளை அறிந்தவர்கள்). வ்யாஹ்ருதியிந்த – (வ்யாஹ்ருதி) 'பூர்புவஸ்வ:' என்னும் மந்திரத்தினால். ப்ரோக்ஷிஸி – ப்ரோக்ஷணம் செய்து. காயத்ரியிந்த – அவசியமான (அல்லது சிறந்ததான) காயத்ரி மந்திரத்தினால் (ஓம் தத்ஸவிதுர் வரேண்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி தியோ யோ ந: ப்ரசோதயாத்' என்னும் மந்திரத்தினால்). மந்திரிஸலு – அபிமந்திரித்தால், அது – அந்த. லௌகிகான்னவு – அந்த அன்னமானது. யத்யர்த்தவப்புவுது – யதிகளுக்கும் ஸ்வீகரிப்பதற்கு தகுந்த பவித்ர அன்னமாக ஆகிறது.

** அன்னம் முதலான பதார்த்தங்களை ஷங்கோதகம் சுத்தம் செய்வதைப் போல, சக்ரதாரணம், ஸ்ரீவிஷ்ணு ப்ரீத்யர்த்த ஸத்கர்ம ஆசரணையில் முக்கிய கருவியானமானவ தேகத்தை பவித்ரமாக்கி, கர்மத்தை செய்யத்தக்கதாக ஆக்குகிறது என்று குறிப்பிடுகிறார்.

**அத3ரிந்த3 த்ரிஜக3த்கு3ருவாத3 ஷிவன ஆக்ஞத3**
**விதி4ய மாடி3த3 முனிகெ3 கு3ருவாத3**
**மத3னவைரிய மத1வு ஸூத்ரகாரர மத1வு**
**இத3 நிர்த4ரிஸலு வொந்தெ3 மதவாயிது ||6**

அதரிந்த – (தப்தசக்ர தாரணம் தேக சுத்திக்கு) அவசியமானதால். த்ரிஜகத்குருவாத – மூன்று உலகத்தின் மக்களுக்கும் ஞானதாயகரான. ஷிவன – ருத்ரதேவரின். ஆஜ்ஜத – ஆணைப்படி (தப்த முத்ரா தாரணையை சொல்லும் ஸ்ருதிகளின் தாத்பர்ய அர்த்தத்தை, சிவன் பார்வதியின் கேள்வியை நிமித்தமாக வைத்துக்கொண்டு, பத்ம புராணத்தில் விவரித்ததற்கு விரோதம் இல்லாதவாறு). விதிய மாடித – விதி விதானங்களை ஏற்படுத்தி உபதேசம் செய்த (விஷ்ணு பக்தர்கள் இந்த புற விஷ்ணு தீக்ஷையை அவசியமாக ஸ்வீகரிக்க வேண்டும் என்னும் விதியை). முனிகெ – ஸ்ரீஆனந்த தீர்த்தருக்கு. குருவாத –

குருகளான. ஸூத்ரகாரர – பிரம்ம ஸூத்திரங்களை இயற்றிய ஸ்ரீ வேதவியாசரின். மதவு – சித்தாந்தம். மதனவைரிய மதவு – காம வைரியின் (சிவனின்) மதம். இத நிர்தரிஸலு – தப்த சக்ர தாரணத்தை சொல்லும் ஸ்ருதி அர்த்தத்தை நிர்ணயிப்பதற்கு. வொந்தெ மதவாயிது – ஒன்றே அபிப்பிராயம் ஆனது (ஆகையால் தரிக்க வேண்டுமென்னும் நிர்ணயமே சரி). அல்லது, விதிய மாடித முனிகெ – தப்த முத்திரையை விதிக்கும் தர்ம சாஸ்திர பாகத்தை இயற்றிய ஞானிக்கும்கூட. குருவாத – குருவான. மதனவைரிய – சிவனின். மதமும், ஸூத்ரகாரரான ஸ்ரீபாதராயணரின் மதமும் ஒன்றே ஆனது.

** பிரம்மஸூத்ரங்களின் ‘கர்த்ருத்வாதிகரண’ த்தில், விதி நிஷேதங்கள் வீண் அல்ல என்றும், சாஸ்திர விதிகளை முமுக்ஷு ஜீவர்கள் தவறாமல் பின்பற்ற வேண்டும் என்பதன் அவசியத்தையும் நிர்ணயித்து சொல்லியிருக்கிறார். ‘விஹிதத்வாச்ச ஆஸ்ரமகர்மாபி’ ஆகிய ஸூத்ரங்களிலும், ‘வேதோக்தமேவ குர்வாணோ நிஸ்ஸங்கோऽர்ப்பிதமீஷ்வரே’, ‘நைஷ்கர்ம்யம் லபதே ஸித்திம்’ ஆகிய பாகவத வாக்கியங்களில்கூட, வேதோக்த கர்மங்களின் அனுஷ்டானத்தின் முக்கியத்துவம் சொல்லப்பட்டிருக்கிறது.

**இத$^{3}$னரியத$^{3}$ வாதி$^{3}$ வஸ்த்ரத$^{3}$ துண்ட$^{3}$ன்னு**
**பத$^{3}$தி$^{3}$ந்த$^{3}$ கரெத$^{3}$னத$^{3}$கெ மூல கண**
**பது$^{3}$ம புராணவ முனிக$^{3}$ளெல்ல ப$^{3}$ல்லரு**
**இத$^{3}$னரியத$^{3}$ ப$^{4}$ட்ட பா$^{4}$ஸ்கர தஸ்கர ||7**

இதனரியத – இந்த நிர்ணயத்தை அறியாத. வாதி – (தப்த முத்ரா தாரணையை அவைதிக என்று) வாதிப்பவன். வஸ்த்ரத துண்டன்னு – துணியின் ஒரு துண்டினை. பததிந்த – வஸ்திரம் என்னும் சொல்லினால். கரெதனு – அழைத்தான். (பவித்ரம் தே – ஆகிய தப்த சக்ர தாரணையை சொல்லும் வேதவாக்கியங்களுக்கு, தனக்கு இஷ்டமான ஒரு அர்த்தத்தை மட்டும் அறிந்து, அதே சரியான அர்த்தம் என்று நினைத்து, வாதிக்கிறான் என்று நினைப்பது). அதகெ – இவ்வாறு சொல்வதற்கு. மூல கண – அந்த ஸ்ருதிவாக்கியத்தின் மூலத்தை அறியாமல் இருப்பதே காரணம்.

அல்லது, மூல கண - இதே காரணம் என்று அறி (பார்). பதுமபுராண - பத்ம புராணத்தை. முனிகளெல்ல பல்லரு - அனைத்து ஞானிகளும் அறிந்திருக்கின்றனர். இதனரியத - (அங்கு ஸ்ருத்யர்த்தங்களை சொன்னாலும்) அதனை அறியாமல் (தப்த சக்ரதாரணை, அவைதிகம் என்றும் ஸ்ருதிக்கு தாம் சொல்லும் அர்த்தமே சரி என்றும் வாதிக்கும்). பட்டபாஸ்கர - குமாரிலபட்ட மற்றும் பாஸ்கரர். தஸ்கர - வேதார்த்தத்தை திருடும் திருடர்கள் ஆவர்.

பட்ட பாஸ்கராதிகள் தப்த முத்ரா தாரணையை அவைதிகம் என்கிறார்கள். வேதவிதியில் இல்லை என்கிறார்கள்.

ஸ்லோக 3

**பவித்ரம் சரணம் நேமி பவிஷ்சக்ரம் ஸுத$^{4}$ர்ஷனம் |**
**ஸஹஸ்ராரம் ப்ராக்ருதக்$^{4}$னம் லோகாதா$^{4}$ரம் மஹௌஜஸம் ||**

பவித்ரம் - பவித்ர (பாவனகரம்). சரணம் - சரணம் (ரதசரண - சக்ர). நேமீ - (வட்டமான ஆயுதம்) நேமி. பவி - பவி (இந்திரனின் வஜ்ராயுதத்தை மீறியது). சக்ரம் - சக்ர. ஸுதர்ஷனம் - சுதர்ஷன (ஞானதானத்தினால் ஸஜ்ஜனர்களை ரட்சிப்பது). ஸஹஸ்ரார - சஹஸ்ரார (சஹஸ்ர ஆரங்கள் உள்ள - கூர்மையான ஆரங்களால் எதிரிகளை கிழிப்பதில் சமர்த்தமானது). ப்ராக்ருதக்னம் - சகல ப்ராக்ருத சக்திகளை மீறுவதில் சமர்த்தமானது. லோகாதாரம் - அனைத்து உலகங்களுக்கும் ஆதாரம் - வியாப்தமானது. மஹௌஜஸம் - மஹௌஜஸ (அசிந்த்ய ஸாமர்த்தியம் உள்ளது). இவை அனைத்தும் ஸ்ரீஹரி சக்ரத்தின் நாமங்கள் (மகிமைகளை சொல்லும் காரணப் பெயர்களாக உள்ளன).

பத 4 ராகம்: நாடி. தாளம்: ரூபக

**எம்ப$^{3}$ ஸ்ருத்யர்த்த$^{2}$வனு தும்பி$^{3}$ஸி பேளித$^{3}$ பத$^{3}$வ**
**நம்பி$^{3}$கொள்ளிரோ நாவெந்து$^{3}$தெ$^{3}$ தத்வ ||பல்லவி**

எம்ப ஸ்ருத்யர்த்தவன - பவித்ராதி பர்யாய ஷப்தங்களால் சொல்லும் ஸ்ருதிகளின் அர்த்தத்தை. தும்பிஸி - நிரப்பி. பேளித பதவ - கூறிய பதத்தின் அர்த்தத்தில். நம்பிகொள்ளிரோ - நம்பிக்கை கொள்ளுங்கள். நாவந்துதெ - நாம் சொல்வதே. தத்வ - ஸத்தியம் ஆகும்.

**பவித்ரநாம மொத$^{3}$லாத$^{3}$ ஹத்து பெஸரு**
**மாத$^{4}$வ சக்ர பர்யாயவப்பவெந்து$^{3}$**
**ஷிவனு பேளித$^{3}$ தத்வவ பி$^{3}$டு$^{3}$வரெ மானவ**
**அவனரியத$^{3}$ர்த்த$^{2}$வ யின்னாவ ப$^{3}$ல்ல ||1**

பவித்ர நாம மொதலாத - பவித்ர என்னும் (மேற்கண்ட ஸ்லோகத்தில் சொல்லப்பட்டிருக்கும்). ஹத்து பெஸரு - (பவித்ர, சரண, நேமி, பவி, சக்ர, ஸுதர்ஷன, ஸஹஸ்ரார, ப்ராக்ருதக்ன, லோகாதார மற்றும் மஹௌஜஸங்கள் என்னும்) பத்து பெயர்கள். மாவரசக்ர - ஸ்ரீஹரியின் சக்ரத்தின் (மா - லட்சுமி; வர - பதி). பர்யாயவப்பவெந்து - சமான அர்த்தம் உள்ள (ஏகவஸ்து வாசக) சொற்களாக இருக்கிறது என்று. அல்லது. ஷிவனே - ருத்ரதேவனே. பேளித தத்வவ பிடுவரெ - கூறிய சத்யார்த்தை புறக்கணிப்பார்களா? (கூடாது). மானவ - ஹே அல்பக்ஞான மனிதனே. (முட்டாளே). அவனதியதர்த்தவ - சிவன் அறியாத அர்த்தத்தை. இன்னாவபல்ல - வேறு யார் அறிவார்கள்?

**ஹரன ப$^{4}$க்தளெம்ப$^{3}$ கி$^{3}$ரிஜாதே$^{3}$விகெ$^{3}$**
**புரஹரனொலிது$^{3}$ பேளித$^{3}$ தத்வவனெ பி$^{3}$ட்டு**
**நரன மத நம்பீ$^{3}$ஷ்வரன உக்திய ஜரெது$^{3}$**
**மருளெ தாய மாரி தொத்த கொம்பு$^{3}$வந்தெ ||2**

ஹரன பக்தளெம்ப - சிவபக்தள் என்று புகழ்பெற்ற. கிரிஜாதேவிகெ - பார்வதி தேவிக்கு. புரஹரனு - த்ரிபுர சம்ஹாரி (சிவன்). ஒலிது - பிரசன்னனாகி (மகிழ்ந்து, மரியாதையுடன்). பேளித - கூறிய. தத்வவனெ - பிரமேயத்தை (ஸத்யார்த்தத்தை). பிட்டு - புறக்கணித்து. நரன மத - (பட்ட, பாஸ்கராதி) அல்ப மானவரின் அபிப்பிராயத்தை. நம்பி - நம்பிக்கொண்டு. ஈஷ்வரன உக்திய - சிவனின் பேச்சினை. ஜரெது - புறக்கணித்து. மருளெ - ஹே

முட்டாளே. தாய - பெற்ற தாயினை. மாரி - புறக்கணித்து. தொத்த கொம்புவந்தெ - (நமது ரக்ஷணைக்காக) ஒரு தாசியை ஏற்றுக் கொள்வது போல இருக்கிறதே?

* சதிக்கு பதியே பரதெய்வம். அதைப்போல, ஸதி, பதியின் பரமபக்தள்.

* சிவன் தன் ப்ரியதமளான பத்னிக்கு உண்மையான அர்த்தத்தை சொல்லாமல், ஏமாற்றி, கெட்ட அர்த்தத்தை சொல்லலாமா? தாயான தேவஹூதிக்கு தத்வோபதேசம் செய்த கபில ரூபி ஸ்ரீஹரி. தத்வத்தை சொல்லவில்லையா? பத்னி புத்ராதிகளின் சம்பந்தம் உபதேசத்திற்கு சம்பந்தப்பட்டது என்பதை நிராகரிக்கிறது.

**முக்கண்ண பேளித$^{3}$ர்த்த$^{2}$வ பி$^{3}$ட்டு ஜக$^{3}$தொ$^{3}$ளு**
**இக்கண்ணராத$^{3}$ மானவரு |**
**ஸொக்கி மனப$^{3}$ந்த$^{3}$ந்தெ நுடி$^{3}$யெ ம்ருட$^{3}$ கு$^{4}$டி$^{3}$கு$^{4}$டி$^{3}$ஸி**
**ரக்கஸர கொல்லுவந்தெ கொலுவ ||3**

முக்கண்ண - மூன்று கண்களைக் கொண்ட மஹாதேவன். பேளிதர்த்தவ - கூறிய அர்த்தத்தை. பிட்டு - புறக்கணித்து. ஜகதொளு - உலகத்தில் இருக்கும். இக்கண்ணராத மானவரு - இரு கண்களைக் கொண்ட மனுஷ்ய சாமான்யர்கள். ஸொக்கி - கர்விதராகி (தாமே பண்டிதர் என்னும் துர் அஹங்காரத்தினால்). மனபந்தந்தெ - தம் இஷ்டப்படி (தம் இஷ்டத்திற்கு). நுடியெ - ஸ்ருதி அர்த்தத்தைக் கூறினால். ம்ருட - அந்த மகாதேவன். குடிகுடிஸி - கர்ஜித்தவாறு கோபம் கொண்டு. ரக்கஸர - அசுரர்களை (துஷ்ட தைத்யர்களை). கொல்லுவந்தெ கொல்லுவ - கொல்வதைப்போல கொல்கிறான்.

தப்த முத்திரையை தரிக்க வேண்டும் என்று சொல்லும் ஸ்ருதிகளுக்கு, தவறான அர்த்தங்களை சொல்பவர்கள், உண்மைக்கு புறம்பாகக் கூறியதால், துர்கதியை அடைகிறார்கள் என்பதில் லௌகிக உதாரணத்தை சொல்லியிருக்கிறார். அனேக தைத்யர்கள், தவங்களை செய்து ருத்ரதேவரிடமிருந்து பல

வரங்களைப் பெற்றனர். ஆனால், த்ரிபுரர்களைப் போன்ற தைத்யர்களை, ருத்ரதேவன் சம்ஹரித்து, சஜ்ஜன லோகத்தை காப்பாற்றுபவனும் ஆகியிருக்கிறான் என்பதை கவனிக்க வேண்டும். தைத்யருக்கு அவர் கொடுக்கும், வரங்களாலும், தைத்யர் திருப்தராகி, அந்த வரங்களை தவறாக பயன்படுத்தி, ஸ்வயோக்ய துர்கதிகளையே அடைகின்றனர் என்பதை மறக்கக்கூடாது.

ஸ்ருதி 2 : **யத்தெ பவித்ரமர்ச்சிஷ்யக்[3]னெ விததமந்தரா ||**

அக்னே - ஹே ஸ்ரீஹரியே. தே - உன். யத் - எந்த. பவித்ரம் - சக்ரம். அர்ச்சிஷி - சூர்யனில். அந்தரா - உள்ளே அனைத்து இடங்களிலும். விததம் - வியாப்தமாகி இருக்கிறது.

அக்னிமீளே புரோஹிதம் - ஆகிய வேத வாக்கியங்களில் இருக்கும் அக்னி சொல்லினைப் போல. இங்கும் அக்னி என்னும் சொல் விஷ்ணுவையே குறிக்கிறது. அக்னி சொல், பிரசித்தமான அக்னி, அக்ன்யந்தர்கத பரமாத்ம மற்றும் ஷரீரத்தில் இருக்கும் (அத்யாத்மத்தில்) ஸ்ரீஹரி, இவ்வாறு மூன்று வஸ்துகளை சொல்லும் அர்த்தங்களைக் கொண்டது. ஸ்ரீஹரியைக் குறிக்கும் அக்னி ஷப்தத்தின் முக்கிய அர்த்தம், ஸ்ரீஹரியின் சர்வோத்தமத்வத்தையே சொல்கிறது.

அக்னிஷப்தோ஽யமக்ர ஏவாபிபூஜ்யதாம்
அக்ர்யத்வமக்ர நேத்ருத்வமத்தி மங்காங்க நேத்ருதாம் ||
(ருக் பாஷ்ய)

வாக்கியத்தில் கூறியதைப் போல, ஸ்ரீஹரி, சர்வ தேவதைகளில் முதன்மையாக பூஜ்யனும், ஸர்வ நியாமகனும், ஸர்வசம்ஹார கர்த்தனும், தேஹேந்திரிய ஸ்வதந்த்ர ப்ரவர்த்தகனும் ஆகியிருப்பதால் 'அக்னி' என்று அழைக்கப்படுகிறான்.

பத 5 ராகம்: நாடெ. தாளம்: ரூபக
**மத்தெ பவித்ரமர் சிஷ்யக்[3]னேயெம்ப[3] ஸ்ருதி**
**மத்தெ நின்ன க[2]ண்ட[3]வ ஸுட[3]தே[3]**

---

**சித்தஜனய்யன சக்ரவெம்ப$^{3}$ ப**
**வித்ரக்கெ தப்தவப்புவுதெ$^{3}$ ||1**

யத்தேபவித்ர மார்ச்சிஷ்யக்னேயெம்ப ஸ்ருதி - இந்த சொற்களைக் கொண்ட ஸ்ருதியின் அர்த்தம். நின்ன கண்டவ - உன் தேகத்தின் மாமிசத்தை. ஸுடதெ - தகிக்காமல் இருக்குமா? (தகிக்கும்). மத்தெ - அப்படி இல்லாமல். சித்தஜனய்யன - மன்மத பிதனின் (ஸ்ரீஹரியின்). சக்ரவெம்ப - சக்ர என்று அழைக்கப்படும். பவித்ரக்கெ - பாவனகர ஸுதர்சனத்திற்கு. தப்தவு அப்புவுதெ - தாபம் சேருமா?

ஸ்ரீஹரியின் சக்ரம், இங்கு முன்னர் கூறியதைப் போல அனைத்து இடங்களிலும் வியாப்தமானது. சூரியனிலும் இருந்து சூரியனுக்குத் தேவையான சக்தியைக் கொடுக்கிறது. அது மானவ தேகத்திலும் இருக்கிறது. அதனை மகிழ்விக்க, அதன் மகிமைகளை அறிந்து, ப்ராக்ருத சக்ரத்தை ஹோமாக்னியில் தகித்து, தேகத்தில் பூசி இட்டுக் கொள்ள வேண்டும். அப்படியில்லையெனில், தேகத்தில் வியாப்தமாக இருக்கும் அந்த சக்ரம், தேகத்தையே தகிக்கிறது. (தேகத்தினால் ஆகும் அனைத்து சத்கர்மங்களையும் நாசம் செய்கிறது - அப்படியெனில், தேகமே நஷ்டம் ஆனதைப் போல அல்லவா?). சக்ரத்தை அக்னியில் தகித்தால், சக்ரத்திற்கு தாபம் ஆகுமா? - எப்போதும் இல்லை.

**ஷ்வேதோர்த்4வ ஹிரண்மயவெம்ப$^{3}$ வேத$^{3}$**
**மதிவந்தர மனகெ வொப்புவுதே$^{3}$**
**ஸுதகெ$^{3}$ ஸௌவரணேன ப்ரகாமனேத$^{3}$**
**ச்யுதன நோடு$^{3}$ பி$^{3}$டு$^{3}$ து$^{3}$ராக்$^{3}$ரஹவ ||2**

ஷ்வேதோர்த்வ ஹிரண்மயவெம்ப வேத - ஷ்வேத, ஊர்த்வ, ஹிரண்மய என்னும் சொற்களைக் கொண்ட ஸ்ருதி வாக்கியம், மதிவந்தர - ஞானிகளின் மனகெ - மனதிற்கு. வொப்புவுதே - சமர்ப்பகம் எனப்படுமா? (இந்த ஸ்ருதி, தப்தமுத்ரா தாரணையை எதிர்க்கிறது என்று சொல்லும் உன் அந்த ஸ்ருத்யர்த்தம், ஞானிகளுக்கு சம்மதமானது அல்ல). ஸுதகெ - புராண

ப்ரவர்த்தக ஸுதாசார்யர், இதனை (ஒப்பிகெயாதீதே - ஒப்புக் கொள்கிறாரா? இல்லை). ஸௌவர்ணீ நப்ரகாமனேத் - ஹிரண்மய என்னும் ஸ்ருதி, 'தப்தசக்ரம் த்விபுஜே தாரயேத்' போன்ற தவறான அர்த்தங்களைக் கொடுக்கும் ஸ்ருதிகளையே எதிர்க்கிறது. அச்யுதன நோடு - (ஆகையால், சக்ராதிகளை தரித்திருக்கும்) ஸ்ரீஹரியை அறி. துராக்ரஹவ - (விஷ்ணு லாஞ்சன தாரணை அவசியம் இல்லை என்னும்) கெட்ட சிந்தனையை. பிடு - விட்டுவிடு.

ஸ்லோக 4

**த3த்3யாத்3கோ3பூ4ஹிரண்யானி சக்ராங்கித பு4ஜாய வை |**
**அவைஷ்ணவாய தா3தவ்யம் நோத3பி3ந்து3ம் ந தண்டு3லம் ||**

விஷ்ணுலாஞ்சனங்களை தரிக்க வேண்டிய அவசியம் என்னவென்று சொல்லி, தரிக்காதவர்கள் விஷ்ணுபக்தர்கள் அல்லர் என்றும், தானாதிகளுக்கு யோக்ய பாத்திரர் அல்லர் என்றும் உபதேசிக்கிறார்.

கோபூஹிரண்யாதி - பசு, பூமி, தங்கம் ஆகிய சிறந்த தானங்களை. சக்ராங்கித புஜாய - சக்ரத்தினால் சின்னம் பொறிக்கப்பட்ட தோள்களைக் கொண்டவனுக்கு (விஷ்ணு தீக்ஷை உள்ளவனுக்கு). தத்யாத் வை - கொடுக்கத்தக்கதே பல பிரத என்பது ஸ்ருதியின்படியே ஆகும். அவைஷ்ணவாய - விஷ்ணு பக்தன் அல்லாதவனுக்கு. உதபிந்தும் - ஒரு துளி தண்ணீரோ. தண்டுலம் - ஒரு அரிசித் துகளோ. ந தாதவ்யம் - கொடுக்கத்தக்கதல்ல.

பத 6 ராகம்: நாட. தாளம்: ரூபக

**கோ3பூ4ஹிரண்யாதி3 தி3வ்ய தா3னங்க3ள**
**ஸ்வபு4ஜதி3 சக்ரவில்லத3வரிகெ3**
**ஈ பு4வனதொ3ளு கொட3பா3ரதெ3ந்து3 நா**
**க3 பூ4ஷண நிர்ணயிஸித3ல்லே ||1**

கோபூஹிரண்யாதி திவ்யதானங்கள - பசு, பூமி, தங்கம் ஆகிய தானங்களை. ஸ்வபுஜதி - தன் தோள்களில். சக்ரவில்லதவரிகெ - சக்ரத்தை தரிக்காதவனுக்கு. ஈ புவனதொளு - இந்த உலகத்தில்.

கொடபாரதெந்து - கொடுக்கத்தக்கதல்ல என்று. நாகபூஷண - ஸர்ப்பபூஷணன் (சிவன்). நிர்ணயிஸிதல்லே - நிச்சயித்திருக்கிறான் ஆகையாலேயே (அடுத்த நுடியில் விளக்கம் தொடர்கிறது).

**ஒந்து³த³கபி³ந்து³ ஒந்து³ தண்டு³லவன்னு**
**இந்தி³ரேஷன அப⁴க்தரிகெ³**
**எந்தெ³ந்து³ கொட³பா³ரதெ³ந்து³**
**இந்து³ மௌளி எந்து³த³கெ ஸந்தே³ஹ ஸல்ல ||2**

ஒந்துதகபிந்து - ஒரு துளி தண்ணீரோ. ஒந்து தண்டுலவன்னு - ஒரு அரிசுத் துகளோ. இந்திரேஷன அபக்தரிகெ - விஷ்ணு பக்தர் அல்லாதவர்களுக்கு. எந்தெந்து - என்றும் (எந்த காலத்திலும்). கொடபாரதெந்து - கொடுக்கக்கூடாது என்று. இந்துமௌளியு - சிவன். அந்துதகெ - கூறிய விஷயத்திற்கு. ஸந்தேஹ ஸல்ல - சந்தேகம் தேவையில்லை.

** பற்பல தானங்களில் பசு, பூமி, தங்கம் ஆகிய தானங்கள் சிறந்தவை. அன்னதானமே சிறந்த தானம் என்று சில ஆகமங்களில் சொல்லியிருப்பது - அது தற்காலத்தில் திருப்தியைக் கொடுக்கிறது என்னும் காரணத்தினால் மட்டுமே. பசு, பூமி, தங்கம் ஆகிய தானம் 'திவ்ய' தானம் ஆகும். ஸத்பாத்திரர்களில் கொடுத்தால், ஞான சாதகமான மஹாபுண்யத்தை அது கொடுக்கிறது. ஸ்ரீவிஷ்ணு ப்ரீத்யர்த்தமாக அர்ப்பிக்கப்படும் தானமே 'திவ்யதான'. ஸத்பாத்திரனின் பிரதான லட்சணம் என்னவென்றால், சக்ராதி விஷ்ணு லாஞ்சனங்களை தரித்தவன் ஆகிறான். இந்த தேகம், என் பிரபுவான ஸ்ரீவிஷ்ணுவின் வசம். நான் அவனின் நித்ய தாசன் என்பதை நிரந்தர ஸ்மரணைக்கு கொண்டு வருவதே சக்ரதாரணையின் முக்ய நோக்கம்.

எந்தவொரு பொருளையும், ஒருவனைச் சேர்ந்தது என்று காட்டுவதற்கு அதன் மேல் அவனின் பெயரை பொறிப்பதைப் போல, ஜீவ ஸஹிதமான இந்த தேகம் எப்போதும் விஷ்ணு வசம் என்று அறிந்து, பக்தியுடன் சக்ராதிகளை தரிப்பவனே

உண்மையான விஷ்ணுபக்தன். அவன் நாடகக்காரர்களைப் போல வேடம் போடுபவன் அல்ல. பக்தி இருப்பவன், தரிக்கத் தேவையில்லை என்றும் இல்லை. அத்தகையவனும் தரிக்கவே வேண்டும். தவறாமல் தரிக்கிறான். விஷ்ணு சின்னங்களை மரியாதையுடன் தரிப்பவன் மந்தமதியானாலும் (சாஸ்திர பாண்டித்யம் இல்லாதவன் ஆனாலும்) அவனும் பக்தனே ஆகிறான். ஸ்ரீஜகன்னாததாசர் 'மந்தனாதரு சரியே கோபிசந்தனவ நலவிந்த தரிஸுத' ஆகிய வாக்கியங்களால் இந்த பிரமேயத்தையே விளக்குகிறார்.

அனைத்தும் விஷ்ணுவின் அதீனம் – நமது என்பது எதுவுமே இல்லை – என்னும் அனுசந்தானம் எப்போதும் இருக்க வேண்டும் என்றே, க்ருஹ, வஸ்த்ர, ஆபரணாதி அனைத்து வஸ்துகளின் மேல் ஸ்ரீஹரியின் நாமம் அல்லது சக்ராதிகளை குறியாக வைப்பது, பழைய சம்பிரதாயமாக இருந்தது. இந்த சம்பிரதாயத்திற்கான ஆதார வாக்கியம் இதோ:

ஷிஷவ: பஷவோன்னானி பாத்ராண்யாபரணானி ச |
ரதத்வஜபதாகாதி ஸர்வமக்ஞான உச்யதே ||
(விஷ்ணு ரஹஸ்ய)
ஏதேஷாம் ஹி மதீயத்வஞாபனாய லிகேத்ஸ்வயம்

மக்கள், பசுக்கள், தான்யம், பாத்ரம், ஆபரண, ரதம், த்வஜ பதாகாதிகள் அனைத்தும் 'அஞ்ஞான' எனப்படுகிறது. (நம்முடையது என்னும் அஞ்ஞானத்திற்கு காரணமாகையால், இந்த அனைத்தும் 'அஞ்ஞான' என்பதை குறிக்கிறது). 'இந்த அனைத்தும் என்னை (ஸ்ரீஹரியை) சேர்ந்தவை என்பதை குறிப்பிட, ஒவ்வொருவனும், தானே அவற்றின் மேல் என் நாமம் அல்லது சக்ராதி சின்னங்களை இட வேண்டும்' என்று ஸ்ரீஹயக்ரீவ ஸ்வாமி பிரம்மனுக்கு உபதேசம் செய்கிறார்.

இப்படியான முயற்சி மற்றும் பயிற்சியினால் யாருக்கு, அனைத்தும் விஷ்ணுவின் அதீனம் என்னும் ஞானம் வருவதில்லையோ, அவனே அவைஷ்ணவன். அபக்தன். தமோ யோக்யன். அத்தகையவனுக்கு எதையும் கொடுக்கக்கூடாதென்று

--------------------------------------------------------------------------------------------

(எவ்விதமான உதவியையும் செய்யக்கூடாது என்று) சாஸ்திரம் சொல்கிறது. இந்த விதி, ஸ்வரூப நிச்சயம் உள்ள ஞானிக்கு மட்டுமே பொருந்துகிறது. ஸாதனை மார்க்கத்தில் பல நிலைகளில் இருக்கும், ஸ்வரூபத: விஷ்ணு பக்தரான (முக்தியோக்யரான) ஜீவர்கள்கூட விஷ்ணு சின்னங்களை தரிக்காதிருக்கும் சந்தர்ப்பம் வரலாம். வருகிறது. அத்தகையவர்களுக்கு தண்ணீர் ஆகியவற்றை கொடுக்கக்கூடாது என்று இல்லை.

அன்னஸ்ய க்ஷுதிதம் பாத்ரம் -- பசித்தவன் அன்ன தானம் பெறுவதற்கு தகுதி உள்ளவன். ஸ்ரீபுரந்தரதாசர் ஒரு உகாபோகத்தில் இவ்வாறு சொல்கிறார்.

சோரனாதரு சரியே சண்டாலனாதரு சரியே
பிரம்மக்ன பித்ருகாதகியாதரு ஸரியே
ஆவனாதரு சரியே மத்யான்ஹ காலக்கெ
அதிதியாகி மனெகெ பந்தரெ
ஆதனிகெ ஆஷனவனித்து வசுதீஷ
புரந்தரவிட்டலகர்ப்பிதவென்னு

ஆகையால், இந்த நிலையில் இருப்பவர்களுக்கு, அன்னோதகங்களைக் கொடுப்பது, பிராணி-தயாரூபம் எனப்படுகிறது. திவ்ய தானங்களில் இது சேர்ந்ததில்லை.

நோதபிந்தும் ந தண்டுலம் - என்று சொல்வதற்கு, தீர்த்த மந்த்ராக்ஷதை என்னும் அர்த்தத்தை சிலர் சொல்கின்றனர். விஷ்ணு பிரஸாத ரூபமான இவற்றை விஷ்ணு சின்னங்கள் இல்லாதவர்களுக்கு கொடுக்கக்கூடாது என்னும் அர்த்தத்தை சொல்கின்றனர். அன்னோதகங்களை ஏற்றுக்கொள்ளும் மனிதன், ஸ்வரூபஞானம் ஆகாத தானி ஆகியோருக்கு இந்த அர்த்தம் பொருந்துகிறது அல்லவா?

அனைவரின் ஸ்வரூப ஞானம் உள்ள பீமஸேனதேவர், தமோயோக்யரான துரியோதனன், துச்சாதனன் ஆகியோர் விஷயத்தில் கூறியதைப் போல, அனைவரும் நடந்துகொள்ள

வேண்டும் அல்லவா?. மந்தமதியோ, ஞானியோ, விஷ்ணுபக்தன் தவறாமல் விஷ்ணு சக்ர சின்னங்களை தரிக்கிறான். ஆகையால், வியக்தி ஸ்வரூப ஞானம் இல்லாதபோது மற்றும் சாஸ்திரோக்த லட்சணங்களால் ஸ்வரூபத்தைக் காண அவசியம் இல்லாத சந்தர்ப்பங்களில் புற விஷ்ணு தீக்ஷை இல்லாதவனுக்கு திவ்ய தானங்களை கொடுக்கவேகூடாது - அந்த தானம் வீண் ஆகிறது.

ஸதாசாரரதோபி ஸ்யாத்விஷ்ணுதீக்ஷா விவர்ஜித: |
ஸ சோரவத் பஹிஷ்கார்ய: தஸ்ம்யைதத்தம் ச நிஷ்பலம் ||

என்று விஷ்ணு ரஹஸ்யத்தில், சதாசார உள்ளவன் என்று பிற லட்சணங்களால் கண்டுகொண்டாலும், விஷ்ணு (புற) தீக்ஷா இல்லாதவனை திருடனைப் போல தூரத்தில் வைக்க வேண்டும். அவனுக்குக் கொடுக்கும் (பசு, பூமி, தங்கம் முதலான) தானங்கள் 'பலன்களைக் கொடுப்பதில்லை' என்று சொல்லப்படுகிறது.

ஸ்ருதி 3
**த்விபுஜம் தார்யதேதி த்விரேகம் ஊர்த்வபுண்ட்ரம் கரோதி ||**

இரு தோள்களில் (தப்த சக்ரங்களை) தரிக்கிறான். ஊர்த்வ புண்ட்ரத்தை (நடுவில் இரண்டு ரேகைகளாக இழுத்து) செய்கிறான். விஷ்ணு பக்தன் தரிக்கும் சின்னங்களை இந்த ஸ்ருதி விவரிக்கிறது.

பத 7 : ராகம்: நாடெ. தாளம்: ரூபக
**ஈ மாத்4யந்தி3ன ஸ்ருதிக3னெரடு3 க2ண்ட3தி3**
**தப்த சக்ரதா4ரணவ நிர்ணயிஸிது ||1**

ஈ மாத்யந்தின ஸ்ருதிகனு - இந்த 'மாத்யந்தின' ஸ்ருதி (ஸ்ருதி பிரவர்த்தக வேதபுருஷன்). எரடு கண்டதி - இரு கண்டங்களில். தப்தசக்ர தாரணைகளை. நிர்ணயிஸிது - நிர்ணயித்து சொல்லியிருக்கிறான்.

**இது3 ஸ்பஷ்ட வசனவாது3த3ரிந்த3 ஷங்கசக்ர**
**அது3வில்லத3வனெ வேத3பா3ஹ்ய**

---

**மத$^3$னனய்யன புரதி$^3$ முக்தரிகா$^3$வது$^3$**
**இவனரியத$^3$வரு தமவனைது$^3$வரு ||2**

இது – இந்த மாத்யந்தின ஸ்ருதி வாக்கியம். ஸ்பஷ்ட வசனவாதுதரிந்த – தவறாக அர்த்தம் புரிந்து கொள்ள முடியாமல் இருப்பதால். ஷங்கசக்ர – சங்கு சக்ர லாஞ்சனங்கள். மதனனய்யன புரதி – ஸ்ரீஹரிபுரத்தில். (வைகுண்டாதி ஸ்தானங்களில்). முக்தரிகெ – முக்த ஜீவர்களுக்கு. ஆவது – ஏதோவொரு (எந்த சங்க சக்ர சின்னங்களை முக்தர் தரிக்கின்றரோ). அதுவெ – அந்த லாஞ்சனமே. இல்லதவனு – இல்லாதவன் (அதனை புறக்கணிப்பவன்). வேதபாஹ்ய – வேத பாஹ்யன் (வேத ரூபத்தின் ஸ்ரீஹரி ஆணையை புறக்கணிப்பவன்). இதனரியதவரு – இதனை அறியாத மற்றும் பின்பற்றாதவன். தமவனு – தமஸ்ஸினை. ஐதுவரு – அடைகின்றனர்.

ஸ்லோக 5
**யே கண்ட$^2$லக்$^3$ன துளஸி நளினாக்ஷமாலா:**
**யே பா$^3$ஹுமூல பரிஷோபி$^4$த ஷங்க சக்ரா: |**
**யே வா லலாட ப$^2$லகே அஸதூ$^3$ர்த்$^4$வ புண்ட்$^3$ரா:**
**தே வைஷ்ணவா பு$^4$வன மாஷு பவித்ரயந்தி ||**

யே – யார். கண்டலக்ன துளஸீ நளினாக்ஷ மாலா: – கழுத்தில் தரித்த துளசி மற்றும் பத்மாக்ஷ மாலைகளைக் கொண்டிருக்கிறானோ. யே – யார். பாஹுமூலபரிஷோபித ஷங்கசக்ரா: – தோள்களில் ஒளிரும் சங்கு சக்ர சின்னங்கள் உள்ளவர்களோ. வா – மற்றும். யே – யார். லலாடபலகே – நெற்றியில் நடுவில். லஸதூர்த்வ புண்ட்ரா: – வீற்றிருக்கும் ஊர்த்வ புண்ட்ர உள்ளவரோ. தே – அந்த. வைஷ்ணவா: – விஷ்ணு பக்தர். (அவரே விஷ்ணு பக்தர் ஆவார்). புவனம் – உலகத்தை (பிரஜைகளை). ஆஷு – சீக்கிரமாக. பவித்ரயந்தி – சுத்தப்படுத்துகிறான் (பாவங்களை பரிகரிக்கிறான்).

பத 8 : ராகம்: நாடெ. தாளம்: ரூபக

**ஸந்தப்த ஷங்க$^{2}$ சக்ரவு பு$^{4}$ஜயுக$^{3}$த$^{3}$ல்லி**
**மந்த்ர பூர்வககவாகி$^{3}$ த$^{4}$ரிஸி**
**அந்தகன ப$^{4}$டரனஞ்சிஸி மெரெவ லகுமீ**
**காந்தன ப$^{4}$க்தராத$^{3}$வரு ||1**

ஸந்தப்த ஷங்கசக்ரவு – தப்த முத்திரைகளை (சங்க சக்ரங்களை). புஜயுகதல்லி – இரு தோள்களில். மந்த்ரபூர்வககவாகி – (விதிபூர்வகமாக ஹோமாக்னியில் சக்ராதி முத்திரைகளை காய்ச்சி). வித்யுக்த மந்திரங்களை உச்சரித்து). தரிஸி – (தோள்களில்) தரித்து. அந்தகன படரனு – யம தூதர்களை. அஞ்சிஸி – பயமுறுத்தி. மெரெவ – வீற்றிருக்கும். லகுமிகாந்தன – நாராயணனின். பக்தராதவரு – தாசரானவர் (அடுத்த நுடியின் ‘இளெய பாவனமாடுவரு’ என்பதுடன் இந்த வாக்கியம் பூர்ணமாகிறது).

**பொளெவ பன்னெரடூ$^{3}$ர்த்$^{4}$வ புண்ட்$^{3}$ரக$^{3}$ளிந்த$^{3}$ ஸ்ரீ**
**துளஸி பத்$^{4}$மாக்ஷிய ஸரவ**
**ஆலஸதெ$^{3}$ த$^{4}$ரிஸித$^{3}$ பரம வைஷ்ணவரு ஈ**
**இளெய பாவன மாடு$^{3}$திஹரு ||2**

பொளெவ – ஒளிரும். பன்னெரடு – 12. ஊர்த்வபுண்ட்ரகளிந்த – 12 நாமங்களால் (கீழிருந்து மேலாக தீப ஜ்வாலையைப் போல ஏறும் நாமங்களால்). பொளெவ – ஒளிரும். மத்து அலஸதெ – சோர்வு இல்லாமல் (பேஸரதெ – மரியாதையுடன்). துளஸி பத்மாக்ஷ மணிமாலைகளை. தரிஸித – தரித்திருக்கும். பரமவைஷ்ணவரு – சிறந்த விஷ்ணு பக்தர்கள். ஈ இளெய – இந்த பூலோகத்தை (இங்கு இருக்கும் பிரஜைகளை). பாவன மாடுதிஹரு – பவித்ரம் ஆக்குகின்றனர் (தாம் சஞ்சரிக்கும் பூ-பிரதேசங்களையும் பவித்ரம் ஆக்குகின்றனர்).

**யே கண்ட$^{2}$லக்$^{4}$னவெம்ப$^{3}$ பத்$^{4}$மபுராண**
**ஸ்லோகதி$^{3}$ கௌ$^{3}$ரி தே$^{3}$விகெ$^{3}$**
**ஸ்ரீகண்ட$^{2}$ தானே நிர்ணயிஸி பேளித$^{3}$னாகி$^{3}$**
**லோகர்கெ$^{3}$ ஸம்ஷய ஸல்ல ||3**

---

யே கண்டலக்னவெம்ப பத்மபுராண ஷ்லோகதி - இவ்வாறு முன்னர் விவரித்த பத்மபுராண ஸ்லோகத்தில். கௌரிதேவிகெ - (தன் ப்ரிய பத்னியான) கௌரிதேவிக்கு. ஸ்ரீகண்ட - சிவன். தானெ - ஸ்வயம். நிர்ணயிஸி - நிச்சயித்து (தீர்மானமாக). பேளிதனாகி - (விஷ்ணு பக்தரின் லட்சணத்தையும், அவரின் கடமையையும், அவரே லோக பாவனர் என்றும்) சொல்லியிருப்பதால். லோகர்கெ - (சாஸ்திரார்த்தங்களை நிர்ணயித்துக் கொள்வதற்கு முடியாத அஞ்ஞானி) மக்களுக்கு. ஸம்ஷய ஸல்ல - சந்தேகப்படுவது சரியல்ல.

** இந்த முந்தைய நுடியிலிருந்து விஷ்ணு லாஞ்சன தாரணை என்னும் புற தீக்ஷைகளை உதாரணங்களுடன், அவை அவசியம் என்பதை நிரூபித்து, நுடி 1ல், இந்த தீக்ஷை உள்ள பக்தர்களுக்கு யம லோகத்தில் இருக்கும் புகழ்பெற்ற நரகங்களின் சம்பந்தமே இல்லை என்று, யமனும் யமதூதர்களும் இவர்களின் அருகில் வருவதற்குக்கூட பயப்படுவார்கள் என்று சொல்கிறார்.

தீக்ஷிதோ லபதே பூஜாம் யமாதபி பிபேதி ந |
ந்ருபாமாத்ய: கதம் த்ரஸ்யேதன்யஸ்மான்ன்ருப பாஹ்யத: ||
(விஷ்ணு ரஹஸ்ய)

மற்றும்:

இத்தம் ஸ்வபர்த்ருகதிதம் பகவன் மஹித்வம்
ஸம்ஸ்ம்ருத்ய விஸ்மித தியோ யமகிங்கராஸ்தே |
நைவாச்யுதா ஸ்ரயஜனம் ப்ரதிஷங்கமானா
த்ரஷ்டும் ச பிப்யதி தத: ப்ரப்ருதிஸ்ம ராஜன் ||
(பாகவத)

என்றும், விஷ்ணு பக்தர்கள் எப்படி பயம் இல்லாதவர்களாக இருக்கின்றனர் என்பதை வர்ணிக்கிறார்.

தீக்ஷித: - விஷ்ணு தீக்ஷை உள்ளவன். பூஜாம் - (மக்களிடமிருந்து) பூஜ்யதையை. லபதே - அடைகிறான். யமாதபி

– யமனிடம்கூட. ந பிபேதி – பயப்படுவதில்லை. ந்ருபாமாத்ய: – ராஜாதீனனான மந்திரி. ந்ருபபாஹ்யத: – அரசனிடமிருந்து வேறான. அன்யஸ்மாத் – இன்னொருவரால். கதம் – எப்படி. த்ரஸ்யேத் – பயப்படுவான்? (அரசனைத் தவிர மற்ற யாரிடமும் மந்திரி பயப்படும் காரணமே இல்லை என்னும் உலக வழக்கத்தினை உதாரணமாக குறிப்பிடுகிறார்).

இத்தம் – இவ்வாறு. ஸ்வபர்த்ருகதிதம் – தம் ஸ்வாமியான யமராஜனிடமிருந்து உபதேசம் பெற்ற. பகவன்மஹித்வம் – (விஷ்ணு ஆக்ஞையினால் விஷ்ணுதூதர்கள் எப்போதும் விஷ்ணு பக்தர்களை காக்கின்றனர் என்னும்) விஷ்ணு மகிமையை. ஸம்ஸ்மத்ய – நினைத்து (மனதில் வைத்து). யமகிங்கரா: – யமதூதர்கள். (அஜாமிளனைக் கொண்டு வரச் சென்று, விஷ்ணு தூதர்களால் திருப்பி அனுப்பப்பட்டு வந்த அனுபவத்தாலும்கூட). விஸ்மிதிதிய: – ஆச்சரியப்பட்டு. அச்யுதாஸ்ரயஜனம் ப்ரதி – விஷ்ணு பக்தர்களின் விஷயத்தில். ஷங்கமானா: – பயப்பட்டு. நைவ – அவரின் அருகில் செல்வதே இல்லை. ராஜன் – ஹே பரீக்ஷிதனே. தத: ப்ரப்ருதி – அங்கிருந்து முன்னர். த்ரஷ்டுஞ்ச – (விஷ்ணு பக்தர்களை) பார்ப்பதற்கும்கூட. பிப்யதி – பயப்படுகின்றனர்.

த்ரிவித ஜீவர்களை ஸ்ருஷ்டிக்குக் கொண்டு வந்து, அவர்கள் மூலமாக ஸ்வயோக்ய சாதனையை செய்வித்து, துஷ்ட நிக்ரஹ சிஷ்ட பரிபாலனை மூலம், அவரவர்களின் அந்திம கதிகளைக் கொடுக்கும், ஸ்ரீஹரியின் ஜகத் பாவன பிரகாரங்களை, இனி அடுத்து வர்ணிக்கிறார்.

**பி³ரம்மசாரி க்³ருஹஸ்த வானப்ரஸ்தத³**
**த⁴ர்மதி³ விப்ரர நடெ³ஸி**
**நிம்ம மைது¹ரிய ஸ்ரீஆதிமதவனா**
**நம்ம ஹரி நிர்மிஸித³ ||4**

பிரம்மசாரி க்ருஹஸ்த வானப்ரஸ்தத தர்மதி – பிரம்மசர்ய, க்ருஹஸ்த, வானபிரஸ்த என்னும் ஆசிரம தர்மங்களை பின்பற்றுவதில். விப்ரர – பிராமணர்களை. நடெஸி – வைத்து

(அவரில் நின்று தான் செய்வித்து). நிம்ம மைதுரிய – உங்களை பொறாமைப்பட வைக்கும். ஸ்ரீ ஆதிமதவனு – பரம மங்களகரமான மூல சித்தாந்தத்தை. (அனாதியான தத்வ வாதிகளின் மதத்தை). ஆ நம்ம ஹரி – நம் பிரபுவான மூலரூபி நாராயணனே (வேதவியாஸ ரூபத்தினால்). நிர்மிஸித – சஜ்ஜனர்களைக் காப்பதற்காக, இயற்றி உபதேசித்தான்.

** ஸ்ரீ ஆதிமதவனு – என்றதால், அனாதி நித்ய வேதங்களின் மஹா தாத்பர்யமான, ஸ்ரீஹரியின் ஸர்வோத்தமத்வ – ஜகத் ஸத்யத்வ – பஞ்சபேத தாரதம்யாதி சித்தாந்தங்களை நிரூபிக்கும் 'தத்வாத' மதமும், வேதங்களைப் போல, அனாதி நித்யமே என்பதை குறிப்பிடுகிறார். பிரதி பிரம்ம கல்பத்தின் ஸ்ருஷ்டியும், துவங்கிய உடனேயே, அனைவருக்கும் முன்னர் படைக்கப்பட்டவனான பிரம்ம தேவனுக்கு, இந்த மதத்தையே ஸ்ரீஹரி உபதேசித்திருக்கிறான் என்பதால் அது 'ஆதிமத' என்று அழைக்கப்படுகிறது.

** நாராயணாபின்னனான ஸ்ரீகிருஷ்ணன், அர்ஜுனனுக்கு உபதேசித்ததும் இந்த அனாதி சித்தாந்தத்தையே.

ச ஏவாயம் மயா தேடத்ய யோக: ப்ரோக்த: புராதன: |
பக்தோ஽ஸி மே ஸகாசேதி ரஹஸ்யம் ஹ்யேதுத்தமம் || (கீதை)

என்று, ரகசியமான மற்றும் சிறந்த அதே யோகத்தை (ஞான மற்றும் ஞான ஸாதனத்தை), நீ, என் நண்பனும் பக்தனும் ஆகியிருக்கிறாய் என்னும் காரணத்தால், இப்போது உபதேசிக்கிறேன் – என்கிறான். இந்த சித்தாம்தம் துஷ்டரின் துர்வியாக்யானாதி விஷயங்களுக்கு உள்ளாகி, அவ்வப்போது நஷ்ட பிராயமான நிலையை அடைகிரது. அப்போது ஸ்ரீஹரியே அவதரித்து, ஸத் ஸித்தாந்தத்தை நிறுவிக் கொடுக்கிறான்.

** ஜீவேஷ்வரர்களின் ஐக்யத்தையும், ஜகன் மித்யாத்வத்தையும் சொல்லும் தமோயோக்ய ஜீவர்களுக்கு 'தத்வவாத' மதம் என்றும் பிடிப்பதில்லை. இது மட்டுமல்ல. அவர்களை கோபப்படுத்துகிறது.

அவர்களின் த்வேஷத்தை வளர்க்கிறது. துக்கம் அடைகிறார்கள். அந்த மதத்தின் தத்வங்களை எதிர்ப்பதற்கு (அப்ராமாணிக என்று சாதிக்க) அஸமர்த்தராகி, அல்லாடுகிறார்கள். கோப தாபங்களால் எரிகிறார்கள். இந்த பாவங்களை 'மைதுரிய' என்னும் குறிப்பினால் சொல்கிறார் என்று அறிய வேண்டும்.

**பி³ரம்மக்ஷத்ரிய வைஷ்ய ஷூத்³ரர தம்ம**
**கர்மமார்க்க³த³லி நடெ³ஸித³**
**சின்மயரூப எல்லரொளு தானே பொக்கு**
**நிர்மல பத³க்கெரகி³ஸித³ ||5**

பிரம்ம க்ஷத்ரிய வைஷ்ய ஷூத்ரர - பிராமண, க்ஷத்ரிய, வைஷ்ய, ஷூத்ர என்னும் நான்கு வர்ணத்தின் பிரஜைகளை. தம்ம தம்ம கர்மமார்க்கதலி - அவரவர்களின் தக்க கர்மாசரணை வழிகளில். நடெஸித - நடத்துகிறான். ஆ சின்மயரூப - (இவ்வாறு பிரவர்த்தனான) சிதானந்த ஸ்வரூபனான ஸ்ரீஹரி. எல்லரொளு - அனைத்து ஜீவர்களிலும். தானே - ஸ்வயம். பொக்கு - அந்தர்யாமியாக இருந்து. நிர்மலபதகெ - ஸன்மார்க்கத்தில். எரகிஸித - ஈடுபட்டிருக்குமாறு செய்கிறான்.

** அனைத்து ஜீவர்களும் பரமாத்மனின் பிரதிபிம்பர்கள். ஸ்ரீஹரியே அனைவரின் பிம்பன்.

தததீனஸ்தத்ஸத்ருஷோ ஹரேர்ஜீவோ ந ஸம்ஷய: |
ப்ரதிபிம்பஸ்ய ஷப்தார்த்தோ ஹ்யயமேவ ந ஸம்ஷய: ||
(பிரம்மகாண்ட)

ஜீவன் பிரதிபிம்பன் என்றால், பிம்பாதீனன் மற்றும் சிறிய அளவிற்கு பிம்ப-ஸத்ருஷன். இதுவே 'பிரதிபிம்ப' சொல்லின் அர்த்தம் என்று சொல்லப்படுகிறது. பிம்பாதீனன் என்றால், அந்தர்யாமியான ஸ்ரீஹரியின் அதீனனாக, சகல வியாபார க்ரியைகள் உள்ளவன். மற்ற விவரணைகள் இவ்வாறு உள்ளது.

ப்ரதிபிம்பக்ரியாயா: பிம்பக்ரியானுஸ்யூததா |
யதாஷ்னாதி ததாஷ்னாதி யதா வக்தி ததைவ ஸ: ||

---

கிமத்ர பஹுனோsக்தேன நாக்ருதம் க்ரியதே ஜனை: ||
(ஷாண்டில்ய தத்வ)

பிம்பன் உண்டால் ப்ரதிபிம்பன் உண்கிறான். பேசினால் பேசுகிறான். இன்னும் சொல்வது என்ன? பிம்பன் செய்யும் அனைத்தையும் ப்ரதிபிம்பன் செய்வதில்லை. பிரதிபிம்பனின் ஒவ்வொரு செயலும் பிம்பக்ரியானுஸ்யோதவாதுது - அதாவது, பிம்பக்ரியா ப்ரவேஷம் உள்ளது - என்று அர்த்தம்.

**காலகாலதி[3] மளெ கரிஸித[3] இளெயளு**
**காலக்கெ பெ[3]ளெ பெ[3]ளெஸித[3]**
**காலகாலதி[3] களவ நிலிஸித[3] ஸ்ரீகிருஷ்ண**
**காலதி[3] ப[2]லவ மெல்லிஸித[3] ||6**

காலகாலதி - அந்தந்த காலங்களில் (யோக்ய காலங்களில்). மளெ கரிஸித - மழையை பொழிகிறான். இளெயொளு - பூமியில். தக்க காலத்தில். பெளெபெளெஸித - பழங்களை வளர்க்கிறான். காலகாலதி - அந்தந்த காலத்தில் (யுகத்திற்கேற்ப). களவ நிலிஸித - கள்ளதனம் ஆகியவற்றை நிறுத்துகிறான் (இல்லாததாக மாற்றுகிறான்). ஸ்ரீகிருஷ்ண - பரமாத்மன். காலதி - தக்க காலத்தில். பலவ - (கர்மத்திற்கேற்ப) பலன்களை. மெல்லிஸித - (ஜீவர்களுக்கு) உண்விக்கிறான்.

க்ருதயுகத்தில் ஸ்ரீஹரி, பிரஜைகளை எப்படி வைத்து காக்கிறான் என்பதை அடுத்த நுடிகளில் வர்ணிக்கிறார்.

**வித[4]வெயரில்ல ஹரி பாலிஸோ க்ருதயுக[3]தி[3]**
**விது[3]ரரெம்ப[3] நரரில்ல**
**மது[3]வெயில்லத[3]வரில்ல விதி[4]ய மிக்குவரில்ல**
**அத[4]மரெம்ப[3] நரரில்ல ||7**

ஹரி பாலிஸோ - ஸ்ரீஹரி காக்கும். க்ருதயுகதி - க்ருத யுகத்தில். விதவெயரில்ல - (பிரஜைகளில்) விதவையான பெண்கள் இல்லை. விதுரரெம்ப நரரில்ல - மனைவியை இழந்த ஆண்கள்

இல்லை. மதுவெயில்லதவரில்ல - (விதவை / விதுரர் இல்லையென்றால், யாரும் திருமணமே செய்துகொள்வதில்லையா என்றால்), திருமணம் ஆகாதவர்களே இல்லை. (பிரம்மசாரி மற்றும் யதிகளே இல்லை என்று அர்த்தம் அல்ல). விதிய - விஹித கர்மாசரணையை. மிக்குவரில்ல - மீறுபவர் இல்லை (அனைவரும் ஸ்வாபாவிகமாகவே, அரசு ஆணைகள் எதுவும் இல்லாமலேயே, தக்க கர்மங்களை தவறாமல் செய்கின்றனர்). அதமரெம்ப நரரில்ல - (இந்த காரணத்தால்) பதிதர் என்பவர்களே இல்லை.

**ப$^{3}$ஞ்சியரில்ல பதிகஞ்ச$^{3}$த$^{3}$ ஸதியரில்ல**
**ஸஞ்ஜெலி மலுகு$^{3}$வவரில்ல**
**கஞ்சனாபன மரெவவரில்ல அதிதி$^{2}$க$^{3}$ளு**
**பு$^{3}$ஞ்சிஸதெ$^{3}$ உம்பு$^{3}$வரில்ல ||8**

பஞ்செயரில்ல - மக்கள் இல்லாத பெண்கள் இல்லை. பதிகெ - தன் கணவனுக்கு. அஞ்சத - பயப்படாத. ஸதியரில்ல - மனைவியர் இல்லை (அனைவரும் பதிசேவையில் ஈடுபட்டவர்கள் - பயபக்தி உள்ளவர்கள்). ஸஞ்சிலி - மாலையில் (அகாலதல்லி - தகுதியற்ற காலங்களில்). மலகுவவரில்ல - தூங்குபவர்கள் அல்ல (யாரும் விதிமீறல்களை செய்வதில்லை என்று அர்த்தம்). கஞ்சநாபன - பத்மனாபனை (ஸ்ரீஹரியை). மரெவவரில்ல - மறப்பவர்கள் யாரும் இல்லை. (ஹரி விஸ்மரணை என்பது யாருக்கும் இல்லை). அதிதிகளு - காலத்திற்கு வந்த அதிதிகள். புஞ்சிஸதெ - உண்ணாமல். (அவருக்கு உணவு அளிக்காமல்). உம்புவவரில்ல - உண்பவர்கள் இல்லவேயில்லை.

**அந்த$^{4}$ பங்கு$^{3}$க$^{3}$ளில்ல நூரு வருஷதி$^{3}$ம்**
**குந்தி$^{3}$ ப$^{3}$து$^{3}$கோ மனுஜரில்ல**
**நிந்த்$^{3}$யமார்க்$^{3}$க$^{3}$தி$^{3}$ நடெ$^{3}$யுவரில்ல நம்ம ஸ்ரீகோ$^{3}$**
**விந்த$^{3}$ பாலிப காலத$^{3}$ல்லி ||9**

அந்தபங்குகளில்ல - (க்ருத யுகத்தில்). குருடர்கள் இருப்பதில்லை. நூறு வருஷதிம் - நூறு ஆண்டுகளைவிட (ஷத என்னும் சொல், 100, 1000, 10000 என பல எண்ணிக்கைகளைக் குறிப்பிடுகிறது)

4. ஸ்திதி ஸந்தி

-----------------------------------------------------------------------------------------------

யுகத்திற்கு ஏற்ப பூர்ண ஆயுளை விட குந்தி – குறைவாக. பதுகு மனுஜரில்ல – வாழும் மனிதர்கள் இல்லை. நம்ம ஸ்ரீகோவிந்த பாலிப காலதல்லி – ஸ்ரீஹரி காக்கும் இந்த யுகத்தில். நிந்த்ய மார்க்கதி – துர்மார்க்கத்தில். நடெயுவவரில்ல – நடப்பவர்களே இல்லை.

** க்ருத யுகத்தின் பிரஜைகளில் ஸுஜீவர்களுக்கும் துக்க காரணங்களான முந்தைய பாப கர்மங்கள் இருக்கலாம். ஆனால், அந்த காலத்தில் ஸ்ரீஹரி துக்க பலன்களை அவர்களுக்குக் கொடுப்பதில்லை. கர்ம பலன்களை ஜீவர்களின் போகத்திற்கு கொடுப்பவனும், ஸ்வதந்த்ரனான ஸர்வகர்த்தனான ஸ்ரீஹரியே.

** ஸ்ரீராமசந்திரன் பட்டாபிஷிக்தனாகி பிரஜைகளை காக்கையில், த்ரேதா யுகம் ஆனாலும், க்ருதயுகத்தின் நிலைகளே இருந்தன என்று ராம ராஜ்ஜியத்தின் சிறப்பு வர்ணிக்கப்பட்டுள்ளது.

ஜனோடகிலோ விஷ்ணுபரோபபூவ ந தர்மஹானிஸ்ச பபூவ கஸ்யசித் |
குணைஸ்ச ஸர்வைருதிதாஸ்ச ஸர்வே யதா யதா யோக்யதயோச்ச நீசா: ||
ஸ்த்ரியோ ந சா ஸன்விதமா: கதஞ்சித் ந வை புமாம்ஸோ விதுரா பபூவு: |
நானிஷ்ட யோகஸ்ச பபூவ கஸ்யசின்ன சேஷ்டஹானிர்ன ச பூர்வம்ருத்யு: || (பா. தாத். நிர்).

அனைத்து பிரஜைகளும் விஷ்ணு பக்தர்களாக இருந்தனர். யாரும் தர்மத்தை மீறுபவர்களாக இருக்கவில்லை. அனைவரும், தத்தம் உச்ச நீச பாவத்தின் தாரதம்யத்திற்கேற்ப இருந்தனர். விதவைகளோ, விதுரர்களோ இருக்கவில்லை. யாருக்கும் வேண்டியது கிடைக்காமலும், வேண்டாதது கிடைத்தும் இல்லை. பூர்வ ம்ருத்யு ரஹிதரும், பூர்ண ஆயுளைக் கொண்டவர்களுமே ஆகியிருந்தனர்.

அனைவரும் பூர்ண ஆயுளைக் கொண்டவர்கள் என்றால், பெண்களும் ஆண்களும் சமானமான ஆயுள் உள்ளவர்களாக வேண்டும். அப்படியென்றால், விதவையரும், விதுரரும் இல்லை என்பது எப்படி சாத்தியம்? தம்பதிகள் ஒரே நொடியில் – சேர்ந்து இறந்து கொண்டிருந்தனர் என்று அறிய வேண்டியதாகிறது அல்லவா? என்னும் சந்தேகத்தை :

ஸ்த்ரீணாம் பும்ஸாம் ச ஸமானாயுஷ்வ்யே ஸஹஸ்ராயுஷ்வ்யோக: இதி சேத்
பும்ஸாமேவ அயம் நியம: ஸ்த்ரீணாம் கிஞ்சிதூனத்வேஷி ந ஹானி: (பாவபிரகாசிகா)

ஸ்த்ரீபுருஷர்கள் இருவரும் ஸமானமான ஆயுள் கொண்டவர்கள் என்பது எப்படி சொல்வது என்னும் சந்தேகம் வேண்டாம். 1,000 ஆண்டுகள் ஆயுள் என்பது புருஷர்களுக்கு. பெண்களுக்கு அதைவிட சிறிது குறைவு என்று வைத்துக் கொள்வதால் எந்தப் பிரச்னையும் இல்லை. பூர்ண ஆயுள் என்னும் கிருத யுகத்தின் நியமத்திற்கு பிரச்னையில்லை என்று பரிகாரம் சொல்ல வேண்டும்.

க்ருதயுகத்தின் பிரஜைகள் தர்ம மார்க்கத்தில் இருந்தவாறு, அதிகமான சுக போகங்களை அனுபவிக்கும் விதத்தை, அடுத்த சில நுடிகளில் வர்ணிக்கிறார். அடுத்த த்ரேதாதி யுகங்களில் தர்மம் குறைந்தவாறு, அதர்மம் அதிகமானதாகி போகிறது என்பது உண்மை. ஸ்ரீஹரி, யுகத்திற்கேற்ப பிரஜைகளை நடத்தி, அவரவர்களின் கதிகளைக் கொடுக்கிறான் என்பது, ஸத்யசங்கல்பனான அவனின் கிரமம் ஆகும். க்ருதயுகத்தைத் தவிர மற்ற யுகங்களில் ஸ்ரீஹரி, ரக்ஷகன் அல்ல என்று அறியக்கூடாது. எப்போதும் சர்வரக்ஷகன் அவனே. அவனின் ரட்சணையின் சிறப்பு அதிக தெளிவாக தெரியும் க்ருதயுகத்தின் சிறப்பு இங்கு வர்ணிக்கப்பட்டுள்ளது.

**எல்லி நோட$^3$லு வேத$^3$ கோ$^4$ஷக$^3$ளு ம**
**த்தெல்லி நோட$^3$லு தபஸ்விக$^3$ளு**
**எல்லி நோட$^3$லு த$^4$ன தா$^4$ன்யக$^3$ளு ம**

**த்தெல்லி நோட$^{3}$லு கிருஷ்ண பரரு ||10**

[இங்கிருந்து 25ம் நுடி வரை, ஸ்லோகம் மிகத் தெளிவாகவும், சுலபமாகவும் இருப்பதால், அவற்றில் சில சொற்களுக்கு மட்டும் விளக்கங்கள் கொடுக்கப்பட்டுள்ளன].

எல்லி நோடலு - பார்க்கும் இடங்களிலெல்லாம் (அனைத்து இடங்களிலும் என்று அர்த்தம் அல்ல). மத்தெல்லி நோடலு - மறுபடி பார்க்கும் வேறு இடங்களில். தபஸ்விகளு - தியானத்தில் இருக்கிறார்கள். கிருஷ்ணபரரு - பற்பல விதமான ஹரிசேவையில் ஈடுபட்டிருக்கிறார்கள்.

**எல்லி நோட$^{3}$லு தா$^{3}$ன எல்லி நோட$^{3}$லு கா$^{3}$ன**
**எல்லி நோட$^{3}$லு ஹரித்$^{4}$யான**
**எல்லி நோட$^{3}$லு ஸ்னான எல்லி நோட$^{3}$லு ஞான**
**எல்லி நோட$^{3}$லு வ்யாக்$^{2}$யான ||11**

எல்லி நோடலு ஞான - பார்க்கும் பல இடங்களில் சாஸ்திர சிரவண, பிரவசனாதி ஞான காரியங்கள் நடைபெறுகின்றன.

**எல்லி நோட$^{3}$லு ப$^{4}$க்தி எல்லி நோட$^{3}$லு பு$^{4}$க்தி**
**எல்லி நோட$^{3}$லு விரக்தி**
**எல்லி நோட$^{3}$லு யுக்தி எல்லி நோட$^{3}$லு ஷக்தி**
**எல்லி நோட$^{3}$லு விப்ரவ்ருத்தி ||12**

எல்லி நோடலு பக்தி - மக்கள் அனைவரும் ஸ்ரீஹரியில் பக்தி உள்ளவர்கள். புக்தி - அன்ன ஆகாராதிகள். யுக்தி - அதற்கு சம்பந்தமான யுக்தியுடனான விவேசனங்கள். ஷக்தி - பிரஜைகள் அனைவரும் தைஹிக, பௌதிக பலசாலிகள். விப்ரவ்ருத்தி - விசேஷமாக அதிக பலன் உள்ள கர்மங்களில் ஈடுபட்டிருக்கின்றனர் அல்லது பலன்களை எதிர்பார்க்காமல் கர்மங்களை செய்பவர்கள் அல்லது விப்ர - பிராமண யோக்ய க்ருதிகள் உள்ளவர்கள் (பிரம்மஞான சாதக வியாபாரங்கள் உள்ளவர்கள்).

**எல்லி நோட3லு தி3வ்யஸ்தா2னங்க3ளு ம**
**த்தெல்லி நோட3லு ரதோ2த்ஸவவு**
**எல்லி நோட3லு முத்து ரத்னத3 ஸரக3ளு**
**எல்லி நோட3லு தி3வ்யநக3ர ||13**

திவ்ய ஸ்தானங்களு - தேவாலயங்கள். திவ்ய நகர - அந்தந்த யுகத்திற்கேற்ப, செல்வச் செழிப்பான நகரங்கள்.

**எல்லி நோட3லு பரிபரிய நாட்யங்க3ளு ம**
**த்தெல்லி நோட3லு ந்ருத்யவாத்4ய**
**எல்லி நோட3லு சித்ர பூ4ஷணங்க3ள தேஜ**
**செலுவ நாரி நரஸ்தோ2ம ||14**

தேஜ - ஒளி. செலுவ - அழகான.

**க3ந்த4 கற்பூரகுங்குமாதி3 ரஞ்சிபராக3**
**தி3ந்த3 மாடி3த3 ஓக1ளிய**
**சந்த3தி3ந்தொ3ப்3ப3ரொப்3ப3ரல்லல்லெ செல்லித3**
**சந்த்3ரவ3தனெயருத்ஸஹதி3 ||15**

ரஞ்சிப - ஒளிரும். ராகதிந்த - சிவப்பு வண்ணத்தினால். ராகதிந்த - மகிழ்ச்சியுடன் (அன்புடன்). சந்ததி இரெ ஒப்பொப்பரு - மகிழ்ச்சியுடன் க்ரீடிக்கும் ஒவ்வொருவரும் அல்லது ஒருவருக்கொருவர். உத்ஸஹதி - உற்சாகத்துடன்.

**ஒந்து3 க3ர்ப்ப4தி3 கூஸு ஒந்து3 ஷிஷு உடி3யொளகெ3**
**ஒந்து3 பெ3ன்னிலி கட்டிகொண்டு3**
**ஒந்த3னாடி3ஸுதலி இந்து3முகி2யர**
**ஸந்த3ணி ஸந்த3ணி மனெ மனெயல்லி ||16**

ஸந்தணி - குழு. மக்கள ஸுகதிந்தலு ப்ரஜெகளு பூர்ணரு - ஒரு ஸ்த்ரி கர்ப்பிணியானால், இன்னொருத்திக்கு வயிற்றில் குழந்தை - ஆகியன. அல்லது, ஒரு பெண்ணே, விளையாடும் குழந்தைகளை பார்த்துக்கொண்டு, முலைப்பால் கொடுத்தவாறு, முகம் பார்த்து சிரிக்கும் குழந்தையைப் பார்த்து சிரித்து, கர்ப்பத்தில் குழந்தை

உள்ளவளாகவும் இருக்கிறாள். அதாவது, வீடு முழுக்க மக்கள் உள்ளவள் என்று அர்த்தம்.

**ஔளகெ3 மொஸரு கடெ3வ ஸம்ப்4ரம ஹொரகெ3 ஆ**
**கள கரெவ ரவஸ தும்பி3ஹதோ3**
**அளுவ மக்கள தொட்டிலொளகி3ட்டு பாடு3வ**
**லலனெயர க3ம்பீ4ரவாத3 ||17**

ரவஸ – சத்தத்துடன். லலனெயர்கம்பீரவாத – பெண்களின் அன்பு நிறைந்த பேச்சுக்கள்.

**யதிக3ள பூஜெ விப்ரர பூஜெ மனெமனெய**
**அதிதி2 அப்4யாக3தர பூஜெ**
**ஸ்ருதிபுராணவு நித்ய நைமித்த கர்மக3ளு**
**விததவாயிது லோகதொ3ளகெ3 ||18**

இங்கிருந்து அடுத்த 6 நுடிகளில், அனைத்து வீடுகளிலும் நடக்கும் மங்களோத்ஸவங்களின் வர்ணனை இருக்கிறது.

மனெமனெய – ஒவ்வொரு வீட்டிலும். நித்யனைமித்திக கர்மகளு – ஸந்த்யா, துளசிபூஜை முதலான நித்ய கர்மங்கள் மற்றும் நைமித்திக (வ்ரத – சிரார்த்தாதி கால விசேஷங்களில் செய்யப்படும்) கர்மங்கள். விததவாயிது – விளக்கமாக நடந்து வருகிறது.

**கண்டு3 மக்கள மது3வெ முஞ்சிக3ளு அல்லி**
**தண்ட3 தண்ட3த3 கன்னிகெயர**
**உண்டு3ட்டு கொம்பு3வுத3க்கெ உள்ள மனெக3ள**
**கண்டு3 கூடு3வ ஸம்ப்4ரமவன்னி ||19**

அங்கங்கு நடந்துவரும் உபனயன, விவாகாதி சுப கர்மங்களின் சம்பிரமத்தை காண்கிறோம் என்கிறார். தண்டதண்டத – குழுகுழுவாக. உண்டுட்டு கொள்ளுவுதகெ உள்ள – அன்ன, வஸ்திரங்களுக்கு குறையில்லாத. கண்டு கொட்ருவ ஸம்ப்ரம –

ஒருவருக்கொருவர் பார்த்து, அமர்ந்து, மகிழ்ச்சியுடன் பேசி விளையாடும் சம்பிரமம்.

**நவக்$^3$ரஹ ஹோம நாந்தி$^3$ய பூஜெயனெ மாள்ப**
**பு$^4$வன தே$^3$வரிகெ$^3$ த$^3$க்ஷிணெய**
**தவக$^3$திந்த$^3$லி கொட$^3$லு மங்க$^3$ளாரதியனெ**
**த்துவரு முத$^3$தி$^3$ முத்தைதெ$^3$யரு ||20**

புவனதேவரிகெ – பிராமணருக்கு (பூசுரர் என்றால் பிராமணர்). தவகதிந்தலி – சம்பிரமத்தால்.

**ஆயத்தவாத$^3$ ஜோயிஸரு ஓது$^3$வ**
**ப்ரியதி$^3$ மங்க$^3$ளாஷ்டகக$^3$ள**
**த$^4$வல ஷோப$^4$னங்க$^3$ள**
**கா$^3$யன தும்பி$^3$துளுகித$^3$வு ||21**

ஆயத்தவாத – தயாரான. ஆயதாக்ஷியர – விசாலமான கண்களைக் கொண்ட. தவல – பவித்ர. ஷோபனங்கள காயன – மங்களப் பாடல்களைப் பாடுதல்.

**முத்தெயிதெ$^3$யரு ப$^3$ந்து$^3$ முத்து ரத்னக$^3$ளிந்த$^3$**
**அர்த்தியலி பி$^4$க்ஷவிக்குவரு**
**தெத்திரரெல்லரு கூடி$^3$ உத்ஸவதொ$^3$ளு**
**ஸூத்திந்த$^3$ தந்து$^3$ கொடு$^3$வரு ||22**

அர்த்திலி – ப்ரீதியுடன் (அர்த்தி – நம்பிக்கை). பிக்ஷவிக்குவரு – வடுகளுக்கு பிக்ஷையை போடுபவர். தெத்திகரெல்லரு – குடும்பத்தவர் அனைவரும் (பரிசு கொடுப்பவர்கள் அனைவரும்). ஸூத்திந்த – வீட்டிலிருந்து.

**பரிபரி ப$^4$க்ஷ ரஸாயனக$^3$ளு மாடி$^3$**
**பரிபரி கலஸோக$^3$ரக$^3$ளு**
**விரசிஸி விப்ரரூடி உத்ஸஹதொ$^3$ளு**
**ஸரஸதி$^3$ந்து$^3$ம்பொ$^3$ ஸம்ப்$^4$ரமவ ||23**

கலஸோகரகளு - கலந்த சாதங்கள் (கேசரி பாத், சித்ரான்ன ஆகிய). ஊடி - (சந்தன) பூசிக்கொண்டு.

**மங்க3ளதே3வியரஸன ஓது3வவரரிகெ3**
**மங்க3ளவீயலெந்தெ3ந்து3**
**த்துங்க3பா4க்யக3ளு ஸங்க3டிஸுதிரலெந்து3**
**அங்க3னெயரு ஹரஸித3ரு ||24**

மங்களதேவிய அரஸன - லட்சுமிதேவியின் தலைவனின் (நாராயணனின்). ஓதுவவரிகெ - (மகிமைகளை) பிரவசனம் செய்பவர்களுக்கு (இந்த கிரந்தத்தை படிப்பவர்களுக்கு). உத்துங்க - சிறந்ததான. ஸங்கடிஸுதிரலி - கிடைக்கட்டும் (மேலும் மேலும் தொடர்ந்து கிடைக்கட்டும்).

**சக்ரவர்த்திக3ள ஸ்ருஷ்டிஸி காலதி3 பூ4**
**சக்ர பா1லகர மாடி3ஸித3**
**விக்ரமனவரிகெ3 கொட்டு மத்தவரிந்த3**
**ஸத்கர்மக3ள நடெ3ஸித3 ||25**

இனி அடுத்து, ஸ்ரீஹரி, தனது அந்தர்யாமி ரூபங்களாலும், அவதார ரூபங்களாலும் உலகினைக் காக்கும் விஷயத்தை வர்ணிக்கிறார்.

சக்ரவர்த்திகள - சக்ரவர்த்திகளை (அந்த கக்ஷையில் இருக்கும் ஜீவர்களை). ஸ்ருஷ்டிஸி - பிறக்க வைத்து. காலதி - அந்தந்த காலத்தில். பூசக்ரபாலகர - பூமியை காப்பவர்களாக. மாடிஸித - (அவர்களுக்குள் இருந்துகொண்டு) செய்தான் (அவர்கள் மூலமாக காக்கும் வேலையை செய்வித்தான்). விக்ரமவனு - (7 தீவுகளைக் கொண்ட இந்த பூமியைக் காக்கும்) சாமர்த்தியத்தை. அவரிகெ - அந்த சக்ரவர்த்திகளுக்கு. கொட்டு - கொடுத்து. மத்தெ - மற்றும். அவரிந்த - அந்த சக்ரவர்த்திகள் மூலமாக. ஸத்கர்மங்கள - (பற்பல யக்ஞாதி) சத்கர்மங்களையும். நடெஸித - செய்வித்தான் (பிரஜைகளும் சத்கர்மங்களில் இருக்குமாறு செய்வித்தான்).

**மத்ஸ்ய கூர்மனாத3 மத்தெ மஹியனெத்தி**

**கீர்த்திய படெ$^3$த$^3$ கிங்கரன**
**ம்ருத்யுவ பி$^3$டி$^3$ஸித$^3$ மத்தெ ப$^3$லிய கித்து**
**க்ஷத்ரியர உக்கு தக்$^3$கி$^3$ஸித$^3$ ||26**

மத்ஸ்யகூர்மனாத - (ஸ்ரீபத்மனாபன்) மீன், கூர்ம ரூபங்களால் அவதரித்தான் (வேதங்களைத் திருடிய தைத்யனை மத்ஸ்ய ரூபத்தினால் சம்ஹரித்து, சதுர்முகனுக்கு வேதங்களை திரும்பக் கொண்டு வந்து கொடுத்தவனே கூர்மரூபனும் ஆகி, பர்வதத்தை முதுகின் மேல் தாங்கி கடலைக் கடைந்து, அமிர்தத்தை எடுக்க உதவி செய்தவன்). மத்தெ - மறுபடி (அவனே). மஹியனெத்தி - (வராக ரூபத்தினால் ஹிரண்யாக்ஷனை சம்ஹரித்து). பூமியைக் கொண்டு வந்து கொடுத்து. கீர்த்திய - கீர்த்தியை. படெத - அடைந்த. கிங்கரன - பக்தனான பிரகலாதனின். ம்ருத்யுவ - ம்ருத்யுவை (ஹிரண்யகனால் கொல்லப்படுவதை). பிடிஸித - தப்புவித்தான். மத்தெ - மறுபடி (அவனே). பலிய - பலிசக்ரவர்த்தியை. கித்து - வாமனரூபத்தினால் தோற்கடித்து. ஸ்வர்காதிபத்யத்தைக் கொடுத்து. க்ஷத்ரியர - பரசுராம ரூபத்தினால் துஷ்ட க்ஷத்ரியர்களின். உக்க தக்கிஸித - வதங்களை செய்தான்.

**ஸீதேக$^3$ப$^4$யவித்த ஸேதுப$^3$ந்த$^4$ன ராம**
**மாதுள கம்ஸன மடு$^3$ஹி**
**க்$^2$யாத பு$^3$த்$^3$த$^4$னாகி$^3$ காபத$^2$க$^3$ள தோர்த$^3$**
**பீ$^4$தி கலிய பி$^3$ட்டுகொட்ட ||27**

ஸேதுபந்தனராம - சமுத்திரத்திற்கு பாலத்தைக் கட்டிய ஸ்ரீராமன். ஸீதெகெ - ஜானகிக்கு. அபயவித்த - அபயம் அளித்தான் (ராவணாதிகளின் பயங்களை பரிகரித்தான்). மாதுள கம்ஸன - (ஸ்ரீகிருஷ்ண ரூபத்தினால்) தாய் மாமனான கம்சனை. மடுஹி - (பூமியில் தள்ளி) கொன்று. க்யாதபுத்தனாகி - புகழ்பெற்ற புத்த ரூபத்தினால். காபதகள - (தைத்யர்களுக்கு யோக்யமான) துர்மார்க்கங்களை. தோர்த்த - காட்டினான் (த்ரிபுராசுரர்களின் சம்ஹாரத்திற்கு ஏற்பாடு செய்ய, அவர்களின் பத்னியர்களுக்கு 'இன்னொரு கணவனை ஏற்றுக்கொள்வது தர்மம்' என்றும், ஜினாதிகளுக்கு வேதங்கள் அ-பிரமாணங்கள் என்றும் வேதோக்த

---

கர்மாசாரணைகள் வீண் என்றும், உபதேசித்தான்). கலிய பீதி - கல்கி ரூபத்தினால், கலியின் பயத்தினை. பிட்டுகொட்டு - பரிகரித்தான்.

** இரண்டு புத்த அவதாரங்கள் உள்ளன.

யஸ்த்ரைபுராணாம் ப்ரதமோsத்ர
ஜாத: ஷுத்தோதனஎத்யேவ ஜீனேதி ஜோக்த: |
க்ஷேத்ரே கயாக்யேsஸ்ய ஷிஷும் ப்ரஜாதம்
ஸம்ப்ராஸ்ய தூரேs2த்ர பபூவ விஷ்ணு: || (பாக. தா. நிர்).

த்ரிபுராசுரர்களில் முக்கியமானவனான அசுரன் ஷுத்தோதனன் என்னும் பெயரால் பூமியில் பிறந்தான். அவனுக்கு 'ஜின' என்று பெயர். கயா' வில் (கயா நாமக அவனின் மனைவியில்) ஜினனுக்கு ஒரு குழந்தை பிறந்தது. அதனை தூர விலக்கி, விஷ்ணு அங்கு சிசு ரூபத்தினால் படுத்தான் என்று வர்ணிப்பது ஒரு புத்த ரூபம்.

லோகான் க்னதாம் மஹிவிமோஹ மதிப்ரலோபம்
வேஷம் விதாய யதபாஷத ஔபதர்ம்யம் ||
(பாகவத)

த்ரிபுர பெண்களின் பதிவிரதம் பங்கம் ஆகாமல், அந்த அசுரர்களின் சம்ஹாரம் ஆவதில்லை என்பதால், அந்தப் பெண்களுக்கு இன்னொரு கணவனை ஏற்றுக்கொள்ளலாம் என்று கூறினான்' என்று சொல்வது ஒரு விதம். இவ்வாறு இரண்டு புத்த ரூபங்கள்.

ஜினஸுததயாப்யேகவரம் புத்தாவதாரோsஸ்தி ஔபதர்ம்யமிதி த்விதீயஸ்கந்த வசனாத் ஏகவாரம் புத்தாவதாரோsஸ்தீதி ஞேயம்

என்று ஸ்ரீவாதிராஜர் தம் பாவபிரகாசிகையில் புத்தாவதாரத்தைப் பற்றி சொல்லியிருக்கிறார்.

**ஷிவன வைரிய கொந்த³ ஸ்ருதிய நீரொளு தந்த³**
**பு⁴வன பாவன ப⁴வ்யசரித**

**இவன போலுவராரு ஈ ஜக3தொ3ளகி3ன்னு**
**ஜவன ப4டர ஜடி3வனு ||28**

ஷிவன வைரிய – த்ரிபுராசுரனை. கொந்த – கொன்ற. நீரொளு – தண்ணீரில் (இறந்தவர்களை பிழைக்க வைக்கும் சஞ்சீவினி மூலிகை உள்ள சரோவரத்தில்). ஸ்ருதிய தந்த – ஸ்ருதியில் சொல்லப்பட்ட தன் மகிமையை (கோ-ரூபத்தினால் அந்த ரஸங்களைக் குடித்து) வெளிப்படுத்திய. புவன பாவன – ஜகத்தினை பவித்ரமாக்கிய. பவ்யசரித – அற்புத லீலை உள்ளவன் (மஹாமகிமன் ஸ்ரீஹரி). இன்னு ஈ ஜகதொளகெ – இவ்வாறு இருக்கையில் இந்த உலகில். இவன – ஸ்ரீஹரியை. போலுவராரு – போல இன்னொருவர் உண்டா? (சமம் ஆனவர்கள் யாரும் இல்லை. அவனைவிட உத்தமரோ இல்லவேயில்லை). ஜவன படர – யமதூதர்களை. ஜடிவனு – கொல்கிறான் (தன் பக்தர்கள் மேல் கைவைக்கும் யம தூதர்களை நிர்-வீர்யர்களாக ஆக்குகிறான்).

**இந்து ஜக3ங்க3ள ஸந்த1த1 பொரெவ து3**
**ரந்த தை3த்ய க்ருதாந்த**
**சிந்தெய நுக்கொ3த்தி ஸந்தோஷவித்து ஸ்ருதி**
**காந்த ஸந்தர பா4ரவ ஹொத்த ||29**

இந்து – இவ்வாறு (அந்தர்யாமி – அவதார ரூபங்களால்). ஜகங்கள – உலகங்களை (அனந்த பிரம்மாண்டங்களை). சந்தத – அனைத்து காலங்களிலும். பொரெவ – அருள்கிறான். துரந்த தைத்யக்ருதாந்த – அவத்யர் என்னும் சகல தைத்யரின் சம்ஹாரகனான (தைத்யருக்கு யம ஸ்வரூபனான). ஸ்ருதிகாந்த – வேதங்களின் தலைவன் (வேதாபிமானி லட்சுமிதேவியின் பதி). சிந்தெய நுக்கொத்தி – அனைத்து பிரச்னைகளையும் தடுத்து. ஸந்தோஷவித்து – ஸந்தோஷத்தைக் கொடுத்தவாறு. ஸந்தர – சஜ்ஜனர்களை. பாரவ ஹொத்து – காக்கும் பாரத்தை ஏற்றான்.

**ஸகல ஸத்கு3ணபூர்ண ஸஜ்ஜனதா3தார**
**ப4க்தவத்ஸல ப4யநாஷ**
**ஸுக2சின்மயக ஷுத்3த4 தோ3ஷ விதூ3ர**
**நிகி2லேஷ நின்ன நம்பி3தெ3னோ ||30**

---

ஸகல ஸத்குணபூர்ண - அனந்த கல்யாண குணபூர்ணனும். ஸஜ்ஜனதாதார - ஸஜ்ஜனருக்கு ஸர்வாபீஷ்ட பிரதனும். பக்தவத்ஸல - பக்தப்ரேமியும். பயனாஷ - ஸர்வபய பரிஹாரகனும். ஸுகசின்மயக - ஆனந்த ஞானங்களே தேகமாக உள்ளவனும் (சர்வத்ர ப்ராக்ருத தேக ரஹிதனும்). ஷுத்த - (ஆகையாலேயே) பரம பவித்ரனும். தோஷவிதூர - துக்க, அஞ்ஞானாதி தோஷங்கள் இல்லாதவனுமான. (தோஷங்களை தன் அருகில் வரவிடாதவனும்). நிகிலேஷ - ஹே சர்வஸ்வாமின். நின்ன நம்பிதெனோ - (உன்னையே ரக்ஷகன் என்று) அறிந்து சரணடைகிறேன் ஸ்வாமி.

**உம்போ3து3 உடு3வோது3 லகுமிதே3விய தலெ**
**கி3ம்பி3ட்டு மலகு3வ நெலவ**
**இம்பு3 கும்பி3ணியொளு ஈவனாள்வனல்லெம்ப3**
**சம்பகனெல்லிஹனெந்தெம்ப3 ||31**

**உண்ட3மனெகெ3ரட3ன்னு ப3கெ3வ ப4ண்ட3ர கண்டு3**
**பண்டி3த ஜனரு மன்னிஸரு**
**கண்ட3 கண்ட3வர மாத கேளதெ3 ப3ல்லவரு**
**பாண்ட3வ ப்ரியன மன்னிஸிரோ ||32**

உம்போது உடுவோது - அன்ன வஸ்திரங்களை. (அன்னாதி ஆகாரங்களையும், வஸ்த்ர பூஷணாதி சுக போகங்களையும்). தலெகிம்பிட்டு மலகுவ நெலவ - (இவற்றுடன்) தலை கீழே வைத்து படுக்கும் பூமியையும் (இருப்பிடமான பூமியை வராக ரூபத்தினால் தூக்கி நிறுத்தியவன்). கும்பினியொளு - உலகில். இம்பு ஈவன - ஆதரவு கொடுப்பவனை. லகுமிதேவிய - (இந்த அனைத்திற்கும் அபிமானி தேவதையான) லட்சுமிதேவியை. ஆள்வனல்ல - ஆளும் பிரபு அல்ல. எம்ப - என்று அறியும். மத்து எல்லிஹனெந்தெம்ப - அவன் எங்கு இருக்கிறான் என்னும் (அவன் இல்லவேயில்லை. ஆனே நான் என்றெல்லாம் சொல்லும்). டம்பகன - கர்வம் கொண்ட மற்றும், உண்டமனெகெரடன்னு பகெத - உண்ட வீட்டிற்கு துரோகம் நினைக்கும். (முதல் முக்கிய கடமையான நன்றியினை விட்டு, வெறுக்கும் / எதிர்க்கும் பாவத்தைக் கொண்ட). பண்டர கண்டு - வெட்கம் இல்லாத

துஷ்டர்களைப் பாருங்கள். பண்டிதஜனரு - ஞானிகள். மன்னிஸரு - மன்னிக்க மாட்டார்கள் / ஒப்புக் கொள்ள மாட்டார்கள். பல்லவரு - விவேகம் உள்ள ஸுஜனர்கள். கண்டகண்டவர - யார் சொல்கிறார்களோ அவர்களின். மாத கேளதெ - பேச்சினை கவனிக்காமல். பாண்டவ ப்ரியன - பாண்டவ ப்ரியனான ஸ்ரீகிருஷ்ணனை. மன்னிஸிரோ - பூஜியுங்கள் (ஸர்வோத்தமன் என்று அங்கீகரித்து, ஒப்புக் கொண்டு, சரணடையுங்கள்).

* அன்ன வஸ்திரங்களை கொடுப்பவனை, ஆதரவு அளிப்பவனை, லட்சுமிதேவியையே தன் தலைக்கு ஆதரவாக ஆக்கிக் கொண்டு, அவளையே, அவளின் துடையையே படுக்கும் நிலமாகக் கொண்ட. அல்லது (வடபத்ர ரூபத்தினால் இருக்கும் லட்சுமியில் படுத்திருக்கும்) ஸ்ரீஹரியை (லட்சுமிபதியை) ஆள்வனல்லெம்ப - ஆளும் பிரபு அல்ல என்று சொல்லும் - என்றும்கூட இதனை புரிந்து கொள்ளலாம்.

**அத$^{3}$ரிந்த$^{3}$ ஸகலவாதி$^{3}$க$^{3}$ளு நாராயணன**
**பத$^{3}$ பது$^{3}$மவ நம்ப$^{3}$பே$^{3}$கு**
**இது$^{3}$ பக்ஷபாதத$^{3}$ நுடி$^{3}$யல்லவெம்பு$^{3}$து$^{3}$**
**பு$^{3}$த$^{4}$ரு தாவே விசாரிஸிரோ ||33**

அதரிந்த - இவ்வாறு ஸ்ரீஹரியே ஜகத்-பாலகன் ஆகையால், சகல வாதிகளு - அனைத்தையும் அறிவதற்கு முயலும் அனைத்து ஆராய்ச்சியாளர்களும். நாராயணன - ஸ்ரீஹரியின். பதபதுமவ - பாதபத்மத்தை. நம்பபேகு - நம்பிக்கையுடன் நம்ப வேண்டும். இது - நாராயணனின் பாத கமலத்தையே கதி என்று. பக்ஷபாதத - ஸ்வ மதாபிமானத்தின். நுடியல்லவெம்புது - பேச்சுக்கள் அல்ல என்பதை. புதரு தாவெ விசாரிஸிரோ - விவேகிகளான நீங்களே (அந்தரங்கத்தில்) சிந்தித்துப் பாருங்கள்.

ஸ்ரீஹரியின் ராமகிருஷ்ணாதி அவதாரங்கள் துக்க ஞானாதி தோஷங்கள் உள்ளவை என்றும், சிவனே சிறந்தவன் என்றும், ராமாயண பாரதாதிகளிலிருந்து வரக்கூடிய சந்தேகங்களை, சரியான ஆதாரங்களுடன் பரிகரித்துக் கொள்ள வேண்டிய வழியை இந்த அடுத்த நுடிகளில் விளக்குகிறார்.

---

**ஸீதெகெ$^{3}$ சிந்திஸி பீ$^{4}$திய தோரிஸி**
**பூ$^{4}$தனாத$^{2}$ன யாத்ரெ மாடி$^{3}$**
**ப்ரீதியிந்த$^{3}$ முனிக$^{3}$ளிகெ$^{3}$ நமிஸி நமிஸி கிருஷ்ண**
**தை$^{3}$த்யரிகெ$^{3}$ மோஹவித்த ||34**

ஸீதெகெ - (ராமாவதாரத்தில்) ஸீதைக்காக. சிந்திஸி - (அஞ்ஞானியைப் போல துக்கமடைந்து) சிந்தித்தும். பீதிய தோரிஸி - பயப்படுபவனைப் போல நாடகமாடி. பூதநாதன யாத்ரெ மாடி - (கிருஷ்ணாவதாரத்தில்) மகனை வேண்டி, ருக்மிணியுடன் கைலாயத்திற்குச் சென்று, சிவனைக் குறித்து தவம் செய்து. மற்றும், ப்ரீயிதிந்த - பக்தி மரியாதைகளுடன். முனிகளிகெ - பற்பல ரிஷிகளுக்கு. நமிஸி நமிஸி - திரும்பத்திரும்ப வணங்கியவாறு. கிருஷ்ண - ஸ்ரீஹரி. தைத்யரிகெ - தமோயோக்யருக்கு. மோஹவித்த - (தானே குணபூர்ணனும் நிர்தோஷனும், ஸர்வோத்தமனும், கதிபிரதனும் ஆகியிருக்கிறேன் என்னும் ஞானம் வராதவாறு. தான் அஞ்ஞானாதி தோஷங்கள் உள்ளவன் என்னும்) மோகத்தை உருவாக்கினான்.

இவ்வாறு தைத்யர்களை மயக்கினால், பக்தர்களுக்கு, தனது நிஜ மகிமைகளை வெளிப்படுத்தி, அருளிய வழிகளை அடுத்து வர்ணிக்கிறார்.

**பா$^{3}$யொளு ஈரேளு ஜக$^{3}$வ தாயிகெ$^{3}$ தோரி**
**கையல்லி ப$^{3}$லுகி$^{3}$ரியனெத்தி**
**மையல்லி விஷ்வரூபவ தோரிஸி கிருஷ்ணனு**
**ப்ரியரிகெ$^{3}$ ஞானவித்த ||35**

பாயொளு - (ஸ்ரீகிருஷ்ணன்) தன் வாயில். தாயிகெ - யசோதைக்கு. ஈரேளு ஜகவ - 14 உலகங்களையும். தோரி - காட்டி. கையல்லி - கை விரல்களில் மேல். பலு கிரியனெத்தி - பெரிய (கோவர்த்தன) மலையைத் தூக்கி. மையல்லி - தன் தேகத்தில். விஷ்வரூபவ தோரிஸி - (அர்ஜுனனுக்கு) விஷ்வரூபத்தைக் காட்டி. கிருஷ்ணனு - ஸ்ரீஹரி. ப்ரியரிகெ - தன்

பக்தர்களுக்கு. ஞானவித்த – தன் மகிமைகளின் யதார்த்த ஞானத்தையே அருளினான்.

**மொலெயனுண்டா3ளு ஷிஷு பால கொம்பா3த ஸத்**
**குலகெ ஸம்யக்ஞான ப3ந்து1**
**ஜலதொ3ளகெ3 மொலெய பிடி3த3 ஜிக3ளிக3ளந்தெ**
**க2ளரு தாவு கெட்டு போகு3வரு || 36**

பாலகொம்பாத – பால் குடிப்பவனான. ஷிஷு – (ஏழு நாட்களே ஆன) குழந்தையான ஸ்ரீகிருஷ்ணன். மொலெயனு – (பூதனா அரக்கியின்) முலையை. உண்டாளு – உண்ட மனித (முலையிலிருந்து. உண்ட – ஸம்ஹரித்த. ஆளு – மனித – மனித ரூபத்தினால் அவதரித்த ஸ்ரீஹரி). ஸத்குலகெ – (இவ்வித மகிமைகளைக் காட்டி) ஸஜ்ஜன சமூகத்திற்கு. ஸம்யக்ஞான – ஸ்ரீகிருஷ்ணனின் நிஜஸ்வரூப ஞானம். பந்து – வந்தது. ஜலதொளகெ – தண்ணீரில். ஜிகளிகளந்தெ – (பிடித்து ரத்தத்தைக் குடிக்கும்) அட்டைகளைப் போல. மொலெய பிடித – அந்த பூதனியின் முலையைப் பிடித்தான் (உயிரையே எடுத்தான்). களரு – (அந்த மகிமைகளை புரிந்துகொள்ளாத) துர்ஜனர்கள். தாவு – தாமே. கெட்டுபோகுவரு – நஷ்டமாகின்றனர் (துர்கதியையே அடைகின்றனர்).

மித்யாஞானமானது, துர்ஜனர்களை (தமோ யோக்யர்களை) அட்டைகளைப் போல பிடித்து, அவர்களின் அழிவிற்கு காரணமாகிறது. ஆகையால், அட்டைகளைப் போல, ஆத்ம நாசத்திற்கு (தமஸ் பிராப்திக்கு) காரணமாகும் மித்யா ஞானத்தினால் (துர்மதத்தின் சித்தாங்களால்) விவேகிகள் மிகவும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும் என்னும் விஷயத்தை இந்த நுடியிலிருந்து அறிந்து கொள்ள முடியும் – அறிந்து கொள்ள வேண்டும்.

**மிஸ்ர சரித்ரதி3ம் மிஸ்ரஜீவரிகெ3 ஸ**
**ம்மிஸ்ர ஞானவனெ பெ3ரஸுவ**
**விஸ்மயவவரிக3ல்லதெ3 மாதாட3தெ3**
**ஸ்வஸ்வயோக்3யதெகெ3 மனவித்த ||37**

நித்யஸம்ஸாரிகள் என்னும் மத்யம வர்க்கத்தின் ஜீவர்களுக்கு தன் லீலைகளால் மிஸ்ர ஞானத்தையே உருவாக்குகிறான் என்கிறார்.

மிஸ்ரசரித்ரதிம் – (ஷுத்த ஞானம் மற்றும் மோகங்கள் என்னும் இரண்டின் மிஸ்ர ஞானத்தைக் கொடுக்கக்கூடிய) இரு விதமான தன் செயல்களால். (ஸர்வ ஷக்தனெந்து – சர்வக்ஞன் என்றும், அஞ்ஞானி என்றும், என இவ்வாறான இரு வித லீலைகளால்) மிஸ்ரஜீவரிகெ – மத்யம ஜீவர்களுக்கு. மிஸ்ரஞானவனெ – (ஸ்ரீகிருஷ்ணன் சர்வோத்தமனாகவும் இருக்கலாம் – நம்மைப் போல சாமான்ய மனிதனாகவும் இருக்கலாம் என்னும்) சந்தேக பூர்வக ஞானத்தையே. பெரஸுவ – கொடுத்து உருவாக்குகிறான். விஸ்மயவு – (இரு வித செயல்களால் நிஸ்சயத்தை அறியாதவாறு செய்யும்) மறதியானது. அவரிகெ – அந்த மத்யம ஜீவர்களுக்கு மட்டும். அல்லதெ – இல்லாமல் (ஸ்ரீகிருஷ்ணனே அற்புத மகிமன் என்னும் நிஸ்சய ஞானம் உண்டாயிற்றா?). மாதாடதெ – பேசாமல் (லீலெயிந்த – இச்சா மாத்ரத்தினால் அல்லது நிஸ்சய ஞானத்தைக் கொடுக்கக்கூடிய எந்த பேச்சுக்களையும் அர்ஜுனாதிகளுக்கு கொடுத்ததைப் போல எந்த உபதேசத்தையும் செய்யாமல்). ஸ்வஸ்வயோக்யதெகெ – அவரவர்களின் ஸ்வரூப யோக்யதைக்கு தக்கவாறு அறிய வேண்டும் என்று, மனவித்த – சங்கல்பம் செய்தான் (அதைப் போல நாடகமாடினான்).

**ஸ்லோக 6-7-8**

**நித்யஞானானந்த$^{3}$ ப$^{3}$லாதே$^{3}$வா நைவம் து தா$^{3}$னவா: |**
**து$^{3}$க்கோ$^{2}$ப$^{3}$லப்$^{3}$தி$^{3}$மாத்ராஸ்தே மானுஷாஸ்தோப$^{4}$யாத்ம கா: ||**
**தேஷாம் யத$^{3}$ன்யதா$^{2}$ ஜாதம் தது$^{3}$பாதி$^{4}$க்ருதம் மதம் |**
**விக்ஞானேனாத்ம யோக்$^{3}$யேன தச்ச வீர்யமுபஸ்தி$^{2}$தம் ||**
**ஸம்யக்$^{3}$ஞானம் து தே$^{3}$வானாம் மானுஷாணாம் து மிஸ்ரிதம் |**
**விபரீதம் து தை$^{3}$த்யானாம் ஞானம் த்ரேதா$^{4}$ வ்யவஸ்தி$^{2}$தம் ||**

நித்யஞானானந்தபலா: – நித்யமான ஞான, ஆனந்த, பலம் உள்ளவர்கள். தேவா: – தேவதைகள் (தேவதைகளின் ஸ்வரூப தேகங்கள்). தானவா: – தைத்யர்கள் (தமோ யோக்யர்கள்). நைவ –

அந்த குணங்கள் உள்ள ஸ்வரூபத்தவர்கள் அல்லவே அல்ல. தே - அவர்கள். துக்கோபலப்திமாத்ரா: - நித்ய துக்கத்தையே அடையத்தக்க ஸ்வரூபம் உள்ளவர்கள். மானுஷா: து - மனிதர்களோ. உபயாத்மகா: - இந்த இருவித தர்மங்கள் உள்ள (சுக துக்க மிஸ்ரமான) ஸ்வரூபம் உள்ளவர்கள். ||6

தேஷாம் - (இவ்வாறு தேவ, தானவ, மானவ பேதத்தினால் மூன்று விதர்களான) ஜீவர்களுக்கு. யத் - எந்த. அன்யதா ஜாதம் - வேறாக உண்டாகிறதோ (ஸ்வரூபத்தில் இருந்து, அதாவது, தேவதைகளுக்கு துக்காதிகளும், தானவர்களுக்கு சுகாதிகளையும், சம்ஸார நிலையில் கண்டு வருகிறதோ). தத் - அது. உபாதிக்ருதம் - பற்பல காரணங்களால் உண்டானவை (உபாதியிந்தாதுது - ப்ராக்ருதமானது - தேகங்களின் பிராப்திக்கு காரணமான ப்ரக்ருதியே முக்கிய காரணமானது - அஸ்வாபாவிகமானது). மதம் - இவ்வாறு சொல்வது நிஸ்சிதம் (ஞானிகள் ஒப்புக் கொள்வது). ஆத்மயோக்யேன - ஸ்வரூப யோக்யமான. விக்ஞானேன - விசேஷ ஞானத்தினால். தச்ச - அந்த சுக துக்க லட்சணங்கள். வீர்யம் - பிராபல்யம். உபஸ்திதம் - அடைகிறது. ||7தேவானாம் - தேவதைகளுக்கு. ஸம்யக்ஞானம் - யதார்த்த ஞானமும். மானுஷாணாம் - மனிதர்களுக்கு. மிஸ்ரிதம் - சம்ஷய ஞானமும். தைத்யானாம் து - தைத்யர்களுக்கோ. விபரீதம் - மித்யா ஞானமும் (உண்மைக்கு எதிரானது) என்றும். ஞானம் - (ஜீவ) ஞானம்). த்ரேதா - மூன்று விதங்களாக இருக்கின்றன என்று. வைவஸ்திதம் - சித்தமாகிறது (தனித்தனியானவை என்னும் ஏற்பாடு இருக்கிறது). ||8

இந்த பிரமேயங்களின் விவரணங்களே அடுத்து வரும் ஆறாம் பதத்தில் இருக்கிறது.

பத 9 : ராகம்: நாடெ. தாளம்: ரூபக
**ஸுக$^2$து$^3$க்க$^2$ரூபரு மத்$^4$யம ஜீவரு**
**ஸுக$^2$மான்யரு ஸுரோத்தமரு |**
**ஸுக$^2$ஹீன து$^3$க்க$^2$ ஜீவரு பர**
**விக்ருதியத$^3$மரு எந்தெ$^3$ந்து$^3$ ||1**

---

மத்யமஜீவரு - (த்ரிவித ஜீவர்களில் மத்யமர்கள்) மத்யம வர்க்கத்து ஜீவர்கள். சுகதுக்க மிஸ்ரமான ஸ்வரூபம் உள்ளவர்கள். ஸுரோத்தமரு - உத்தம வர்க்கத்தவரான தேவதைகள். ஸுகமான்யரு - துக்கம் இல்லாத சுக ஸ்வரூபம் உள்ளவர்கள் (அல்லது சுகஸ்வரூபரும் மற்றும் பூஜ்யரும்). அதமரு - அதம வர்க்கத்தின் ஜீவர்கள். சுகஹீனரூபரு - சுகம் இல்லாத ஸ்வரூப உள்ளவர்கள். எந்தெந்து - எந்த காலத்திற்கும். பரவிக்ருதிய - தம்மிடமிருந்து பின்னமான அனைத்தையும் தவறாகவே அறியும் (மித்யா மதிகளான). துக்கஜீவரு - துக்க ஸ்வரூபர் (கடைசியில் நித்ய துக்கத்தையே அடைபவர்கள்).

**நித்யஸுக$^{2}$வெ கைவல்ய மாத்ராத$^{3}$மரிகெ$^{3}$**
**நித்ய அந்த$^{4}$தமவு**
**ஈ நியாயதி$^{3}$ந்த$^{3}$ ஸ்வரூப ஸுக$^{2}$து$^{3}$க்க$^{2}$வு**
**மானுஷரிகெ$^{3}$ நித்ய பத்$^{3}$த$^{4}$ ||2**

கைவல்யமாத்ர - மோட்சம் மட்டும். நித்யசுகவே - நித்ய சுகானுபவ ரூபமானதே ஆகும். அதமரிகெ - அதம ஜீவர்களுக்கு. நித்ய அந்ததமவு - அந்தம் தமஸ் என்னும் நித்ய நரகம். ஈ நியாயதிந்த (ஸ்வரூபத்தில் இருந்த சுகதுக்கங்களே ஜீவர்களுக்கு கடைசியில் வருகிறது என்னும்) இந்த விதியினால். மனுஷரிகெ - மனித ஜீவர்களுக்கு. ஸ்வரூப ஸுகதுக்கவு - ஸ்வரூபத்திலேயே இருக்கும் சுகதுக்கங்கள் இரண்டின் நித்யானுபவத்தை அடைகின்றனர். நித்யபத்த - (இந்த காரணத்தால்) நித்யபத்தர் எனப்படுகின்றனர்.

1 மற்றும் 2ம் நுடிகளில் த்ரிவித ஜீவர்களின் ஸ்வரூப லட்சணங்களையும், அவர்களுக்குக் கிடைக்கும் அந்த்ய கதிகளையும் தொகுத்து நிரூபித்திருக்கிறார். ஜீவ ஸ்வரூப த்ரைவித்யையை நிரவகாஷ ஷப்தங்களால் விளக்கும் ஸ்ருதியும் இருக்கிறது. அது என்னவென்றால்:

தைவீமேவ ஸம்பத்திம் தேவா அபிகச்சந்தி ஆஸுரீமேவ சாஸுரா:

நைதயோரபிபவ: கதாசித் ஸ்வபாவ ஏவ ஹ்யவதிஷ்டதே ||

மற்றும் இந்த ஸ்ருத்யர்த்தம் சொல்லும் ஸ்காந்த புராண வாக்கியங்கள் இவ்வாறு உள்ளன.

அஸுரா அஸுரேணைவ ஸ்வபாவேன ச கர்மணா |
ஞானேன விபரீதேன தமோ யாந்தி வினிஸ்சயாத் ||
தேவா தேவஸ்வபாவேன கர்மணா சாப்யஸம்ஷயம் |
ஸம்யக் ஞானேன பரமாம் கதிம் கச்சந்தி வைஷ்ணவீம் ||
நானயோரன்யதா பாவ: கதாசித் க்வாபி வித்யதே |
மானுஷா மிஸ்ரமதயோ விமிஸ்ரகதயோऽபி ச ||

இந்த ஸ்ருதி ஸ்ம்ருதிகள், பிரம்ம சூத்திரத்தின் உபயலிங்காதிகரணத்தில் – 'ஓம் அனபிபவம் சதர்ஷயதி ஓம்' என்னும் ஸூத்ரத்தின் பாஷ்ய பாகத்தில் உதாரணம் கொடுக்கப்பட்டுள்ளன.

தேவா: – தேவதைகள். தைவீமேவ ஸம்பத்திம் – தேவ ஸ்வபாவத்தின் நித்ய கதியையே. அபிகச்சந்தி – அடைகின்றனர். அஸுரா: – தைத்யர்கள். அஸுரீமேவ – அசுர ஸ்வபாவத்தின் கதியையே (வேறு இல்லை). கதாசித் – என்றும். ஏதயோ: – இந்த இரண்டின் ஸ்வபாவங்களுக்கு. அபிபவ: – குறைவு இல்லை. (வேறுபாடு என்பதில்லை).
ஹி – ஏனெனில், ஸ்வபாவ ஏவ – (அவரவர்களின்) ஸ்வபாவமே. அவதிஷ்டதே – கடைசி வரை நிற்கிறது (நிரந்தரமாக இருக்கிறது) (ஸ்ருதி).அஸுரா: – தைத்யர்கள். அஸுரேணைவ ஸ்வபாவேன – அசுர ஸ்வபாவத்தினாலேயே. கர்மணா ச – அந்த வித கர்மத்தினாலும். விபரீதேன ஞானேன – மித்யா ஞானத்தினாலும். வினிஸ்சயாத் – நிஸ்சயமாக (தவறாமல்). தமோ யாந்தி – தமஸ்ஸினையே அடைகின்றனர். தேவா: – தேவதைகள். தேவஸ்வபாவேன கர்மணா சாபி – தேவ ஸ்வபாவத்தினாலும் அதற்கேற்றதான கர்மத்தினால்கூட. அஸம்ஷயம் – நிஸ்சயமாக. ஸம்யக்ஞானேன – (அடைந்த) யதார்த்த ஞானத்தினால். பரமாம் – சிறந்ததான. வைஷ்ணவீம் கதிம் – வைகுண்டாதி விஷ்ணு லோகங்களை. கச்சந்தி – அடைகின்றனர்.

## 4. ஸ்திதி ஸந்தி

---

**லிங்க3தே3ஹவெம்ப3 ப்ராக்ருத தே3ஹவு**
**ஸங்க3தி ஸம்ஸாரத3ல்லி**
**கங்கொ3ளிஸவு க3ட3 ஈ லிங்க3தே3ஹவு**
**ப4ங்க3வப்பம் தோருவவு ||3**

சம்சாரத்தில் - (ஜீவன்) சம்சார நிலையில் இருக்கும்போது. லிங்கதேஹவெம்ப - லிங்க தேகம் என்று அழைக்கப்படும். ப்ராக்ருத தேஹவு - சூக்ஷ்ம ப்ரக்ருத்யம்ஷங்களால் நிர்மிதமான தேகம். ஸங்கதி - (ஜீவ ஸ்வரூபத்தை மூடி) அதனுடனேயே இருக்கிறது. கங்கொளிஸுவு கட - (இந்த ஜீவனை மூடும் லிங்க தேகங்கள் ஸ்வரூபத்தினால் பின்ன என்று தெரியாதவாறு அத்யந்த அருகில் இருந்துகொண்டு) தனியாக தெரிவதில்லை, என்ன வியப்பு!! ஈ லிங்கதேஹவு - இவ்வாறான லிங்கதேகம், பங்கவப்பம் - பங்கம் அடைந்தபோது (ஸ்வரூபத்தினால் வேறாக பிரிந்தபோது). தோருவவு - தெரிகிறது.

** அனாதியான லிங்கதேகம் ஸ்வரூப தேகத்திற்கு மூடிய மூடி போல இருக்கிறது. ஸ்வரூபத்தின் ஆக்ருதியைக் குறிப்பதான, அதற்கு ஏற்றதான ஆகார (தோற்றம்) உள்ளதாகையால், லிங்க ஷப்தத்தினால் அழைக்கப்படுகிறது. லிங்க ஷப்தார்த்தம், லட்சண, நிர்தாரக, குறிப்பு ஆக இருக்கிறது. விரஜா ஸ்னானத்தினால் லிங்கதேகம் களைந்தபோது, அந்த நதியின் தண்ணீரில் நீந்திச் செல்வதை காணலாம் என்றும் சொல்லப்படுகிறது. பாம்பின் தேகத்தை மூடியவாறு, அதனை சுற்றிக் கொண்டிருக்கும் 'உறை', தனியாக நமக்குத் தெரியாவிட்டாலும், தேகத்திலிருந்து விடுவிக்கப்பட்ட உறையை நாம் காண்கிறோம். லிங்க தேகத்தையும் இவ்வாறாக அறியலாம்.

**ஹிங்கி3த3 ஸுக2து3க்க2 எல்லரிகு3 ஸரி**
**பா4க்3யவிதெ3ந்து1டோ ப3ரிதெ3**
**மெலுகொ3ப்ப ஸுக2து3க்க2வெரடு3 கொடி3ஹுதே3**
**ஸம்ஸாரவெந்து3 ஸகல பு3த4ரிகு3 ஸம்மதவு ||4**

சுகதுக்கவெரடு கூடிஹுதே - சுகதுக்கங்கள் இரண்டும் சேர்ந்திருப்பதே (ஒன்றின் மேல் ஒன்று என்று இரு அனுபவமும் ஆவதே - 'ஸுகஸ்யானந்தரம் துக்கம் துக்கஸ்யானந்தரம் ஸுகம்' என்பதைப் போல). ஸம்ஸாரவெந்து- சம்சாரம் என்பது. ஸகல புதரிகு - அனைத்து ஞானிகளுக்கும். ஸம்மதவு - ஒப்புக் கொண்ட விஷயம் (சமானமான அபிப்பிராயமே). ஹிங்கித - நஷ்டமான. சுகதுக்கவு - சம்சாரிக சுகதுக்கங்கள் உள்ளவர்கள் என்பது. எல்லரிகு சரி - அனைத்து ஜீவர்களுக்கும் சமானமே (லிங்க தேக பங்கத்திற்குப் பிறகு ஸ்வஸ்வரூப சித்தியை அடைவதால், சம்ஸார நிலையில் அனுபவித்திருந்த சுக துக்கங்கள் அடுத்து இனி இல்லை என்பது அனைத்து ஜீவர்களுக்கும் சமமே). ஒப்ப - அதில் ஒரு வர்க்கத்தின் ஜீவ சமூகம் (முக்தி யோக்ய ஜீவர்கள்). பரிதெ - வெறும். மெலுகெ - சுகத்தையே பிறகும் அனுபவித்திருக்க. பாக்யவிதெந்துடோ - இந்த பாக்கியம் எவ்வளவு வியப்பானது?. உத்தம ஜீவர்கள் நித்யானந்தத்தை அனுபவிக்கின்றனர் என்பது அவரின் பெரிய பாக்கியமே ஆகும்.

**ப்ரக்ருதி போத$^3$ மேலெ சித்ரூப ஸுக$^2$து$^3$க்க$^2$**
**விக்ருதியத$^3$கெ பா$^4$வவில்ல ||5**

ப்ரக்ருதி போதமேலெ - ப்ரக்ருதி சம்பந்தமே போனபிறகு (லிங்கதேகம் பங்கமான பிறகு). சித்ரூப - சேதன ஸ்வரூபமான. சுகதுக்க - சுக அல்லது துக்க அல்லது அவற்றின் கலவையான அனுபவம் (உண்டாகிறது). அதற்கு விக்ருதிய பாவவில்ல - (இந்த அனுபவம் நித்யமானது - சேதன ஸ்வரூபம் நித்யமானதாகையால்) அதற்கு விகாரம் உண்டாகிறது என்பது இல்லை.

**அத$^3$ரிந்த$^3$ தனுப்$^4$ருத்ஸ்வபா$^4$வ ஸம்ப்ராப்தியெம்பு$^3$**
**தி$^3$தெ$^3$ மிக்குதெ$^3$ல்லுபாதி$^4$க**
**பு$^3$த$^3$ரெல்ல நோடி$^3$ ஈ ப$^2$லகெ துதி$^3$யொளு த்ரி**
**வித$^4$ரிகு$^3$ லிங்க$^3$ப$^4$ங்க$^3$ பே$^3$கு ||6**

அதரிந்த - ஜீவர்கள் விகார இல்லாத நித்ய ஸ்வரூபம் உள்ளவர்கள் ஆகையால். தனுப்ருத்ஸ்வபாவ ஸம்ப்ராப்தி -

(ப்ராக்ருத தேக சம்பந்தத்தை இழந்து) தம் ஸ்வபாவ ஸ்திதியை நன்றாக அடைவது. எம்புதிதெ – என்பது உண்டு (ஸ்ருஷ்ட்யாதி ரூப ஸ்ரீஹரியின் க்ரீடை இதற்காகவே – ஜீவர்களுக்கு ஸ்வஸ்வரூபங்களை கொடுப்பதற்காகவே). மிக்குதெல்ல – (ஸ்வபாவத்தை தவிர) மற்ற அனைத்தும் (ஸம்ஸாரிக சுகதுக்காதி அனைத்தும்). உபாதிக – (லிங்கதேகாதி) காரணத்தால் ஆனது. புதரெல்ல நோடி – விவேகிகள் அனைவரும் யோசித்து அறிந்து கொள்ளுங்கள். இந்த பலனுக்கு, துதியொளு – கடைசியில். த்ரிவிதரிகு – மூன்று வித ஜீவர்களுக்கும். லிங்கபங்க பேகு – லிங்க தேகத்தின் நாசம் என்பது கண்டிப்பாக வேண்டும் (அதி அவசியம் இல்லையா?).

3ம் ஸ்ருஷ்டி ஸந்தியின், 3ம் ஸ்லோகத்தின் அர்த்தத்தை இங்கு பார்க்கலாம். அந்த ஸ்லோகத்தில் இருக்கும் ‘தனுப்ருத்ஸ்வபாவ ஸம்ப்ராப்தயே’ என்பது, மிஸ்ர ஸ்வபாவத்தின் ஜீவர்களுக்குக்கூட லிங்கபங்கத்தினால் ஸ்வரூப ஸித்தி கிடைக்கிறது என்பது தெளிவாக தெரிகிறது என்கிறார்.

**அல்லதி$^{3}$த்த$^{3}$ரெ த்ரிவித$^{3}$ ஜீவ ஸ்வபா$^{4}$வக்கெ**
**கலஹாகித$^{3}$ கோவித$^{3}$ரு**
**அல்லியோ இல்லியோ யில்லத$^{3}$ காரண**
**ப$^{3}$ல்லவரித$^{3}$ ஸ்வபா$^{4}$வவெனரு ||7**

கோவிதரு கலஹாகித – பண்டிதர்கள் பிரமாணங்களின் சங்கமத்தால். த்ரிவித ஜீவஸ்வபாவக்கெ – நிர்ணயித்த. த்ரிவித ஜீவர்களின் ஸ்வபாவங்களுக்கு. அல்லதித்தரெ – (லிங்கபங்கத்தினால் ஸ்வரூப பிராப்தி என்பது) இல்லையென்றால். பல்லவரு – விவேகிகள். இத – (நித்யசம்ஸாரிகள் என்னும் மத்ய மார்க்கத்தவர்களின்) ஸ்வரூபத்தை, அல்லியோ இல்லியோ இல்லத காரண – எங்கேயும் இல்லாத காரணத்தால். (இல்லியோ – சம்சார அவஸ்தையிலோ. அல்லியோ – பிறகோ. முக்தியோக்யர் தத்தம் ஸ்வரூபத்தின் ஆவிர்பாகத்தை அடையும்போதுகூட) ஸ்வரூபத்தின் ஆவிர்பாவமே இல்லாமல் நித்யமும் சம்சாரத்திலேயே இருக்கிறார்கள் என்றால், ஸ்வபாவவு எனரு –

(ஸ்வரூப பிராப்தியில்லை என்பதை) அந்த ஜீவர்களின் ஸ்வபாவம் என்று சொல்வதில்லை. அல்லது, த்ரிவித ஜீவஸ்வபாவங்களுக்கும் ஸ்வரூப ப்ராப்தி என்பது இல்லையென்றால், கோவிதர் - ஞானிகள். கலஹாகெ - இந்த விஷயத்தில் (நித்ய ஸம்ஸாரிகளுக்கு லிங்க பங்கத்தினால் ஸ்வரூப ப்ராப்தி இல்லை என்னும் விஷயத்தில்). விவாதம் செய்வதற்கு. இத - இதனை (மத்யம வர்க்கத்தின் ஜீவர்கள் நித்யமும் சம்சாரத்திலேயே இருக்கிறார்கள் என்பதை). அல்லியோ இல்லியோ இல்லத காரண இத - எங்கும் இல்லாத இதனை (என்றும் அபிவியக்தம் ஆகாததை). பல்லவரு - விவேகிகள். ஸ்வபாவவெனரு - ஸ்வபாவ என்று அழைப்பதில்லை. (ஆகையால், அந்த வர்க்கத்தின் ஜீவர்களுக்கும் லிங்க பங்கத்தினால் ஸ்வபாவ ப்ராப்தியை ஒப்புக் கொண்டே ஆகவேண்டும்).

**ப$^{3}$ல்லித$^{3}$ ஹரிகெ$^{3}$ வ்யர்த்த$^{2}$ஸ்துதி ஸல்லரு**
**ச$^{2}$லவ்யாதகெ மனுஜனிகெ$^{3}$**
**எல்லி போத$^{3}$ரு ப$^{3}$ரிதெ$^{3}$ அவதா$^{4}$னதி$^{3}$ கால**
**த$^{3}$ல்லி மாடி$^{3}$த$^{3}$ ஸாத$^{4}$னக$^{3}$ளு ||8**

பல்லித ஹரிகெ - ஸர்வஷக்தனான ஸ்ரீஹரிக்கு. வ்யர்த்தஸ்துதி - அர்த்தவில்லத ஸ்தோத்திரம். ஸல்லது - பொருந்துவதில்லை (ஜீவர்களுக்கு அவரவர்களின் ஸ்வபாவங்களை கொடுப்பதற்காக ஸ்ருஷ்ட்யாதிகளை நடத்தும் மகிமை உள்ளவன் என்னும் ஸ்துதி வீண் ஆகிறது). மனுஜரிகெ - அல்பக்ஞனான மானவனுக்கு. சலவ்யாதகெ - (தன் வாதமே சரி என்னும்) அடம் எதற்கு? காலதல்லி - யோக்ய காலத்தில். அவதானதி - ஏக சித்தனாகி. மாடித - நடத்தும். ஸாதனகளு - முயற்சிகள் (பல பிராப்திக்காக மேற்கொள்ளும் பற்பல உபாயங்கள்). எல்லி போதரு - எங்கு சென்றாலும் - உலகத்தில் எங்கு சென்று பார்த்தாலும். பரிதெ - வீண் ஆகிறதா? (மத்யம ஜீவர்களின் சாதனைகள். அவர்களின் ஸ்வபாவ பிராப்திக்கு காரணம் இல்லை என்றால், வீணாக வேண்டியிருக்கிறது என்னும் அன்ய யுக்தியினால்கூட நித்ய சம்சாரிகளுக்கு லிங்கபங்கம் உண்டு என்று சொல்லி நிரூபிக்கிறார்).

---

**மூரு வித3த3 ஸாத4னதி3ந்த3 மூவரிகு3**
**பே3ரெ பே3ரெ ப2ல பே3கு**
**ஓரந்தெ ஷாஸ்த்ரத3 க்ருதஹானிகளு ஈக3**
**பா3ரதி3ஹது3 இந்தல்லத3டெ3 ||9**

இதே விஷயத்தில் மற்றொரு யுக்தியையும் விளக்குகிறார். மூவரிகு – த்ரிவித ஜீவர்களுக்கும். மூரு விதத ஸாதனதிந்த – மூன்று விதமான சாதனைகளால். பேரெபேரெ – வெவ்வேறு. பலபேகு – பலன் கிடைக்க வேண்டும். இந்தல்லதடெ – இப்படி இல்லையெனில் (சாஸ்திரங்களில் சொல்லப்படும் உத்தம அதம மத்யமரின் வெவ்வேறு சாதனைகளுக்கு வெவ்வேறு பலன்கள் இல்லையெனில்). ஓரந்தெ – விதிப்படி (தவறாமல்). சாஸ்திரத – சாஸ்திர விதிகளின். அக்ருத ஹானிகளு – த்யாகத்தினால் நஷ்டங்கள். ஈக – எதிர்மறையானதில். பாரதிஹது – உண்டாகாமல் இருக்க வேண்டும். (விதிகளை மீறினால், நஷ்டங்கள் கண்டிப்பாக இருக்கிறது).

**ப4க்தி த்4வேஷக3ளிகெ3 ப2லவுண்டெம்ப3 வேத3**
**யுக்தி மத்4யம ஜீவரல்லி**
**வ்யர்த்த2வாத3ரெ ஸ்ருதி வ்யர்த்த2 தப்பிஹோது3**
**நித்ய ஸ்ருதி வ்யர்த்த2கொட3தி3ரு ||10**

பக்தித்வேஷகளிகெ – (ஸ்ரீஹரியில் ஜீவர்கள் செய்யும்) பக்தி மற்றும் த்வேஷங்களுக்கு. பலவுண்டெம்ப – (நல்ல, கெட்ட) பலன்கள் இருக்கின்றன என்று சொல்லும். வேதயுக்தி – வேதத்தில் சொல்லப்படும் யுக்தி. மத்யம ஜீவர்களின் விஷயத்தில். வ்யர்த்தவாதரெ – பொருந்துவதில்லை என்றால். ஸ்ருதி – வேதம். வ்யர்த்த தப்பிஹோது – அர்த்தமில்லாத யுக்தியைக் காட்டி, தவறு செய்திருப்பதை சொல்ல வேண்டியிருக்கிறது. நித்யஸ்ருதி – நித்ய ஸ்ருதிகளை (எப்போதும் பரம பிரமாணங்களான வேதங்களை). வ்யர்த்தகொடதிரு – வீண் ஆக்க வேண்டாம். (இருவித சாதனைகளுக்கும் இரு வித சுகதுக்க மிஸ்ர பலன் இல்லை என்று சொல்லி, கெடபேட – தவறாக தெரிந்து நஷ்டமாக வேண்டாம்).

**அத$^3$ரிந்த$^3$ த்ரிவித$^3$ ஜீவரிகு$^3$ லிங்க$^3$தே$^3$ஹ**
**துதி$^3$யொளு ஹோஹுதெ$^3$ம்பு$^3$வுது$^3$**
**பு$^3$த$^3$ருக$^3$ளிகு$^3$ ஸம்மத யித$^3$னரியத$^3$ மூட$^3$**
**ஒத$^3$ரித$^3$ரேனு ப$^2$லவாஹோது$^3$ ||11**

அதரிந்த – இங்கு முன்னர் கூறிய யுக்தி சஹித பிரமாணங்களால் சரியாக விளங்குவதால். த்ரிவித ஜீவரிகு – உத்தம, மத்யம, அதம என்னும் மூன்று வித ஜீவர்களுக்கும். துதியொளு – கடைசியில் (அவரவர்களின் சாதன காலம் முடிந்தபின்). லிங்கதேஹவு – (அனாதியான) லிங்கதேகம் என்னும் போர்வை. ஹோஹதெம்புவுது – விட்டுப் போகிறது என்பது. ஆ புதருகளிகு – அனைத்து ஞானிகளுக்கும். ஸமத – சம்மதமே ஆகிறது (கருத்து வேறுபாடு இல்லை). இதனு – இவ்வாறு ஞானி ஸம்மதமான விஷய்ம் என்பதை. அரியத – அறியாத. மூட – அஞ்ஞானி. ஒதரிதரெ – சத்தமாக கூப்பிட்டால் (மத்யம ஜீவருக்கு லிங்கபங்கம் இல்லை என்று கூறினால்). ஏனு பல வாஹோது – என்ன பிரயோஜனம்? (எதுவும் இல்லை. வீணே ஆகும்).

** பகவந்தனிடம் ஜீவர்கள் செய்யும் பக்தி த்வேஷங்களுக்கு பலனை சொல்லும் வேதம் – பக்தியிருந்தால் ஹரி பிரசாதம். இல்லையென்றால் இல்லை' என்கிறது.

தத்ராம்ருதம் ஸுரகணா பலமஞ்சஸாபு:
யத்பாதகஞ்சரஜஸா ஸ்ரயணான்ன தைத்யா: || (பாகவத)

என்னும் ஸ்ருதி வாக்கியங்களில், இந்த யுக்தி தெளிவாக விளக்கப்பட்டிருப்பதை பார்க்கிறோம். இங்கு, தேவ அசுரர்கள், தேஷ, கால, பலன், சாதனங்கள் ஆகியவற்றால் சமமாக இருந்தாலும், தேவதைகள் ஸ்ரீஹரி பாதங்களை பக்தியுடன் வணங்கியதால், அமிர்தத்தை அடைந்தனர். தைத்யர்களுக்கு கிடைக்கவில்லை என்னும் யுக்தி தெளிவாக புரிகிறது. அனைத்து சாதனைகளும் இருந்து, பக்தி இல்லையென்றால், பலன் இல்லை.

இவ்வாறே, ஹரித்வேஷத்தினால் நித்ய நரகத்தின் பிராப்தியும் ஆகிறது. பக்தி த்வேஷங்கள் என்னும் இரு வித பாவனைகளும்

நிஷ்பலன் என்று அறிவது யுக்திக்கு எதிரானதே ஆகும். பக்தி த்வேஷங்களுக்கு, சம்சாரத்தில் மட்டும், தற்காலிக சுகதுக்கங்களே பலன்கள் அல்ல. பக்தியுடன் நித்யானந்த ஸ்திதி ரூபமான அமிர்தமும் (மோட்சமும்), த்வேஷத்தினால் நித்யதுக்க ஸ்திதி ரூபமான தமஸ்ஸும் பலன்கள் என்பது வேதாதி சாஸ்திரங்களில் சொல்லப்பட்டுள்ளது. இப்படி இருக்கையில், பக்தி த்வேஷங்கள் இரண்டும் உள்ளவர்களுக்கு நித்ய சுகதுக்க என்னும் கலவையான பலன் இருக்கவேண்டும் அல்லவா? மத்யம ஜீவர்களின் ஞானம் சம்ஷயாத்மகமானது. யதார்த்த – மித்யா ஞானங்கள் என்னும் இரு வித ஞானத்தில் ஏதாவது ஒன்றில் திடமாக இல்லாதது. யதார்த்த நிஸ்சயமே பக்திமித்யா ஞானமே த்வேஷம் (ஞானஸ்ய பக்திபாகத்வாத் பக்திர் ஞானமிதீர்யதே).

ஸ்ருஷ்டி ஸந்தியின் 3ம் ஸ்லோக பாகத்தை ஒரு முறை படிக்கவும். அங்கு உதாரணம் கொடுத்துள்ள 'ஜோஷ்கூயதே விஷ இந்த்ரோ மனுஷ்யான்' ஆகியவற்றுடன் 'த்ரிதிவனிரய பூகோசரான் நித்ய பத்தான்' என்றால், ஸ்வர்க்க நரக பூமிகளில் சுற்றும் நித்ய பத்தர்களை – என்று வாயுஸ்துதியில் சொல்லியிருப்பதை, 'நித்யாவர்தாஸ்து வாத்யமா: – ஸ்துதி யோக்யா: ஸதைவ ஹி – தினமும் சுற்றிக் கொண்டிருப்பவர்கள் மத்யமர்கள் – எப்போதும் சம்சார யோக்யர்' – ஆகிய மத்யம வர்க்கத்தின் ஜீவர்களின் ஸ்வரூபத்தை சொல்லும் வாக்கியங்களையும், ஆதாரமாக வைத்துக் கொண்டு, மத்யம வர்க்கத்தவர்களுக்கு லிங்கபங்கத்தினால் ஸ்வரூப ப்ராப்தி இல்லை என்று சொல்வர் சொல்கின்றனர். ஆனால், மேலும் சிலர் (இந்த கிரந்தகர்த்தரான ஸ்ரீவாதிராஜ ஸ்வாமிகளும்கூட), பற்பல ப்ரமாண வாக்கியங்களையும், யுக்திகளையும் ஆராய்ந்து, அவர்களுக்கும் ஸ்வரூப பிராப்தி உண்டு என்று சொல்லியிருக்கிறார்.

** ஸ்ருஷ்டி சந்தியின் 3ம் ஸ்லோகத்தில் (பா. தா. வி) 'தனுப்ருத்ஸ்வபாவ ஸம்பூதயே' என்று சொல்லி, சம்சாரி ஜீவர்களின் 'ஸுகதுக்க மத்ய ஸம்ப்ராப்தயே' சுக, துக்க மற்றும் துக்க மிஸ்ர சுகரூபங்களான த்ரிவித ஜீவர்களின் ஸ்வபாவங்களை அடைவதற்காகவே ஸ்ரீஹரியின், ஸ்ருஷ்டிவ்யாபார என்று தெளிவு

படுத்தப்பட்டிருக்கிறது. 'ஓம் பும்ஸ்வாதிவத்வஸ்ய ஸதோsபிவ்யக்தி யோகாத் ஓம்' என்று (பிரம்மசூத்ரத்தில்), ஸ்வபாவ குணங்களின் வெளிப்பாடு, ஜீவர்களுக்கு உண்டு என்று சொல்லப்பட்டிருக்கிறது. பும்ஸ்வாதிவத் து – புருஷத்வாதிகளைப் போலவே, ஸத: – முதலிலிருந்தே இருக்கும், அஸ்ய – ஜீவஸ்வரூபத்தின் (ஸ்வபாவ குணங்களின்), அபிவ்யக்தியோகாத் – வெளிப்படுகிறது என்பது தெளிவாகிறது என்பதால், (ஸாதனபூர்த்திக்குப் பிறகு ஜீவஸ்வரூபம் வெளிப்படுகிறது). 'குழந்தைகளிடம் இருக்கும் புருஷத்வ – ஸ்த்ரித்வங்கள், தக்க வயதான பிறகு மட்டுமே வெளிப்படுவதைப் போல, ஜீவன் ஸாதன பூர்த்தியை அடைந்த பிறகு, அவனின் ஸ்வரூப குணங்கள் வெளிப்படுகின்றன' – இந்த ஸூத்ர பாஷ்ய பாகத்தில் :

தேஷாம் யதன்யதா த்ருஷ்யம் ததுபாதிக்ருதம் மதம் |
விக்ஞானேனாத்ம யோக்யேன நிஜரூபே வ்யவஸ்திதி: ||
ஸம்யக்ஞானம் து தேவானாம் மானுஷாணாம் விமிஸ்ரிதம் |
மானுஷா மிஸ்ரமதயோ மிமிஸ்ரகதயோsபி ச ||

ஆகிய பிரமாணங்களால் ஜீவர்கள் ஸ்வயோக்ய ஞானத்தை அடைந்து நிஜ ரூபத்தினால் இருக்கும் நிலையை அடைவார்கள் என்றும், மனிதர்கள் மிஸ்ர ஞானத்தினால் மிஸ்ர கதியையே அடைவார்கள் என்றும், சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால், த்ரிவித ஜீவர்களுக்கும் ஸ்வயோக்ய ஞான பரிபூர்த்திக்காக, ஸ்வஸ்வரூபத்தினால் ஆகும் கதி உண்டு என்று தெளிவாகிறது. ஸ்வர்க்க, பூ, நரகங்களில் சுற்றும் மத்யம வர்க்கத்தின் ஜீவர்கள், உத்தமர்களைப் போல யதார்த்த ஞான நிஸ்சயத்திற்காக நிஷ்காம கர்மாதிகளையோ, தமோ யோக்யரான அதமர்களைப் போல, மித்யா ஞானத்தில் ஈடுபாடி அடைவதோ, செய்வதில்லை என்னும் அர்த்தத்தை மட்டும் 'த்ரிதிவனிரய பூகோசரான்' ஆகிய வாக்கியங்களில் அறியலாம். ஸ்வரூபம் வெளிப்பட்ட பின்னர்கூட, சுகதுக்கங்களின் சம்பந்தம் உள்ளவர்கள் என்னும் அர்த்தத்தை 'நித்யபத்த' என்பதற்கு அறிய வேண்டும்.

நித்யசம்சாரி – என்பதற்கு, ஸ்வஸ்வரூபத்தை லிங்கபங்கத்தினால் அடைந்த பிறகும், தினமும் சுகதுக்கங்கள் என்னும் இரு வித

அனுபவங்களில் சஞ்சரிப்பவன், (நியமத்துடன் இருப்பவன்), என்னும் அர்த்தத்தை அறிய வேண்டும்.

இந்த இரு வாதங்களின் பலாபலன்கள் கவனிக்கப்பட வேண்டியவை. ஸ்ரீவாதிராஜரின் நிர்ணயம் மிகச்சரியானதாகும் என்றும், ஏற்றுக் கொள்ளத்தக்கதே ஆகிறது என்பதையும் தனியாக சொல்லவேண்டியதேயில்லை.

**தத்வஞான மிஸ்ரஞான மித்2யாஞான**
**ஷக்தியிந்த3 லிங்க3தே3ஹவு**
**உத்தம மத்4யமாத3ம ஜீவரொளு பொக்கு**
**மத்தெ த்ரிவித3 போ4க3வஹவு ||12**

ஸூ: ஜீவரூபஞானம் த்ரிவித ஜீவர்களின் த்ரிவிதமாகவே இருந்து, அதன் பிரபாவத்தினால், லிங்கதேகம் இருக்கும் சம்சார நிலையில்கூட, சுக துக்காதி போகங்கள் த்ரிவிதமாக்வே இருக்கிறது என்னும் பொதுவான நியமத்தை சொல்கிறார்கள். விசேஷ காரணங்களால் பற்பல போகங்கள் வருவது உண்டு. அது சாமான்ய நியமத்திற்கு அபவாதம் மட்டுமே.

தத்வஞான – யதார்த்தஞானம். மிஸ்ரஞான – சம்ஷயாத்மக ஞானம். மித்யாஞான – விபரீத ஞானங்களின். ஷக்தியிந்த – பிரபாவத்தினால். லிங்கதேஹவு – (ஸ்வரூபத்தை மூடும்) லிங்கதேகம். உத்தம மத்யமாதம ஜீவரொளு – த்ரிவித ஜீவர்களின் ஸ்வரூபங்களில் (ஸ்வரூபாந்த: கரணங்களில்). பொக்கு – நுழைந்து. த்ரிவித போகவஹவு – (லிங்கதேக–கத ப்ராக்ருதாந்த:கரணத்தின் அனுபவங்கள்) சுக, துக்க, மற்றும் சுகதுக்க மிஸ்ரங்கள் என்னும் த்ரிவித போகங்களுக்கு காரணம் ஆகிறது. (த்ரிவிதமான போகங்கள் த்ரிவித ஜீவர்களுக்கு தனியாக உண்டாகிறது).

இந்த நுடியில் தொகுத்து சொல்லப்பட்டிருக்கும் ரகசிய பிரமேயத்தின் விவரணையை ஸத்தத்வ ரத்னமாலா கிரந்தத்தில் இவ்வாறு சொல்லியிருக்கிறார்.

நீசமத்யோச்சபேதேன ஜீவாஸ்தே த்ரிவிதா மதா: |
நீசாஸ்தத்ர தமோயோக்யா துக்காஞானாதி ரூபிண: ||
நித்யஸம்ஸாரிணோ யே து மத்யமாஸ்தே ப்ரகீர்த்திதா: |
வ்யாமிஸ்ரயாஜினஸ்தே ஸ்யுர்விஷ்ணவாதிக்யே ஸஸம்ஷயா: ||
உச்சாஸ்து மோக்ஷயோக்யா ஹி ஸதா நாரயணப்ரியா: |
ஸம்யக்ஞானானந்த பக்த்யாதி குணரூபகா: ||

பரமேஷ்வரேச்சாப்ரேரிதா மஹாலக்ஷ்மீ: ஷோடஷ கலாத்மக லிங்கதேகேன ஜீவமாம்ருத்ய தத்கத பாஹ்யாந்த:கரணமதிஷ்டாய த்ருடதரம் அபிமானமுத்பாத்ய அவித்யமானஸ்வாதந்த்ர்யாதி விஷயக விவிதவிப்ரமம் ஸம்பாத்ய ஜபாகுஸும ஸன்னிதானேன ஸ்படிகே ரக்திமானமிவ ஜீவ ஸ்வரூபே ஸுகதுக்காத்யாத்மனா விக்ருதபாஹ்யாந்த:கரணஸ்ய அங்கார வன்ஹிவத் ஸ்வரூபாந்த:கரணே அதிமிஸ்ரிபாவரூப ஸன்னிதானபலேன நீசோச்சாதி சிந்தனாரூபம் விக்ரியாவிசேஷம் ஜனயந்தே காமகர்மாதி ப்ரவாஹம் வர்த்தயந்தீ ஸர்வத்ர பரமப்ரயோஜகம் வாணி வல்லபம் அவாந்தர ப்ரயோஜகான் ஷிவஷக்ராதி தேவான்ஸ்ச நியாமயந்தீ கலுபந்திகா ||

இந்த வாக்கியங்கள் ஜீவஸ்வரூப த்ரைவித்யத்தை, ஶ்ரீஹரியின் இச்சையினால் லட்சுமிதேவி, ஜீவர்களை சம்சாரத்தில் கட்டி, பற்பல போகங்களைக் கொடுக்கும் வழியை சொல்கிறார். இந்த வாக்கியங்களின் அர்த்தம் இவ்வாறு உள்ளது.நீச, மத்ய, உச்ச என்னும் பேதத்தினால் ஜீவர்கள் மூன்று விதம். நீசர் தமோயோக்யர் மற்றும் துக்க அஞ்ஞானாதி ஸ்வரூப உள்ளவர்கள். மத்யமர் நித்ய சம்சாரிகள் என்பவர்கள் - இவர்கள் விஷ்ணு ஸர்வோத்தமத்வ விஷயத்தில் ஸம்ஷய ஞானம் உள்ளவர்கள் - விஷ்ணுவையும் அன்ய தேவதைகளையும் வணங்கும் ஸ்வபாவம் உள்ளவர்கள். உத்தமர்கள் நாராயண ப்ரியர்கள் - யதார்த்த ஞான, ஆனந்த, பக்தி வைராக்யாதி குண ஸ்வரூபர்கள் - இவர்களே முக்தி யோக்யர்கள்.

ஸ்வதந்த்ரனான ஶ்ரீஹரியின் விருப்பத்தினால் லட்சுமிதேவி, 16 கலைகளால் ஆன மற்றும் ஜீவர்களை அனாதி காலத்திலிருந்து மூடியிருக்கும், லிங்கதேகத்தில் இருக்கும் ப்ராக்ருத

## 4. ஸ்திதி ஸந்தி

அந்த:கரணத்தில் இருந்து, (ஜீவஸ்வரூப ஞானங்களான, ஸம்யக், மிஸ்ர, மித்யாஞானங்களை நிமித்தமாகக் கொண்டு), திடமான அபிமானத்தை பிறக்க வைத்து, ஜீவர்களில் இருந்த ஸ்வாதந்த்ர்யாதி மோகங்களை உருவாக்கி, சிவப்பு வண்ண பூக்களுக்கு அருகில் வெண்மையான ஸ்படிக மணிகள் இருந்தால், இந்த மணிகளும் சிவப்பாக தோன்றுவதைப் போல, புற அந்த:கரணத்தில் (ஜட மனதில்) தோன்றும் சுகதுக்க ரூப விகாரங்களை, அதி சாமீப்ய காரணமான ஜீவ ஸ்வரூபாந்த: கரணத்தில் கொண்டு வந்து, (கங்கினில் அக்னி எப்படி இருக்கிறதோ அப்படி) காம கர்மாதி பிரவாகங்களை அதிகப்படுத்தி, இந்த தன் வியாபாரத்தில் முக்ய பிரயோஜகனான (சஹாயகனான) பாரதிபதி முக்யபிராணனையும், அவாந்தர ப்ரயோஜகரான ருத்ரேந்த்ராதி மற்ற தேவதைகளையும் தானே நியமித்தவாறு, ஜீவர்களை சம்சாரத்தில் கட்டுகிறாள்.

**விரஜெயெம்ப$^{3}$ புண்ய நதி$^{3}$யிந்த$^{3}$ கெலவரிகெ$^{3}$**
**பரிது$^{3}$ போபுது$^{3}$ லிங்க$^{3}$தே$^{3}$ஹ**
**உரக$^{3}$ன ஹெடெ$^{3}$யந்தெ ஞான பக்வ வா**
**த$^{3}$ரெ இரலரியத$^{3}$வரிகெ$^{3}$ ||13**

கெலவரிகெ – உத்தம ஜீவர்களுக்கு (முக்தியோக்யர்களுக்கு). லிங்கதேஹ – (அவர்களின்) லிங்கதேகம். விரஜெயெம்ப – 'விரஜா' என்னும் நாமத்தின் புண்ய நதியிந்த – (லட்ச்ம்யாத்மக) பவித்ர நதி ஸ்னானத்தினால், பரிதுபோபுது– துண்டாகி போகிறது. (பாய்ந்து செல்கிறது – அல்லது ஹரிது – ஜலபிரவாகத்தில் நீந்தி செல்கிறது). உரகன – பாம்பின். ஹெடெயந்தெ – தலையைப் போல. ஞான பக்வவாதரெ – ஞானம் பூர்ணமானால். அவரிகெ – (ஸாதன பூர்த்தியான) ஜீவர்களுக்கு. இரலு அரியது – (லிங்கதேகம் பந்தனம் ஆக்கிக் கொண்டு) இருப்பதற்கு சாத்தியம் இல்லை (பந்தன சாமர்த்தியம் இல்லாமல் களைந்து போகிறது).

** 'உரகன ஹெடெயந்தெ' பாம்பின் தலையைப் போல – என்பது, இரு அம்சங்களைக் குறிக்கிறது என்று அறிய வேண்டும். பாம்பின் தலை விரிந்து அகலமாக நிற்பதைப் போல, ஜீவனின்

ஸ்வரூபஞானம் பூர்ண விஸ்தாரத்தை அடைய வேண்டும் என்பது ஒன்று. இரண்டாம் அம்சம் என்னவென்றால் – பக்குவம் ஆனபிறகு, தலையை சூழ்ந்திருக்கும் உறை களைந்து போகிறது.

உறையைப் போல இருக்கும் லிங்கதேகம், ஜீவஸ்வரூபத்தின் ஞானம் பக்குவம் ஆனபோது, அதனால் எரிக்கப்பட்டு, முதலில் இருந்ததைப் போல மூடியிருக்க சாமர்த்தியம் இல்லாததாகி, விழுந்து விடுகிறது. இவ்வாறு ஞானத்தின் விஸ்தாரமும் பரிபக்வதையும் பூர்ணமானபோது லிங்கதேகம் எப்படி நிற்கும்?

** முக்தியோக்யருக்கு விரஜா ஸ்னானத்தினால் லிங்கபங்கம், தமோயோக்யருக்கு வாயு கதா பிரகாரத்தினால் லிங்கபங்கம், மத்யமரான நித்ய சம்சாரிகளுக்கு வாயு தேவரின் ஹுங்காரத்தினால் லிங்கபங்கம் என்றும், அடுத்த நுடியின் 'ஞானக்கெ ஹிரியதனவ கொடபேகெந்து' – விரஜா நதியில் ஸ்ரீஹரி ஸ்னானம் செய்விக்கிறான் என்று குறிப்பிடப்பட்டுள்ளது என்று அறிய வேண்டும். இதன் நிர்ணயத்தை ஞானிகளைக் கேட்டு தெரிந்து கொள்ள வேண்டும்.

**ஞானக்கெ ஹிரியதனவ கொட[3]பே[3]கெந்து[3]**
**ஸ்ரீநாத[2] விரஜா நதி[3]யல்லி**
**ஞானிக[3]ள முணுகி[3]ஸி ஸித்[3]த[4]ரன்னெ மாடி[3]**
**தன்ன ஜக[3]தொ[3]ளிட்டுகொம்ப[3] ||14**

ஞானக்கெ – (யதார்த்த ஞான – சம்ஷய ஞான – மித்யா ஞானங்களின் நடுவில்), யதார்த்த ஞானத்திற்கு (தத்வ ஞானத்திற்கு). ஹிரியதனவ கொடபேகெந்து – (இருக்கும்) முக்கியத்துவத்தை (தன் விசேஷ ப்ரீதிக்கு பாத்திரர் என்பதை) வெளிப்படுத்துவதற்காக. ஸ்ரீநாத – லட்சுமிபதி. விரஜா நதியில் – (லட்சுமி ஸ்வரூபத்தின்) விரஜா நதியில். ஞானிகள – (தத்வஞானிகளான) முக்தி யோக்யர்களை. முணுகிஸி – ஸ்னானம் செய்வித்து. ஸித்தரன்னெ மாடி – (லிங்கதேகத்தை போக்கி) பரம புருஷார்த்தங்களை பெற்றவர்களாக ஆக்கி. தன்ன ஜகதொளு – வைகுண்டாதி உலகங்களில் (அல்லது பிரளய காலத்தில் அவ்யக்த பாவத்தை அடைந்து தன் உதர பிரவேசம்

--------------------------------------------------------------------------------------------
செய்த அந்த உலகங்களில்). இட்டுகொம்ப - வைத்துக் கொள்கிறான்.

** ஞானேனைவ அம்ருதீபவதி - ந ஹி ஞானேன ஸத்ருஷம் பவித்ரமிஹ வித்யதே -- ஆகிய ஸ்ருதிஸ்ம்ருதிகள் சொல்லும் ஞானத்தின் சிறப்பினை, புற ஆடையைப் போல இருக்கும் லிங்கதேகத்தை விடுவிப்பது மட்டுமல்லாமல், பரம பவித்ர தீர்த்த ஸ்னானத்தை செய்வித்து, பவித்ரமாக்குகிறது.

**ஹீனரிகெ³ மைலிகெ³வஸ்த்ர போத³மேலே**
**ஞானவவரிகெ³ பே³ரெ பே³ட³**
**ஞானிக³ளா வஸ்த்ர போத³மேலெ ஷுத்³த⁴**
**ஸ்னான பே³கெந்து³ ஸர்வஸித்³த⁴ ||15**

ஹீனரிகெ - (முக்தி யோக்யர்கள் அல்லாத) கீழ் வர்க்கத்து ஜீவர்களுக்கு. (நித்யசம்சாரி மற்றும் தமோ யோக்யர்களுக்கு) மைலிகெவஸ்த்ர போதமேலெ - விழுப்பு துணி சென்றபிறகு (லிங்கதேகம் கழிந்த பிறகு). அவரிகெ பேரெ ஞானபேட - அவர்களுக்கு அதிகமான ஞானம் வேண்டியதில்லை (ஸ்வரூப ஞானத்தின் அதிக தூய்மை / பவித்ரம் தேவையில்லை). ஞானிகள ஆ வஸ்த்ர - முக்தி யோக்யர்களின் (விழுப்பு துணி) லிங்கதேகம். போதமேலெ - விழுந்தபிறகு. ஷுத்தஞான பேகெந்து - ஸ்வரூப ஞானத்தின் பரிசுத்தத்வம் வேண்டும் என்பது. ஸர்வஸித்த - அனைவரின் அனுபவத்திற்கு வந்திருக்கிறது.

அல்லது

ஹீனரிகெ (முக்தி யோக்யர்களில்) கீழான ஜீவர்களுக்கு. மைலிகெவஸ்த்ர போதமேலெ - லிங்கதேகம் பங்கம் ஆனபிறகு. (லிங்கதேகம் போவதற்கு தேவையான அபரோக்ஷ ஞான மட்டும் போதும்). பேரெ ஞான பேட - அதைவிட அதிக ஞானம் வேண்டாம் (அபரோக்ஷ ஞானத்திற்குப் பிறகு அதிக ஞானம் தேவையில்லை). ஞானிகளுக்கு - உத்தமர்களுக்கு அந்த வஸ்த்ரம் சென்றபிறகு - லிங்க பங்கத்திற்கு காரணமாகும் அபரோக்ஷ

ஞானம் முதலிலேயே இருந்தாலும், ஷுத்தஞான பேகு - அதன் (அந்த அபரோக்ஷத்தின்) ஆதிக்ய மற்றும் பரிசுத்த ஞானம் வேண்டும். எந்து ஸர்வஸித்த - என்பது சர்வ பிரமாணங்களால் தெரிய வருகிறது.

** அல்பஜீவர்களுக்கு அபரோக்ஷ ஞானம் ஆயிற்று என்றால் சாதன பரிபூர்த்தி ஆயிற்று என்றே அர்த்தம். ப்ராரப்த போகத்திற்குப் பிறகு லிங்க பங்கத்திற்கு தயார் ஆகின்றனர். அவர்கள் ஸ்வர்யோக்ய அபரோக்ஷத்தினால் த்ருப்தர் ஆகின்றனர். உத்தமாதிகாரிகளான தாத்விக தேவதைகளுக்கு அப்படியல்ல.

பாரோக்ஷ்யேண து பூர்ணம் ஸ்யாத்தேஷாம் ஞானம் ஸதைவ ஹி |
விசேஷேணாபரோக்ஷ்யாச்ச க்ரமாத வ்ருத்திரிதீரதா ||
அனாதி தோப்ய பரோக்ஷயுக்தா ரூபேஷு ச க்வசித் ||
(சத்.ரத்.மாலா)

தாத்விக தேவதைகளின் சாமான்ய லட்சணங்களை நிரூபித்தவாறு, அவரின் ஜகத்வஸ்து விஷயக ஞானம், எப்போதும் பூர்ணமாக இருக்கிறது. அவருக்கு அனாதி காலத்திலிருந்து பகவந்தனின் சாமான்ய அபரோக்ஷம் இருக்கிறது. சாதனையினால் பகவத் தரிசனத்தில் அதிகம் தெளிவும், அன்ய பகவத் ரூபங்களின் தரிசனம் ஆகி, ஞானவ்ருத்தி ஆகிறது - என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதனால் உத்தமாதிகாரிகளுக்கு லிங்க தேக பங்கமும், மோட்சமும் நிச்சயமாக இருந்தாலும், ஞானாதிக்ய ரூபத்தின் பலன்களுக்காகவே அவரின் ஸாதனை என்று தீர்மானம் ஆகிறது.

** உலகத்தில்கூட இப்படியான தாரதம்யத்தை காண்கிறோம். சிலர், விலை குறைந்த வஸ்திரங்களை விட்டு, புதிய ஆடைகளை அணிந்து, சுத்தம் ஆகிவிட்டோம் என்று அறிந்தால், வேறு சிலர், சுத்தம் ஆவதற்கு ஸ்னானம் செய்கின்றனர். வேறு சிலர், ஸ்னானத்திலும் திருப்தி அடையாமல், ஞான தீர்த்தத்தில் மூழ்க வேண்டும் என்கிறார்கள். முறையே இவர்கள் ஒருவரைவிட

ஒருவர் உத்தமர் அல்லவா? இத்தகைய வஸ்திரத்தைப் போலவே லிங்க தேகம்.

** முக்தி யோக்யர்களுக்கு விரஜா ஸ்னானம் வெறும் லிங்கதேகத்தை விடுவதற்காக மட்டும் அல்ல. ஸ்வரூபம் அத்யந்த பரிசுத்தமாகி, தியானத்தில் ஈடுபட்டு மகிழ்ச்சியடைவதற்கு அந்த ஜீவரை தயார் செய்வதற்குக்கூட அதுவே காரணம். லிங்க தேகத்தை விட்டு, பகவந்தனின் உதரத்தில் நுழைந்து, திரும்ப ஸ்ருஷ்டி காலம் வரும்வரைக்கும் (பிரளய காலத்தில்) அவர்கள் தியானத்தில் ஈடுபடுகிறார்கள்.

**இந்து ஸ்ரீகாந்த மூவரிகு[3] மூரு க[3]தி**
**அந்து துதி[3]யலி கொடு[3]வனு**
**ஸந்தத உத்தம மத்[4]யமாத[3]ம லோக**
**அந்தரந்ததி[3] தும்பி[3]ஹவு ||16**

இந்து – இவ்வாறு. ஸ்ரீகாந்த – லட்சுமிபதி. மூவரிகு – த்ரிவித ஜீவர்களுக்கும். மூரு கதி – (லிங்கதேக பங்கத்தினால்) சுக, துக்க, மற்றும் இரண்டும் கலந்த என இந்த மூன்று கதிகளையும். அந்து துதியல்லி – இப்படியான முடிவுக்கு. கொடுவனு – கொடுக்கிறான். ஸந்தத – அனைத்து காலங்களிலும். உத்தமாதமலோக – மூன்று வித ஜீவ சமூகம். அந்தரங்கதி – ஒவ்வொரு பிரம்ம கல்பத்திலும் – அல்லது, ஒவ்வொரு மன்வந்தரத்தில் அல்லது ஓரிடத்தையும் விடாமல் முழுமையான பிரம்மாண்டத்தில்). தும்பிஹவு – நிரம்பியிருக்கிறது.

** ஜீவராசிகள் அனந்தமானவை. ஒவ்வொரு ராசியிலும் எண்ணிக்கையற்ற ஜீவர்கள் இருக்கின்றனர். த்ரிவித ஜீவர்களும் ஒவ்வொரு பிரம்ம கல்பத்தில் லிங்கபங்கத்தினால், திரும்ப பிறக்காவிட்டாலும் (அடுத்த கல்பங்களில் சம்சாரத்திற்கு வராவிட்டாலும்), இந்த பிறவிகள் ஒரு காலத்தில் நிற்க வேண்டியிருக்குமோ என்னும் சந்தேகத்திற்கு இடமில்லை. அனந்த காலத்திற்கும் முடியாதிருக்கும் அனந்த ஜீவர்களால் கூடிய அனந்த ஜீவராசிகள் இருக்கின்றன.

அனாகதா அதீதாஸ்ச யாவந்த: ஸஹிதா: க்ஷணா: |
அதீதானாகதாஸ்சைவ யாவந்த: பரமாணவ: ||
ததோப்யனந்த குணிதா ஜீவானாம் ராஷய: ப்ருதக் |

என்று ஜீவர்களின் எண்ணிக்கை சொல்லப்படுகிறது. முக்காலங்களிலும் படைக்கப்படும் அனந்த பிரம்மாண்டங்களில் இருக்கும் பரமாணுகளின் (இவை அனந்தமே) எண்ணிக்கை கற்பனைக்கும் நிற்காதது. ஒவ்வொரு தனியான ஜீவகணமும் இந்த கற்பனைக்கெட்டாத எண்ணிக்கையின் பல மடங்கு அதிகமாக இருக்கிறது என்று அர்த்தம். 3ம் ஸ்ருஷ்டி சந்தியின் 3ம் பதம், நுடி 1ம் குறிப்புகளை இங்கு பார்க்கலாம்.

**ஸ்லோக 9**
**காலோ஽யம் த்விபரார்த்தா[4]க்[2]யோ நிமேஷ உஷசர்யதே |**
**அவ்யாக்ருத ஸ்யானன்தஸ்ய அனாதேர் ஜக[3]தாத்மன: ||**
**(பாக. 3-12-37)**

அனாதே: – உற்பத்தியில் இல்லாதவனான. அனந்தஸ்ய – நாசம் இல்லாதவனான. (தேஷ கால குணங்களால் கட்டுப்படாத) அவ்யாக்ருதஸ்ய – மாற்றம் இல்லாதவனான. ஜகதாத்மன: – பிரம்மாதி உலகத்தின் ஸ்வதந்த்ர பிரபுவான (ஜகதந்தர்யாமியான) ஸ்ரீஹரிக்கு, அயம் – இந்த. த்விபரார்த்தாக்ய: – இரு பரார்த்தங்கள் என்னும் (பிரம்மதேவரின் 100 ஆண்டுகள் என்னும்). கால: – காலம். நிமேஷ: – நிமேஷ என்று (கண் இமைகளை ஒரு முறை மூடி திறக்கும் காலம் என்று). உபசர்யதே – (அஞ்ஞானிகளுக்கு இத்தகைய கற்பனையைக் கொடுப்பதற்காக மட்டும்) உபசாரத்திற்கு (அதி அல்ப என்று சொல்வதற்கு மட்டுமே அன்றி, கால பிரமாணத்தை கணக்கிடுவதற்கு அல்ல) சொல்லப்பட்டிருக்கிறது.

** பர என்றால், பிரம்மதேவரின் 100 ஆண்டுகள். 'பரார்த்த' என்றால் அதன் பாதி 50 ஆண்டுகள். நிமேஷ என்றால் மிகவும் சிறியதான காலப் பகுதி. இங்கு, லய ஸந்தியின் பதம் 1 நுடி 6ம் குறிப்புகளை இங்கு பார்க்கலாம்.

## 4. ஸ்திதி ஸந்தி

---

** கால அளவு, பரமாணுவிலிருந்து துவங்கி, த்விபரார்த்த வரைக்கும் செய்யப்பட்டு, இந்த காலம் ஶ்ரீஹரிக்கு 'நிமேஷ' மட்டுமே என்று, அதுவும்கூட உபசார்யார்த்தமாகவே என்று சொல்லப்படுகிறது.

யாவந்தம் தேவலோகஸ்தோ மானுஷஸ்த்வவபதாரயேத் |
மஹாப்ரக்ஞோ தேவஜூக: ஸ கால: பரமாணுக: ||
(பாக.தாத். நி. பிரம்ம தர்க்க)

யாகாதிகளால் ஶ்ரீஹரி பிரசாதத்தை அடைந்து, தேவலோகத்தில் இருக்கும் மகா பிராக்ஞனான மனிதன், எந்த காலத்தை மேலும் வகுக்க முடியாததாக ஆக்குகிறானோ, அந்த காலம் பரமாணு எனப்படுகிறது என்று பரமாணு காலத்தின் நிரூபணம் இருக்கிறது.

அணுர்த்வௌ பரமாணு ஸ்யாத்ப்ரஸரேணுஸ்த்ரய: ஸ்ம்ருத: |
ஜாரார்க்கரஷ்ம்யவகத: கமேவானு பதன்னகாத் ||
(பாகவத)

2 பரமாணு காலங்கள் சேர்ந்து ஒரு த்வ்யணுக காலம் எனப்படுகிறது. 3 த்வ்யணுக காலங்கள் சேர்ந்தால் ஒரு த்ர்யணுக காலம். 3 த்ர்யணுக காலம் என்பது 1 த்ருடி. 3 த்ருடிகளுக்கு ஒரு வேதம். 3 வேதங்களுக்கு 1 லவ. 3 லவங்களுக்கு 1 நிமேஷ. 3 நிமேஷங்களுக்கு 1 க்ஷண. 5 க்ஷணங்களுக்கு 1 காஷ்ட. 15 காஷ்டங்களுக்கு 1 லகு. 15 லகுகளுக்கு 1 நாழிகை. 2.5 நாழிகைகளுக்கு 1 முஹூர்த்த. 7.5 நாழிகைகளுக்கு 1 யாமம். 8 யாமங்களுக்கு 1 நாள் (இரவு+பகல்). 15 நாட்கள் 1 பட்சம். 2 பட்சங்கள் 1 மாதம். 12 மாதங்கள் 1 ஆண்டு. 100 ஆண்டுகள் மனிதனின் பூர்ண ஆயுள். ஆகிய கால அளவுகளையும், காலாந்தர்யாமியாகி, பரமாணு முதலான கால நிமித்தனான சிறிதளவும் மாற்றம் இல்லாதவனான ஶ்ரீஹரியின் மகிமைகளை பாகவத 3ம் ஸ்கந்த 12ம் அத்தியாயத்தில் பார்க்கலாம்.
பதம் 10 ராகம்: நாடெ. தாளம்: ரூபக

**ஒம்மொம்மெ கண்தெரெது$^3$ முச்சுவ காலத$^3$லி**
**ஜனனமரணவனைது$^3$வ**
**பி$^3$ரம்மாதி$^3$ ஜீவர ஹரிகெ$^3$ ஸரியெம்ப$^3$**
**து$^3$ர்மதத$^3$வரனேனெம்பெ$^3$ ||1**

ஒம்மொம்மெ – (ஸ்ரீஹரி) ஒரு முறை. கண்தெரெது முச்சுவ காலதலி – கண் திறந்து மூடும் காலத்தில். ஜனனமரணவனு ஐதுவ – பிறந்து இறக்கும் பிரம்மாதி ஜீவர – பிரம்மனே முதலான ஜீவர்களை. ஹரிகெ – (கால விகார இல்லாதவனும், அனந்த காலத்தில் ஒரே மாதிரியாக இருப்பவனுமான) ஸ்ரீஹரிக்கு, ஸரியெம்ப – சமம் என்னும் (ஸ்ரீஹரி ஸ்வரூபரே என்னும் அல்லது அவனின் சமானர் என்னும்). துர்மததவரனு – துஷ்ட சித்தாந்த உள்ளவர்களை. ஏனெம்பெ – என்னவென்று அழைக்கட்டும். (காலத்திற்கு கட்டுப்பட்டு, சம்சாரத்தில் சுற்றும் அல்ப ஜீவர்களை ஸ்ரீஹரிக்கு சமர் என்று அல்லது அவனிடமிருந்து அபின்னர் என்று அறிவது எப்படி முடியும்? எத்தகைய மூர்க்கர் இவர்?).

**ஹரிகி$^3$து$^3$ நிமிஷ உபசர்யதே எந்து$^3$**
**ஸிரி பா$^4$க$^3$வத பேளிதா$^1$கி$^3$**
**ப$^4$ரதி$^3$ நிமிஷதி$^3$ர லவலவகாலத$^3$**
**இரவனரிவ கவி யாவ ||2**

ஹரிகெ – ஸ்ரீஹரிக்கு இது – இந்த பிரம்மனின் 100 ஆண்டு காலங்கள். நிமிஷ – ஒரு நிமிடம் என்று. உபசர்யதே – உபசாரத்திற்காக சொல்லப்படுகிறது (நிமிஷ – கண்களை மூடித் திறக்கும் நேரம் அல்ல). எந்து – என்று. ஸிரி பாகவத – ஸ்ரீபாகவதமே. பேளிதாகி – சொல்லியிருந்தாலும். பரதி – வேகத்தினால் (உற்சாகத்துடன்). நிமிஷதிர – இரப்பை ஆட்டாமல் இருப்பதில்லை. (நம்முடன் ஸ்ரீஹரியும் இரப்பைகளை மூடித் திறந்தவாறே இருக்கிறான்). லவலவகாலத – அதி சூக்ஷ்ம காலத்தில் கூட. இரவனு – (ஸ்ரீஹரியின்) இருப்பினை (கால நியாமகத்வத்தை). அரிவ – அறியும். கவி யாவ – பண்டிதர் யார்? (யாரும் இல்லை).

## 4. ஸ்திதி ஸந்தி

---

பிரம்மனின் பூர்ணாயுஷ்ய காலம் ஸ்ரீஹரிக்கு 'லவ' காலமும் அல்ல. இப்படியாக இருக்கும் ஸ்ரீஹரியின் ஆயுள் என்னவென்று சிந்திப்பதும் மூர்க்கதனத்தின் செயலே ஆகும். நிமேஷ என்பதே இல்லாத ஸ்ரீஹரி, அனைவரில் சர்வ நிமேஷண வியாபாரங்களை, தானும் செய்து, செய்துகொண்டிருக்கும் அற்புத மகிமைகளை நிரூபிக்கிறார்.

**அந்ததி$^3$ இரதெ$^3$ ஸந்தர ஸூர நி**
**ஸ்சிந்தமஹிம நாராயணனு**
**இந்து பரததி$^3$ உளிது$^3$ ஹோஹரிகெ$^3$**
**அந்தரனு நீவே நோடி$^3$ரோ ||3**

நிஸ்சிந்தமஹிம - கவலை, துக்கம் போன்ற எவ்வித தோஷங்களும் அற்றவனான (மகாமகிமனான), நாராயணன் - ஸ்ரீஹரி. ஸந்தரஸூர - சஜ்ஜனர்களின் ஆராத்ய தேவனான (சஜ்ஜனர்களின் ஸ்வரூபத்தில் இருந்து க்ரீடிக்கும்) தான், அந்ததி - பிரளய காலத்தில்கூட (அல்லது ஜீவர்கள் தம் தேகத்தில் இருக்கும் கடைசி நொடி வரைக்கும்கூட). அவர்களில் இருந்து. யெரதெ - விடாமல் (நிரந்தரமாக). ஸுகிப - மகிழ்ச்சியுடன் இருக்கிறான் (ஜீவர்களுக்கு சுகத்தை கொடுப்பதற்காக ஷுப விஷயங்களை போகித்து சுகிக்கிறான்). இந்து - இவ்வாறு. பரததி உளிது - வெளியே இருந்து (காலத்துடன் இருப்பதற்கு முடியாததவராக) ஹோஹரிகெ - செல்பவர்களுக்கு (அதி அல்ப கால மட்டும் இருந்து செல்பவர்களுக்கு); அல்லது, இவ்வாறாக வெளியில் இருந்து கடைசியிலும் இருக்கும் ஸ்ரீஹரி. ஹோஹரிகெ - (பராதீனராகி - தேகங்களை அடைந்து அல்ப காலம் மட்டும் இருந்து) செல்பவர்களுக்கு. அந்தரனு - (தினமும் ஆனந்த ஸ்வரூபன் ஆன ஸ்ரீஹரி). மிகவும் வேறுபட்டவன் (பின்னன்) என்பதை. நீவே நோடிரோ - நீங்களே அறிந்து கொள்ளுங்கள் (ஜீவர்கள் ஸ்ரீஹரியின் சமர் என சொல்ல முடியுமா? இந்த உதாரணங்களையாவது பார்க்கவும்).
ஜயகோஷத்துடன் கிரந்தத்தை மங்களம் செய்கிறார்.

**ஹரி ஸர்வோத்தம ஹரியெ பரதே3வதெ**
**ஹரியெ ஸகல வேத3வேத்4ய**
**நிருபமஷக்தியெ நித்ய நிர்மலமூர்த்தி ஸு**
**சக்ரவர்த்தியெ ஜயது ||4**

ஹரி சர்வோத்தமன் - ஸ்ரீஹரியே சர்வோத்தமன். ஹரியே பரதேவதெ - ஸ்ரீஹரியே பரமோத்தமன். ஹரியெ ஸகலவேதவேத்ய - அனைத்து வேத பிரதிபாத்யனும் ஸ்ரீஹரியே (வேதைககம்யனு - ஸ்ரீஹரியின் சர்வோத்தமத்வத்தையே அனைத்து வேதங்களின் மகா தாத்பர்யம்). நிருபம சக்தியையே கொண்டிருக்கும். நித்ய நிர்மலமூர்த்தி - தினமும் சுத்தமும் (அப்ராக்ருதமும் - ஆனந்தாதி சத்குண ஸ்வரூபமும்) ஆன தேகம் உள்ளவனும். சுசக்ரவர்த்தியெ - சஜ்ஜனர்களின் ரக்ஷகனான, சர்வாதிபதியே. ஜயது - நித்ய ஜயஷீலனான உனக்கு, ஜய ஜய, பிரபோ|

**ஸ்ரீஹயவத3னா ஸ்ரிதஜன மோஹன்ன**
**மோஹாந்த4கார மார்தாண்ட3**
**ஸோऽஹம் யெம்பு3வரிகெ3 ஷோக2வ நீவ நி**
**ரஹங்காரிக3ள ரக்ஷிஸுவ ||5**

ஸ்ரீஹயவதன - ஸ்ரீஹயக்ரீவ தேவன். ஆஸ்ரிதஜன மோஹன்ன - பக்த ஜனருக்கு ப்ரியன் (ஆச்சர்ய ஜனகன். மோஹ - ஆச்சர்ய, அல்லது ப்ரேமாதிஷயத்தினால் பக்தர்களுக்கு தன்னைப் பிடிக்குமாறு செய்கிறான்). மோஹாந்தகார மார்த்தாண்ட - (மோஹ-அஞ்ஞான) பக்தர்களின் அஞ்ஞானம் என்னும் இருட்டினை நிர்மூலம் ஆக்கும் சூரியன். ஸோऽஹம்யெம்புவரிகெ - அவன் நானே என்பவர்களுக்கு (ஜீவ பிரம்ம ஐக்யத்தை அறியும் மித்யா ஞானிகளுக்கு). ஷோகவனு ஈவ - நித்ய துக்கத்தை கொடுக்கிறான் (அந்தம் தமஸ்ஸினை கொடுக்கிறான்). நிரஹங்காரிகள - அபிமானத்தை துறந்து தன்னையே சரணடைந்தவர்களுக்கு. ரக்ஷிஸுவ - (சர்வத்ர அனைத்து விதத்தினால்) காக்கிறான் (பக்தஜன பரிபாலகன்).

## 4. ஸ்திதி ஸந்தி

---

**முத்து ரத்னக3ளன்னு கெத்திஸுவந்தெ ஸு**
**தத்வஸாரத3 விஸ்தா2ரக3ள**
**யுக்தியிந்த3லெ பேள்த3 வாதி3ராஜோக்தியொளு**
**அர்த்தியு சதுர்த்த2 ஸந்தி3 ||6**

முத்துரத்னகளனு கெத்திஸுவந்தெ (தாராள மனதுடன் கொடுப்பதைப் போல). ஸுதத்வஸார – மங்கள பிரதமான இந்த ’தத்வஸார’ என்னும் கிரந்தத்தின். விஸ்தாரகள – விவரங்களை (ஸத் ஸித்தாந்த ப்ரமேயங்களின் விஸ்தாரங்களை). யுக்தியிந்தலெ – யுக்திகளையே ப்ரதானமாக வைத்து. பேள்த – கூறிய. வாதிராஜோக்தியொளு – வாதிராஜனான என் நுடிகளில். அர்த்திய – ப்ரியமான (மகிழ்ச்சியைக் கொடுப்பதான – ரம்யமான). சதுர்த்த ஸந்தி – நான்காம் சந்தி (முடிந்தது).

உபாஸ்யனான ஸ்ரீலட்சுமி ஹயக்ரீவ ஸ்வாமியின் கருணையாலேயே தாம் இயற்றிய இந்த காவியத்தை ஸ்ரீஹரியிடம் சமர்ப்பிக்கிறார்.

**ஸ்ரீத4ர ஹயவத3ன ராயன த3யதி3ந்த3**
**வாதி3ராஜேந்தி3ர ரசிஸித3**
**ஈ தி3வ்யகாவ்யதி3 ஸ்தி2தியனொரெத3 ரம்யவாத3**
**துதி3ய ஸந்தி4யு பொஸகெ3 ||7**

ஸ்ரீதர – லட்சுமியின் தலைவனான. ஹயவதனனான – ஸ்ரீஹயக்ரீவ ஸ்வாமியின் தயதிந்த – அருளால். வாதிராஜேந்திர – வாதிராஜேந்திர என்னும் (காரணப் பெயர் உள்ள) யதி. ரசிஸித – இயற்றிய. ஈ திவ்யகாவ்யதி – இந்த சிறந்த (தத்ஸாரமாகையால், அலௌகிக பிரமேயங்களை அடக்கிய) காவியத்தில். ஸ்திதியனொரெத – ஸ்ரீஹரியின் ஜகத்பாலன ரூப மகிமைகளை வர்ணித்த. ரம்யவாத – மனோகரமான (சஜ்ஜனர்களின் மனதினை ஈர்ப்பதான) துதிய ஸந்தி – கடைசி சந்தி. பொஸகெ – முடிந்தது.

# பலஸ்ருதி

## ராக: நாடி. தாள: ரூபக

**ஈ பத$^{3}$வெ ஷுப$^{4}$பத$^{3}$ ஈ பத$^{3}$ வர்த்திய பத$^{3}$**
**ஈ பத$^{3}$வெ ஸம்பதா$^{3}$ஸ்பத$^{3}$த$^{3}$ பத$^{3}$**
**ஈ பத$^{3}$வெ ஹரிபத$^{3}$ ஈ பத$^{3}$ நெனெவ பத$^{3}$**
**ஈ பத$^{3}$வெ அபத$^{3}$ந்தகபத$^{3}$ ||1**

ஈ பதவெ – பத்யரூபத்தின் இந்த காவியம். ஷுபபத – மங்கள கிரந்தம் (வாக்கியங்களின் தொகுப்பு). ஈ பத – இதில் இருக்கும் ஒவ்வொரு பத்யமும். வர்த்திய பத – நீர் ஊற்று போல இருக்கும் பத்யம் (தோண்டுபவனின் சக்திக்கேற்ப ஆழமாக செல்வது போல, தெளிவான அதிக தண்ணீரைக் கொடுக்கும் நீர் ஊற்றினைப் போல) அல்லது, இந்த பதவர்த்திய பத – இந்த பதம் அர்த்திய பத – ஒவ்வொரு பத்யமும் ப்ரேமத்தினால் (ஞானார்த்திகளின் மேல் உள்ள மரியாதையால் – ஹரிபக்தியுடன் கூட) இயற்றியது. (சுஜீவிகளான படிப்பவர்களில் ஹரிபக்தியை உண்டாக்குவதாகவே இருக்கிறது). ஈ பதவெ – இங்கு சொல்லப்பட்டிருக்கும் ஸ்ரீஹரியின் பாத பத்மமே. ஸம்பதாஸ்பதத – இஹபர பாக்ய லாபத்திற்கு காரணமான. பத – பாதம். ஈ பதவெ – இந்த காவியம். ஹரிபத – ஸ்ரீஹரியின் ஸ்வரூபம் (ஸ்ரீஹரியிடமிருந்து வேறுபடாததான அவனின் மகிமைகளையே நிரூபிக்கின்றன. ஈ பதவெ – ஸ்ரீஹரி பாதமே. நெனெவ பத – நிரந்தரமாக நினைக்கக்கூடியது. அல்லது, ஈ பதவெ – ஸ்ரீஹரி மகிமைகளை கொண்டாடும் கிரந்தமே. நெனெவ பத – எப்போதும் நினைப்பதற்கு (மனனத்திற்கும் கூட) யோக்யமான விஷயம். ஈ பதவெ – ஸ்ரீஹரி சரணமே. ஆபதந்தகபத – அனைத்து விபத்துகளையும் பரிகாரம் செய்யக்கூடியது.

**ப$^{4}$யவ ஹரிஸுவ பத$^{3}$ நயவ தோரிப பத$^{3}$**
**ப்ரிய முக்தி பத$^{3}$னைதி$^{3}$ஸுவ பத$^{3}$**
**ஹயவத$^{3}$ன தே$^{3}$வன்ன தயகெ$^{3}$ பாதுரனாகி$^{3}$**
**ஜயிஸுவ வாதி$^{3}$ராஜன பத$^{3}$வு ||2**

4. ஸ்திதி ஸந்தி

---

பயவ ஹரிஸுவ பத - சம்சார பயத்தை பரிகரிக்கிறது. இந்த காவியம், (இங்கு பிரதிபாத்யமான ஸ்ரீஹரி மகிமைகளின் த்ருட ஞானம் சம்சார என்னும் மஹா பயத்தையே பரிகரிக்க சமர்த்தமாக இருக்க, சம்சாரத்தில் தினமும் வரும் பற்பல பயங்களை விலக்குவதாக இருக்கிறது என்று சொல்லவும் வேண்டுமா?). நயவ தோரிப பத - சன்மார்க்கத்தை காட்டும் உபதேச வாக்ய சமூகம் (அல்லது, நய - ந்யாய உக்திகளால் தத்வங்களை விளக்கும் காவியம்). ப்ரியமுக்திபதன - அனைவரும் விரும்பக்கூடிய மோட்ச சாதனத்தை. ஐதிசுவ பத - கொடுக்ககூடிய காவியம். ஹயவதன தேவன்ன - ஸ்ரீலட்சுமி ஹயக்ரீவ ஸ்வாமியின். தயகெ - அருளுக்கு. பாதுரனாகி - பாத்திரனாகி. அல்லது, பரவாதிகளை வெல்வதாக செய்யும். வாதிராஜர பதவு - ஸ்ரீவாதிராஜ யதிகளின் காவியம் ஆகும்.

த்ரிபாஷாம் யோ ந ஜானாதி ரீதீனாம் ஷதமேவ ச |
வ்யத்யாஸாதீன் ஸப்தபேதான் வேதாத்யர்த்தம் ததா வதேத் |
ஸ யாதி நிரயம் கோரம் அன்யதாஞான ஸம்பவம் ||

என்று ஸ்ரீபாதராயண ப்ரணீத லட்சண சாஸ்திரத்தில்; மூரு பாஷெகளன்னு - (தர்ஷன, குஹ்ய, ஸமாதி என்னும் மூன்று விஷயங்களில்), நூறு விதங்களை, வைதர்பி, கௌடி முதலான பதாக்ஷரவின்யாஸ பத்ததிகளையும் ஏழு பேதங்களையும் அறியாமல், ஸ்வபுத்தியினால் வேதார்த்தங்களை சொல்பவன், விபரீத ஞானத்தினால் ஆகும் கோர நரகங்களை அடைகிறான் - என்று சொல்கிறது.

வ்யத்யாஸ: ப்ராதிலோவ்யம் ச கோமூத்ரீ ப்ரகஸஸ்ததா |
உக்ஷண: ஸுதுர: ஸாது: ஸப்த பேதா: ப்ரகீர்த்திதா: ||

என்று ஏழு பேதங்களை சொல்கிறார்கள். இவற்றின் அர்த்த விவரங்களை, மகாபாரத தாத்பர்ய நிர்ணய கிரந்தத்தின் ஆழமான படிப்பினால் அறியலாம். இப்போது, இந்த சப்த பேதங்களில் ஒன்றான 'ஸுதுர' என்பதை இந்த 1-2ம் நுடிகளில் பார்க்கிறோம். சப்த பேதாதிகளை அறிந்து, வேத தாத்பர்யங்களை நிரூபிக்கும்

அதிகாரம் உள்ள மகாஞானிகள் ஸ்ரீவாதிராஜர் என்பதை இந்த நுடிகள் விளக்குகின்றன. 'ஸுதுர' என்றால், 'வாஸுதேவபரா வேதா:, வாஸுதேவபரா மகா:, வாசுதேவபரா யோகா:' என்று பர ஷப்தத்தை பயன்படுத்துவதைப் போல விவித அர்த்தங்களை மனதில் வைத்து, ஒரே சொல்லினை அனைத்திற்கும் பொருத்தி, பயன்படுத்தியிருக்கிறார்.

மேற்கூறிய உதாரணத்தில், 'பர' என்பது வேத- மக- யோக ஆகிய சொற்களுடன் எப்படி வெவ்வேறு அர்த்தங்களைக் கொடுப்பதாக பயன்பட்டிருக்கிறது என்பதை பார்க்க முடிகிறது. வேதங்கள், வாசுதேவனையே போற்றுகின்றன. யக்ஞங்கள் வாசுதேவனின் ப்ரீத்யர்த்தமாகவே இருக்கின்றன. யோகங்கள் அனைத்தும் வாசுதேவனை அடைவதற்காகவே. இங்கு 'பத' என்னும் சொல் பற்பல அர்த்தங்களில் வந்திருக்கிறது.

**ப$^{4}$க்தியொளாட$^{3}$லி முக்திய பேட$^{3}$லி**
**ஸுக$^{2}$த$^{3}$ ராஷிய முந்த$^{3}$லெ நோட$^{3}$லி**
**விக்ருதிக$^{3}$ளோட$^{3}$லி ஸுக்ருதக$^{3}$ள கூட$^{3}$லி**
**அகி$^{2}$லரீகதெ$^{2}$க$^{3}$ளனு பாட$^{3}$லி ||3**

அகிலரு - அனைத்து சஜ்ஜனர்களும். ஈ கதெகளனு - (இந்த காவியத்தில் நிரூபிக்கப்பட்டுள்ள) ஹரி மகிமைகளை. பாடலி - பக்தியுடன் பாடட்டும். பக்தியொளு - (அதிலிருந்து தோன்றும்) பக்தி மழையில். ஆடலி - மகிழ்ச்சியுடன் ஆடட்டும். முக்திய பேடலி - (ஸ்ரீஹரியிடம் வேறு எதையும் வேண்டாமல்) மோட்சத்தையே வேண்டட்டும். சுகத ராஷிய - மகிழ்ச்சிக் கடலின் (அகண்ட மோட்சானந்தத்தின்). முந்தலெ - முன்பாகத்தை (அது எப்படி இருக்கிறது என்பதை). நோடலி - (பக்தி ரசத்தில் மூழ்கும்போதே) பார்ப்பதாக ஆகட்டும். விக்ருதிகளு - (மோட்ச விரோதிகளான விருத்த கர்மங்கள் (நிஷித்த கர்மங்கள்). ஓடலி - (அவரை) விட்டுப் போகட்டும். (வினைப்பயன்கள், ஹரிகுண கானத்தினால் நஷ்டம் அடைய; அடுத்து நிஷித்த கர்மங்கள் அவரால் நடக்காதிருக்கட்டும்). துஷ்ட சங்கம் விலகட்டும். ஸுக்ருதிகள கொடலி - (அவர்) சத்கர்மங்கள் சேரட்டும். (பகவத் ப்ரியமான கர்மங்களை செய்வதிலேயே அவரின் மனம்

ஈடுபடட்டும். அல்லது, பகவத்பக்தரின் (ஸுக்ருதிகளின்) சகவாசமே. தொரகலி - ஸாது சங்கத்திலேயே அவர் இருக்கட்டும்.

**ஆயுஷ்ய ஹெச்சலி ஸிரியரஸ மெச்சலி**
**ஸ்ரேய ஷுப[4]மார்க்க[3] மன மெச்சலி**
**மாயெமத பெச்சலி ஆயாஸ பி[3]ச்சலி**
**பா[3]யி பி[3]ச்சுவ குவாதி[3]க[3]ள கொச்சலி ||4**

ஆயுஷ்ய - ஆயுட்காலம். ஹெச்சலி - (இந்த காவியத்தை படிப்பவர்களுக்கு) அதிகரிகட்டும். ஸிரியரஸ - லட்சுமிபதி. மெச்சலி - மகிழட்டும். ஸ்ரீய:ஷுபமார்க்க - (இஹபரங்களின்) புகழக்குக் காரணமான சன்மார்க்கத்தை. மன மெச்சலி - அவரின் மனம் ஏற்கட்டும். மாயிமத - ஜீவ பிரம்ம ஐக்யத்தையும், ஜகன் மித்யையும் சொல்லும் துர்மதத்தை. பெச்சலி - (அவரின் மனதிலிருந்து) ஓடட்டும். ஆயாஸ பெச்சலி - (யதார்த்தத்தை அறிவதற்கு, அஞ்ஞான மித்யாஞான நிமித்தமான சந்தேகங்களை எதிர்த்து போராடும்) சிரமம், பரிகாரம் ஆகட்டும். பாயி பிச்சுவ - இத்தகைய பக்தர்களின் எதிரில் வாய் விடும் (வாதிப்பதற்கு வரும்) குவாதிகள - துர்வாதிகளை. கொச்சலி - லீலையினால் கண்டிக்கட்டும்.

* இந்த காவியத்தை படிப்பதால், யோக்ய ஜீவர்கள், இதனை பாடிக் கொண்டிருக்கும்போதே, பக்தி ரஸத்தில் மூழ்கி மோட்ச ஆனந்தத்தின் சுவையை உணர்வார்கள் என்றும், அவர்களுக்கு ஆயுள், செல்வம், தத்வஞான, வாதி நிக்ரஹ சக்தி, ஆகிய பலன்கள் தவறாமல் கிடைக்கும் என்றும் சொல்லியவாறு, அப்படி ஸ்ரீஹரி அருளட்டும் என்று பிரார்த்திக்கிறார்.

* எதுகை மோனையுடன் கூடிய இந்த காவியத்தில் பற்பல சந்தங்களை காட்டியிருக்கிறார். ஆதி, மத்ய, அந்த்ய என்று சந்தம் மூன்று விதம். ஒவ்வொரு வரியின் இரண்டாம் எழுத்து ஒரே மாதிரி இருப்பது, ஆதி சந்தம். இதையே அதிகமாக பயன்படுத்தியிருக்கிறார். 3-4ம் வரிகள் அந்த்ய சந்தம் கொண்டவை. ஸ்ரீவாதிராஜரின் சம்ஸ்கிருத காவியங்கள் மிகச்

சிறந்தவை என்று போற்றப்படுபவை. அவருடைய 'ருக்மிணிஷ விஜய' காவியம் மஹாகாவிய லட்சணங்களால் நிரம்பியது. காவிய உலகில் புகழ்பெற்று ஒளிர்கிறது. அவரின் 'யுக்திமல்லிகா' ஆகிய சாஸ்திர கிரந்தங்களும், அவரின் கவிதை ஆளுமையை நிரூபிக்கிறது. கன்னட மொழியின் காவியங்களை இயற்றுவதிலும் கூட, அவருடைய அந்த திறன், பாண்டித்யம், அற்புதமானது என்று இந்த கிரந்தத்திலிருந்து தெரிய வருகிறது.

**நெனெவெ நாராயணன நெனெவெ நாராயணிய**
**நெனெவெ நாராயணன ப4க்தர**
**நெனெவெ ஹரிமஞ்சவ நெனெவெ ஹரிவாஹனன**
**நெனெவெ ஹரமுக்2யராத3 ஸுரர ||5**

ஸ்ரீஹரியை அவனின் பரிவாரங்களுடன் நினைக்க வேண்டிய கடமையை இந்த நுடியில் விளக்குகிறார்.

நாராயணன – நாராயணனை. நெனெவெ – நினைக்கிறேன். நாராயணிய நெனெவெ – ஸ்ரீமகாலட்சுமியை சிந்திக்கிறேன். நாராயணனின் பக்தர நெனெவெ – அனைத்து ஹரிபக்தர்களையும் நினைக்கிறேன். ஹரிமஞ்சவ – ஸ்ரீஹரிக்கு படுக்கையான சேஷதேவரை, நினைக்கிறேன். ஹரிவாஹனன – வாகனனான கருட தேவரையும் (அல்லது முக்கிய வாகனனான முக்யபிராணனையும் நினைக்கிறேன்). ஹரமுக்யராத ஸுரர – ருத்ரரே முதலான தேவதைகளை. நெனெவெ – சிந்திக்கிறேன்.

ரமாபிரம்மா தயாஸ்தஸ்ய பரிவாரதயா ததா – ஆகியவற்றில் சொல்லப்பட்டதைப் போல, சுத்தமான விஷ்ணு சர்வோத்தமத்வ ஞானத்திற்கு ரமா பிரம்மாதி அனைத்து தேவதைகளையும் தாரதம்ய ஞானபூர்வக சிந்திப்பது அவசியம். அல்பனான தான் ஸ்ரீஹரியின் நித்ய தாசானுதாசன் என்னும் அனுசந்தானம் வருவதற்கு உதவியாக இருக்கிறது.

**ஈ தி3வ்யக்ருதிகமல க்ருஷ்ணார்ப்பிதவாகி3**
**ஸ்ரீதே3வியு இத3னெ கைபிடி3யலி**
**மோத3தி3 ஸத3மல ஸம்பத3வனீயலி**

**வாதி$^{3}$ராஜேந்தி$^{3}$ர கு$^{3}$ருயோகி$^{3}$ வரகெ$^{3}$ ||6**

கிரந்தத்தை ஸ்ரீகிருஷ்ணனுக்கு அர்ப்பித்து விசேஷ ப்ரஸன்னதா பாக்கியத்தை பிரார்த்திக்கிறார்.

ஈ திவ்யக்ருதிகமல - ஹரிகுண கான ரூபத்து இந்த காவ்ய கமலம். க்ருஷ்ணகெ - ஸ்ரீஹரிக்கு. அர்ப்பிதவாகி (ப்ரீதிகரமாகி, சமர்ப்பிப்பதற்காக). ஸ்ரீதேவியு - லட்சுமிதேவி. இதனெ - இந்த கமல புஷ்பத்தை. கைபிடியலி - தன் கையில் எடுத்துக் கொள்ளட்டும். மோததி - (ஸ்ரீஹரி ஏற்றுக் கொண்டு) மகிழ்ச்சியுடன். வாதிராஜேந்திர குருயோகிவரகெ - வாதிராஜேந்திர என்னும். குரு பீடத்தில் இருக்கும் யதிஸ்ரேஷ்டருக்கு, ஸதமல ஸம்பதவனு - பரிசுத்தமான பாக்கியத்தை (ஞானாதிக்ய மற்றும் ஆனந்தாதிஷயங்களுக்கு காரணமான தன் பரம ப்ரஸாதத்தை). ஈயலி - அருளட்டும்.

** ஸ்ரீஹரிக்கு பக்தர்கள் அர்ப்பிக்கும் அனைத்து சேவைகளையும், ஸ்ரீலட்சுமிதேவியே கருணையுடன் ஸ்ரீஹரியிடம் ஒப்படைக்க வேண்டுமே தவிர, நேரடியாக ஸ்ரீஹரிக்கு அர்ப்பிக்கும் அதிகாரம் (தகுதி) யாருக்கும் இல்லை.

**இன்னு ஹயவத$^{3}$ன என்ன இஹ பரக$^{3}$திகெ$^{3}$**
**நின்ன காருண்ய காரணவோ**
**அன்யரனரியெ கைவிடி$^{3}$து$^{3}$**
**இன்னு ரக்ஷிப பா$^{3}$ர நின்னதோ$^{3}$ ||7**

ஹயவதன - ஹே ஹயக்ரீவ தேவனே. என்ன - என். இஹபரகதிகெ - இஹத்தில் (உன்னை சேரும் வரை) மற்றும் பரத்தில் (முக்தியில் கூட). (கதிக்கு) என்னால் ஆகவேண்டிய அனைத்திற்கும். உன் கருணை. காரணவோ - உன் கருணை மட்டுமே காரணம். அன்யரனு அரியெ - வேறொருவரை நான் காணவில்லை (இவ்வாறு சரணடைய தகுதியான இன்னொரு ஸ்வதந்த்ர ஸர்வஷக்த ப்ரபு இல்லை என்று நன்றாக அறிந்திருக்கிறேன்). இன்னு - அடுத்து. ரக்ஷிப பார - என்னை

காக்கும் பாரம். (பொறுப்பு - இவனுடைய பாதுகாப்பு என்னுடையது என்று சொல்வது). நின்னதோ - உன்னையே சேர்ந்ததாகும், பிரபுவே.

ரக்ஷத்யேவேதி விஷ்வாஸ: ததீயோஹமிதி ஸ்ம்ருதி: |
ஷரணாகதிரேஷா ஸ்யாத்விஷ்ணௌ மோக்ஷப்ரதாயினி ||
(விஷ்ணு ரஹஸ்ய)

என்று சரணாகதியின் லட்சணம் சொல்லப்படுகிறது. நான் அவனின் தாசன். அவன் என்னை தவறாமல் காக்கிறான் என்னும் திட நம்பிக்கையுடன், எப்போதும் விஷ்ணு ஸ்மரணையே மோட்சத்தைக் கொடுக்கும் சரணாகதி - என்று அர்த்தம்.

**தத்வஸாரத ஸொப$^{3}$கி$^{3}$ன ஸோனெயனு ஹரி**
**ப$^{4}$க்தனெனிப வாதி$^{3}$ராஜ**
**ப$^{4}$க்திப$^{4}$ரிதனாகி$^{3}$ ஹேளித$^{3}$ கதெ$^{2}$ கேளி**
**ஸத்ஸபெ$^{4}$ ஸந்தோஷிஸலி ||8**

தத்வஸாரத - 'தத்வஸார' என்னும் இந்த கிரந்தத்தின் (ஹரி மகிமைகளின் சாரத்தின்). ஸொபகின - ரம்யமான. ஸொனெயனு - சாறினை. ஹரி பக்தரெனிப - விஷ்ணு பக்தர் என்று பெயர் பெற்ற. வாதிராஜ - வாதிராஜ என்னும் நான். பக்திபரிதனாகி - பாவபூர்ண ஹ்ருதயத்தினால். ஹேளித கதெ - கூறிய ஹரிமகிமைகளை. ஸத்ஸபெ - சஜ்ஜனர்கள் குழு. கேளி - ஸ்ரவண, படண ஆகியவற்றால் படித்து. ஸந்தோஷிஸலி - மகிழ்ச்சியைக் கொடுக்கட்டும்.

**அது$^{3}$பு$^{4}$த$^{1}$வல்லவெ ஹயவத$^{3}$ன தன்ன**
**பத$^{3}$பது$^{3}$மத$^{3}$ ஸன்னிதி$^{4}$ய**
**ஹுது$^{3}$கி$^{3}$ஸி வாதி$^{3}$ராஜேந்திரன்ன பாதோ$^{3}$த$^{3}$க**
**வாதி$^{3}$கெ$^{3}$ வினோத$^{3}$த$^{3}$ட்டுவுது$^{3}$ ||9**

ஸ்ரீவாதிராஜரின் பாதோதகத்தை தரித்த சிஷ்யர்கள், பரவாதிகளை அனாயாசமாக ஜெயிப்பார்கள் என்னும் புகழ்பெற்ற பாதோதக மகிமை தமது அல்ல என்கிறார்.

ஹயவதன – ஸ்ரீஹயக்ரீவ ஸ்வாமி. தன்ன பதபதுமத ஸன்னிதிய – தன் பாத பத்மத்தின் சன்னிதானத்தை. ஹுதுகிஸி – கிடைக்கச் செய்து. வாதிராஜேந்திரன்ன – வாதிராஜரின். பாதோதக – பாதோதகம் (அபிஷிக்த ஜலம்). வாதிகெ – வாதத்தில் எதிர்ப்பவரை. வினோததி – சோர்வில்லாமல். அட்டுவுது – ஜெயித்து ஓட்டுவது. அதுபுதவல்லவெ – அற்புத மகிமை அல்லவா? (ஸ்ரீஹரி பாதபத்ம சன்னிதானமே பாதோதக மகிமையின் மூலம்).

**பூ$^{4}$தப்ரேதக$^{3}$ளிவன பாதோ$^{3}$த$^{3}$கதி$^{3}$ந்த$^{3}$**
**பீ$^{4}$திகா$^{1}$த$^{1}$ரிஸி ஓடு$^{3}$வுது$^{3}$**
**ப்ரீதியிந்த$^{3}$லி ஜனரு கொண்டா$^{3}$ட$^{3}$லு ஜன்ம ஜ**
**ந்மாந்தரத$^{3}$ கர்ம பூ$^{4}$மியலி ||10**

இவன – இந்த வாதிராஜ யதியின். பாதோதகதிந்த – (ஹரிபாத சன்னிதானம் சேர்ந்த) பாதோதகத்தினால். பூதப்ரேதகளு – பூத, ப்ரேத, பிசாசாதிகள். பீதிகாதரஸி – பயத்துடன் நடுங்கியவாறு. ஓடுவுவு – ஓடிப் போகின்றன. பூமியலி – பூலோகத்தில். ஜனரு – மக்கள். ப்ரீதியிந்த – பக்தி சிரத்தைகளுடன். கொண்டாடலு – (ஸ்ரீவாதிராஜரை) வணங்கினால். ஜன்மஜன்மாந்தரத கர்ம – ஜன்மாந்தரங்களின் துஷ்ட கர்மங்கள. ஓடுவுவு – தொலைகின்றன. (இதுவும் ஸ்ரீஹயவதனனின் மகிமையே என்கிறார்).

**பி$^{3}$ரம்மராக்ஷஸனாகி$^{3}$ இளெயொளு ஜனிஸி**
**அம்மம்ம இவரிக்ஹணவ கொடி$^{3}$ஸி**
**ஜன்மாந்தரதி$^{3}$ ப$^{3}$ஹள பிஷாச ஸர்வவு**
**தம்ம ருண ஸந்தி$^{3}$போகு$^{3}$வுது$^{3}$ ||11**

இளெயொளு – பூமியில். பிரம்மராக்ஷஸனாகி – பிரம்ம ராக்ஷஸ ஜன்மத்தில். ஜனிஸி – பிறந்து. இவரிகெ – ஸ்ரீவாதிராஜருக்கு. ஹணவ கொடிஸி – (பூதராஜனாகி மக்கள் தனக்கு அர்ப்பிக்கும் காணிக்கைகளின்) பணத்தைக் கொடுத்து. (அதன் மூலம்) ஜன்மாந்தரதத்தின் ஏதோ ஒரு பிறவியில். பிஷாச – அந்த பிசாசு (பிரம்மராக்ஷசன்). பஹள – அதிகமாக. தம்ம ருண – தம் ருணம்

(தமக்கு வரவேண்டிய கடன்). சர்வவு – அனைத்து (பூர்ணமாக). ஸந்திபோகுவுவு – தீர்ந்து போகின்றன. அம்மம்ம – என்ன வியப்பு!

ஸ்ரீராமன், ராவணனைக் கொன்றதால் தனக்கு வந்த பிரம்ம ஹத்யா தோஷத்தை, தன்னிடமிருந்து ஏற்றுக் கொள்பவர்களுக்கு அருள்வேன் என்று கூறினானாம். அப்போது தபஸ்வியாக இருந்த பாவி-ருத்ரர் (அடுத்த ருத்ர பதவிக்கு வருபவர்). 'நான் ஏற்றுக் கொண்டு ஸ்ரீராமனின் தோஷத்தை பரிகரிக்கிறேன்' என்று கர்வத்துடன் முன்னர் வந்து கூறினாராம். ஸ்ரீராமசந்திரனுக்கு பிரம்மஹத்யா தோஷமா? அதனை ஏற்றுக் கொள்பவன் இந்த தபஸ்வியா? ஸ்ரீராமசந்திரனின் மயக்கும் பேச்சிற்கு மயங்கி, முன்னே வந்த தபஸ்வியை பிரம்மராக்ஷஸன் ஆகு என்று ஸ்ரீராமன் சபித்தானாம். அடுத்து வாதிராஜரின் சேவையினால் அவன் தன் பிரம்ம ராக்ஷஸத்வத்தை போக்கிக் கொண்டு, எதிர் காலத்தில் உன் பாதத்தை தாங்குவேன் என்று வரம் அருள்கிறானாம்.

அந்த பாவி (எதிர்கால) ருத்ரன் பிரம்ம ராக்ஷஸனாகி பதரிகாசிரமத்தின் காட்டில் அலைந்தானாம். கலியுகத்தில் வாதிராஜரின் சேவைக்காக, ஒரு அம்சத்தினால் நாராயணர்யர் என்னும் பிராமணனாகி பிறந்து, ஸ்ரீ வாதிராஜரின் சிஷ்யன் ஆனானாம். இதற்கு முன் இன்னொரு பிறவியில் இவனே வாதிராஜருக்கு ருணி ஆனானாம் (கடன் கொடுக்க வேண்டியிருந்ததாம்).

நாராயணாசார்யன் தனது பாண்டித்ய கர்வத்தினால் சத்பிராமணர்களுடன் வாதம் செய்து, ஸ்ரீவாதிராஜரின் சாபத்தினால் பிரம்மராக்ஷசன் ஆனானாம். வழியில் அவரை எதிர்த்து, வாதத்தில் தோற்று, மாயையால் அனைவரின் கண்ணிலிருந்து மறைந்து, அவரது பல்லக்கில் ஏறினானாம். அடுத்து, ஸ்ரீவாதிராஜர், தமது பிரவேசத்திற்காக தாமே பிருந்தாவனத்தை நிர்மாணித்தபோது, பிரம்மராக்ஷசனுக்கு அருளி, வ்ருந்தாவனத்தின் அருகில் 'பூதராஜ' என்னும் நாமத்தினால் பிரதிஷ்டை செய்தாராம் (தம்மை வணங்கிக் கொண்டிருப்பதற்கு இடத்தை ஏற்பாடு செய்து கொடுத்ததைப் போல). ஸ்ரீவாதிராஜரின்

பக்தருக்கு பூதபிரேதாதிகளின் பயங்களைப் போக்கியவாறு, அவர்கள் தனக்கு அர்ப்பிக்கும் காணிக்கைகளை ராஜருக்கு அர்ப்பித்து, ஜன்மாந்தர ருணத்திலிருந்து முக்தன் ஆனான்.

ஸ பிரம்ம ராக்ஷஸொ பூத்வா பதரீகானனே஽வஸத் |
ஏகாம்ஷேனாத ஸம்ஜக்ஞே த்விஜவம்ஷே கலெளயுகே ||
நாராயணாசார்யநாமா நாரலக்ராமகோ த்விஜ: |
ஸ்ரீவாதிராஜ ப்ருத்ய: ஸன்னுவாஸ குருஸன்னிதௌ ||

ஆகிய வாக்கியங்களில், மற்றும்

வஸன்னக்ரே வஹன் தோலாம் மதீனாம் ஸுக்ருதே பவே |
பாவிஜன்மனி ருத்ரஸ்த்வம் பவிதா நாத்ர ஸம்ஷய: ||

ஆகிய வாக்கியங்களில்கூட, மேலே விவரித்த கதாபாகம் 'ஸ்ரீவாதிராஜ குருவர சரிதாம்ருத' என்னும் கிரந்தத்தில் வர்ணிக்கப்பட்டுள்ளது. இந்த நுடியின் சாரம், இந்த அர்த்தத்தையே கொண்டிருக்கிறது.

**ஜன்மாந்தரத$^{3}$ ருணதி$^{3}$ கர்மபூ$^{4}$மியொளு**
**பொம்மரக்கஸனாகி$^{3}$ ஜனிபெ**
**அம்மம்ம ஈ முனிகெ$^{3}$ ஹணவவரிந்த$^{3}$ கொடி$^{3}$ஸி**
**தம்ம ருண தீரிதெ$^{1}$ந்தொ$^{3}$ப்புவரு ||**
(பேலூர் கேஷவ தாஸரின் கர்னாடக பக்த விஜய).

**வாகீ$^{3}$ஷ்வரி தே$^{3}$வி வத$^{3}$னதி$^{3}$ நில்லிஸி ஸ**
**ர்வாக$^{3}$ம தத்வஸாரவனு**
**யோகி$^{3}$க$^{3}$ளெல்லரு ஈ கதெ$^{2}$ய மன்னிஸுதிரலு**
**வாக்தே$^{3}$வனெந்தெ$^{3}$னிஸுவது$^{3}$ ||12**

வாகீஷ்வரிதேவி – வாக் அபிமானி பாரதிதேவி (அல்லது முக்யாபிமானி லட்சுமிதேவி), சர்வாகமதத்வ ஸாரவனு – அனைத்து சாஸ்திரார்த்த சாரங்களை. வதனதி நில்லிஸி – (என்) முகத்தில் நிறுத்தி. யோகிகளெல்லரு – ஞானிகள் அனைவரும்.

கதெய - (இந்த கிரந்த ரூபத்தில் இருக்கும்) தத்வங்களின் அனுவாதத்தை. (தத்வஸாரத்தின் நிரூபணையை). மன்னிஸுதிரலு - அங்கிகரித்து கௌரவிக்க. வாக்தேவனு - (இந்த அனுவாதகன்) வாசஸ்பதி (சர்வக்ஞன்). வந்தெனிஸுவுது - வந்து (அந்த வாக்தேவி) என் முகத்தில் நிறுத்திய தத்வஸாரம்) சொல்கிறது.

ஸ்ரீவாக்தேவியின் அருளாலேயே இந்த காவிய ரசனை ஆகியிருக்கிறது என்று சொல்லியவாறு, தம் ஸ்வதந்த்ர கர்த்ருத்வாபிமானம் இல்லை என்பதை, தெளிவுபடுத்துகிறார்.

**தே$^{3}$ஷதே$^{3}$ஷதி$^{3}$ந்த$^{3}$ கப்பகாணிகெக$^{3}$ள**
**ஆ ஸர்வோத்தமனெ த$^{4}$ரிஸுவ**
**ஸ்வஸேவகர கைய ரதோ$^{2}$த்ஸவவ மாடி$^{3}$ஸித$^{3}$**
**பூ$^{4}$ஸுரவேஷ விஸ்தரிஸெ ||13**

பூஸுரவேஷ - யதி ரூபம் (ஸ்ரீவாதிராஜர் யதி ஸ்ரேஷ்டர் என்னும் மகிமை). விஸ்தரிஸெ - (உலகில்) பரவ. தேஷதேஷதிந்த - பற்பல தேசங்களிலிருந்து. கப்பகாணிகெகள - பூஜ்ய பாவத்தினால் அர்ப்பிக்கப்படும் ஏராளமான த்ரவ்யாதி காணிக்கைகளை (காணிகெ - பெரியவர்களை வெறும் கையில் சென்று பார்க்கக்கூடாது ஆகையால், தர்சன செய்யும்போது அர்ப்பிக்கும் பழ, புஷ்ப, திரவ்யாதி வஸ்துகள்). ஆ சர்வோத்தமனே தரிஸுவ - (மக்களை சர்வோத்தமனான ஸ்ரீகிருஷ்ணன்) தானே வரவழைக்கிறான். ஸ்வஸேவகர - தன் பக்தர்களின். கைய - கைகளால் (உதவி, உதவியாளர்களால்). ரதோத்ஸவ - (ஸ்ரீ த்ரிவிக்ரம தேவரின்) ரதோத்ஸவத்தை. மாடிஸித - (மிகவும் வைபவத்துடன்) செய்வித்தான்.

** பூஸுரவேஷ விஸ்தரிஸெ - என்பதில் கவனிக்கப்பட வேண்டிய விஷயம். ஸ்ரீகிருஷ்ணனின் பர்யாய உற்சவ சமயத்தில், பர்யாய பீடத்தில் இருந்த ஸ்ரீவாதிராஜருக்கு, உற்சவ செலவுக்கு, ஸ்ரீகிருஷ்ணனே பிராமண வேடத்தில் வந்து, ஏராளமான திரவியங்களை கொடுத்தான் என்று, பக்தர்கள் பக்தியுடன் கூறும் கதையை இங்கு குறிப்பிடுகிறார்.

## 4. ஸ்திதி ஸந்தி

---

** ஸோதெயில் தம்மாலேயே பிரதிஷ்டிதமான ஸ்ரீத்ரிவிக்ரம தேவரின் மூர்த்தியை, பூதராஜனால், பதரிகாசிரமத்திலிருந்து விரைவில் (ஆகாய மார்க்கத்தில்) வரவழைத்தார் என்னும், அவரின் மகிமையும், தம் பிரவேசத்திற்காக தம்மாலேயே நிர்மாணம் செய்யப்பட்ட வ்ருந்தாவனத்தில் நுழைவதற்கு முன்னர், ஸ்ரீத்ரிவிக்ரம தேவரின் ரதோத்ஸவத்தை மிகவும் வைபவத்துடன் நிறைவேற்றிய மகிமையும், இந்த நுடியில் குறிப்பிடப்படுகிறது.

** ராஜரால், மக்களில் முக்கியமானவர்களால், பல ரத்ன ஆபரணங்களைப் பெற்று உடுப்பியில் ஸ்ரீகிருஷ்ண மடத்தின் செல்வத்தை வளர்த்து, அஷ்ட மடங்களின் செல்வ வளர்ச்சிக்கும் காரணராகி, ஸ்ரீகிருஷ்ண மடத்தையும், விசேஷ கட்டடங்களையும் கட்டுவித்து, ஸோதெயில் பெரிய மடம், தவள கங்கையின் சரோரவரம், த்ரிவிக்ரம தேவஸ்தான ஆகியவற்றை கட்டி, ஸோதெயினை மிகவும் பவித்ரமான யாத்ரா ஸ்தானமாக செய்தார்.

மற்றும், தம்மால் நிகழ்த்தப்பட்ட பல அற்புதங்களாலும், இயற்றப்பட்ட கிரந்தங்களாலும் சம்பாதிக்கப்பட்ட மஹாகீர்த்தி, பிரபாவங்கள் அனைத்தும், தம் உபாஸ்ய தேவரான ஸ்ரீலட்சுமி ஹயக்ரீவ ஸ்வாமியின் கீர்த்தி பிரபாவங்களே தவிர, தம்முடையது இல்லை என்னும் அனுசந்தானத்தினால், ஹயவதனாபின்ன ஸ்ரீகிருஷ்ணனில் அனைத்தையும் சமர்ப்பிக்கிறார்.

வைகுண்டவர்ணனம் ஸ்ரீமத்3வாதி3ராஜ வினிர்மிதம் |
அபரம் நாமஜாஸ்யைவ தத்வஸார இதி ஸ்ருதம் ||

ததா ச கு3ருராஜஸ்ய லக்ஷ்மீஷோபா4ன நாமக: |
க்3ரந்தஸ்சாஸ்தி த்3வயோர்ப4க்த்யா க்ருதம் விவரணம் மயா ||
கோ3பாலதா3ஸவர்யாணாம் ஆக்3ஞாமாத்ரேண தத்ர வை |
ப்ரவ்ருத்திர்ஹி ந ஜான்யா மே யோக்3யதாऽஸ்தி கத2ஞ்சன ||

மாமகான் தோ3ஷ நீசயான் க்ஷாம்யந்து விபுதாஸ்ததா3 |
கு3ணைரேவானு க்3ருண்ஹந்து மாமனுக்3ரஹ காங்க்ஷிணம் ||

மம ஸேவாமிமாமல்பாமர்ப்பயே ச ஹரௌ கு3ரௌ |
ததா2 ஸ்ரீவாதி3ராஜேந்தி3ர பரபத்3மே ஸுப4க்தித: ||

ஆசார்யா: ஸ்ரீமதாசார்யா: ஸந்து மே ஜன்ம ஜன்மனி

இத்யேகம் து வரம் தாம்ஸ்து யாசேऽஹம் ஸ்திரபுத்தித: ||

|| ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து ||

***